த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—781

# பாண்டியர் வரலாறு

(மேற்பட்டப் படிப்பிற்குரியது)

ஆசிரியர்

டாக்டர் **கே. வி. இராமன்,** எம்.ஏ., எம்.லிட்., டிப்.ஆர்ச்., பிஎச்.டி.,

பேராசிரியர், தொல்லியல் துறை,

சென்னைப் பல்கலைக்கழகம்,

சென்னை.

தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—December, 1977

Number of Copies—1000

T.N.T.B.S. (C.P.) No. 784



# HISTORY OF THE PANDYAS

DR. K. V. RAMAN

Price Rs. 13-25

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

This book has been printed on concessional paper made available by the Government of India.

Printed by

S. DHANYAKUMAR PRESS
1-A, Boag Road, T.Nagar,
Madras-600 017

# அணிந்துரை

(திரு. செ. அரங்கநாயகம், தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினே ழாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் இளங் கலை வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வந்தனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர் களின் ஊக்கம், பிறபல துறைகளில் தொண்டு செய்வோர் இதற் கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன்வந்துள்ள நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ் வகையில் கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகமும் சென்னைப் பல்கலைக்கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சி யைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாற்றியல், அரசியல், உளவியல், பொருளியல், மெய்ப் பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணித வியல், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டவியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூலநூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்று இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்முன **பாண்டியர் வரலாறு** என்னும் இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் **784** ஆவது வெளி யீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான **35** நூல்களையும் சேர்த்து இதுவரை **819** நூல்கள் வெளிவந்துள்ளன. இந்நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்ட'த்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம்பெற வேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் கலையியற் பாடங்களையும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயில வேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளர வேண்டும் என்பதைவிடத் தமிழ்மக்களின் அறிவு ஆற்றல் எளி தாக, விரைவாக வளரவேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ்; எங்கும் தமிழ்' என்னும் குறிக்கோளை நிறைவேற்றவேண்டிய கடப் பாடு தமிழக ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களையும் சார்ந்த தாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல்வகை உதவி களுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரித்தாகுக!

**செ. அரங்கநாயகம்**

# முன்னுரை

தமிழகத்தின் பழம்பெரும் அரச மரபினர் மூவருள் பாண்டியரே மிக நீண்ட நெடுங்காலம் பதவி வகித்தவராவர். சங்ககாலம் முதற்கொண்டு 17ஆம் நூற்றுண்டு இறுதிவரை தொடர்ந்து தமிழக வரலாற்றில் பங்கேற்ற பெருமை அவர்களுக்கு உண்டு. சோழரும் தொன்மையான மரபினராயினும் அவர்களது அரசியல் வரலாறு தொடர்ச்சியாக அவ்வளவு நீண்டகாலம் நீடித்திருக்கவில்லை. எடுத்துக்காட்டாக, சங்க காலத்திற்குப் பிறகு ஒன்பதாம் நூற்றுண்டுவரை சோழர்களைப் பற்றிய செய்திகள் கிடைத்தில. ஆனுல், பாண்டியரோ 6ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியிலேயே களப்பிரரை வென்று, தங்களது ஆட்சியைப் பாண்டிய நாட்டில் மீண்டும் நிலைபெறச் செய்தனர். ஏறக்குறைய அதே காலத்தில் தொண்டை நாட்டில் பல்லவ மரபினர் ஆட்சிக்கு வந்தனர். அவர்களது சிறப்புமிக்க ஆட்சி ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகள் நிலைபெற்று ஒன்பதாம் நூற்றுண்டுப் பிற்பகுதியில் வீழ்ச்சியுற்றது. அத்துடன் பல்லவர் வரலாறு முடிவுற்றது எனலாம். அவர்களது வீழ்ச்சிக்குப் பிறகு விசயாலயன் வழிவந்த சோழ மரபினர் தங்களது பேரரசை நிறுவி நானூறு ஆண்டுகள் (கி. பி. 850—1250) தொடர்ந்து சீரும் சிறப்புமாக அரசாண்டனர். அவர்களது ஆட்சியும் 13ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியுடன் முடிவுபெற்றது. ஆனுல் பாண்டியர்களோ, சங்ககாலந் தொட்டுக் களப்பிரர் ஊடுருவிய காலம் தவிர்த்து இடைவிடாமல் ஆட்சி புரிந்து வந்துள்ளனர். 10ஆம் நூற்றுண்டில் பாண்டிய நாட்டைச் சோழர் கைப்பற்றிய காலத்திலும் பாண்டியர் அதற்கு இணங்காமல், ஆங்காங்கே போர்க்கொடியை ஏந்தி, தங்களது ஆட்சியை மீண்டும் நிலைநாட்டினர். அதுமட்டுமன்றி, 13ஆம் நூற்றுண்டின் இறுதியில் சோழமண்டலம், தொண்டைமண்டலம் ஆகிய பகுதிகளைக் கைப்பற்றித் தங்களது ஆதிக்கத்தை நெல்லூர் வரையிலும் பரவச் செய்தனர். 14ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் பாண்டிய நாடு சிறிது காலம் சுல்தான் ஆட்சிக்குட்பட்டு, பிறகு விசயநகர ஆட்சியின்கீழ் வந்தது. இந் நெருக்கடியான காலத்திலும்கூடப் பாண்டியர்கள் தங்களது தலைநகரைத் திருநெல்வேலிக்கு மாற்றிக்கொண்டு தொடர்ந்து ஆட்சி புரிந்தனர். ஆக, பாண்டியர்களின் சமகாலத்திலும் பிற்காலத்திலும் ஆட்சிக்கு வந்த மற்ற அரச மரபினரெல்லாம் அவ்வப்

போது கால வெள்ளத்தில் மறைந்துவிட்டாலும் பாண்டியர் மட்டும் தங்களது குலப்பெருமையைப் பல நூற்றுண்டுகள் கட்டிக் காத்து நீண்டதொரு வரலாற்றைப் படைத்தனர். உலக வரலாற்றில் இவ்வளவு நீண்டகாலம் தொடர்ந்து பதவி வகித்த மற்ருேர் அரச மரபினரைச் காண்பது அரிது எனலாம்.

இவ்வளவு வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த பாண்டிய மரபினரைப் பற்றிய தொடரானதும் விரிவானதுமான வரலாறு இன்னும் முழுமையாக எழுதப்படவில்லே. இக்குறையை நீக்கப் பல அறிஞர்கள் இத்துறையில் அரிய முயற்சிகள் செய்துள்ளனர். குறிப்பாக, கல்வெட்டுத்துறை அறிஞர்கள் வி. வெங்கய்யா, கே. வி. சுப்பிரமணிய ஐயர், டி. ஏ. கோபிநாத ராவ் முதலியோரின் கண்டுபிடிப்புகளும் ஆராய்ச்சிகளும் பாண்டியர் வரலாறு எழுதுவதற்கு நல்ல அடித்தளங்களாக அமைந்துள்ளன. கல்வெட்டுகளில் காணப்படும் பஞ்சாங்கக் குறிப்புகளேக் கொண்டு பாண்டியர் காலக்கணிப்புக்கு மிக்க துணைசெய்துள்ளனர் வானியல் அறிஞர் எல். டி. சுவாமிக்கண்ணுப் பிள்ளேயவர்கள். கே. வி. சுப் பிரமணிய ஐயர் பாண்டிய நாட்டில் உள்ள பல ஊர்களுக்கு நேரில் சென்று கல்வெட்டுகளேக் கண்டெடுத்து வெளியிட்டார். அவற்றின் துணைகொண்டு 1917ஆம் ஆண்டில் அவர் எழுதிய 'Historical Sketches of Ancient Deccan' என்னும் ஆங்கில நூலில் பாண்டியரின் வரலாற்றைத் தொடர்ச்சியாக முதன்முதலில் வரைந்து காட்டிஞர். அதற்குப் பிறகு அரிஹர ஐயர் என்னும் பள்ளி ஆசிரியர் பாண்டிய வரலாற்றைச் சிறிய நூலாகத் தமிழில் எழுதிஞர். இம் முயற்சிகளுக்கெல்லாம் சிகரம் வைத்தாற்போல் 1929-ல் பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் எழுதிய 'The Pandyan Kingdom' என்னும் நூல் அமைந்தது. பாண்டியர் வரலாற்றைத் தொகுத்து எழுதுவதில் இருந்த பல இடர்ப்பாடு களில் தொடக்ககாலக் கல்வெட்டுச் சான்றுக்குறைவு முக்கிய மானதாகும். மேலும் மாறன், சடையன் என்ற பெயர்களே அடுத்தடுத்து வந்த அரசர்கள் வைத்துக்கொண்டதும் ஒரே காலத்தில் பல பாண்டிய அரசர்கள் ஒன்றுசேர்ந்து ஆட்சி நடத்திய முறையும் சில குழப்பங்களே உண்டாக்கின. குறிப்பாக, அவர்கள் ஆட்சிபுரிந்த காலம், ஆட்சி செய்த நிலப்பகுதிகள் ஆகியவற்றை வரையறுத்துக் கூறுவதற்கு இவை இடையூறுகளாக அமைந்தன. தவிர, இடைக்காலப் பாண்டியரைப் பற்றியும் பிற்காலப் பாண்டியரைப் பற்றியும் இலக்கிய ஆதாரங்களும் மிகக் குறைவாக உள்ளன. இவ்வளவு சிக்கல்களுக்கிடையே பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் கட்டுக்கோப்பான பாண்டியர் வரலாற்றைத் தக்க சான்றுகளுடன் எழுதியதற்கு வரலாற்றுலகம்

அவருக்கு என்றும் கடமைப்பட்டுள்ளது. இந் நூலில் அரசியல் வரலாறு மட்டுமன்றி ஆட்சிமுறை, சமயம், சமூக வாழ்க்கை முதலிய பல துறைகளைப் பற்றியும் கிடைத்த செய்திகளைச் சேகரித்துச் சுருக்கமாகத் தந்துள்ளார். இரண்டாம் பாண்டியப் பேரரசின் காலநிலையை அறிவதற்கு நல்ல துணைபுரிவது, டாக்டர் எஸ். கிருஷ்ணசுவாமி ஐயங்கார் ஆங்கிலத்தில் எழுதிய 'South India and Her Muhammadan Invaders' என்னும் சிறந்த ஆராய்ச்சி நூலாகும். இத் துறையில் டி. வி. சதாசிவப் பண்டாரத்தார் இயற்றிய 'பாண்டியர் வரலாறு' என்னும் நூல் பல சான்று களையும் ஆராய்ந்து எழுதப்பட்ட சிறந்த தமிழ் நூலாகும். அண்மைக் காலங்களில் பாண்டிய வரலாற்றுக்கான மேலும் பல புதிய ஆதாரங்கள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. இச் சான்று களில் இந்தியக் கல்வெட்டுத்துறையினர் கண்டெடுத்து வெளிப் படுத்தியுள்ள கல்வெட்டுகள் முக்கியமானவை. 12 ஆம் நூற் றாண்டு வரையிலுள்ள பாண்டியர் கல்வெட்டுகளனைத்தும் 'தென் இந்தியச் சாசனங்கள்' என்னும் நூலின் பதினான்காம் தொகுதியாக இத் துறை வெளியிட்டுள்ளது, ஆராய்ச்சியாளர்களுக்கு மிக்க பயன் தருவதாக உள்ளது. மேலும், அண்மைக்காலக் கண்டு பிடிப்புகளான தளவாய்புரச் செப்பேடுகள், சிவகாசிச் செப் பேடுகள் முதலியன பல அரிய புதிய செய்திகளைத் தருகின்றன. இவ்வாறு பாண்டியர்களைப் பற்றிய கல்வெட்டுச் சான்றுகள் அதிகரித்துள்ளன. தமிழ்நாடு தொல்லியல் துறை வெளியிட் டுள்ள கன்னியாகுமரிக் கல்வெட்டுகள் என்னும் தொகுப்பும் பயனுள்ளதாக இருக்கிறது. மேலே கூறப்பட்ட நூல்களேயன்றி இன்னும் பல்வேறு அறிஞர்கள் பருவ ஏடுகளில் (Periodicals) எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரைகளும் பாண்டிய வரலாற்றுக்குத் தக்க சான்றுகளாகத் திகழ்கின்றன. தொல்லியல் கண்டு பிடிப்புகள் கட்டடக்கலை, சிற்பம், நாணயவியல் முதலிய துறை களில் செய்யப்பட்டுள்ள ஆராய்ச்சிகளின் பயன்களை ஒன்று சேர்த்து 1972ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட 'Some Aspects of Pandyan History' என்னும் எனது நூலில் சுருக்கமாக அளித்துள்ளேன். இச் சான்றுகள் அனைத்தையும் விரிவாக ஆராய்ந்து இந் நூலில் அளித்துள்ளேன். பாண்டிய வரலாற்றில் மேலும் பல ஆராய்ச்சிகள் நடைபெறுவதற்கு இந் நூல் ஒரு தூண்டுகோலாக அமையும் என நான் நம்புகிறேன்.

இந்நூலை எழுதுவதற்கான நல்வாய்ப்பினை எனக்கு அளித்த தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தார்க்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். தமிழில் வரலாற்று நூல்கள் எழுதப்பட வேண்டும் என்பதில் மிக்க ஆர்வம் காட்டி என்னை

ஊக்குவித்த் சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் மால்கம் எஸ். ஆதிசேஷய்யா அவர்களுக்கு எனது உளமார்ந்த நன்றி உரித்தாகும். இந்நூலிலுள்ள புகைப்படங்களைத் தந்து உதவிய இந்தியத் தொல்பொருள் துறையினரின் தென்மண்டலப் பிரிவினர்க்கும், சென்னைப் பல்கலைக்கழகத்திற்கும் நன்றியைக் கூறிக்கொள்கிறேன். இந் நூலை எழுத எனக்குத் துணைசெய்த தொல்லியல் துறையைச் சார்ந்த விரிவுரையாளர் திரு. ப. சண்முகம், இத்துறை ஆராய்ச்சி மாணவர்கள் திருவாளர்கள் அரங்க. பொன்னுசாமி, ஆர். இராமமூர்த்தி, ஆர். இராமசுவாமி முதலியோர்க்கும் அழகிய புகைப்படங்களை எடுத்துதவிய இத் துறையின் புகைப்படக் கலைஞர் திரு. வெங்கடேசன், திரு. சம்பத் ஆகியவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

சென்னை,
14-11-77.

**கே. வி. இராமன்**

# பொருளடக்கம்

பக்கம்

# 1. பாண்டியர் வரலாற்றுக்குரிய ஆதாரங்கள்

ஏறக்குறைய கிறிஸ்து சகாப்தத் தொடக்க காலத்திலிருந்து 17ஆம் நூற்றுண்டு வரை பாண்டியர் தமிழக வரலாற்றில் பங்கேற்றனர். இந் நீண்டதொரு வரலாற்றை எழுதுவதற்கான சான்றுகள் பலவகைப்பட்டனவாகும். பொதுவாக, அவர்களது வரலாற்றைப் பின்வரும் நான்கு பகுதிகளில் ஆராய்வது பொருத்தமுடையதாய் இருக்கும்:

1. சங்ககாலப் பாண்டியர் (கி.பி. முதல் மூன்று நூற்றுண்டுகள்).
2. கடுங்கோன் வழிவந்த பாண்டியர் அல்லது முதல் பாண்டியப் பேரரசு (சுமார் கி.பி. 550 முதல் 950 வரை)
3. இரண்டாம் பாண்டியப் பேரரசு (கி.பி. 1190—1310)
4. பிற்காலப் பாண்டியர் (கி.பி. 1310-க்குப் பிறகு)

## இலக்கியச் சான்றுகள்

இதில், சங்ககாலப் பாண்டியரைப் பற்றிய வரலாற்றுக்குச் சங்க இலக்கியங்களே முக்கிய ஆதாரங்களாய் அமைகின்றன. தொகை நூல்களான நற்றிணை, புறநானூறு, பரிபாடல் போன்றவற்றிலும், திருமுருகாற்றுப்படை, மதுரைக்காஞ்சி போன்ற பத்துப்பாட்டுப் பாடல்களிலும், பாண்டிய அரசர்களைப் பற்றியும், நாட்டைப் பற்றியும், மக்களின் பழக்க வழக்கங்கள், சமயக் கோட்பாடுகள், வாணிபம், கலையுணர்ச்சி இவற்றைப் பற்றியும் பல அரிய செய்திகள் நமக்குக் கிடைக்கின்றன. எடுத்துக்காட்டாக, மாங்குடி மருதனூர் தம்முடைய 'மதுரைக் காஞ்சி'யில் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பற்றிய பல அரிய விவரங்களைத் தந்துள்ளார். மேலும், பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, வடிம்பலம்ப நின்ற பாண்டியன் போன்ற பாண்டிய அரசர்களைப் பற்றிய சில விவரங்களும் அதில் கிடைக்கின்றன. பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, வெற்றிவேல்

செழியன், கூடகாரத்துத் துஞ்சிய மாறன், பாண்டியன் நல்வழுதி, வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, பூதப்பாண்டியன் போன்ற அரசர்களைப் பற்றிய சில குறிப்புகளும் புறநானூற்றுப் பாடல்களில் ஆங்காங்கே கிடைக்கின்றன.

இவ்வாறே பாண்டியன் முடத்திருமாறன், அறிவுடை நம்பி போன்றோரைப் பற்றிய குறிப்புகள் நற்றிணையில் கிடைக்கின்றன. ஆரியப் படைகடந்த நெடுஞ்செழியனைப் பற்றியும், அவனது தலை நகரான மதுரையைப் பற்றியும், அவன் காலத்தில் ஆட்சிபுரிந்த மற்ற அரசர்களைப் பற்றியும் பல அரிய விவரங்கள் தெளிவான முறையில் சிலப்பதிகாரத்தின் வாயிலாகக் கிடைக்கின்றன. இவன் காலத்தில்தான் சேரன் செங்குட்டுவனும், இலங்கை அரசன் கயவாகுவும் வாழ்ந்தனர் என்று சிலப்பதிகாரம் உரைக்கின்றது. இம் மூவரும் கி.பி. 2 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தனர் என்பது வரலாற்றுக் காலக்கணிப்புக்கு முக்கியமான ஒரு சான்றாக விளங்குகிறதென அறிஞர்கள் கருதுகின்றனர். இவற்றைப் பற்றிய விவரங்களைப் பின்வரும் பகுதிகளில் காணலாம். பரிபாடலில் பாண்டிய மன்னன் இளம் பெருவழுதியைப் பற்றியும், அவன் வழிபட்ட அழகர்மலையில் உறையும் திருமாலின் சிறப்பைப்பற்றியும் குறிப்புகள் காணப்படுகின்றன.

பாண்டிய நாட்டு இயற்கை வளம், துறைமுகங்கள், வர்த்தகம், மதுரை நகரின் சிறப்பு முதலியவற்றின் குறிப்புகள் மதுரைக் காஞ்சி, புறநானூறு, சிலப்பதிகாரம் முதலான நூல்களில் காணப்படுகின்றன. இவற்றின் விவரங்கள் மேலும் உரிய இடங்களில் விரித்துரைக்கப்பட்டுள்ளன.

### அயல்நாட்டார் குறிப்புகள்

கிரேக்க ஆசிரியர் மெகஸ்தனிஸ் எழுதிய 'இண்டிகா' என்னும் நூலில் பாண்டியரைப் பற்றிய சில குறிப்புகள் காணப்படுகின்றன. ஆனால், அதற்குப் பின்னே தோன்றிய கிரேக்க உரோமானிய நூல்களில் சற்றுத் தெளிவான விவரங்கள் காணக் கிடைத்துள்ளன. பொதுவாகத் தமிழகத்திலிருந்த பேரூர்கள், துறைமுகப்பட்டினங்கள் இவற்றைப்பற்றிக் குறிக்கும் பண்டைக் கிரேக்க உரோமானிய ஆசிரியர்களான பிளினி, தாலமி ஆகியோரின் குறிப்புகளும் பண்டைய கிரேக்க நூலான 'செங்கடல் விவரத் தொகுதி'[1] யின் குறிப்புகளும் பாண்டிய நாட்டின் வரலாற்றுக்குப் பயனுள்ளவையாக அமைந்துள்ளன. கி.பி. முதல்

[1] The Periplus of the Erithrean Sea.
K. A. Nilakanta Sastri, Foreign Notices of South India.

இரண்டு நூற்றாண்டுகளில் எழுதப்பட்ட இக் குறிப்புகள் சங்க இலக்கியச் சான்றுகளுக்கு முற்றிலும் பொருத்தமுடையனவாய் உள்ளன. இக் குறிப்புகளில் பாண்டியரைப் பற்றியும், தலைநகர் மதுரை, துறைமுகம் கொற்கை, புனிதத்தலம் குமரி இவைபற்றி யும், உரோமானியர்களுடன் நடைபெற்ற வாணிபத்தைப் பற்றியும் குறிப்புகள் காணப்படுகின்றன.

இலங்கை வரலாற்றுக் களஞ்சியமான 'மகாவம்சம்' பாண்டிய நாட்டைப் பற்றியும் பல பயனுள்ள செய்திகளைத் தரு கின்றது; தொடக்க காலக் குறிப்புகளைத் தவிரப் பிற்கால அதாவது **12, 13** ஆம் நூற்றாண்டுகள் வரை நடந்த செய்திகளைப் பற்றிய விவரங்களையும் கொடுத்துதவுகிறது. சான்றாகப் பாண்டிய அரசன் ஸ்ரீமாறன் காலத்தில் பாண்டியருக்கும், இலங்கை மன்ன ருக்கும் இடையே ஏற்பட்ட போர்களைப் பற்றிய விவரங்களை மகா வம்சம் எடுத்துரைக்கின்றது. மேலும், சில சான்றுகள் பாண்டிய நாட்டுக் கல்வெட்டுச் சான்றுகளை உறுதிப்படுத்துபவையாக உள்ளன. புதிய செய்திகளும் பல கிடைக்கின்றன. ஆனால், இலங்கைக்குச் சாதகமாகத் திரித்துக்கூறும் சில கூற்றுகளை இது குறைபாடாகக் கொண்டுள்ளது என்று வரலாற்றறிஞர்கள் கருது கின்றனர்.[2] மற்றபடி பாண்டியர் வரலாற்றிற்கு மகாவம்சத்தின்[3] குறிப்புகள் மிகவும் இன்றியமையாதனவாக அமைந்துள்ளன.

ஏழாம் நூற்றாண்டில் சீனப் பயணி யுவான்சுவாங்[4] பல்லவத் தலைநகரான காஞ்சிக்கு வந்து அந்நகரைப் பற்றிய பல குறிப்புகளை விட்டுச் சென்றுள்ளார். அந்நகரிலிருந்து பாண்டிய நாட்டுக்குச் செல்லத் தயாராகும் நேரத்தில், பாண்டிய நாட்டில் பஞ்சம் மிகுந் துள்ள செய்தியைக் காஞ்சியிலுள்ளோர் சொல்லக்கேட்டு, அதனைக் குறித்துள்ளார். பாண்டிய நாட்டுக்கு அவர் நேரே போகாவிட்டா லும் தாம் கேள்வியுற்ற சுவையுள்ள செய்தி விவரங்களைக் குறித் துள்ளார். சுருக்கமானவையாக இருந்தாலும் மிக்க பயனுள்ளவை யாக அவை அமைந்துள்ளன.

பாண்டியரைப் பற்றிய பிற்காலப் பயணிகளின் குறிப்புகளில் மிகவும் முக்கியம் வாய்ந்த ஒன்றாகக் கருதப்படுவது மார்க்கபோலோ வின் குறிப்புகளேயாகும். வெனிஸ் நாட்டைச் சார்ந்த இவர்

2 Nilakanta Sastri, K. A., The Pandyan Kingdom, p 71

3 மகாவம்சத்தைப் பற்றிய விரிவான ஆய்வுகளுக்குப் பின்வரும் நூல் களைப் பார்க்க.

1. வெங்கய்யா, ARE (1907-8)
2. கீகர், 1-A Vol. XXXV, பக்கம் 153.

4 Dubreuil, J , The Pallavas.

சீனுவிலிருந்து பாரசீகம் போகின்ற வழியில் சுமார் கி.பி. 1292-93 ஆம் ஆண்டில் தென் இந்தியாவிற்கு வருகை புரிந்தார். அவர் விட்டுச் சென்றுள்ள குறிப்புகள் நல்ல வரலாற்று நோக்குடனும், வரலாற்றுக்கு உதவிபுரியும் வகையிலும் அமைந்துள்ளன. ஐந்து பாண்டிய அரசர்களின் ஆட்சியைப் பற்றியும், பாண்டிய நாட்டு வளம், வாணிபம், மக்களின் நடைமுறைப் பழக்கவழக்கங்கள் ஆகியவைகளைப் பற்றியெல்லாம் விரிவான செய்திகள் அதன் மூலம் நமக்குக் கிடைக்கின்றன.[5]

பாண்டிய நாட்டில் முத்துக் குளிக்கும் தொழில் விவரங்களை யும், அரபு நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட குதிரைகளின் வளர்ப்பின்மையைப் பற்றியும் பல அரிய உண்மைகள் அவரது நூலில் கிடைக்கின்றன. வரலாற்றாசிரியர் வாசாப் பாண்டிய நாட்டில் நிலவிய அரசியல் சூழ்நிலையைப் பற்றி நுண்ணிய தகவல்கள் பலவற்றை விட்டுச் சென்றுள்ளார்; மாறவர்மன் குல சேகரனைப் பற்றியும், சடையவர்மன் சுந்தர பாண்டியனைப் பற்றி யும் பல குறிப்புகளைத் தந்துள்ளார். பாண்டிய அரசு உள்நாட்டுக் குழப்பத்தைப் பற்றியும், டில்லி சுல்தான் அலாவுதீனின் தளபதி மாலிக்காபூர் பாண்டியநாடுவரை படையெடுத்த விவரங்களைப் பற்றியும் உள்ள வாசாபின் குறிப்புகள் மிக முக்கியமானவை. 14ஆம் நூற்றாண்டில் முகமதிய ஊடுருவல்களைப் பற்றிய விவரங் கள் அமீர்குஸ்ரு, பதூதா போன்ற நூலாசிரியர்களின் குறிப்புகள் மூலம் தெளிவாகின்றன.[6] சுல்தான் ஆட்சியிலிருந்து மதுரையை விடுவிக்கப் போசள மன்னன் மூன்றும் வல்லாளனின் பெருமுயற்சி களைப்பற்றியும் அவன் இறுதியில் கொடுமைக்குள்ளாக்கப்பட்ட நிகழ்ச்சிகளைப்பற்றியும் இபன் பதூதா விவரமான குறிப்புகளை விட்டுச் சென்றுள்ளார்.

**பிற்கால இலக்கியங்கள்**

சங்க காலத்திற்குப் பிறகு எழுந்த இலக்கியங்களுள் தேவார திவ்யப் பிரபந்தப் பாடல்கள் முக்கியமானவை. இவை, காலத் தால் முதல் பாண்டியப் பேரரசு ஆட்சி செய்த காலத்துடன் பொருந்துகின்றன. அவ்வரசர்களுள் பலர் தேவார திவ்யப் பிரபந்தப் பக்தி நெறிகளில் மனத்தைப் பறிகொடுத்து வைதிக மதத்திற்குப் பேராதரவு காட்டின காலம் இது. பாண்டிய நாட்டி லுள்ள பல சைவ, வைணவத் தலங்களின் சிறப்பு, மக்களின்

[5] Yule and Cordier, The Book of Sea Marcopolo 3vl (Murray, 1921)
[6] Elliot and Dowson, 'The History of India as told by its own Historians' iii (1871); Sastri, K. A. N., 'Foreign Notices of South India.'

இறைவழிபாடு இவற்றைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. பாண்டிய அரசர்களின் திருப்பணிகளைப் பற்றியும் குறிப்புகள் காணப் படுகின்றன. உதாரணமாக ஞானசம்பந்தர் பற்றியும் குறிப்பிடப் பட்டுள்ளது. பெரியாழ்வார், திருமாலிருஞ்சோலை மலைக்குக் கோநெடுமாறன் செய்வித்த பெருஞ்தொண்டினைப் போற்றிப் புகழ்ந்துள்ளார். பாண்டியன் அவைக்களத்தில் அமைச்சரா யிருந்த மாணிக்கவாசகர் வரகுணனின் சமயநெறிபற்றிக் குறிப் பிட்டுள்ளார். பாண்டியரை வென்று பல்லவர் கண்ட வெற்றி களைப் பற்றித் திருமங்கை ஆழ்வாரின் பாடல்களில் காண்கிறோம். தவிர, நாட்டின் சமூக, பொருளாதாரச் செய்திகளைப் பற்றியும் ஆங்காங்கே பல குறிப்புகள் இப் பாடல்களில் கிடைக்கின்றன. இவற்றை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட பெரிய புராணத்திலும் பாண்டிய நாட்டின் சைவத் தலங்களின் பெருமை, பாண்டிய அரசர்களின் சைவத் தொண்டு இவை கூறப்பட்டிருக் கின்றன. பாண்டிய நாடு களப்பிரரின் ஆதிக்கத்தில் கண்ட கொடுமைகளைப் பற்றி மூர்த்தி நாயனார் புராணத்தில் குறிப்புகள் வருகின்றன. அது போன்று 12ஆம் நூற்றாண்டில் பின்பழகிய பெருமாள் ஜீயர் என்பவரால் எழுதப்பட்ட வைணவ குருபரம் பரையில் வைணவத் தலங்களின் மேன்மை, அந் நாட்டில் தோன்றிய ஆழ்வார் ஆச்சாரியர்கள் பற்றிய விவரங்கள் கிடைக் கின்றன. பெரியாழ்வார் பாண்டிய அரசன் ஸ்ரீவல்லபனால் போற்றப்பட்டது, மதுரகவி ஆழ்வார் பாண்டியன் அவைக் களத் தில் அமைச்சராகப் பணியாற்றிப் பிறகு நம்மாழ்வாரின் சீட ரானது போன்ற விவரங்கள் அந்நூலில் நமக்குக் கிடைக்கின்றன. சமய நூல்களில் அச் சமயச் சார்பான செய்திகள் காணப்படுவது இயல்பே. ஆனால், அவற்றை உற்றுநோக்கி ஆராய்ந்து வேறு பல உண்மைகளும் ஆங்காங்கே பொதிந்து கிடப்பதை ஆராய்ச்சி வல்லுநர் காண்பது அவர்களது கடமையாகும்.

பாண்டியரைப் பற்றிய வரலாற்று இலக்கியங்கள் மிகக் குறைவே எனலாம். சோழர் வரலாறு எழுத மூவருலா, கலிங்கத் துப்பரணி, கலம்பகங்கள் போன்ற இலக்கியங்கள் துணை நிற்பதைப் போல் பாண்டியரைப் பற்றி எழுத இலக்கியம் நமக்குத் துணைநிற்க வில்லை. இறையனார் அகப்பொருள் செய்யுள்களிலிருந்து 'பாண்டிக் கோவை' எனும் நூலைப்பற்றி நாம் அறிகிறோம். அதில் சில செய்யுள்களே கிடைத்துள்ளன. அவற்றில் நெடுமாறனைப் பற் றிப் புகழ்ந்து பேசப்படுகிறது. அரிகேசரி, பராங்குசன் போன்ற பட்டப் பெயர்களும் குறிக்கப்பெறுகின்றன. ஆயினும் சம்பவங் களும் வெற்றிகளும் ஒரு காலவரையின்றி முன்னும் பின்னு மாக வருவதால் அவற்றிலிருந்து ஒரு கோவையான சரித்திரம்

நமக்குக் கிடைக்கவில்லை. பல அரசர்களின் காலத்தில் கிடைக் கப் பெற்ற வெற்றிகளை ஒரே அரசனுக்குத் தந்து பாராட்டும் குறைபாடும் அதில் காணப்படுகின்றது. அது பாழி, செந்நிலம், விழிஞம், ஆற்றுக்குடி, பூலந்தை, சேவூர், நெல்வேலி முதலிய இடங்களில் பாண்டியர் கண்ட வெற்றிகளைக் குறிக்கின்றது. இவ் வகையான செய்தித் துணுக்குகளைத் தவிரக் கோவையான வரலாறு எழுத இவை உபயோகமாக இல்லை.

புராண வகையைச் சார்ந்த நூல்கள் அவ்வளவாக வரலாற் றிற்குப் பயன்தரக்கூடியவையாக இல்லை. இவற்றில் முக்கிய மானது பெரும்பற்றப்புலியூர் நம்பி எழுதிய 'திருவிளையாடல் புராணமே' யாகும். இது ஒன்பது அல்லது பத்தாம் நூற்றாண் டில் எழுதப்பட்டது என்று முதலில் கருதப்பட்டது. ஆனால், 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்று அண்மைக்கால ஆராய்ச்சி யாளர் கருதுகின்றனர். மதுரையைப் பற்றிய அக்காலப் புராணக் கதைகளை இது பதிவு செய்திருக்கிறது. 'மாடக்குளக்கீழ் மதுரை' என்று கல்வெட்டுகளில் வரும் பெயர் இந்நூலிலும் வருகிறது. சில வரலாற்றுத் துணுக்குகளைப் புராண ரீதியாக இது குறிக்கிறது. சான்றாக, சமணர்கள் மதுரைமீது யானையை ஏவிவிட அதைச் சிவபிரான் சிங்கமுக அம்பு எய்தி மலையாய்ச் சமைத்துவிட்டார் என்றும், அதுவே இப்பொழுது ஆனைமலையென வழங்கப்படுகிற தென்றும் அது கூறுகிறது. மலையில் சமணர் வாழ்ந்த படுக்கை களை இன்றும் காணலாம். நெடுஞ்சடையப் பராந்தகனின் அமைச்சர் தோற்றுவித்த நரசிங்கப் பெருமாளின் குகைக்கோயில் அங்கேயுள்ளது. இவ்வரலாற்று உண்மையையே புராணவடிவில் திருவிளையாடல் புராணம் கூறுவது போன்று தோன்றுகிறது.

பரஞ்சோதி முனிவர் எழுதிய 'திருவிளையாடல் புராணம்' காலத்தால் பிற்பட்டது. பிற்காலச் சம்பவங்களையும், சடைய வர்மன் குலசேகரன் போன்ற பிற்கால அரசர்களின் திருப்பணி களையும் இணைத்துப் பேசுகிறது. இதுவும் 'ஹாலாஸ்ய மகாத் மியம்' என்ற ஸ்தல புராணமும் கிட்டத்தட்ட 74 அரசர்களின் பட்டியலைக் கொடுக்கின்றன. அவற்றில் பல வெறும் கற்பனைப் பெயர்களேயாகும்.

'மதுரைத் தல வரலாறு' என்ற நூல் மதுரைக் கோயிலின் வரலாற்றைக் கூறுகிறது. 14ஆம் நூற்றாண்டுச் சம்பவங்களை மிகக் கோவையாக, காலக் கணிப்புகளுடன் இது அளிக்கிறது. முகமதியர் ஆட்சிக் காலத்தின் இன்னல்களைப் பற்றியும், விசயநகர இளவரசன் கம்பணராயன் மதுரையைக் கைப்பற்றிய பின் மலர்ந்த

நல்லாட்சியைப் பற்றியும் கல்வெட்டுப் பாணியில் வரிசைப்படுத்தி இது நமக்கு அளிக்கிறது. எனவே, 13, 14ஆம் நூற்றாண்டுப் பாண்டிய நாட்டு வரலாற்றுக்கும் இந்நூல் பல நல்ல செய்திகளைத் தருகிறது. இன்னும் சில தமிழ் நூல்களிலும் சில வரலாற்றுத் துணுக்குகள் கிடைக்கின்றன. இவ்வாறே மதுரைக் கோவிலில் நடைபெற்ற திருப்பணி விவரங்களைப் பிற்கால நூலான 'மதுரைத் திருப்பணி மாலை' அளிக்கின்றது. 'கப்பலூர்க் கோவை' என்னும் நூல் பாண்டி நாட்டுக் கப்பலூரைத் தலைநகராகக் கொண்டு, பாண்டியர்க்குப் படைத்தலைவனாக விளங்கிய கருமாணிக்கன் காலிங்கரையன்மேல் பாடப்பட்ட கோவை. இதன் ஆசிரியர் யார் என்பது தெரியவில்லை. மாறவர்மன் பராக்கிரம பாண்டியனது ஏழாம் ஆண்டாகிய கி.பி. 1341-ல் பாண்டி மண்டலத்து முத்தூர்க் கூற்றத்து உலகளந்த சோழ நல்லூரான கப்பலூருடையான் யாதவராயன் காலிங்கராயனான கருமாணிக்க தேவன், மாரிங்கூர்க் கோவிலுக்குக் கட்டளை அமைத்த செய்தியை ஒரு கல்வெட்டு அறிவிக்கிறது. இத் தலைவனே கப்பலூர்க் கோவையின் தலைவனாவான் என்று அறிஞர் மு. இராகவ ஐயங்கார் காட்டியுள்ளார்.[7]

பாண்டிய நாட்டைப் பற்றிய குறிப்புகள் சில சமஸ்கிருத நூல்களிலும் காணக்கிடைக்கின்றன. கௌடில்யரின் 'அர்த்த சாஸ்திர'த்தில் மதுரையைப் பற்றிய சில குறிப்புகள் காணப்படுகின்றன. மகாகவி காளிதாசர், தாம் இயற்றிய ரகுவம்சம் என்ற நூலில் இந்துமதியின் சுயம்வரத்தில் கலந்து கொண்ட பாண்டிய அரசனைப் புகழ்ந்து பாடியுள்ளார். ஹொய்சள அரசவையில் இருந்த வித்தியாச் சக்கரவர்த்தி என்னும் சமஸ்கிருதப் புலவர் பாண்டியர் முதலிய தென்னகத்து அரசர்களின் ஆதரவையும் பெற்றிருந்தார். அவர் பதின்மூன்றும் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர். பாண்டியர்களுக்கும் ஹொய்சள அரசன் இரண்டாம் நரசிம்மனுக்கும் நடந்த போரைப் பற்றிய பல வரலாற்று உண்மைகளைக் 'கத்ய கர்ணாம்ருதம்' என்னும் தமது சமஸ்கிருத நூலில் அளித்துள்ளார். சோழரது வீழ்ச்சியைப் பற்றியும், காடவன் கோப்பெருஞ்சிங்கனின் எதிர்ப்புகளைப் பற்றியும் பல செய்திகளை இந்நூல் அளித்துள்ளது. 14ஆம் நூற்றாண்டுப் பாண்டிய நாட்டு அரசியல் நிலைமையைப் பற்றியும் விசயநகர இளவரசன் கம்பணராயன் பெரும்படையுடன் பாண்டிய நாட்டிற்கு வந்து அங்கு நிலைபெற்றிருந்த முகமதியர் ஆதிக்கத்தை அகற்றிப் பாண்டிய நாட்டைக் கைப்பற்றியதைப் பற்றியும் அவன்

[7] ARE. 1935-36 para 60, page 44, 'செந்தமிழ்' கட்டுரை.

கண்ட வெற்றிகளைப் பற்றியும் நம்பத்தக்க நல்ல ஆதாரங்களுடன் அவனது மனைவி கங்காதேவி எழுதிய 'மதுரா விஜயம்' அல்லது 'கம்பணராய விஜயம்' என்ற அழகிய சமஸ்கிருதக் காப்பியம் கூறுகின்றது. இதன் சான்றுகள் அக்காலக் கல்வெட்டுச் சான்று களுடன் நன்கு பொருந்தியுள்ளன. இது போன்று தெலுங்கு நூல்களான 'பிரபன்னமிருதம்', 'சாலுவாப்யுதயம்' போன்ற நூல்களுள் பிற்காலப் பாண்டியரைப் பற்றிய சில குறிப்புகள் கிடைக்கின்றன,

## செப்பேடுகள்

இந்திய வரலாற்றிற்குச் செப்பேடுகளும் கல்வெட்டுகளும் அளித்துள்ள அளவிற்கு வேறெந்த ஒரு துறையும் சான்றுகள் அளிக்கவில்லை எனலாம். இது பாண்டியர் வரலாற்றுக்கும் அவ் வாறே பொருந்தும். தென் இந்திய வரலாற்றின் ஆதாரங்களில் செப்பேடுகளும் கல்வெட்டுகளுமே தலைசிறந்தவை. பல்லவர், பாண்டியர் போன்ற அரச குடிகளின் வம்சாவளியை அறிவதற்கு அவை பெருந்துணை புரிந்துள்ளன. உலகில் வேறெந்த நாட்டிற்கும் கிடைத்திராத அளவிற்கு இவ் வரலாற்றுக் கருவூலங்களை நம் முன்னோர்கள் விட்டுச் சென்றுள்ளனர். அவற்றின் துணை கொண்டே இலக்கியங்களில் கிடைக்காத பல உண்மைகளை நாம் அறிகிறோம். இந்திய வரலாற்றுக்குக் கல்வெட்டு ஆராய்ச்சி அச்சாணி போன்று அமைந்துள்ளது. பாண்டியர் வரலாற்றுக்கும் இது பொருந்தும். இவற்றின் துணைகொண்டுதான் கடுங்கோன் வழி வந்த பாண்டியரின் வம்சாவளி, அவர்கள் கண்ட வெற்றிகள், அவர்களுடன் போட்டியிட்ட மற்றப் பேரரசுகள் அவர்களின் இலக்கிய, சமய ஈடுபாடுகள், அவர்களின் அரசு அமைப்புப் போன்ற பல உண்மைகள் நமக்குக் கிடைத்துள்ளன. பாண்டியர் களது வரலாற்றுக்கு அவர்களும், அவர்களது சிற்றரசர்களான ஆய் வம்சத்தினரும் விடுத்துள்ள பத்துச் செப்பேடுகள் இதுகாறும் கிடைத்துள்ளன.[8] அவை :

1. வேள்விக்குடிச் செப்பேடுகள்
2. ஸ்ரீவரமங்கலச் செப்பேடுகள்
3. சின்னமனூர்ச் சிறிய சாசனம்
4. தளவாய்புரச் செப்பேடுகள்
5. சின்னமனூர்ப் பெரிய சாசனம்

[8] 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' என்னும் நூலில் இச் செப்பேடுகளின் முழு வாசகங்களும் தொகுத்து வெளியிடப்பட்டுள்ளன.

6. சிவகாசிச் செப்பேடுகள்

7-10. ஆய்குல மன்னரின் நான்கு செப்பேடுகள்.

இவற்றில் தளவாய்புரச் செப்பேடுகளும் சிவகாசிச் செப்பேடுகளும் சமீப காலங்களில்தான் கிடைத்தன. பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி 1926-ல் 'பாண்டிய வரலாறு' என்னும் நூலை எழுதும்போது அவை கிடைத்தில. இச் செப்பேடுகளின் மூலம் புதிய சான்றுகள் பல இப்போது கிடைத்துள்ளன. பாண்டியர் செப்பேடுகளின் முக்கியக் குறிப்புகளைப் பற்றிச் சுருக்கமாகக் காண்போம்.

1. **வேள்விக்குடிச் செப்பேடுகள்:** இவை, எட்டாம் நூற்றாண்டுப் பிற்பகுதியில் வாழ்ந்தவனும், பாண்டியப் பேரரசின் மிகச் சிறந்த மன்னனாகத் திகழ்ந்தவனுமான நெடுஞ்சடையப் பராந்தகனால் வெளியிடப்பட்டவை. வேள்விக்குடிச் சாசனத்தின் மூலப் பிரதி, லண்டன் பிரிட்டிஷ் மியூசியத்தில் பாதுகாக்கப்பட்டு வருகிறது. பத்து ஏடுகளைக் கொண்ட இச்சாசனத்தில் பதினெட்டுப் பக்கங்களில் மொத்தம் நூற்றுப் பதினைந்து வரிகள் பொறிக்கப்பட்டுள்ளன. மற்றச் செப்பேடுகளைப் போலவே இதிலும் தமிழ், சமஸ்கிருதம் ஆகிய இருபகுதிகளும் உள்ளன. சமஸ்கிருதப் பகுதி கிரந்த எழுத்திலும், தமிழ்ப்பகுதி வட்டெழுத்திலும் உள்ளன. களப்பிரரை வென்று கடுங்கோன் எப்படிப் பாண்டிய அரசை மீண்டும் நிலைநிறுத்தினான் என்பதை விவரிக்கும் இச் சாசனம் இவனது முன்னோனான பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பற்றிக் கூறுவது சங்க இலக்கியச் சான்றுகளுடன் ஒன்றியுள்ளது. பிறகு கடுங்கோன் வழிவந்த ஆறு மன்னர்களைப் பற்றிய விவரங்களும் முதன் முதலாக இச் சாசனம் வழியாகத்தான் தெரியவருகின்றன. அவர்கள் அடைந்த வெற்றிகள், ஆற்றிய இலக்கியத் தொண்டுகள், உருவாக்கிய அரசு அமைப்பு முறைகள் போன்ற பல முக்கியச் செய்திகளை இச் சாசனத்தின் வழியாக நாம் அறிகிறோம்.

2. **ஸ்ரீவரமங்கலச் செப்பேடுகள்:** வேள்விக்குடிச் சாசனத்தை அளித்த நெடுஞ்சடையப் பராந்தகனால் இவை அளிக்கப்பட்டன. இவை சென்னைப் பொருட்காட்சிச் சாலையில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன (Madras Museum Plate No. 15). தானமாக வழங்கப்பட்ட ஊரின் பெயர் ஸ்ரீவரமங்கலம். ஏழு செப்பேடுகளில்[9] 12 பக்கங்கள் எழுதப்பட்டுள்ளன.

[9] இச்சாசனத்தை வி. வெங்கையா அவர்கள் 1893ஆம் ஆண்டில் இந்தியன் ஆன்டிக்குவேரியில் முதன்முறையாக வெளியிட்டார்.

நெடுஞ்சடையன்,

1. பல்லவர், கேரளர், கொங்கர்மீது கண்ட வெற்றிகள்,
2. வெள்ளூர், விண்ணம் போன்ற வெற்றிகள்,
3. காஞ்சிவாய்ப் பேரூரில் திருமாலுக்குக் குன்றமன்னதோர் கோயில் கட்டியது,
4. ஆய்வேள் அரசனை வென்றது,
5. கரவந்தபுரத்தைச் சுற்றி அகழியையும், மதிலையும் அமைத்தது.

போன்ற பல முக்கியச் சான்றுகளை இச்சாசனம் நமக்கு அளித்துள்ளது.

3. ***சின்னமனூர்ச் சிறிய சாசனம்:*** மதுரை மாவட்டத்தில் பெரியகுளம் தாலுக்காவில் உள்ளது சின்னமனூர்க் கிராமம். இவ்வூர்ப் பெருமாள் கோவிலில் மடைப்பள்ளி கட்டுவதற்காகக் கடைக்கால் தோண்டியபோது இச் செப்பேடுகள் கண்டெடுக்கப் பட்டன.[10] இவை இப்போது மைசூரிலுள்ள இந்தியச் சாசனத் துறையினரிடம் இருக்கின்றன. இதில் மூன்று ஏடுகள்தாம் எஞ்சியுள்ளன. இவற்றில் இடையே காணப்படாத சில ஏடுகளில்தாம் பாண்டிய அரசர்களின் பெயர் வரிசை எழுதப்பட்டிருக்க வேண்டும். அவை கிடைக்காதது பாண்டிய சரித்திரத்திற்குப் பேரிழப்பாகும். ஸ்ரீவரமங்கலச் செப்பேடுகளை வரைந்த அரிகேசரி என்பவனே இச் செப்பேடுகளையும் எழுதியபடியாலும், வேறு சில அகச் சான்றுகளாலும் நெடுஞ்சடையப் பராந்தக மன்னனே சிறிய செப்பேடுகளையும் வழங்கியிருக்க வேண்டும் என்று கருதப்படுகின்றது. பாண்டியரைப் பற்றிய புராணக் கதைகளும் பராக்கிரமச் செயல்களும் முதலில் கூறப்படுகின்றன. பிறகு ஜயந்தவர்மன், அவனது மகன் அரிகேசரி (இவன் அசமசமன், அகாலகாலன், மாறவர்மன் என்றும் அழைக்கப்பெற்றான்) ஆண்டனர். இவனது மகன் மருதூர்ப்போரிலும் குவளைமலைப் போர்களிலும் வெற்றி கண்டவன். ஆனால், சில ஏடுகள் கிடைக்கவில்லையாதலால் அந்த மகனின் பெயர் கிடைக்கவில்லை. இச் செப்பேடுகளுக்கு ஆணத்தி குண்டூர் உத்தரமந்திரியாகிய தாயன் சிங்கன்; சாசனத்தைச் செய்வித்தவன் பாண்டிப் பெரும்பணைகாரன் மகன் அரிகேசரி என்பான்.

[10] ராபர்ட்சூவல் தமது 'லிஸ்ட் ஆப் ஆன்டிக்குவிடீஸ்' Vol. I முதன்முறையாகக் குறித்துள்ளார். பிறகு 1907ஆம் ஆண்டுச் சாசன அறிக்கையில் குறிக்கப்பட்டு, தென்இந்தியச் சாசனங்கள் III-ல் (S I I.) வெளியிடப்பட்டுள்ளன,

**4. தளவாய்புரச் செப்பேடுகள் :** இவை கோவில்பட்டி அருகே உள்ள தளவாய்புரம் எனும் கிராமத்தில் பூமியை அகழ்ந்தபோது கண்டெடுக்கப்பட்டவை. வழக்கம்போல் சமஸ்கிருதம், தமிழ் ஆகிய இரு பகுதிகளைக் கொண்ட பெரிய சின்னமனூர்ச் சாசனம் வழங்கிய இராசசிம்மனின் தந்தை பராந்தக வீரநாராயணன் வெளியிட்ட செப்பேடுகள் இவை. வேறு எந்தச் செப்பேடு களிலும் கிடைக்காத பாண்டிய வம்சத்தினரைப் பற்றிய பல செய்திகள் இதிலிருந்து கிடைக்கின்றன. ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லப னுடைய தந்தையின் பெயர் பராந்தகன் என்று இது குறிக் கின்றது. சின்னமனூர்ச் செப்பேட்டில் அது வரகுணன் என்று காணப்படுகிறது. ஆகவே, நெடுஞ்சடையப் பராந்தகனே முதலாம் வரகுணன் என்று பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி கருதியது உறுதிப்படுகிறது. ஸ்ரீமாறன் குடந்தையில் கண்ட பெரும் வெற்றியைப் பற்றிய விவரம் இதில் கிடைக்கிறது. அவ்வாறே ஸ்ரீவல்லபனின் மகனும் இச் செப்பேடு வழங்கிய பராந்தக வீரநாராயணனின் அண்ணனுமான வரகுணனின் சைவ சமயப் பற்றுப் பற்றியும் பேசப்படுகின்றது. பொத்தப்பி குலத்துச் சோழர்களில் ஒருவனான ஸ்ரீகண்டனின் மகள் அக்கள நிம்மடியை மணந்த செய்தியும் அவர்களுக்குப் பிறந்தவனே இச் சாசனம் வழங்கிய வீரநாராயணன் என்ற செய்தியும் அறிகின்றோம். வீரநாராயணனின் வெற்றிகளும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இவற்றால் இச் செப்பேடுகள் பாண்டிய வரலாற்றுக்கு மிக முக்கிய மாக விளங்குகின்றன என்பது தெளிவு.

**5. சின்னமனூர்ப் பெரிய சாசனம் :** இது பாண்டிய அரசன் இரண்டாம் இராசசிம்மனால் வழங்கப்பட்டது. கிடைத்துள்ள ஏழு ஏடுகளில் ஆராய்ச்சிக்கு உதவும் தக்க பல செய்திகள்அடங்கி யுள்ளன. பாண்டிய அரசர்களின் பெருமைகளைக் கூறிய பின்னர்ப் பாண்டியர் தலையாலங்கானத்துப் போரில் இரு பெரு வேந்தரை வென்றதையும், மகாபாரதம் தமிழ்ப்படுத்தியதையும், மதுரா புரியில் சங்கம் வைத்ததையும் சிறப்பாகக் கூறுகிறது. அரிகேசரி என்னும் அரசனும் அவனைத் தொடர்ந்து அவனது மகன் சடிலன், அவன் மகன் இராசசிம்மன், அவன் மகன் வரகுணன், அவன் மகன் ஸ்ரீவல்லபன், அவனது புதல்வர்கள் வரகுணன், பராந்தக சடையன் என்ற இருவர் என்று பாண்டிய பரம்பரையை வரிசைப்படுத்தி இச் செப்பேடு அளிக்கிறது. பராந்தக சடை யனின் மனைவி, வானமாதேவி என்பவள். அவர்களது மகனே இச் செப்பேட்டை வழங்கிய இராசசிம்மனாவான். இவர்களில் பலர் கண்ட வெற்றிகளும், இராசசிம்மன் வழங்கிய தானங்கள் போன்ற விவரங்களும் அடங்கியுள்ளன.

**6. சிவகாசிச் செப்பேடுகள் :** இச் சாசனம் 1960 ஆம் ஆண்டில்தான் கண்டுபிடிக்கப்பட்டது. சென்னைப் பொருட்காட்சிச் சாலையில் இப்போது பாதுகாக்கப்பட்டு வருகிறது. இது ஐந்து ஏடுகளைக் கொண்டது. அவற்றிலும் சில, துண்டுகளாக ஒடிந்த நிலையில் கிடைத்தன. மொத்தம் எட்டுப் பக்கங்கள் எழுதப்பட்டுள்ளன. இதை வெளியிட்டவன் பாண்டிய அரசன் வீரபாண்டியனுவான். இச் செப்பேட்டில் கொடுக்கப்பட்ட வம்சாவளியில், தீவிர கோபன், மான குலாசலன், மானுபரணன் போன்ற பல புதியபெயர்கள் கிடைக்கின்றன. மானுபரணனுக்கும் சேர நாட்டு இளவரசிக்கும் பிறந்தவனே வீரபாண்டியன். இவனும் சோழர் தலைகொண்ட வீரபாண்டியனும் ஒருவன் தானு என்ற பிரச்சினை ஆராயப்படுவதற்கு இச் செப்பேடு வழி வகுத்துள்ளது. திருநெல்வேலிப் பாண்டியரின் வரலாற்றிற்கு அவர்கள் வெளியிட்ட புதுக்கோட்டைச் செப்பேடுகள் துணை செய்கின்றன.

**7. ஆய்குல மன்னரின் செப்பேடுகள் :** பொதியமலை, திருவாங்கூர், கன்னியாகுமரி போன்ற பகுதிகளை ஆண்டுவந்த ஆய்குல மன்னர் விட்டுச் சென்றுள்ள நான்கு செப்பேட்டுச் சாசனங்கள் நமக்கு கிடைத்துள்ளன.[11] அவற்றை ஆராய்ந்து அவற்றின் வரலாற்று உண்மைகளை முதன் முதலில் வெளிப்படுத்திய பெருமை தொல்லியல் ஆய்வு மேதை டி. ஏ. கோபிநாதராயரைச் சாரும். சுமார் அரை நூற்றுண்டுக்கு முன்னர்த் திருவாங்கூர் ஆர்க்கிலாஜிகல் சீரிஸ் என்னும் அறிக்கைகளில் அவருடைய ஆராய்ச்சிக் கட்டுரைகளைக் காணலாம். பாண்டியர்களது சாசனங்களைப் போலவே இவர்களது சாசனங்களிலும் ஒரு பகுதி சமஸ்கிருதத்திலும் ஒரு பகுதி தமிழிலும் வரையப்பட்டுள்ளன. ஆனுல், தமிழ்ப் பகுதி வட்டெழுத்தில் எழுதப்படவில்லை ; பல்லவர் சாசனங்களில் கையாளப்பட்டது போலத் தமிழ் எழுத்தினுல் எழுதப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. ஆய் மன்னர் வேணுட்டுப் பகுதியைச் சுயேச்சையாக ஆண்டு வந்த போதிலும் அவ்வப்போது பாண்டியர் அவர்களை வென்று தங்களது அதிகாரத்தின்கீழ் அவர்களை இயங்கச் செய்தனர். வென்ற அரசனுடைய பெயரை அவனுக்கடங்கிய சிற்றரசர்கள் சூட்டிக் கொள்வது அக்காலத்து வழக்கம். அவ் வழக்கப்படியே ஆய்குல மன்னன் கருநந்தடக்கன், பாண்டிய அரசர்களின் பெயர்களான ஸ்ரீவல்லபன் என்ற பெயரையும் அவனது மகன் வரகுணன் என்ற பெயரையும் சூட்டிக் கொண்டான். மேலும் சடைய பாண்டியர்

[11] இவை : 1 பார்த்திவசேகரபுரச் சாசனம், 2. திருப்பறப்புச் சாசனம், 3. பாலியத்துச் சாசனம், 4 திருநந்திக்கரைச் சாசனம். மற்ற விவரங்களுக்குப் 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' என்ற நூலைப் பார்க்கவும்.

களைப் போலவே 'சடையன்' என்ற பெயரையும் ஏற்றனன். இச் சானங்களில் கிடைத்துள்ள பல அரிய செய்திகள் பாண்டி நாட்டிற்கும் பொருத்தமுடையனவாய் உள்ளன. எடுத்துக்காட்டாக அக்காலத்தில் காந்தளூர்ச்சாலை, பார்த்திவசேகரபுரத்துச்சாலை போன்ற சாலைகளில் இயங்கிய முறையையும் அங்குப் படித்த சட்டர்களின் ஒழுக்கத்தைப் பற்றிய கட்டுத் திட்டங்களின் விவரங்களையும் ஒரு செப்பேட்டிலிருந்து அறிகிறோம். அது போல அவர்கள் கட்டிய கோவில்கள், அவர்கள் போற்றிய சமயம் போன்ற விவரங்களும் அவர்களது சாசனங்களில் கிடைத்துள்ளன. இவையெல்லாம் பாண்டிய நாட்டின் தென்கோடிப் பகுதிகளில் வழங்கப்பட்ட மரபுகளைக் குறிக்கும் வகையில் சான்றுகள் பகர்கின்றன.

## கல்வெட்டுகள்

செப்பேடுகள் எண்ணிக்கையில் மிகக் குறைவு. மேலும், பெரும்பாலும் ஆரம்பகாலங்களைச் சார்ந்தவை. ஆனால், கல்வெட்டுகள் இக் குறையை ஒருவாறு நீக்குகின்றன. அவை எண்ணிக்கையில் மிக அதிகமட்டுமல்லாமல் எல்லாக் காலங்களிலும் தொடர்ந்து கிடைக்கின்றன. 7, 8ஆம் நூற்றாண்டிலிருந்து 16ஆம் நூற்றாண்டு வரைகூடப் பாண்டியர் கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. தமிழ்ப் பிராமிக் கல்வெட்டுகள் கிறிஸ்து சகாப்தத் தொடக்க காலத்திற்குச் சற்று முந்திய காலத்தையும் தொடும் அளவிற்குப் பழைமையானவை. இவை தொடக்ககாலப் பாண்டியர் வரலாற்றிற்குப் பயன்படுபவை. அண்மையில் மலையடிக் குறிச்சியில் கிடைத்த சேந்தன் கல்வெட்டு 7ஆம் நூற்றாண்டைச் சாரும். நெடுஞ்சடையப் பராந்தகனின் ஆனைமலைக் கல்வெட்டும், திருப்பரங்குன்றம் கல்வெட்டும் கலி சகாப்த ஆண்டில் குறிக்கப்பட்டிருப்பதால் இவை வரலாற்றுக் காலக் கணிப்புக்கு அசைக்க முடியாத ஆதாரங்களாய் அமைந்துள்ளன.[12] இது போன்று ஐவர் மலையிலுள்ள வரகுணனின் 8ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு சகவருஷம் 792 அதாவது கி.பி. 870-ல் பொறிக்கப்பட்டது. திருச்சிராப்பள்ளியிலும் அம்பாசமுத்திரத்திலுமுள்ள வரகுணனின் கல்வெட்டுகளும் மிக்க பயனுள்ளவை. இவையெல்லாம் வட்டெழுத்தில் எழுதப்பெற்றவை. பத்தாம் நூற்றாண்டில் பாண்டிய நாடு சோழர் ஆதிக்கத்தின்கீழ் வந்த காலம் வரை வட்டெழுத்து வழக்கில் இருந்தது. பிறகு சோழ நாட்டிலும் தொண்டை நாடுகளில் உள்ளது போலப் பிற்காலத் தமிழ் எழுத்தில் எழுதப்பட்டன. இரண்டாம் பாண்டியப் பேரரசு

[12] K G. Krishnan, Two Pandyan Inscriptions from Tirupparankunram Ep. Ind. XXXVI.

காலத்தில் கல்வெட்டுகள் பன்மடங்கு அதிகரித்தன; நீண்ட வாச கங்களுடன் வரையப்பட்டன. பல வரலாற்றுச் சம்பவங்களை விரி வாக அழகிய நடையில் அவை விவரிக்கின்றன. சோழ அரசர் களைப் போல் இவர்களும் மெய்க்கீர்த்திகள் புனைந்து கொண்டனர். ஒவ்வோர் அரசனும் ஒருவிதச் சொற்றொடர் கொண்ட மெய்க் கீர்த்திகளை அமைத்துக் கொண்டனன். உதாரணமாக, சடைய வர்மன் குலசேகரனின் மெய்க்கீர்த்திகள் 'பூதலமடந்தை', 'பூவின் கிழத்தி', 'பூதல வனிதை' போன்ற சொற்றொடரைக் கொண்டு ஆரம்பமாகும். இரண்டாம் மாறவர்மன் சுந்தரனின் (1238) மெய்க்கீர்த்தி 'பூமலர் திருவும் பொருதிரு மடந்தையும்' என்று ஆரம்பிக்கும். மெய்க்கீர்த்திகள் பல இடங்களில் பெருமை களை மிகைபடுத்திக் கூறுவது குறைபாடே ஆயினும், அவற்றில் பல வரலாற்று உண்மைகள் அடங்கியிருக்கின்றன என்பதை மறக்க முடியாது.

ஒவ்வொரு மன்னனும் தனது ஆட்சியில் நடந்த முக்கிய நிகழ்ச்சிகளைப் பற்றிய அதிகார பூர்வமான மெய்க்கீர்த்திகளைப் பாமர மொழியில் கற்களில் பொறிக்குமாறு பணித்தான். இம் முறை முன்னமே செப்பேடுகளில் கையாளப்பட்டாலும், கல் வெட்டுகளில் இராசராச சோழன் காலத்திற்குப் பிறகுதான் வெகுவாகப் பழக்கத்திற்கு வந்தது எனலாம். இம் மெய்க்கீர்த்தி களின் சிறப்பைப் பற்றி ஹூல்ஷ், வெங்கய்யா போன்ற அறிஞர்கள் 'தென்னிந்தியக் கல்வெட்டுகள்' என்ற தொகுப்பில் சிறந்த முறை யில் விரிவாக விளக்கியுள்ளனர். பாண்டியர் கல்வெட்டுகளில் அரசனின் ஆட்சியாண்டை இரண்டாகப் பிரித்துப் பதிவு செய்யும் ஒருவித நூதன முறை சில இடர்ப்பாடுகளைத் தோற்றுவித் துள்ளது.[13] 'எதிராம் ஆண்டு' என்று அடிக்கடி குறிப்பிடப் படுகிறது. உதாரணமாக 'இரண்டாவதன் எதிர் நாற்பத் திரண்டு'. இதற்குப் பலவிதமான பொருள் கூறப்படுகின்றன. கொடுக்கப்பட்டுள்ள இரண்டு ஆண்டுகளையும் ஒன்றுகூட்டிக் கணக்கிட வேண்டுமென்பதுதான் பொருத்தமுள்ள கருத்தாகத் தோன்றுகிறது. சின்னமனூர்ச் செப்பேடு இதற்குத் தக்க சான்று பகர்கின்றது. அதில் தமிழ்ப் பகுதியில் 'இரண்டாவதன் எதிர் பதினான்காவது' என்றிருப்பதை 'ஷோடசே ராஜ்ய வர்ஷே' (பதினாறாவது ஆட்சியாண்டு) என்று சமஸ்கிருதப் பகுதி குறிப்பதனால், கணக்கிடும் முறை நன்கு விளங்குகிறது.

சில கல்வெட்டுகளில் ஆட்சியாண்டைத் தவிர நடப்பு வருட நாள்களும் குறிக்கப்பட்டுள்ளன. இது சில சமயங்களில் குழப்

[13] K. A. N. Sastri, P. K. p. 8

பங்களை உண்டாக்குகின்றது. பிற்காலப் பாண்டியர், அதாவது 15ஆம் நூற்றாண்டிலிருந்து தோன்றிய கல்வெட்டுகளில் சகவருடம் குறிக்கப்படுவது காலக் கணிப்பிற்குப் பெரும் துணையாக அமைகின்றது. 1926ஆம் ஆண்டு பேராசிரியார் நீலகண்ட சாஸ்திரி 'பாண்டிய நாட்டு வரலாறு' எழுதிய போது பல கல்வெட்டுகளின் முழு வாசகமும் வெளியிடப்படவில்லை. அவர்களே பிரதிகளை வாங்கிப் படித்து ஆராயவேண்டியிருந்தது. ஆனால், அண்மையில் சடையவர்மன் ஸ்ரீவல்லபனின் காலம் வரையுள்ள (12ஆம் நூற்றாண்டு) இதுகாறும் கிடைத்துள்ள கல்வெட்டுகளனைத்தையும் வரிசைப்படுத்தித் 'தென் இந்தியச் சாசனங்கள்' என்னும் தொகுதியில் மத்திய தொல்லியல் ஆய்வுத்துறையினர் வெளியிட்டுள்ளனர். இது ஆராய்ச்சியாளர்களுக்கு முக்கிய ஆதார நூலாகும் என்பதில் ஐயமில்லை. தமிழ்நாட்டுத் தொல் ஆய்வுத்துறை வெளியிட்டுள்ள 'கன்னியாகுமரி மாவட்டச் சாசனங்கள்' தொகுதியும் இதுவரை வெளியிடாத பல கல்வெட்டுகளின் வாசகங்களை அளிக்கின்றது. மெகன்சி துரை சேர்த்த கல்வெட்டுகளைத் 'தென் இந்தியக் கோயில் சாசனம்' என்ற தொகுப்பில் காலம் சென்ற கல்வெட்டு ஆராய்ச்சி வல்லுநர் தி. நா. சுப்பிரமணியம் வெளியிட்டுள்ளார். அவற்றில் பாண்டியர் கல்வெட்டுகள் பல உள்ளன. பாண்டிய வரலாறு எழுதுவதற்கான சான்றுகள் அதிகரித்துக் கொண்டே வருகின்றன என்பது இவற்றால் புலனாகும். புதிய கண்டுபிடிப்புகள் அவ்வப்போது வரும்போது அவற்றை விழிப்புடன் வரவேற்று அவற்றின் பயனைப் பெற வேண்டும். பாண்டியர் கல்வெட்டுகளோடு நின்றுவிடாமல், அவர்களுடன் சம காலங்களில் வாழ்ந்த பல்லவர், சேரர், சோழர், சாளுக்கியர், கங்கர் போன்றோரின் கல்வெட்டுகளும் பாண்டியரைப் பற்றிய பல அரிய செய்திகளைத் தருகின்றன. அவற்றில் சில சமஸ்கிருதத்திலும், பல தமிழிலும் இருக்கின்றன. அவை அளிக்கும் சான்றுகளை நாம் புறக்கணிக்க முடியாது. ஏனெனில், பாண்டியர் கல்வெட்டுகள் சொல்லாத அல்லது சொல்ல விரும்பாத பல நிகழ்ச்சிகளை அவை குறிக்கின்றன. உதாரணமாக, கி.பி. 966-ல் வீரபாண்டியனைக் கொன்று, மதுரையை ஆதித்த சோழன் கைப்பற்றிய செய்தி சோழர் கல்வெட்டுகள் மூலம்தான் தெரியவருகிறது. அதுபோல, அதற்கு முன்னே இரண்டாம் இராசசிம்மன் காலத்தில் ஒருமுறை இலங்கைப் படையும் பாண்டியர் படையும் ஒன்றுசேர்ந்து முதல் பராந்தக சோழனோடு வெள்ளூர் என்னுமிடத்தில் போர் புரிந்து தோல்வியுற்ற செய்தி கங்க அரசன் இரண்டாம் பிருதிவிபதியின் உதயேந்திரச் செப்பேடுகளில் காணப்படுகின்றது. ஆகையால், உண்மை விளங்குவதற்குச் சமகாலத்து அரசுகளின் கல்வெட்டுகளையும் நாம் ஆராய வேண்டும்.

இக் கல்வெட்டுகள் எழுத்து, மொழி ஆகிய இவ்விரு துறை ஆய்விற்கும் துணைபுரிகின்றன. இவ்விரண்டும் எவ்வாறு காலப் போக்கில் மாறின, வளர்ந்தன என்பதை அறிவதற்குப் பயன் படும். எப்படித் தொடக்க காலத்தில் கல்வெட்டுகள் பிராமி யிலும், இடைக்காலத்தில் வட்டெழுத்திலும், பிறகு தற்கால எழுத்து வடிவிலும் அவை எழுதப்பட்டன என்பது போன்ற மாறு தல்களை நாம் அறிய முடிகிறது. பாண்டிய நாட்டில் ஊர்ச் சபைகள் இயங்கிய முறையை மானூரிலுள்ள கல்வெட்டொன்று விவரிக்கின்றது.[14] சோழர் ஊராட்சி முறைக்கு உத்தரமேரூர்க் கல்வெட்டு எவ்வளவு முக்கியமோ அவ்வாறே மானூர்க் கல்வெட் டும் பாண்டிய வரலாற்றுக்கு முக்கியம் வாய்ந்ததாகும். சுருங்கக் கூறின் அரசியல், பொருளாதாரம், சமூகம், கலை, சமயம் போன்ற பல்வேறு துறைகளுக்குப் பேராதாரமாக விளங்குபவை கல்வெட்டு களே எனலாம்.

## நாணயங்கள்

பண்டைய நாணயங்களிலிருந்தும் சில வரலாற்றுக் குறிப்புகள் கிடைக்கின்றன. வட நாட்டில் பல பகுதிகளில் கிடைத்த நாண யங்கள் வரலாற்றுக்கு நல்ல பயன் அளித்துள்ளன. உதாரணமாக வடமேற்கே கிடைத்த இந்திய கிரேக்க நாணயங்கள், பிற் காலத்தே குப்த அரசர்கள் வெளியிட்ட அழகிய தங்க நாணயங்கள் இவையெல்லாம் அக்கால அரசர்களின் ஆற்றல், கலையார்வம் போன்ற செய்திகளைப் பற்றிய பல விவரங்களை அளிக்கின்றன. சோழர் காலத்திய நாணயங்களும் அவ்வாறே சில சான்றுகளை அளித்துள்ளன. ஆனால், பாண்டியர் நாணயங்கள் இதுகாறும் அவ்வளவு கணிசமாகக் கிடைக்கவில்லை. அவற்றைப் பற்றிய ஆராய்ச்சிகளும் சிறப்பாக நடைபெறவில்லை. கிடைத்துள்ள சில காசுகள் வரலாற்றுக்கு உபயோகமாக உள்ளன. சங்ககாலத்திய அரசர்களைக் குறிக்கும் நாணயங்கள் கிடைக்கவில்லையென்றாலும் அக் காலத்தைச் சார்ந்தவை யென்று சொல்லக்கூடிய அழகிய செப்பு நாணயங்கள் கிடைத்துள்ளன. அவை சதுரவடிவாயும், ஒரு புறம் யானையும் அஷ்டமங்களக் குறிப்புகளும், மறுபக்கம் பாண்டியச் சின்னங்களான இரு கயல்களும் பொறிக்கப்பட் டுள்ளன. இவ்வகை நாணயங்கள் மதுரை வைகைக்கரையோரப் பகுதிகளில் கிடைத்துள்ளன. இவற்றில் எழுத்துகள் இல்லாதது ஒரு குறைபாடாகும். ஆனால், எழுத்துகளுடன் கூடிய காசுகளும் கிடைக்க நல்ல வாய்ப்பு உள்ளது. பிற்காலப் பாண்டிய அரசர் களின் நாணயங்கள் பல கிடைத்துள்ளன. இரண்டாம் வரகுண

[14] E.I. XXII. p. 9-11.

னின் பொற்காசு ஒன்று கிரந்த எழுத்தில் அவரது பெயருடன் கிடைத்துள்ளது. இரண்டாம் பாண்டியப் பேரரசின் நாணயங்கள் பல அரசர்களின் விருதுகளுடன் கிடைத்துள்ளன. கலியுகராமன், கச்சிவழங்கும் பெருமான் போன்ற சடையவர்மன் சுந்தர பாண்டியனுடைய விருதுகள் பொறிக்கப்பட்ட நாணயங்கள் கிடைத்துள்ளன. அவ்வப்போது வழக்கில் இருந்த நாணயங்களைப் பற்றியும் ஒருவாறு நமக்குப் புலனாகின்றன. வெளிநாட்டு நாணயங்களும் சில கிடைத்துள்ளன. உரோமானியத் தங்க நாணயங்கள் இங்கே புழக்கத்தில் இல்லாவிடினும் தங்க மதிப்பிற்காக இங்கே பாதுகாக்கப்பட்டுள்ளன. தினாரா, திராமம், ஈழக்காசு, கஹ பணம் போன்ற நாணயங்கள் வெளி நாடுகளுடன் கொண்ட தொடர்புகளைக் குறிக்கின்றன. இவற்றைப்பற்றி உரிய இடத்தில் மேலும் ஆராய்வோம். சோழர் காசுகள் பாண்டிய நாட்டில் கிடைத்துள்ளன. பாண்டியநாடு சோழர் ஆட்சிக்குட்பட்டபோது அக் காசுகள் இங்கு வழக்கிலிருந்தன. இது போன்று பாண்டியர் செல்வாக்கு தொண்டை நாடுவரை பரவியபோது அவர்களது நாணயங்கள் அங்கே வழக்கில் வரலாயின.

## அகழ்வாராய்ச்சி

பண்டைய நகரங்களைப் பற்றியும், மக்களின் வாழ்க்கை வசதிகளைப் பற்றியும் அகழ்வாராய்ச்சி மூலமாக அறிய நல்ல வாய்ப்புகள் இருக்கின்றன. குறிப்பாக வரலாற்றுக் காலத்திற்கு முந்திய காலங்களைப் பற்றி அறிய அவை மூலம்தான் சான்றுகள் கிடைக்கின்றன. இவற்றைப் பற்றி மற்றோர் அத்தியாயத்தில் விரிவாக விளக்கப்பட்டிருப்பதைப் பார்க்கலாம். வரலாற்றுத் தொடக்க கால வாழ்க்கைப் பண்பாடுகளைப் பற்றி ஆதிச்ச நல்லூர் போன்ற இடங்களில் நடந்த அகழ்வாராய்ச்சிகள் பல முக்கிய விவரங்களைத் தந்து வரலாற்றிற்குப் பேருதவி புரிகின்றன. கொற்கை, உக்கிரன் கோட்டை போன்ற இடங்களிலும் அண்மையில் அகழ்வாராய்ச்சிகள் நடந்துள்ளன. கொற்கையில் இரும்புக்காலம் (Iron Age) கிட்டத்தட்ட கி.மு. 700 ஆண்டு வரை போகக்கூடும் என்று தெரிகின்றது. உக்கிரன் கோட்டையில் புதையுண்ட பல கட்டடப் பகுதிகள் காணக்கிடைத்துள்ளன.[15] புதுக்கோட்டைப் பகுதிகளில் இரும்புக் காலத்தைச் சார்ந்த ''மெகலித்'' (Megalith) என்று சொல்லக்கூடிய கற்சின்னங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அவற்றையெல்லாம் அகழ்ந்து ஆராய்ந்தால் புதிய தகவல்கள் கிடைக்கும். அகழ்வாராய்ச்சி செய்ய வேண்டிய இடங்கள்

[15] K. V. Raman, Uggirankottai, An Early Fortress Town of the Pandyas J. I. H. LII (1974)

பாண்டிய நாட்டில் உள்ளன. அவற்றைச்செய்தால் இன்னும் பல வரலாற்றுச் சான்றுகள் நமக்குக் கிடைக்கும் என்பதில் ஐயமில்லை.

**வரலாற்றுச் சின்னங்கள்**

பாண்டிய நாட்டிலுள்ள நூற்றுக்கணக்கான கோயில்கள் மண்டபங்கள், அவற்றிலுள்ள சிற்பங்கள், ஓவியங்கள் இவையெல்லாம் சிறப்புமிக்க வரலாற்றுச் சின்னங்களாகத் திகழ்கின்றன. கோயில் கட்டட வளர்ச்சி, சமயக்கோட்பாடுகள், அவ்வப்போது கையாளப் பட்ட சிற்பப்பாணிபோன்ற பல செய்திகளைப் பற்றியெல்லாம் நாம் அவற்றிலிருந்து அறிய முடிகிறது. சமணம், பௌத் தம், சைவம், வைணவம் போன்ற சமயங்கள் அவ்வப்போது மக்களிடையே பெற்றிருந்த செல்வாக்கினைப் பற்றியும் நாம் அறிய உதவுகின்றன. சிற்பங்களும் ஓவியங்களும் அக்காலத்தின் ஆடை அணிகலன்களை அப்படியே நமக்குப் படம் பிடித்துக் காட்டுவன போல் அமைந்துள்ளன. சித்தன்னவாசல் ஓவியங்களில் ஒரு பாண் டிய அரசனுடன் அவனது அரசியின் உருவங்களும் அழகாகக்காட்சி யளிக்கின்றன. தமிழகக்கோயில்கள் சமய வழிபாட்டுக் கூடங் களாக மட்டுமன்றிக் கலைக்கூடங்களாகவும் வரலாற்றுக் கருவூலங் களாகவும் போற்றப்படுகின்றன. அவற்றை நாம் நன்கு ஆராய்ந்து அவற்றில் அடங்கியுள்ள பல உண்மைகளை அறிதல் இன்றியமை யாததாகும்.

மேலே சொல்லப்பட்ட குறிப்புகளிலிருந்து பாண்டியர் வர லாறு எழுதுவதற்கு நல்ல பல ஆதாரங்கள் இருக்கின்றன என்பது தெளிவாகிறது. சோழர் வரலாற்றைப் போன்று இலக்கியச் சான்றுகள் அவ்வளவு கிடைக்கவில்லை என்பது உண்மையே. எனினும், கிடைத்துள்ள செப்பேடுகளும் கல்வெட்டுகளும் இக் குறையை ஒருவாறு நிரப்புகின்றன. மார்க்கபோலோ, இபன் பதூதா போன்ற வெளிநாட்டவர் விட்டுச் சென்றுள்ள குறிப்பு களும், பிற்காலப் பாண்டியரைப் பற்றியுள்ள சில இலக்கியக் குறிப்புகளும் நமக்குத் தக்க துணை புரிகின்றன. இவற்றைக் கொண்டு பாண்டிய நாட்டின் வரலாற்றைத் தக்க சான்றுகளுடன் அவ்வப்போது அறிஞர்கள் எழுதியுள்ளனர். மேலும் பல புதிய சான்றுகளும் கண்டுபிடிக்கப்பட்டு வருகின்றன. அவற்றை நாம் விழிப்புடன் ஏற்று வரலாற்று இயலை வளப்படுத்துவது நமது கடமையாகும்.

# 2. வரலாற்றுக்கு முற்பட்ட காலம்

ஆதிமனிதன் வாழ்ந்த அறிகுறிகள் இந்தியாவில் பல பகுதி களில் கிடைத்துள்ளன. வடக்கே இமய அடிவாரத்திலுள்ள சோகான் நதிக் கரையிலும், தெற்கே நர்மதை, துங்கபத்திரா, கிருஷ்ணு, பாலாறு, காவிரி போன்ற நதிக்கரைகளிலும் ஆதி மனிதர் விட்டுச் சென்ற கல்லாயுதங்கள் கண்டெடுக்கப்பட் டுள்ளன. பாண்டிய நாட்டிலும் ஆங்காங்கே சில இடங்களிலும் இம்மாதிரி கற்கால ஆயுதங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவை வரலாற்றின் முந்தியகால ஆராய்ச்சிக்கு முக்கியச்சான்று பகர்கின்றன. அக்காலத்தைப் பொதுவாக கீழ்க்கண்டவாறு மூன்று பகுதிகளாகப் பகுக்கலாம்.

1. பழங்கற்காலம் (Palaeolithic Age)
2. புதுக் கற்காலம் (Neolithic Age)
3. உலோக காலம் (Metal Age)

இம் மூன்றனுள் முதல் பெரும் பிரிவான பழைய கற்காலமே மிகத் தொன்மையானதாகும்.[1] தென்னிந்தியாவில் இக்கால மனிதர் பயன்படுத்திய கற்கருவிகள் முதன் முதலில் ராபர்ட் புரூஸ்ட் என்னும் ஆங்கில நிலநூல் அறிஞரால் (Geologist) 1863 இல் சென்னைக்கருகே பல்லாவரம் என்னுமிடத்தில் கண்டெடுக்கப் பட்டன. பின்னர் இதே அறிஞரால் பழங்கற்கால மக்களின் இருப்பிடங்கள் பலவும் கண்டுபிடிக்கப்பட்டன. தென்னிந்தியப் பழங்கற்கால வரலாற்றின் தந்தை என்று இவர் போற்றப்படு கிறார். திருவள்ளூர்ப் பகுதியில் (செங்கல்பட்டு மாவட்டம்) கொற்றலையாற்றுப் படுகையில் தொல்குடிகள் வாழ்ந்ததற்கான தடையங்கள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. இவ்வாற்றின் படுகைத் தளங்கள் (River Terraces) தொன்மையானவை என்பது தும், இவற்றுள் பழங்கற்கால மக்கள் பயன்படுத்திய கல்லாயு தங்கள் பொதிந்துள்ளன என்பதும் அண்மைக்கால ஆராய்சிகளால் நன்கு தெளிவாகி உள்ளன.[2] மேலும் இப் படுகைகள் பிளிஸ் டோசீன் (Pleistocene) எனப்படும் பனி உறைகாலத்தில் உரு

[1] இது சுமார் இரண்டு லட்சம் ஆண்டுகளுக்கும் முற்பட்ட காலமாகும்

[2] V. D. Krishnaswami, Progress in Pre-history, Ancient India No. 9.

வானவை என்றும் தெளிவாயிற்று. மற்ற ஐரோப்பியப் பகுதிகளிலும், வட இந்தியாவில் பஞ்சாப் போன்ற பகுதிகளிலும் இக்காலத்தில்தான் ஆதிமனிதன் தோற்றமெடுத்தான் என்பர். ஏறக்குறைய இதே கால அளவில் தென்னிந்தியாவிலும் ஆதிமனிதன் தோன்றியுள்ளான். பொதுவாக, இக்கால மக்கள் பயன்படுத்திய கல்லாயுதங்கள் தென்னாப்பிரிக்காவில் கிடைத்துள்ள கல்லாயுதங்களுடன் பெரிதும் ஒத்துள்ளன. மேலும், இந்தியாவின் வட பகுதியில் சோகான் (Soan) ஆற்றுப் படுகைகளில் கண்டெடுக்கப்பட்ட கல்லாயுதங்களிலிருந்தும் இவை சற்று மாறுபட்டவை என்பதும் புலனாயிற்று.

### பழங்கற்காலம் - தொடக்க காலம்

பழங்கற்காலத்தை மூன்று பிரிவுகளாகப் பிரிப்பர். அவை *(1)* தொடக்க கற்காலம் (Early Stone Age), *(2)* இடைக் கற்காலம் (Middle Stone Age) *(3)* பிந்திய கற்காலம் (Late Stone Age) என்பனவாகும்.

தொடக்க கற்காலத்தில் மனிதன், ஆரம்ப நிலைகளில் எவ்வாறு கல்லாயுதங்களைச் செய்து பயன்படுத்தினான் என்று அறியலாம். இக்காலத்தில் மனிதன் கரடு முரடான பெரிய கற்கருவிகளையே செய்யப் பழகியிருந்தான். உருண்டையான ஆற்றுக் கூழாங்கற்களை இருபுறமும் சீவி கூரான முனையை உண்டாக்கினான். இரு புறமும் வேலைப்பாடு அமைந்த (Bifacial tools) கருவிகள் என இவை வகைப்படுத்தப்பட்டுள்ளன. இக்கருவிகள் பெரும்பாலும் குவார்ட்சைட் என்னும் திண்மையான கல்லால் செய்யப்பட்டவை. கருவிகளில் பெரும்பாலானவை கைக்கோடரிகளாகப் (Hand axes) பயன்பட்டன. இத்துடன் கீறிகள் (cleavers) கூந்தாலிக்கத்தி (Ovates) போன்றவையும் பயன்படுத்தப்பட்டன. இக்கால மனிதன் வெவ்வேறான பயன்களுக்காக வெவ்வேறு கருவிகளைச் செய்து கொண்டான். இக்காலக் கற்கருவிகள் மிக அதிகமாகத் தமிழகத்தில் செங்கல்பட்டு மாவட்டம், திருவள்ளூர்த் தாலுக்காவில் அத்திரம்பாக்கம் என்னும் கிராமத்திலும், அதன் சுற்றுப்புறக் கிராமங்களிலும் கிடைக்கின்றன. வட ஆர்க்காடு மாவட்டத்திலும் இவ்வகையான கருவிகள் கிடைத்துள்ளன.

இக்காலத்தைச் சார்ந்த கற்கருவிகள் ஏதும் வைகை, தாமிரபரணி போன்ற ஆறுகள் பாயும் பாண்டிய நாட்டுப் பகுதியில் இதுகாறும் கணிசமாகக் கிடைக்கவில்லை.[3] பாண்டி நாட்டில் இக்

[3] R. Bruce Foote : Indian Pre historic and Proto-historic Antiquities, Notes on their Ages and Distribution.

காலக் கற்கருவிகள் கிடைக்காமைக்குக் காரணங்களை அறிவது அவசியமாகிறது. பாண்டியப் பகுதிகளில் கல்லாயுதம் செய்வதற்குத் தேவையான மூலப்பொருளான குவார்ட்சைட் கிடைக்காததே முக்கியக் காரணம் என்று கருதப்படுகிறது. இதனால் தொடக்க காலச் சின்னங்கள் பாண்டியப் பகுதிகளில் கிடைக்காமைக்கு வேறு பல காரணங்களும் இருக்கக்கூடும். இக் காரணங்களை அறிவதற்குச் சீரிய முயற்சிகளைத் தொல் பழங்கால வரலாற்றாசிரியர்கள் மேற்கொள்ளுதல் அவசியமாகும்.

## இடைக் கற்காலம்

இடைக்கற்காலச் சின்னங்கள் பாண்டிய நாட்டுப் பகுதிகள் பலவற்றிலும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. குண்டாறு என்னும் காட்டாற்றின் கரைகளிலும், புதுப்பட்டி (திருமங்கலம் தாலுக்கா), சிவரக் கோட்டை போன்ற இடங்களிலும் இக்கால மக்கள் வாழ்ந்ததற்கான தடயங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.[4] தொடக்ககாலக் கருவிகள் போன்று இக்காலக் கருவிகள் அளவில் பெரியவனவாக இல்லை. ஓரளவு சிறியனவாயும் இரண்டு பக்கங்களிலும் செதிள்கள் (Flakes) பெயர்க்கப்பட்டனவாயும் உள்ளன. இக் கருவிகளின் மேல்பாகம், அடிப்பாகம் ஆகியவைகளிலும் செதிள்கள் பெயர்க்கப்பட்டுள்ளன. இவற்றின் முனையும் பக்கப் பகுதிகளும் கூர்மையானவையாகவும் நேர்த்தியான வேலைப்பாடும் கொண்டிருக்கின்றன. இவற்றிலிருந்து கருவிகள் செய்யும் முறையில் நல்ல முன்னேற்றம் அடைந்ததைக் காணலாம். மேலும், இக் காலக் கருவிகள் பல வண்ண மணிக்கற்கள் வகையைச் (Semi precious Stones) சார்ந்த கற்களைக் கொண்டு செய்யப்பட்டுள்ளன. இக்காலக் கருவிகளில் பெரும்பாலானவை கத்தியலகுகளும் (blades) துருவியாயலகுகளும் (scrapers) ஆகும். இவ்வகைக் கருவிகள் தென்னிந்தியாவிலும், தக்காணத்திலும், நர்மதை, கிருஷ்ணு, கோதாவரி ஆகிய ஆற்றங்கரைகளிலும் பரவலாகக் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. இவை, பொதுவாக ஐரோப்பாவில் பிந்திய பழங்கற்காலத்திய கருவிகளை (Upper Palaeolithic tools) ஒத்துள்ளன.

இக்கால மனிதர் ஆற்றங்கரைகளிலும் குகைகளிலும் வாழ்ந்தனர். உணவிற்காகப் பலவிடங்களிலும் அலைந்து திரிந்தனர். பொதுவாக, அவர்கள் நாடோடிகளாக வாழ்ந்தனர். கருவிகள் செய்வதற்கு வேண்டிய கற்கள் கிடைத்த இடங்களுக்கு அருகி

[4] K. V. Raman, Pre and Proto-historic culture traits in Madurai Region, Araichi.

லேயே வசித்தனர். அவர்களுடைய கருவிகள் இக்காலத்தில் பல தரப்பட்ட காரியங்களுக்குப் பயன்படும் அளவிற்கு முன்னேற்றம் கண்டன. வேட்டையாடுவதற்குத் தக்க கூர்மையுள்ள கருவிகள் பலவற்றைச் செய்து கொண்டனர். புறச் சூழ்நிலையிலும் சற்று மாற்றம் ஏற்பட்டது. மழை வெகுவாகக் குறைந்ததனால் காடுகளும் அவ்வளவு அடர்த்தியாக இல்லை.

### பிந்திய கற்காலம்

பழங் கற்காலத்தின் கடைசிக் கட்டமான பிந்திய கற்காலத்தில் மனிதர் வாழ்ந்ததற்கான அடையாளங்கள் பாண்டிய நாட்டில் கிடைக்கின்றன. இக்காலக் கருவிகள் ஐரோப்பா, ஆப்பிரிக்கா, போன்ற நாடுகளில் மிசோலிதிக் (Mesolithic) என்று வரையறுக்கப் பட்ட காலத்துக் கருவிகளுக்கு ஒப்பானவை. இக்காலத்துக் கருவிகள் அளவில் சிறுத்துக் காணப்படுகின்றன. அதனால், இவற்றைச் சிறு கருவிகள் (Microliths) என்று அழைக்கின்றனர். பெரும்பாலும் இவை பல வண்ண மணி வகையைச் சார்ந்த கற்களாலானவை. இவற்றிலும் நீண்ட கத்தி, பிறைச் சந்திரன் வடிவத்திலான அலகுகள், துருவியலகுகள், ஊசி முனைகள், மும்முனைக் கருவிகள் நன்கு தீட்டப்பட்டு நுண்ணிய வேலைப்பாடுகள் உடைய முனைகளைத் தாங்கிய கருவிகள் போன்றவை இக்காலத்து உபயோகிக்கப்பட்டன. இவற்றுள் பலவற்றை நீண்ட கொம்புகளில் வைத்து வேலாகவும் அம்பாகவும் வேட்டைக்குப் பயன்படுத்தினர். இவ்வகைக் கருவிகள் திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டங்களில் கடலோரப் பகுதிகளில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. தேரிகள் (Teris) எனப்படும் சிவந்த மண் மேடுகளில் இவை மிகுதியாகக் கண்டெடுக்கப்பட்டுள்ளன. முதன் முதலில் புருஸ்ட்பூட் இவற்றைக் கண்டுபிடித்தார். பிறகு பேராசிரியர் ஜாயினர் இவற்றிலுள்ள கருவிகளை விஞ்ஞான முறையில் ஆராய்ந்து அவை கிட்டத்தட்ட கி. மு. 4,000 ஆண்டைச் சார்ந்தவை என்று அறுதியிட்டார்.[5] இவ்வகைத் தேரிகள் திருநெல்வேலியிலுள்ள ஸ்ரீவைகுண்டம் தாலுக்காவிலும் மற்றும் கடலோரப் பகுதிகளிலும் காணப்படுகின்றன. முன்னொரு காலத்தில் அங்கே பல ஏரிகளும் குட்டைகளும் இருந்தன என்றும் அவற்றிற்கு அருகில் பிந்திய கற்கால மனிதர்கள் வாழ்ந்தனர் என்றும், பிறகு இயற்கை மாறுதல்களாலும் கடல் மட்ட வேறுபாடுகளினாலும் அவை மாற்றமுற்றுத் தேரிகளாக இப்போது காணப்படுகின்றன என்றும் நிலப் படிவ நூல் வல்லுநர்கள் கருதுகின்றனர்.

[5] Zeuner and Allchin. Microlithic sites of Tirunelvely, Ancient India No. 12

இவ்விதச் சிறுகற்கருவிகள் மதுரை மாவட்டத்தில் திருமங்கலம் தாலுக்காவில் திடியன், கல்லுப்பட்டி போன்ற இடங்களில் காணப்படுகின்றன.[6] தென்னிந்தியா முழுவதிலும் பரவலாக இக்காலக் கருவிகள் கண்டுபிடிக்கப் பட்டுள்ளதையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும்.

### வாழ்க்கை நிலை

முந்திய காலத்தில் வாழ்ந்ததைப் போலவே நாடோடி வாழ்க்கையையே இக்காலத்திலும் மக்கள் மேற்கொண்டிருந்தனர். ஆயினும், மலைக்குகைகள் (Cavern), ஆற்றுச் சமவெளிகள் ஆகியவற்றில் மட்டுமன்றிக் கடலோரப் பகுதிகளிலும் வாழ்ந்தனர். இதனால் மீன் பிடித்தலிலும் அவர்கள் ஈடுபட்டிருக்கக் கூடும்.

### புதுக்கற்காலம் (Neolithic Age)

புதுக் கற்காலம் அல்லது நியோலித்திக் என்று சொல்லக்கூடிய காலத்தில்தான் மனித வரலாற்றில் புரட்சிமிக்க மாறுதல்கள் ஏற்பட்டன. அலைந்து திரிந்து நாடோடியாக இருந்த மனிதன் முதன் முறையாக ஓரிடத்தில் தங்கி ஒரு நிலையான வாழ்க்கையை ஏற்படுத்த முற்பட்டான். இயற்கையாய்க் கிடைத்த காய்கனிகளைத் தின்று காலம் கழித்த மனிதன் முதன் முறையாகப் பயிரிடக் கற்றுக் கொண்டான். அவ்வாறு விளைந்த தானியங்களைச் சேகரித்து வைப்பதற்கு மட்பாண்டங்கள் செய்ய வேண்டிய நிலை வந்தது. குறிப்பாக, விவசாயத் தொழிலுக்குத் தேவைப்பட்ட புதுவிதக் கருவிகளை அவன் செய்ய முற்பட்டான். கடினமான கருங்கற்களால் மழு, உளி போன்ற கருவிகளைச் செய்ய ஆரம்பித்தான். பழங்கற்காலக் கருவிகள் எல்லாம் இப்போது தேவையற்றனவாக ஆகிவிட்டன. இக்காலக் கருவிகள் நீண்ட முக்கோண வடிவில் செய்யப்பட்டு நேர்த்தியான வெட்டு முனையைக் கொண்டிருந்தன. இவை கோடரிகளாக மரம் வெட்டப் பயன்படுத்தப் பட்டன. உழுவதற்குச் சில கருவிகள் ஏர்முனையாகவும் பயன் படுத்தப்பட்டன. கல் ஆயுதங்கள் மற்ற வீட்டுக்குத் தேவையான கருவிகளைச் செய்யும் முறையிலும் அவன் கைதேர்ந்தவனாக இருந்தான் என்பது அவ்வாயுதங்களுடைய வழுவழுப்பான தோற்றங்களிலிருந்தும் அவற்றின் கூர்மையான முனைகளிலிருந்தும் தெரிய வருகிறது. தொல்லியல் அறிஞர்கள் இக்கருவிகளை வழுவழுப்பான கற்கோடரிகள் (Polished Stone axes) என்றே வழங்குவர். இதைச் செய்வதற்கேற்ற 'டெக்கான் டிராப்' (Deccan Trap) எனப்படும் ஒருவகைக் கல் தக்காணப் பீடபூமியிலும் மைசூரி

[6] K. V. Raman, Op. cit; Indian Archaeology 1958-61.

லுள்ள பெல்லாரி, ராய்ச்சூர், ஆந்திராவில் சில பகுதியிலும் தாம் அதிகமாகக் கிடைக்கின்றன. இக்காரணத்தால் அப்பகுதிகளில் தாம் புதிய கற்கால நாகரிகம் பரவலாக மையம் கொண்டிருந்தது என்பர். தமிழகத்தில் வட ஆர்க்காடு, சேலம் சேர்வராயன் மலைத்தொடர்ச்சிகளிலும் இந்நாகரிகம் பரவியிருந்ததற்குச் சான்றுகள் உள்ளன. புதிய கற்கால மனிதன் பெரும்பாலும் மலை அடிவாரப் பகுதிகளில் வாழவிரும்பினன். இதனுல் தென்கிழக்குச் சமவெளிகளில் இவன் வாழ்ந்த சான்றுகள் அரிதாகவே உள்ளன. காவிரி ஆற்றின் கீழ்ப்பகுதிகளில் இம்மக்கள் வாழ்ந்ததற்கான சான்றுகள் இதுகாறும் கிடைக்கவில்லை. மதுரை மாவட்டத்தில் தேனீ, போடிநாயக்கனூர் போன்ற பகுதிகளில் கற்காலக் கருவிகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன.[7] ஆனுல், தக்காணத்தில் கிடைத்ததைப் போன்று நூற்றுக்கணக்கான கற்கருவிகளும், மண் பாண்டங்களும், புதிய கற்காலக் குடியிருப்புகளில் இதுவரை கண்டெடுக்கப்படவில்லை. இத்துறையில் மேலும் ஆராய்ச்சிகள் தேவை.

## இரும்புக் காலம் (Iron Age)

புதிய கற்காலத்தின் பிற்பகுதியில் செம்பின் உபயோகம் பழக்கத்தில் வந்தது. ஆனுல், மிகச் சிறிய அளவுதான் உபயோகப்படுத்தப்பட்டது. ஆரம்பத்தில் செம்பினை உருக்கிக் கருவிகளையும், ஆயுதங்களையும் செய்வதற்கான திறமையும் பொறுமையும் அதிகமாக இக்கால மனிதன் பெற்றிருக்கவில்லை. காலம் செல்லச் செல்ல இதன் பயனை உணர்ந்து அதிக அளவில் பயன்படுத்த ஆரம்பித்தான். இது புதுக் கற்கால வாழ்க்கை முறையில் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தவில்லை. ஏனெனில், இக்காலத்தில் கல்லாயுதங்களும் தொடர்ந்து பயன்படுத்தப்பட்டு வந்தன. இக்காரணத்தால் இது ''சால்கோலிதிக்'' (Chalcolithic) அல்லது 'செம்புக் கற்காலம்' என்று வழங்கப்படுகிறது. ஆனுல், இதற்கும் சற்றுப் பிற்காலத்தில் கண்டுபிடிக்கப்பட்ட இரும்பு, மனித வாழ்க்கைத் தரத்தில் பல துரிதமான மாறுதல்களை உண்டாக்கியது. இந்தியாவில் சுமார் கி.மு. 800 முதல் 500 வரையிலுள்ள காலத்தில் தான் இரும்பு பழக்கத்தில் முதன் முறையாகப் புகுந்தது என்பது தொல்லியல் அறிஞர்களின் கணிப்பு. ஏறக்குறைய இக்காலத்தில் தென்னிந்தியாவிலும் செழிப்பு மிக்க இரும்புக் கால நாகரிகம் பரவியிருந்தது. மைசூரிலுள்ள பிரம்மகிரி என்னுமிடத்தில் செய்யப்பெற்ற விரிவான அகழ்வாராய்ச்சியில் புதிய கற்காலத் தடயங்களுக்குப் பிறகு இரும்புக் காலத் தடயங்கள் கிடைத்தன. இதனுல்

[7] K. V. Raman, Op. cit.

புதிய கற்காலத்திற்குப் பிறகும் சாதவாகன காலத்திற்கு முன்பும் இரும்புக் காலம் தழைத்து இருந்தது என்பது நிரூபிக்கப்பட்டுள்ளது. அதாவது சுமார் கி.மு. 800க்கும் கி.பி. 100க்கும் இடையே இரும்புக்காலம் தழைத்திருந்தது.

தென்னிந்திய நாகரிக வளர்ச்சியில் இரும்புக்காலம் ஒரு முக்கிய கட்டமாகும். மனித வாழ்க்கையில் பல முன்னேற்றங்கள் ஏற்பட அது வழிகோலியது. இரும்பினால் தொழிலுக்கும் தற்காப்பிற்கும் வேண்டிய கருவிகளும் செய்யலாயினர். இவை வலியனவாகவும் திண்மை வாய்ந்தனவாகவும் இருந்தன. மேலும், இரும்பைப் பயன்படுத்திக் கற்களை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு உருட்டிக் கொண்டு சென்று நினைவுச் சின்னங்கள் அமைக்கவும் முடிந்தது. இரும்புக் காலத்தில் தக்காணத்திலும் தென்னிந்தியாவிலும் வாழ்க்கைத் தரம் வெகுவாக முன்னேறியது என்று கூறலாம். இக்காலத்தில் பாசன வசதிக்காக நீரைத் தேக்கிப் பயிரிடும் முறை பின்பற்றப்பட்டது என்று கருதப்படுகிறது. பொதுநலக் காரியங்கள் பலவற்றில் ஒன்றுசேர்ந்து மக்கள் செயல்பட்டனர். இதனால் சமூக வாழ்வும் படிப்படியாக வளர ஆரம்பித்தது. இறந்தவரை அடக்கம் செய்ய மேற்கொண்ட முறையில் இக்கூட்டுச் செயல் நன்கு தெரிகின்றது. புதைத்த பின், பெருங்கற்களை வட்டமாகச் சில இடங்களிலும், மேஜை போன்று சில இடங்களிலும் புதை குழிகளை அமைத்தனர். இறந்தவர்களுக்குப் பெருங்கற் சின்னங்கள் அமைக்கும் பழக்கம் பரவலாக ஏற்பட்டது. இதை மெகலிதியப் பண்பாடு என்று கூறுவார்கள். இக் கற்கிடைகளை ஊர்களுக்கு வெளியிலும், மலைச்சரிவுகளிலும் அமைத்தனர். இம்மாதிரி, பெருங்கற்கள் அமைத்து இறந்தவர்களைக் கௌரவிக்கும் வழக்கம் ஐரோப்பாவில் மத்தியதரைக்கடல் நாடுகளில் பரவலாக இருந்து வந்திருக்கிறது. ஆனால், அவையெல்லாம் இரும்புக் காலத்திற்கு முற்பட்ட புதியகற்காலத்தைச் சார்ந்தவை. ஆகையால் காலத்தால் அவை முற்பட்டவை. எப்பொழுது, எப்படி இக் கலாசாரம் தென்னிந்தியாவிற்குப் பரவியது என்ற விவரங்கள் இன்னும் தெளிவாகத் தெரியவில்லை. வட இந்தியாவில் கூட அதிகமாக அவற்றைக் காணமுடியவில்லை. ஆகையால் ஒருவிதக் கடல்வழித் தொடர்பினால் அவை நம்நாட்டிற்குப் பரவியிருக்க வேண்டும்.

இவ்விதப் பெருங்கற் சின்னங்கள் (Megaliths) பாண்டிய நாட்டில் நிறைய கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. மதுரை, மேலூர், புதுக்கோட்டை, பழநி, கொடைக்கானல், திருமங்கலம், உசிலம்பட்டி, தேனீ, போடிநாயக்கனூர், ஆதிச்சநல்லூர் போன்ற பல

பகுதிகளில் இவை ஏராளமாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.[8] சிஸ்ட் (Cist) அல்லது கல்லறை, கேரையன் சர்க்கிள் (Cairn-Circle) என்று சொல்லக் கூடிய வட்டவடிவில் அமைந்த புதைகுழிகளும் இங்கே கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. தவிர, பாண்டிய நாட்டில் குறிப்பாகத் தாழிகளில் புதைக்கும் முறை அதிகமாகப் பழக்கத்தில் இருந்து வந்தது. மதுரை அருகே கோவலன் பொட்டல், அனுப்பானடி, பரவை, விளாங்குடி, கீழக்குயில்குடி, (நாகமலை புதுக்கோட்டை) போன்ற பல இடங்களில் அவை கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள ஆதிச்ச நல்லூரிலும், ஆதிச்சானூரிலும் புதைகுழிச் சின்னங்கள் ஏராளமாகக் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அங்கு, அகழ்ந்தெடுக்கப்பட்ட பொருள்களில் அழகிய மட்பாண்டங்கள், இரும்பு ஈட்டிகள், கத்திகள், அறுவாள்கள் போன்ற இரும்புக் கருவிகளும், வேலைப்பாட்டுடன் கூடிய வெண்கலப் பாத்திரங்களும் உள்ளன.[9] இவையெல்லாம் அம்மக்களின் எளிய கைத்திறனைக் காட்டுகின்றன. இக்காலத்தில்தான் மக்கள் தொகை சற்றுப் பெருகி, கிராமங்கள் பல உருவாயின. பாண்டிய நாட்டில் பழைய கிராமங்களின் அருகில் இக் கற்சின்னங்களையோ புதைகுழிகளையோ இன்றும் காணலாம். இரும்பை நன்றாகப் பயன்படுத்தியதனுல் விவசாயம், உலோக வேலைப்பாடு, மட்பாண்டம் செய்யும் தொழில், ஆடை நெய்தல் போன்ற தொழில்கள் பெருகலாயின. அக்காலத்தில் ஒருவித நூதனமான மட்பாண்டங்கள் உபயோகப்படுத்தப்பட்டன. இவற்றைக் கறுப்பு—சிவப்பு (Black and Red Ware) மட்பாண்டங்கள் என்று கூறுவார்கள். இம்மாதிரிப் பாண்டங்களில் வெளிப்பக்கம் சிவப்பாகவும், உட்பக்கமும் வாய்ப்பகுதியும் கறுப்பு நிறமாகவும் நல்ல பளபளப்பாகவும் இருக்கும். பிரம்மகிரி, பையம்பள்ளி, சானூர், குன்றத்தூர், அரிக்கமேடு போன்ற இடங்களில் செய்த அகழ்வாராய்ச்சியினுல், இவ்விரும்புக்கால நாகரிகம் சுமார் கி. மு. 500 முதல் கி. பி. 100 வரை பழக்கத்தில் இருந்ததாக அறுதியிடப்பட்டுள்ளது. இதன் ஆரம்ப காலம் சுமார் கி. மு. 800 வரை போகக்கூடும் என்று இப்போது கருதப்படுகின்றது. இப் பண்பாடு சங்ககாலம்வரைகூட ஆங்காங்கு நடைமுறையில் இருந்து வந்தது என்பதற்கு அக்கால இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. குறிப்பாக, இறந்தோரைத் தாழியில் இட்டுப் புதைக்கும் முறை சங்ககாலத்தில் வெகுவாகப் பழக்கத்தில் இருந்த செய்தியைப் புறநானூறு, பதிற்றுப் பத்து, நற்றிணை போன்ற

[8] Indian Archaeology 1958 to 61 K. V. Raman, **Op. cit.** V. D. Krishnaswmi, Magalithic Types of South India Ancient India No. 5.

[9] **A. Rea, Adichanallur Excavations.**

நூல்களிலிருந்து அறிகிறோம். இம்முறை ''தாழிகவிப்ப'' என்று நற்றிணையில் குறிப்பிடப்படுகிறது.

''மாயிரும் தாழி கவிப்பத்
தாவின்று கழிகவெற் கொல்லாக் கூற்றே''

பதிற்றுப்பத்துப்பாடல் ஒன்றில் தாழிகள் புதையுண்ட ஓர் இடு காட்டைப் பற்றி

''மன்னர் மறைத்த தாழி
வன்னி மன்றத்து விளங்கிய காடே''

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இவற்றிலிருந்து தாழிகளில் இட்டுப் புதைக்கும் முறை அரசனுக்கும் கையாளப்பட்டது என்பது தெரிகின்றது. சங்க காலத்திற்கும் சற்றுப் பின்னே இயற்றப் பட்ட மணிமேகலை அக்காலத்திலிருந்த ஐவகை ஈம முறையைக் குறிக்கின்ற போது 'தாழ்வயினடைப் போர்' என்று கல்லறைகளையும் 'தாழியிற் கவிப்போர்' என்று தாழிகளில் வைத்துப் புதைக்கும் முறைகளையும் குறிக்கின்றது, இவ்வகைத் தாழிகள் இன்னும் பாண்டிய நாட்டில் 'முதுமக்கள் தாழி' என்றே வழங்கப்படுகின்றன. கல்லறைகள் 'குரங்குப் பட்டடை' அல்லது 'பாண்டவக்குழி' என்று வழங்கப்படுகின்றன. குரங் குப்பட்டடை என்பது குரக்குப் படையின் திரிபேயாகும் என்று கருதப்படுகிறது. 13-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பாண்டியர் காலத்துக் கல்வெட்டொன்று 'குரக்குப்படை' என்றே குறிக் கின்றது. 'குரக்குப்படை' என்பது புதைக்கப்பட்ட கல்படுக்கை அல்லது கல்லறையைக் குறிக்கும்.

இவ்வகைச் சங்க இலக்கியச் சான்றுகள் பலவற்றையும் தொல் லியல் அறிஞர் திரு கே. ஆர். ஸ்ரீநிவாசன் விரிவாக ஆராய்ந்துள் ளார்.[10] சங்ககாலத்தில் பழக்கத்திலிருந்த ஈமச் சடங்கு முறைகள் பிற்காலத்தில் வழக்கற்றுப் போய் மக்களிடையே அவற் றைப்பற்றி நினைவுகூட இல்லாது போனதைப் பற்றியும் அவ் வறிஞர் சுட்டிக்காட்டியுள்ளார்.

மேலே கூறியுள்ளவற்றிலிருந்து பாண்டிய நாட்டில் வரலாற் றிற்கு முற்பட்ட காலங்களான பழங்கற்காலம், புதிய கற்காலம், இரும்புக்காலம் போன்ற காலக்கட்டங்களில் நாகரிகம் படிப் படியாக வளர்ந்து அவ்வப்போது தென்னிந்தியாவின் பல பகுதி களில் பரவியிருந்த நாகரிக வாழ்க்கையுடன் நெருங்கிய தொடர்பு

[10] K. R. Srinivasan, The Megalithic Burials and Urn fields of South India in the light of Tamil literature Ancient India No. 2.

கொண்டிருந்தது என்பதும் நன்கு தெரிகின்றது. மத்தியதரைக் கடல் நாடுகளிலிருந்து தென்னிந்தியாவிலும் அவ்வப்போது பரவிய பண்பாட்டுக்கூறுகள் அல்லது மரபுகள் பாண்டிய நாட்டிலும் பரவிப் பயனளித்தன எனலாம். இரும்புக் காலத்திற்குப் பிறகு நாகரிகம் துரிதமாக வளம்பெற்றுக் கிறிஸ்துவ சகாப்தத்திற்கு முன்னும் பின்னும் உள்ள நூற்றுண்டுகளில் செம்மையான வரலாறு துலங்குகிறது. கி.மு. 3ஆம் நூற்றுண்டைச் சார்ந்த அசோகனது கல்வெட்டுகள், சேர, சோழ, பாண்டியரைப்பற்றிக் குறிப்பிடுகின்றன. அதுவே தென்னிந்திய வரலாற்றுப் பாதையில் ஒரு முக்கியக் கட்டமாகும். அதனையொட்டித் தமிழகத்தில், குறிப்பாகப் பாண்டிய நாட்டில், கிடைத்துள்ள பிராமிக் கல்வெட்டுகளும் சங்க இலக்கியங்களும், தமிழகத்தைப் பற்றி உரோமானிய ஆசிரியர்கள் விட்டுச் சென்றுள்ள குறிப்புகளும் வரலாற்றுத் தொடக்க காலங்களின் கலங்கரை விளக்கங்களாகத் திகழ்கின்றன. அவற்றைப்பற்றி அடுத்த பகுதியில் மேலும் ஆராய்வோம்.

# 3. மரபுவழிச் செய்திகளும் பண்டைய குறிப்புகளும்

தொன்றுதொட்டுப் பாண்டிய மன்னர்களின் ஆட்சிக்குரிய தாய் அன்னோரால் அரசாளப்பட்டு வந்த தமிழகப்பகுதி பாண்டிய மண்டலம் என்று வழங்கப்பட்டது. அது தமிழகத்தின் தென் கோடிப் பகுதியாக அமைந்துள்ள காரணம் பற்றித் 'தென்புலம்' என்று முன்னோர்களால் குறிக்கப்பட்டுள்ளது. இக்காரணம் கொண்டே பாண்டியர் 'தென்னன்' என்று அழைக்கப்பட்டனர். பாண்டியநாடு இக்காலத்து மதுரை, இராமநாதபுரம், திரு நெல்வேலி கன்னியாகுமரி மாவட்டங்களையும் புதுக்கோட்டை மாவட்டத்தின் ஒரு பகுதியையும் சேர்ந்த நிலப்பரப்பாகும். இந் நாடு தெற்கிலும், கிழக்கிலும், கடலால் குழப்பட்டு உள்ளது. தென்மேற்கே உயர்ந்த மலைகளுக்கு அப்பால் சேர நாடும் (கேரளம்) வடமேற்கே கொங்கு நாடும் அமைந்துள்ளன. சோழ நாடும் பாண்டிய நாடும் வெள்ளாற்றால் பிரிக்கப்பட்டுள்ளன. பாண்டிய எல்லைகளைப்பற்றி ஒருபழம் பாடல் கீழ்க்கண்டவாறு நன்கு விளக்குகிறது.

> வெள்ளாறு அது வடக்கு ஆம்; மேற்கு பெருவழி
> தள்ளார் புனல்கன்னி ஆகும் - உள் ஆர
> ஆண்டகடல் கிழக்கு ஆம் ஐம்பத்து அறுகாதம்
> பாண்டிநாட்டு எல்லைப் பதி.

இந்நாட்டிற்குச் சிறிது காலம் கொற்கையும் பிறகு நீண்ட காலம் கூடல் (அல்லது மதுரை)யும் தலைநகரங்களாக விளங்கின. காயலும், தொண்டியும் முக்கியத் துறைமுகங்களாகும். குமரி, இராமேச்சுரம், திருமாலிருஞ்சோலை போன்ற பண்டைய ஊர்கள் சங்ககாலந் தொட்டே புனிதத்தலங்களாகப் போற்றப்பட்டு வந்தன. 'முத்தும் முத்தமிழும் கொழித்த நாடு' என்று சான் றோரால் புகழப்பட்டுள்ள நாடு. 'தென் மதுராபுரஞ்செய்தும் அங்கதினில் அருந்தமிழ் நற்சங்கம் இரீஇத் தமிழ் வளர்த்தும்' என்று மதுரையில் சங்கத் தமிழை வளர்த்த பெருமை தமிழ கத்தில் பாண்டிய நாட்டிற்கு மட்டுமுள்ள தனிப் பெருமையாகும்.

**பாண்டியரின் குலப்பெயர் :**

சங்ககாலத்திலும் அதற்குப் பிற்பட்டும் பாண்டியருக்குப் பல பெயர்கள் வழங்கின. பாண்டியன், செழியன், வழுதி, பூழியன், மாறன் என்ற பெயர்களே பெரும்பாலும் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. பிற்கால இலக்கியங்களிலும் கல்வெட்டு களிலும் பல பெயர்களால் அவர்கள் அழைக்கப்பட்டனர். தமிழ கத்தின் தென்புலத்தை ஆண்டுவந்ததினுல் 'தென்புலன் காவலன்' என்றும் 'தென்னவன்' என்றும் அழைக்கப்பட்டனர். மீன் இலச்சினையைக் கொண்டிருந்ததால் 'மீனவன்' என்றும் கடல் சூழ்ந்த நாட்டை ஆண்டதால் 'கடலன்' என்றும், கூடலைத் (மதுரை) தலைநகராகக் கொண்டு ஆண்டமையால் 'கூடற்கோன்' என்றும் அழைக்கப்பட்டார். பாண்டியருக்குப் 'பஞ்சவன்' என்ற பெயரும் உண்டு. பாண்டியர் பஞ்ச பாண்டவர்களுடன் தங்களைத் தொடர்புபடுத்திக் கொண்டதால் இப்பெயர் வந்திருக்கலாம் என் பர்.[1] சந்திரகுலத்தில் தோன்றியவர்களாதலால் 'திங்கட் செல்வன்' என்றும் குறிப்பிடப்படுகிறார்கள். இவற்றைத் தவிரக் கௌரி யன், பனவன், தமிழ்க்காடன் என்ற பெயர்களும் வழங்கின.[2] தங்களது குருவாக அகத்தியரைக்கொண்டதனுல் 'கௌரியன்' என்ற பெயர் வந்திருக்கக்கூடும். 'குருசரிதம் கொண்டாடி' என்று செப்பேடுகளில் கூறிக்கொள்கிறார்கள். 'அகத்தியனைப் புரோகிதனுகப் பெற்ற' என்று சின்னமனூர்ச் செப்பேடு பாண்டியர்களைப் புகழ்வது நோக்கத்தக்கது.

**பாண்டியர் மரபு :**

சோழ அரசர் தங்களைச் சூரிய குலத்தவர் என்று சொல்லிக் கொண்டதுபோல் பாண்டியர் தங்களைச் சந்திரகுலத்தில் பிறந் தவர் என்று கூறிக்கொண்டனர். ''மாமலைத் திங்கள் வாழி யோன்'' என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. பாண்டியரின் குலப் பெருமையையும் அவர்கள் செய்த பல அரும்பெரும் செயல்களைப் பற்றியும் பல புராணக்கதைகள் அவர்களது செப்பேடுகளிலும் கல்வெட்டுகளிலும் காணப்படுகின்றன. அவையாவன :

(1) பாண்டியரில் ஒருவன் இந்திரனுடைய சிம்மாசனத்தில் சமமாக அமர்ந்தான். பாண்டியர் இந்திரனுடைய மணியா ரத்தைப் பூண்டிருந்தனர் என்று சிலப்பதிகாரமும் கூறுகிறது. (தேவர்கோன் பூணாரம் மார்பிற் பூண்டோன் வாழி.)

[1] 'பராங்குசன் பஞ்சவர் தோன்றலும்'' (சின்னமனூர்ப் பெரியசாசனம்) பாரதப் போரில் பஞ்சபாண்டவருக்குத் துணை நின்ற செய்தி பின்னுல் காட்டப்பட்டுள்ளது.

[2] சா. கணேசன், கையேடு, பக்.

(2) பாரதப் போரில் பஞ்சபாண்டவர் பக்கம் நின்று தார்த் தராஷ்டிரர்களை (துரியோதனுதியர்) எதிர்த்தனர் என்றும் யானைப் படைக்குத் தலைமை வகித்தனர் என்றும் கூறிக்கொள்கிறார்கள். குறிப்பாக, அர்ச்சுனனைக் காப்பாற்றிய செய்தி குறிக்கப் பட்டுள்ளது.

'தார்தராஷ்டிரர் படை முழுதும் களத்தவியப்
பாரதத்து பகடோட்டியும்,
மடைம்குவேல் வானரத்வஜன் (அர்ச்சுனன்)
வசுசாபம் அகல்வித்து'[3]

(3) பாண்டியன் ஒருவன் கடலைக் கடைந்து அமுதம் கொண்டதைச் சின்னமனூர்ச் செப்பேடுகளும், தளவாய்புரச் செப்பேடுகளும் 'கடல் கடைந்து அமிர்து கொண்டு' என்று குறிக் கின்றன.

(4) ஒரு பாண்டியன் கடல் வற்றும்படி வேலை எறிந்தான் என்று சின்னமனூர்ச்செப்பேடு கூறுகின்றது (ஓதம் மீள வேலெறிந்தும்).[4]

(5) இமயத்தில் பாண்டியன் கயல் சின்னத்தைப் பொறித் ததையும் அவர்களின் சாசனங்களில் குறிக்கின்றனர். ('கயலினை வடவரைப் பொறித்தும்' - தளவாய்புரச் செப்பேடு) பெரியாழ் வாரும் இச் செயலைப் பெருமையுடன் தமது பாடலில்

'பருப்பதத்துக் கயல்பொறித்த பாண்டியர்குலபதிபோல்
திருப்பொலிந்த சேவடி என் சென்னியில் பொறித்தாய்'

என்று பாடுகிறார்.

(6) ஒரு பாண்டியன் இராவணனைச் சமாதானம் செய்து கொள்ளும்படி செய்தான். ('தசவதனன்...தனுக்கு சந்து செய்தும்''-தளவாய்புரம்)

(7) மாபாரதத்தைத் தமிழ் மொழியில் எழுதுவித்தான் ஒரு பாண்டியன்.

(8) மதுரை மாநகரில் பாண்டியன் தமிழ்ச்சங்கத்தை அமைத்துத் தமிழ் ஆராய்ந்தான் 'மாபாரதம் தமிழ்ப்படுத்தி மதுராபுரிச் சங்கம் வைத்து' என்றும்,

'தென்தமிழின் கரைகண்டும்' என்றும் சின்னமனூர்ப் பெரிய சாசனமும் குறிப்பிடுகின்றது.

(9) அகத்தியருடன் தமிழ் ஆராய்ந்தான்.

[3] தளவாய்புரச் செப்பேடு; 'விஜயனை வசுசாபம் நீக்கியும்' என்று சின்ன மனூர்ப் பெரிய சாசனமும் கூறுகிறது.

[4] 'வெம்முனை வேல் ஒன்று விட்டும் விரைவரவிற் கடல் வேலெறிந்தும்''.

(10) நாட்டில் பசிநோய் நீங்க இந்திரனுக்கு ஒரு பாண்டியன் திருவிழா எடுத்ததை 'அடும்பசி நோய் நாடகற்றி அம்பொற் சித்திரம் உயரியும்' என்று சின்னமனூர்ப் பெரிய சாசனம் குறிப்பிடுகின்றது.

(11) 'நாற்கோடி பொன் கொடுத்து நூற்கடலைக் கரை கண்டான்' என்று மற்ருேர் சான்று குறிப்பிடுகிறது.

(12) ஒரு பாண்டியன் ஆயிரம் யானை ஐயமிட்டான் என்றும் சாசனங்களில் கூறப்படுகின்றன.

மேலே கூறப்பட்டவற்றுள் பல, மனித ஆற்றலுக்கு அப்பாற் பட்ட செயல்களும், அவர்கள் செய்த பல அருஞ்செயல்களும் கலந்து கூறப்பட்டுள்ளதைக் காண்கிருேம். இராமாயணம், மகாபாரதம் போன்ற நிகழ்ச்சிகளுடனும், தேவர்கள் பாற் கடலைக் கடைந்தது போன்ற புராண நிகழ்ச்சிகளுடனும், தங்களைத் தொடர்புபடுத்திக்கொள்ளும் முறையைப் பொதுவாக அக்கால அரச மரபினர் பலரும் பின்பற்றினர். எடுத்துக் காட்டாக, உதியஞ்சேரலாதன் என்னும் சங்ககாலத்திய சேர அரசன் பாரதப்போரில் பெருஞ்சோறளித்தான் என்ற செய்தி யைக் குறிக்கலாம். பாரதப்போரில் தருமனுக்கு உதவிய ஒரு சோழ மன்னன் புகழப்படுகிருன். இந்திரனின் ஆசனத்தில் சமமாக அமர்ந்ததாகப் பாண்டிய அரசன் கூறிக்கொண்டது போலவே சோழ அரசன் ஒருவனும் போற்றப்படுகிருன். வேல் எறிந்து கடலைப் பின்ஓட்டியதாகப் பாண்டியர் சொல்லப்படுவது போலக் குட்டுவன் என்ற சேர மன்னனும் 'கடல் பிறக்கோட்டிய குட்டுவன்' என்று புகழப்படுகிருன். [பாண்டியர் தங்களது ஆதிக்கத்தை இமயம் வரை பரப்பியதன் அடையாளமாக அங்குக் கயல் சின்னத்தைப் பொறித்ததாகச் சொல்லிக்கொள்ளும் மரபு அக்காலத்தில் இருந்த மற்றத் தமிழ் வேந்தர்களிடமும் வழங்கியது. சேர அரசர்கள் தங்களது சின்னமாகிய வில்லை இமயத்தில் பொறித்ததாகப் பரணரும் மாமூலனுரும் குறிக்கின் றனர்.[5] சிற்றரசன் ஆய் அண்டிரன் கூட இமயம்வரை தனது ஆட்சியைப் பரப்பியதாகக் கூறப்படுகிறது. (புறம் 132)] குல முன்னேரைப்பற்றிக் குறிக்கும்போது புரூரவஸ், நகுஷன் முதலி யோர் தங்கள் குலத்தவர் எனப் பாண்டியர்கள் கூறுகிருர்கள்.[5a] சோழ மன்னர் திலீபன், அரிச்சந்திரன், காகுத்தன், தசரதன் போன்ற சூர்யகுல வம்சத்தினரின் வழித்தோன்றலாக கூறிக் கொள்கின்றனர். ஆக, நம்நாட்டு இதிகாச புராண நிகழ்ச்சி

[5] தளவாய்புரம் செப்பேடு

[5a] Kailasapathy, K. Tamil Heroic Poetry p. 208 ff.

களுடனும், புராண வீரர்களுடனும் தொடர்புபடுத்திப் பேசும் முறை பொதுவாக எல்லா இந்திய அரசர்களிடமும் காணப்படும் ஒரு மரபாகும். பாண்டிய மரபினரும் இதற்கு விதிவிலக்கல்லர். ஆனால், சில கதைகள் ஒவ்வொரு குலத்திற்கும் தனிச்சிறப்பு அளிப்பவையாகவும் உள்ளன. மாபாரதம் தமிழ்ப்படுத்தியது, மதுரையில் சங்கம் வைத்தது, அகத்தியருடன் தமிழ் ஆராய்ந்தது போன்ற செயல்கள் பாண்டியருக்கே தனிச்சிறப்பை அளிப்பவையாக இலக்கியங்களிலும் செப்பேடுகளிலும் பரக்கப் போற்றப்படுகின்றன. எடுத்துக்காட்டாக,

''வளமதுரை நகர்கண்டு மற்றதற்கு மதில்வகுத்தும்
உளமிக்க மதியதனு லொண்டமிழும் வடமொழியும்
பழுதறத்தா னுராய்ந்து......
மகாபாரதம் தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச் சங்கம்
வைத்தும்''

என்று அழகுபடக் கூறுகிறது சின்னமனூர் (பெரிய) சாசனம். இவற்றிலிருந்து புராணக் கதைகளுடன்கூட, வரலாற்று அடிப்படைகொண்ட பல நிகழ்ச்சிகளையும் அவர்களது சாதனைகளில் குறித்துள்ளனர் என்று தெளிவாகின்றது.

## வரலாற்றுக் காலக் குறிப்புகள்

இனி வரலாற்றுத் தொடக்ககாலக் குறிப்புகளை ஆராய்வோம். பாண்டியரைப் பற்றிய சில செய்திகள் பழைய இலக்கியங்களிலும் கல்வெட்டுகளிலும் ஆங்காங்கே கிடைத்துள்ள குறிப்புகளை இப்பகுதியில் சுருக்கமாக நோக்குவோம்.

பாணினியின் வடமொழி இலக்கணத்திற்கு உரையெழுதிய காத்தியாயனர் ஒரு மேற்கோளில் 'பாண்டியா' என்ற சொல்லைப் ''பாண்டு'' அல்லது ''பாண்டவர்'' என்ற சொல்லுடன் தொடர்புபடுத்திப் பேசுகிறார். மெகஸ்தனீஸ் அவரது 'இண்டிகா'வில் பாண்டியரைப் பற்றியும் சில தகவல்களைத் தந்துள்ளார். ஏராக்கிளீஸ் ''பாண்டேயா'' என்னும் தனது புதல்விக்கு இந்திய நிலப்பரப்பின் தென்கோடியில் 365 கிராமங்களைத் தந்ததாகவும், ஒவ்வொரு கிராமமும் ஒவ்வொரு நாள் அரசிக்குக் கப்பம் செலுத்தி வந்தது என்றும் கூறுகிறார்.[6] இதில் எவ்வளவு தூரம் வரலாற்று உண்மை இருக்கிறது என்பது தெரியவில்லை. ஆனால்,

[6] Mcrindle, Ancient India as Described in Classical Literature (1901) p. 208-9

''எராக்கிளீஸ்'' என்ற பெயர் வாசுதேவ - கிருஷ்ணருக்குக் கிரேக்கர்கள் இட்ட பெயராகும்.

அரண்மனைப் பராமரிப்புக்கு ஒவ்வொரு கிராமமும் பங்கேற்றது என்பது அக்காலச் சூழ்நிலைக்குப் பொருந்தும் என்றே சொல்லலாம். பாண்டியரைப் பற்றிய புராணக்கதைகள் பலவற்றைச் சொல்லும் செப்பேடுகளில் 'பாண்டேயா' என்ற பாண்டிய அரசியைப் பற்றி எங்கும் குறிப்பிடப்படவில்லை. இதை நோக்கும் போது இண்டிகாவில் குறிப்பிடப்பட்டுள்ள செய்தியைச் செவி வழிச் செய்தியாகவே கொள்வது பொருந்தும்.

கௌடில்யர் எழுதிய அர்த்தசாஸ்த்திரத்தில் நெசவுத் தொழில் செழித்திருந்த பிரதேசங்களை மதுரா (பாண்டியர் தலை நகரம்), அபராந்தா (கொங்கணி), கலிங்கம், காசி, வங்கம், வத்சம் என்று வரிசைப்படுத்துகின்றார். இங்கெல்லாம் உயர் வகைப் பஞ்சாடைகள் தயாரிக்கப்பட்டனவாம். பாண்டிய நாட்டு (பாண்டிய கவாடம்) முத்துகளைப் பற்றியும் குறிப்புக் காணப்படுகிறது.[7]

பாண்டியரைப் பற்றிய பண்டைய குறிப்புகளில் மிகவும் முக்கியமானது அசோகரது கல்வெட்டுகளேயாகும். அவரது இரண்டு சாசனங்களில்[8] சோடர், பாண்டியர், சத்தியபுத்திரர் கேரளபுத்திரர் குறிக்கப்படுகின்றனர். அசோகரது ஆட்சிக்கு உட்படாத, ஆனால் நட்புறவு கொண்ட பகுதிகளாக அவை இருந்தன. அசோகர் தமது இராஜ்யத்தின் பல பகுதிகளில் மக்களுக்கும் மிருகங்களுக்கும் மருத்துவ மனைகள் (ஆரோக்கிய சாலைகள்) நிறுவியது போலத் தமிழகத்திலும் நிறுவினார். அந்த அளவுக்குத் தமிழக அரசர்களிடம் நட்புறவு இருந்தது என்று இதன் மூலம் தெரிகிறது. சிகிச்சைக்கு வேண்டிய மூலிகைச் செடிகளை வளர்க்கவும் வசதி செய்தார். அவரது தொண்டர்கள் இங்குப் புத்த மதத்தைப் பரப்பினர். பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி கூறியுள்ளதுபோல் அசோகர் காலத்தில் தமிழகத்தில் நல்ல அரசியல் அமைப்பும், சீரான சமூக வாழ்க்கையும் பண்பட்ட நாகரிகமும் நிலைத்திருந்தன என்பது அசோகரது சாசனங்களி லிருந்து நமக்கு நன்கு புலனாகிறது.[9]

தமிழகத்தில் அசோகரது கல்வெட்டுகள் கிடைக்காவிடினும் சற்றுப் பிந்திய காலத்தைச் சேர்ந்த தமிழ்க்கல்வெட்டுகள் பல பாண்டிய நாட்டில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அசோகரது கல் வெட்டுகள் எழுத உபயோகிக்கப்பட்ட பிராமி எழுத்துகளிலேயே இவையும் எழுதப்பட்டுள்ளன. அசோகரது பிராமிக் கல்

[7] K. A. N. Sastri, **Comprehensive History of India,** p. 73.
[8] Rock Edicts No. II and XIII
[9] **Nilakanta Sastri, K. A. The Age of the Nandas and Mauryas, p. 250.**

வெட்டுகள் தென்னிந்தியாவில் மைசூர், ஆந்திரப் பகுதிகளில் கிடைத்துள்ளன. தமிழ்மொழியின் ழ, ள, ந, ற போன்ற சிறப்பு எழுத்துகள் சேர்ந்து வேறுபட்டுள்ளனவேயன்றி மற்ற எல்லா எழுத்துகளும் அசோகரது கல்வெட்டுகள் போலும், பட்டிப்பு ரோலு போன்ற ஆந்திரப் பகுதிகளில் கிடைத்துள்ள பிராமி போன்றும் உள்ளன. இவற்றால் ஒன்று தெளிவாகிறது. அசோகரது காலத்திலும் அதற்குச் சற்றுப் பிந்திய காலத்திலும் (சுமார் கி. மு. 200 முதல் கி. பி. 300 வரை) இந்தியா முழுவதும் பிராமி எழுத்து கல்வெட்டுகளில் உபயோகிக்கப்பட்டு வந்தது என்பது. இது இலங்கையிலும் பரவி நின்றது. அசோகரது கல்வெட்டுகளிலும் மற்றச் சாதவாகனக் கல்வெட்டுகளிலும் பிராகிருத மொழி பயன்பட்டது.[10]

தமிழகத்தில் அவ்வெழுத்தைக் கொண்டே தமிழ்மொழியைக் கல்வெட்டில் எழுதப் பயன்படுத்தினர். இந்தியத் துணைக் கண்டத்தில் இதுகாறும் கிடைத்த கல்வெட்டுகளில், பிராமி எழுத்தில் பொறிக்கப்பட்டவையே மிகத் தொன்மை வாய்ந்தவை. அசோகரது காலத்தில் முதன் முறையாகத் தோன்றிய இவ்வெழுத்து நமது நாட்டிலுள்ள பௌத்தக் குகைகளிலும், ஸ்தூபங்களிலும் காணக்கிடைக்கிறது. பௌத்த மதம் இலங்கைக்குப் பரவியபோது அங்கும் பிராமி எழுத்துப் பரவியது. தமிழகத்தில் அக்காலப் பௌத்த சமண மதத் துறவிகள் தமது மதங்களைப் பிரசாரம் செய்தபோது பிராமி எழுத்து இங்கும் பரவியிருக்கக் கூடும் என்று கருதப்படுகிறது. தமிழகத்தில் பாண்டிய நாட்டில்தான் பிராமிக் கல்வெட்டுகள் அதிகமாகக் கிடைக்கின்றன.[11] ஊருக்கு வெளியேயுள்ள மலைக்குகைகளில் காணப்படும் கல்படுக்கைகளின் விளிம்புகளிலும், குகை முகப்புகளிலும் இக் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. உண்ணு நோன்பு நோற்ற துறவிகளுக்காகத் தானம் அளிக்கப்பட்ட கற்படுக்கைகளைப் பற்றி இவை குறிப்பதால் இவை சமணத் துறவிகள் இருந்த இடங்கள் என்பதில் ஐயமில்லை. தவிர இக்குகைகளில் பிற்காலத்தில் வாழ்ந்த சமணத்துறவிகள் அவர்களது கல்வெட்டுகளையும் விட்டுச் சென்றுள்ளனர். எனவே, இக்குகைகளும் படுக்கைகளும் சமணர்களுடையவை என்பது உறுதியாகிறது.[12]

[10] மேற்படி.

[11] I. Mahadevan, Corpus of Tamil Brahmi Inscriptions. R. Nagaswami, கல்வெட்டு கருத்தரங்கு, பக். 57-73.

[12] இவற்றில் சில பௌத்தர்களுடையதாக இருக்கக்கூடும் என்பர் சிலர். ஆனால் அதற்குத் தெளிவான சான்றுகள் இல்லை. இதைப் பற்றிய கருத்துக்களுக்குச் 'சமயம்' என்ற அதிகாரத்தில் காண்க.

மதுரை மாவட்டத்திலுள்ள திருப்பரங்குன்றம், ஆனைமலை, சமணர்மலை, மாங்குளம், அரிட்டாபட்டி, கரடிமலை, கொங்கர் புளியங்குளம், கீழவளவு, அழகர்மலை, கருங்காலக்குடி போன்ற இடங்களிலும் இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள குன்றக்குடி, பிள்ளையார்பட்டி, திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள மருகால் தலை ஆகிய இடங்களிலும் கிடைத்துள்ளன. கொற்கை அகழ் வாராய்ச்சியில் கிடைத்த பானை ஓடுகளில் பிராமி எழுத்துகளும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

இக் கல்வெட்டுகள் சுமார் கி. மு. 200 முதல் கி. பி. 200 அல்லது 300 வரை வழக்கில் இருந்ததாகக் கல்வெட்டு வல்லுநர் கருதுகின்றனர். ஆகையால், இவற்றில் அடங்கியுள்ள செய் திகள் பாண்டிய நாட்டு வரலாற்றுத் தொடக்கத்திற்கு ஆராயப் படுவது பொருத்தமாக இருக்கும். ஏறக்குறைய இவை சங்க காலத்தினைச் சார்ந்த காலமாகும். இவற்றுள் சில கல்வெட்டுகள் சங்க காலத்திற்கும் சற்று முற்பட்டவை என்று கூடக் கருதப்படு கின்றன. அது எவ்வாறாயினும், இக் கல்வெட்டுகளில் கிடைக்கும் அரசர் பெயர் அவரது குடிப்பெயர், ஊர்ப்பெயர் போன்றவை சங்க இலக்கியங்களில் கிடைக்கும் செய்திகளுடன் ஒத்து இருக் கின்றன. நல்ல நடைமுறைத் தமிழ்ச் சொற்களே இவற்றில் அதிகமாக உள்ளன. சில பிராகிருதச் சொற்களும் ஆளப்பட் டுள்ளன. இக் கல்வெட்டுகளில் நமக்குப் பாண்டிய நாட்டைப் பற்றிக் கிடைக்கும் சில முக்கிய குறிப்புகளை மட்டும் இங்கு ஆராய் வோம்.[13]

### 1. பாண்டிய அரசர்கள்

பாண்டியருக்குந் தொன்மையாக வழங்கிய பல பெயர்கள் இக் கல்வெட்டுகளிலும் கிடைக்கின்றன. வழுதி, கடலன், பண வன் இம்மூன்றும் மாங்குளக் கல்வெட்டில் நெடுஞ்செழியனுக்கு அடைமொழிகளாய்க் குறிக்கப்பட்டுள்ளன. அரிட்டாபட்டிக் கல்வெட்டில் 'செழிவன்' என்ற பெயரும் குறிக்கப்பட்டுள்ளது. இது செழியனின் திரிபேயாகும்.

மாங்குளத்தில் கண்டுபிடிக்கப்பட்ட இரண்டு கல்வெட்டுகளும் முக்கியம் வாய்ந்தவை. மாங்குளத்திலுள்ள பாழியை நெடுஞ் செழியன் தர்மமாகக் கொடுத்த செய்தியைக் கூறுகிறது ஒரு கல் வெட்டு. நெடுஞ்செழியனுடைய சாலகன் இளம் சடிகனின்

[13] K. V. Raman, Brahmi Inscriptions of Tamilnadu-A Historical Assessment, Studies in Indian Epigraphy-I, p. 104-118.

தந்தை சடிகன் அதே பாழிக்குக் கொடுத்த தானத்தைப் பற்றி மற்றொரு கல்வெட்டு கூறுகிறது.

கல்வெட்டு மரபுக்கேற்ப அரசன் பெயர், அவனது குடிப் பெயர் இவற்றைச் சொல்லி, பிறகு வழங்கப்பட்ட தானத்தைப் பற்றிய விவரமும் இங்கே குறிப்பிடப்படுகின்றது. வட இந்தியாவில் அசோகரது கல்வெட்டுகள் வரலாற்றுக் கணிப்புக்கு எவ்வளவு முக்கியமோ அவ்வாறே தமிழக வரலாற்றில் இவ்விரு கல்வெட்டுகளும் முக்கியம் வாய்ந்தவை என்று சொல்லலாம். இதுகாறும் கிடைத்தவற்றில் இவைதாம் பாண்டிய அரசர் வெளியிட்ட முதல் கல் வெட்டுகளாகும். இவை வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தவை. ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என்ற இரு பெரும் பாண்டிய அரசர்களைப் பற்றிச் சங்க இலக்கியங்களின் வாயிலாக நாம் அறிகிறோம். இவ்விருவருள் ஒருவரே இக்கல்வெட்டில் குறிக்கப்படுகிறார் என்று சொல்லலாம்.[14] பாண்டிய அரசர் சமண மதத்திற்கும் ஆதரவு அளித்தனர் என்பது இக் கல்வெட்டுகளிலிருந்து தெரிகின்றது. தமிழகத்தில் ஒரு சாராரிடம் சமணமதம் செல்வாக்குப் பெற்றிருந்த செய்தியைச் சங்க இலக்கியவாயிலாகவும் பிற்காலத் தேவார திவ்யப்பிரபந்தங்கள் மூலமாகவும் நாம் அறிகிறோம்.

அரசர்களைத் தவிரச் சில சிற்றரசர்களைப் பற்றியும் இக் கல்வெட்டுகள் குறிக்கின்றன. அதனன், சழிவன் வெளியன், அந்தை, சேந்தன், பெருபரணன் என்ற பெயர்கள் முறையே பாண்டிய நாட்டிலுள்ள அரிட்டாபட்டி, மேட்டுப்பட்டி, பிள்ளையார்பட்டிக் கல்வெட்டுகளில் குறிக்கப்படுகின்றன.

### வணிகர்களும் வணிகர் குழுக்களும்

இக் கல்வெட்டுகள் குறிக்கும் தானங்கள் பெரும்பாலும் வணிகர்களால் வழக்கப்பட்டவையே. அழகர் கோயிலிலுள்ள கற்படுக்கைகளில் ஒன்று ஓர் உப்பு வாணிகன் வழங்கியதாகும். *(34)*[15] இவ்வாறு பணித வாணிகன், அறுவை வாணிகன், பொன்

[14] இவ்விரு கல்வெட்டுகளும் சற்று முந்திய காலத்தைச் சார்ந்தவை. **(கி.மு. 200 முதல் 100)** என்று கருதப்படுவதால், மேலே குறிப்பிட்ட இரு பாண்டிய அரசர்களுக்கும் முன்னே அரசாண்ட ஒரு நெடுஞ்செழியனை இருத்தல் வேண்டும் என்று சொல்லப்படுகிறது. ஆனால் எழுத்து இயல் வளர்ச்சியில் 100 அல்லது 200 ஆண்டுகளில் ஏற்பட்ட வளர்ச்சியைத் துல்லியமாகக் கணிக்க இயலாததனால் கி.மு. 200 என்பதை முடிவாகக் கொள்ள வேண்டியதில்லை.

[15] இங்கே குறிக்கப்பட்ட எண்கள் ஐ. மகாதேவனின் பிராமிக்கல்வெட்டுப் பட்டியலில் கொடுக்கப்பட்ட எண்கள்.

வாணிகன், மணி வாணிகன் போன்றோர் கொடுத்த நன் கொடைகள் குறிக்கப்படுகின்றன. தனிப்பட்ட வணிகர்கள் தவிர வணிகர் குழுக்களும் செயல்பட்டன. மாங்குளத்திலுள்ள ஒரு கற்படுக்கை வெள்ளரை நிகமத்தோரால் அளிக்கப்பட்டது.(6)

**ஊர்ப்பெயர்கள்**

பாண்டி நாட்டிலுள்ள பல ஊர்களின் பழைய பெயர்கள் இக் கல்வெட்டுகளில் குறிக்கப்படுகின்றன. மதுரை, தொண்டி, பாக னூர், வெள்ளரை, நாகப்பேரூர், கரூர், நெல்வேலி போன்ற ஊர்கள் குறிக்கப்படுகின்றன. எருமிநாட்டிலுள்ள குமுழூர் என்று சித்தன்னவாசல் கல்வெட்டில் குறிக்கப்படுவது, அக் காலத்திலேயே 'நாடு' என்ற பிரிவு வழக்கில் இருந்ததை உணர்த்துகிறது. ஈழக் குடும்பிகன் ஒருவன் திருப்பரங்குன்றத் திலுள்ள சமணர் இருக்கைக்கு தானம் வழங்கியுள்ளான். ஈழம் என்பது இலங்கையைக் குறிக்கும்.

**சமயம்**

சமய வரலாற்றில் இக் கல்வெட்டுகள் இலக்கியங்களில் கிடைக்காத பல புதிய தகவல்களைக் கொடுக்கின்றன. சமணர் களின் இருக்கைகளும் கல்வெட்டுகளும் பாண்டிய நாட்டில் பர வலாக மூலை முடுக்குகளிலும் கிடைத்திருப்பது அச்சமயத்தின் செல்வாக்கை உணர்த்துகின்றன. அழகர்மலை, திருப்பரங் குன்றம், திருவாதவூர், குன்றக்குடி போன்ற ஊர்களை வைணவத் தலங்களாகவோ சிவஸ்தலங்களாகவோ நம் இலக்கியங்களில் காண்கிறோம். ஆனால், அங்கெல்லாம் சமணமதம் ஊடுருவி யிருந்ததை இக்கல்வெட்டுகள் மூலம்தான் நாம் அறியமுடிகின்றது. அங்கு வாழ்ந்த சமணக் குரவர்களின் பெயர்களையும் நாம் அறி கின்றோம். ஆனைமலையில் அரிட்டன் என்பவரும், மருகால் தலை யில் வெங்காயபன் (வெங்காஸ்யபன்) கருங்காலக்குடியில் அரிதி (அரிட்டி), அழகர்கோயிலில் காசபன் மாங்குளத்தில் கணியநந்த ஆசிரியர் போன்ற சமணக்குரவர்கள் சமயப்பணி செய்த செய்தி இக் கல்வெட்டுகளின் மூலம்தான் தெரியவருகின்றது. கணியநந்த என்பது சமணர்கள் வைத்திருந்த பல கணங்களில் அல்லது சங்கங் களில் நந்தி கணம் என்ற சங்கத்தைக் குறிப்பதாகத் தோன்று கிறது.

பிராமிக் கல்வெட்டுகள் சமணப்படுக்கைகளைத் தவிர அகழ் வாராய்ச்சியில் கிடைத்துள்ள பண்டைய மட்பாண்டங்களிலும் கிடைத்துள்ளன. கொற்கை, உறையூர், கரூர், அரிக்கமேடு, காஞ்சி போன்ற ஊர்களில் இவை கிடைத்துள்ளன. இவற்றி

லிருந்து தமிழ்மொழியை எழுதுவதற்கு இவ்வெழுத்து பாமர மக்களிடமும் பரவலாக வழக்கிலிருந்ததென்பதை அறிகிறோம். இந்தியத் துணைக்கண்டம் முழுவதிலும் இலங்கையிலும் பிராகிருத மொழியும், பிராமி எழுத்தும் பரவியிருந்த காலம் அது. ஆனால், தமிழகத்தில் தமிழ் மொழியின் சிறப்பியல்புகளுக்கேற்பத் திருத்தி அமைக்கப்பட்டு ஏற்றுக்கொள்ளப்பட்டது. அதுபோல இக் கல் வெட்டுகளில் தூய தமிழ்ச் சொற்களும், பிராகிருதச் சொற்களும் காணப்படுகின்றன. சான்றாக, 'அருப்பித்தா', 'செய்தா', 'கொடுப்பித்தா', 'இருக்கை', 'ஐம்பத்தேழு' போன்ற நல்ல தமிழ்ச் சொற்களும் 'தம்மம்', 'அதிட்டானம்', 'குடும்பி கன்', 'நிகமம்', 'நிசிதிகை' போன்ற பிராகிருதச் சொற்களும் காணப்படுகின்றன. பிராகிருதம் அறிந்த தமிழ் அறிஞர்களே இக் கல்வெட்டுகளை எழுதியுள்ளார்கள் என்பதில் ஐயமில்லை. தமிழ்மொழி மரபினை நன்கு தெளிந்தவர்கள்தாம் பிராகிருதச் சொற்களை தமிழ்மொழிக்கேற்ப மாற்றி அமைக்க முடியும். உதாரணமாக 'நிகம' என்பது வணிகக்குழுவைக் குறிக்கும் பிரா கிருதச் சொல். அதில் சேர்ந்த அங்கத்தினரைத் தமிழில் 'நிகமத்தோர்' என்று எழுதியுள்ளனர். 'சுதா'வைச் 'சுதன்' என்றும் 'அதிஷ்டான'த்தை அதிட்டானம் என்றும் 'நிசிதிகா'வை 'நிசிதிகை' என்றும் மாற்றி அமைத்துள்ளனர். சாதவாகனர் கல்வெட்டுகளில் எண்ணெய் வியாபாரி 'திலாபிஷ்டகர்' என்றும், தட்டார் 'ஸ்வர்ணகாரா' என்றும் 'மணிகாரா' என்றும் பிரா கிருதச் சொற்களைக் கொண்டே குறிக்கப்படுகின்றனர்.[16]

ஆனால், பாண்டியநாட்டில் கிடைத்துள்ள பிராமிக் கல் வெட்டுகளில் அவர்கள் முறையே கழுவவாணிகன், மணி வண்ண கன் என்ற நல்ல தமிழ்ச் சொற்களிலேயே குறிக்கப்படுகின்றனர். ஆகையால், தமிழ் மொழியும் பிராகிருத மொழியும் அறிந்தவர் களாலேயே அவை எழுதப்பட்டன என்பது தெளிவு. தமிழ் மொழியில் வேரூன்றியவர்களே பிராகிருத மொழியையும், பிராமி எழுத்தையும் தங்கள் மொழிக்கேற்ப மாற்றி அமைத்துக்கொள்ள முடியும்.

அசோகர் காலத்திற்குச் சற்றுப் பின்னே தொடங்கிச் சங்க காலம் முடியும்வரை (கி. மு. 200 முதல் கி. பி. 300 வரை) இக் கல்வெட்டுகள் வழக்கிலிருந்தன. ஏறக்குறைய தக்காணத்தில் பெரும்புகழுடன் அரசோச்சிய சாதவாகனர் ஆண்ட காலமும்

[16] M. Rama Rao, **Studies in the Early History of Andhradesa** *(1971)* பக் 46. வணிகர் குழு "சிரேணி" என்றும் "நிகாய" என்றும் குறிக்கப்படு கின்றன.

இதுவே. அவர்கள் நாட்டிலும் நிறையப் பிராமிக் கல்வெட்டு களும் நாணயங்களும் கிடைத்துள்ளன. அவர்களது நாணயங் களில் பல அரசர்களின் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன. அவ் வகை நாணயங்கள் பாண்டிய நாட்டில் இதுகாறும் கிடைக் காதது பெருங்குறையாகும். ஆனால், அவை கிடைப்பதற்கு நல்ல வாய்ப்பு உள்ளது. அதுபோல அகழ்வாராய்ச்சிகளிலும் பிராமி எழுத்துகளைக் கொண்ட மட்பாண்டங்கள் கிடைப்பதற் கான வாய்ப்புகள் உள்ளன. ஆக, அசோகர் காலத்திய கல் வெட்டுகளும் தமிழ்ப் பிராமிக் கல்வெட்டுகளும் பாண்டிய நாட் டில் கிறிஸ்து சகாப்தத் தொடக்கத்திற்கு முன்பே இங்கு நிலவி யிருந்த பண்பட்ட சமூக வாழ்க்கைக் கூறுகளை எடுத்துரைக் கின்றன. அக்காலத்திலேயே தமிழகம் இந்தியப் பெருநாட்டின் பல பகுதிகளுடன் தொடர்புகொண்டிருந்ததையும் நாம் அறிய லாம்.




...மிக் கல்வெட்டுகள் காணப்படும் இடங்கள்

# 4. சங்ககாலப் பாண்டியர்

பாண்டியரைப்பற்றி ஓரளவு தெளிவான சான்றுகள் சங்க காலம் முதற்கொண்டு கிடைக்கின்றன என்று முன்னர் குறித்தோம். சங்க இலக்கியங்களே இக்காலத்தில் சான்ருகத் துணை புரிகின்றன. இவ்விலக்கியங்களின் காலம் சர்ச்சைக்குரியதெனினும் இவை குறிப்பிடும் வரலாறு சுமார் கி.பி. முதல் மூன்று நூற்ருண்டுகளுக்குரியது என்பது பொதுவாகப் பலராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டதாகும். சங்க நூல்களின் குறிப்புகளைக் கொண்டு பாண்டிய மன்னர்களின் வம்சாவளியையோ, முழுமையான வரலாற்று விவரங்களையோ அறிந்துகொள்வது சற்றுக் கடினமே. தொடர்பான வரலாற்றைக் கோர்வையாக எழுதுவதற்கான சிறப்பான வரலாற்று ஆதாரங்கள் என இவற்றை நாம் ஏற்க முடியாது. எனவே, இங்குச் சங்ககாலப் பாண்டி மன்னர்களைப் பற்றிய செய்திகள் தனித்தனியேயும் தொடர்பின்றியும் வகைப் படுத்தப்பட்டுள்ளன. இம்மாதிரியான வகைப்படுத்துதல் வரலாற்றுக்கு ஒவ்வாததெனினும், இம் முறையேயன்றி இச்சான்றுகளைக் கொண்டு கோர்வையான வரலாறு எழுத இயலாது.

## வடிம்பலம்ப நின்ற பாண்டியன்

தலைச்சங்க காலத்தின் இறுதியில் வாழ்ந்தவனுகக் கருதப்படும் இப் பாண்டிய மன்னன் நெடியோன், நிலந்தரு திருவிற் பாண்டியன்,[1] பாண்டியன் மாகீர்த்தி எனவும் அழைக்கப்பட்டான். கடற் கோளால் இன்றைய குமரிக்குத் தென்பகுதியிலுள்ள நாட்டுப் பிரிவுகள் அழிவதற்கு முன்னர் பஃறுளி என்றதோர் ஆற்றை வெட்டுவித்தவன் என்றும், கடல் தெய்வத்திற்கு விழா வெடுத்தான் என்றும் புறநானூறு கூறும்[2]. தொல்காப்பிய உரையாசிரியர் நச்சினர்க்கினியர் இவ்வேந்தன் அவைக்களத்தே தொல்காப்பியம் அரங்கேற்றப்பெற்றதென மொழிகிருர்.[3] இம் மன்னன் மதுரையில் நடைபெற்றதான 'திருவிளையாடல்'களிலும் பங்

[1] புறம், 9; மதுரைக்காஞ்சி, வரி 60-61.

[2] புறம், 9

[3] தொல்காப்பியம் (நச்சினர்க்கினியம்), பாயிர உரை.

கேற்ருன் எனத் **திருவிளையாடல் புராணம்** குறிக்கும்[3ஏ]. இவனுக்குப் பிற்பட்ட காலத்தில் அளிக்கப்பட்ட வேள்விக்குடிச் செப்பேடுகளில் கடற்கோளால் உலகங்கள் அழிய ஒரு பாண்டிய மன்னன் மட்டும் உயிர் வாழ்ந்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.[4] சின்னமனூர்ச் செப்பேடுகளும் (இரண்டும்) பாண்டியன் கடல் மீது வேலெறிந்து பெரு வெள்ளத்தைத் தடுத்த கதையைக் கூறுகின்றன.[5] இக்கதைகள், வடிம்பலம்ப நின்ற பாண்டியனைக் குறித்ததாகலாம் என்று வரலாற்றறிஞர் கருதுவர்[6].

## பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி

இவன் சங்ககாலப் பாண்டியர் வரலாற்றில் சிறப்புவாய்ந்த மன்னர்களுள் ஒருவனுகக் கருதப்படுகிருன். தான் ஆட்சி புரிந்த காலத்தில் பல யாகங்களைச் செய்து சிறப்புற்றவனுதலால் இவன் 'பல்யாக சாலை' என்னும் அடைமொழியைப் பெற்ருன். 'பல் சாலை முதுகுடுமித் தொல்லாணை நல்லாசிரியர் - புணர்கூட் டுண்ட புகழ்சால் சிறப்பின்' என்று மாங்குடி மருதனர் மதுரைக் காஞ்சியில் பாடியுள்ளார். 'நீ வேள்வி முற்றி யூபம் நட்ட வியன்களம் பல கொல்' எனப் புறநானூறு குறிப்பிடும்.[7] வேள்விக்குடிச் செப்பேடுகள் இக்கூற்றை உறுதிப்படுத்துகின்றன.[8] வையையாற்றின் கரையில் பாகனூர்க்கூற்றத்துள் சோலைகள் சூழ்ந்த ஓரிடத்தில் வேள்வியிற் சிறந்த வேதியனுன நற்கொற்றனுக்கு வேள்வி முற்றுவிக்க வேள்விக்குடி என்னும் கிராமத்தைத் தானமாகத் தந்தான்.

இவ்வரசன் 'கொல்யானை பலவோட்டிக் கூடா மன்னரை' அழித்தவன் எனப் புகழப்படுகிருன். மேலும் கடல் போன்ற படையைக் கொண்டு வேற்றரசர்களை வெற்றி கொண்டுள்ளான். ஆயினும், இவனிடம் தோற்ற அரசர்பற்றி எவ்விதக் குறிப்பும் நமக்குக் கிடைத்திலது. இவ்வரசன் பல பரிசில்களைப் புலவர்க்கும் அந்தணர்களுக்கும் வழங்கியுள்ளான்.[9]

இம்மன்னன் குமரிக்கோடும், பஃறுளியாறும் கடல் கோளால் அழிவதற்கு முன்பே தமிழகத்தில் வாழ்ந்தவன் என்று சிலர் கருது

[3ஏ] திருவிளையாடல் புராணம், எண். 21.

[4] பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக். 19, வரி. 5-7.

[5] பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக். 77, வரி. 9-10; பக். 153 வரி. 90-91.

[6] K. A. Nilakanta Sastri, **The Pandyan Kingdom**. p. 23.

[7] பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக். 22, வரி. 31-38.

[8] புறம், 15.

[9] புறம், 6.

கின்றனர். இக்கருத்து ஏற்புடைத்தாகத் தெரியவில்லை. களப் பிரர் இடையீட்டுக்கு முன்பிருந்த பாண்டிய வேந்தன் என்பது வேள்விக்குடிச் செப்பேடுகளிலிருந்து தெரியவருகிறது. மேலும், மாங்குடி மருதன் இயற்றிய மதுரைக் காஞ்சியுள் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனுக்கும், தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனுக்கும் முன்னர் வைக்கப்பட்டுள்ளான். மேலும் வடநாட்டு வேதவேள்விகள் முதுகுடுமியின் காலத்தில் அதிக அளவில் செய்யப்பட்டதாகக் குறிப்பிடப்படுவதிலிருந்து வடநாட்டுத் தொடர்பு நெருக்கமடைந்த காலத்தில் வாழ்ந்த வனாகலாம் என்பது உறுதிப்படுகிறது. ஆயினும் களப்பிரர் இடை யீட்டுக்கு எத்தனையாண்டுகள் முன்பிருந்து ஆண்டான் என அறிவதற்கான சான்றுகள் ஏதுமில்லை.

## முடத்திருமாறன்

இவன் இரண்டாம் கடற்கோளுக்கு முற்பட்ட பாண்டிய மன் னன் என்று பிற்கால நூலான இறையனார் அகப்பொருளுரை கூறும். இவன் கபாடபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட வனாகக் கருதப்படுகிறான். எனவே இம்மன்னனை இடைச்சங்க காலத்து இறுதியில் வாழ்ந்தவன் என்பர். கடற்கோளுக்குப் பின் னர், தமிழ்ப் புலவர்களுடன் வடக்கேசென்று மணலூர் என்னும் சிறு நகரில் தங்கினான் எனவும், பின்னர் மதுரையைத் தலைநகராக நிர்மாணித்துப் பாண்டிய ஆட்சியை நிலைநிறுத்தியவன் எனவும் சொல்லப்படுகிறது[10]. இச்செய்தியைக் குறிப்பனபோல் பராந் தக பாண்டியனது தலைவாய்ப்புரச் செப்பேடுகள்[11], 'தென்மது ராப்புரஞ் செய்தும், அங்கதனில் அருந்தமிழ் நற்சங் கமிரீத் தமிழ் வளர்த்தும்' என மொழிகின்றன. இம்மன்னனின் தமிழ்ப் புலமைக்கு எடுத்துக்காட்டாக நற்றிணையில் இரண்டு பாடல்கள் காணப்படுகின்றன.[12]

## கடலுண்மாய்ந்த இளம்பெருவழுதி

இவ்வேந்தனைப்பற்றி விரிவான செய்திகள் ஏதும் கிடைத்தில. ஆயினும் 'கடலுண்மாய்ந்த' என்னும் அடைமொழியால் இம் மன்னன் கடலில் மூழ்கி இறந்திருக்கலாம் என்று துணியலாம். கலம் செலுத்திப் போரில் ஈடுபட்டபோது மாய்ந்தான் என்று கருதப்படுகின்றது. இம்மன்னன் பாடிய புறநானூற்றுப்பாடல் மூலம் தமக்கென வாழாமல் பிறர்க்கென வாழும் சான்றோரால்

[10] இறையனார் அகப்பொருள் உரை, பக்கம்-5.
[11] பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக். 103, வரி. 97-98.
[12] நற்றிணை, 105-228.

தான் இவ்வுலகம் நிலைபெற்றிருக்கிறது என்று குறித்தலால்[13] இவ் வேந்தன் ஈகை, இரக்கம் போன்ற தூயநற்குணங்களுக்கு அளித்த சிறப்பிடத்தை அறியமுடிகிறது. பரிபாடலில் திருமாலிருஞ் சோலைமலையில் அமர்ந்திருக்கும் திருமாலின் அடிகளை வணங்கு தலினால் ஏற்படும் சிறப்பை இசைத்துள்ளான். இதன்மூலம் இவ் வேந்தன் திருமாலிடம் கொண்ட ஈடுபாடு புலனாகிறது.[14]

### அறிவுடை நம்பி

இவன் அரிய கல்வியும் பெருஞ்செல்வமும் ஒருங்கே பெற்றிருந் தான். கோப்பெருஞ் சோழனின் உயிர் நண்பரான பிசிராந்தை யார் இவ்வேந்தனைப் பற்றியும் பாடியுள்ளார். இவ்வரசன் சிறந்த செந்தமிழ்ப் புலமையுடையவன். இவன் பாடிய பாடல்கள் அக நானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை ஆகிய நூல்களில் உள்ளன. நேர்மையாக வரி பெறுவதனால் ஏற்படும் பலன்பற்றி மிகச் சிறந்த முறையில் அறிந்து வைத்துள்ளான்.[15] இது இம்மன்ன னின் ஆட்சித்திறமைக்குத் தக்க சான்றாக மிளிரும். 'மயக்குறு மக்களை யில்லோர்க்குப் பயக்குறை யில்லைதாம் வாழும் நாளே' என்று பாடிய இவ் வேந்தன் குழவிச் செல்வத்தை உயர்ந்த செல்வ மாக மதித்தான் எனலாம்.[16] இவன் பெருங்கொடை வள்ளலாக வாழ்ந்தவன்.

### ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்

இவன் அறிவுசால் மன்னனும், சிறந்த போர்வீரனும் ஆவான். ஒல்லையூர் என்னும் ஊரை வெற்றி கொண்டவன் இவன் என்பதை இவன் பெற்றுள்ள அடைமொழியைக்கொண்டு குறிப்பிடலாம். இவ்ஒல்லையூர் எவ்விடத்தில் உள்ளது என்பது பற்றி இருவேறு கருத்துகள் உள்ளன. ஒரு சாரார் திருவனந்தபுரம் தாலுக்காவில் உள்ளது என்றும், மற்றொரு சாரார் புதுக்கோட்டை மாவட்டத் தில் உள்ள ஒலியமங்கலம் எனவும் உரைப்பர். இவன் தனக்கரு கமைந்த குறுநில மன்னர்களுடன் நட்புறவு கொண்டு திகழ்ந் தான். மையல் என்னும் ஊரின் தலைவனான மாவன், எயில் ஊரின் தலைவனான ஆந்தை, அந்துவஞ்சாத்தன், ஆதன் அழிசி, இயக்கன் என்போரை நண்பர்களாகக் கொண்டிருந்தான்.[17]

[13] புறம், 182.
[14] பரிபாடல், 15.
[15] புறம், 184.
[16] புறம், 188.
[17] புறம், 71.

இவன் மனைவி பெருங் கோப்பெண்டு சிறந்த கற்பினள். பூதப் பாண்டியன் இறந்தவுடன், பெருங்கோப்பெண்டு, ஈமத் தீயில் பாய்ந்து மாண்டாள். கைம்மை நோன்பின் கொடுமையை இவள்பாடிய பாடல் தெளிவுபட உணர்த்துகிறது.[18]

## ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்

மதுரையில் இருந்து அரசாண்ட இம் மன்னன் சேரன் செங்குட்டுவனின் சமகாலத்தோனுவான். சிலப்பதிகாரத்தில், கண்ணகியின் கணவன் கோவலனைத் தவறுதலாகத் தண்டித்த வேந்தன் இவனே. தவற்றை உணர்ந்த இவன் அரியணையிலிருந்த வண்ணம் உயிர் துறந்தான் எனச் சிறப்பிக்கப்படுகிறுன். உடன் இருந்த இவன் மனைவி கோப்பெருந்தேவியும் அக்கணமே உயிர் துறந்தாள் எனச் சிலப்பதிகாரம் குறிக்கும்.[19] ஆரிய மன்னர்களை வென்றதனுல் இவன் 'ஆரியப்படை கடந்த' என்ற அடை மொழியை ஏற்ருன் எனத் தெரிகிறது. இம் மன்னனுடன் போரிட்டுத் தோற்ற வட ஆரியர் யார் என்பது தெளிவாக வில்லை. இவன் கற்ருேரைப் பெருமதிப்புடன் ஆதரித்தான் என்பதை இவன் பாடியுள்ள புறநானூற்றுப் பாடல் மூலம் அறியலாம்.[20]

## சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன்

இவன் ஆரியப் படைகடந்த நெடுஞ்செழியனின் தம்பியா வான். இவன் இளவரசாக இருந்தபோது வெற்றி வேற்செழியன் என்ற பெயருடன் கொற்கையிலிருந்து அரசாண்டான். அரசன் மதுரையில் இறந்தவுடன் கொற்கையிலிருந்து மதுரைக்கு வந்து ஆட்சிப் பொறுப்பை ஏற்றனன்.[21] இவன் காலத்தில், இவனது முன்னேன் செய்த தீவினையின் பயனுல் நாடு மழை வளமின்றி வறுமையுற்றிருந்தது. இவ் இன்னல்களை நீக்கி நாடு வளம் பெறச் செய்வதற்காகவும் கண்ணகியின் சினம் தணியவும் பெருவிழா ஒன்று நடத்தினுன். இதன் முடிவில் கண்ணகியின் சினம் தணிந்து, நாட்டில் செல்வச் செழுமை வளர ஆரம்பித்தது எனச் சிலப்பதிகாரம் குறிப்பிடும். சீத்தலைச்சாத்தனுர் பாடிய பாடலில், தன்னைச் சார்ந்தோர்க்கு நன்மையையும், பகைவருக்குத் தீமை யையும் தரும் வன்மை உடையவன் என்று இவன் குணச்

[18] புறம், 246, 247.
[19] சிலப்பதிகாரம், 23:14-8; 31-4; 25:95-6.
[20] புறம், 183.
[21] சிலப்பதிகாரம், 27:127-140.

சிறப்பைப் புகழ்கிறார்.[22] சித்திரமாடத்தில் இவன் மாய்ந்ததனால் இப் பெயர் இம் மன்னனுக்கு ஏற்பட்டிருக்கலாம்.

### தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

சங்ககாலப் பாண்டிமன்னருள் தலைசிறந்த மன்னனாக இவன் கருதப்படுகிறான். இவன் சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறனின் புதல்வன் எனச் சிலர் கருதுவர். பத்துப்பாட்டிலுள்ள மதுரைக் காஞ்சியும் நெடுநல் வாடையும் இவ்வேந்தன்மீது பாடப்பட்ட பாடல்களாகும். இவன் இளமையிலேயே ஆட்சிப் பொறுப் பேற்றான். 'இளையோன் இவன்' என்று எண்ணிச் சேரன் மாந்தரஞ்சேரல் இரும்பொறையும், சோழன்பெருநற் கிள்ளியும் ஒன்று சேர்ந்து, திதியன், எழினி, எருமையூரன், இருங்கோ வேள்மான், பொருநன் என்னும் வேளிர் ஐவருடன் மதுரையை முற்றுகையிட்டு இவன்மீது போர் தொடுத்தனர். இவன் இளைஞனாயினும் சிறிதும் அஞ்சாமல் படையுடன் சென்று எதிரி களுடன் பொருது அவர்களைப் புறமுதுகிட்டோடும்படி செய்தான். இப் பெரும் போர் தஞ்சை மாவட்டத்திலுள்ள தலையாலங்கானம் என்னும் ஊரில் முடிவுற்றது, இப் போர்க்களத்தில், யானைக்கட் சேய் மாந்தரஞ்சேர லிரும்பொறை பாண்டியர்களால் சிறை பிடிக்கப்பட்டான்.[23] இவ் வெற்றியின் விளைவாகத் தமிழகப் பகுதியில் பெரு வேந்தனாக மதிக்கப்பட்டான். இப்போரைத் தொடர்ந்து நடத்திச் சென்றான். பகைவரை உறையூர் வஞ்சி முதலிய நகரங்கள் வரை துரத்திச் சென்றான்.[24] வேளிர்களுக்குரியவையாகிய மிழலைக் கூற்றத்தையும், முத் தூற்றுக் கூற்றத்தையும் கைக்கொண்டு பாண்டி நாட் டுடன் சேர்த்துக் கொண்டான்.[25] இப் பெரு வெற்றியைப் பற்றிப் பிற்காலச் சின்னமனூர்ச் செப்பேடும் 'தலையாலங் கானத்திற் றன்னொக்கு மிருவேந்தரைக் கொலைவாளிற் றலை துமித்துக் குறைத்தலையின் கூத்தொழித்தும்' என்று வர்ணிக் கிறது.[26] 'ஆலங்கானத் தமர்வென்று ஞாலங்காவல் நன்கெய்தி யும்' என்று தளவாய்புரச் செப்பேடும் குறிக்கின்றது. இவ்வரச னின் உயர் பண்புகளைப் பற்றியும், பெற்ற பெரு வெற்றியைப் பற்றியும் மாங்குடி மருதனார் தம் மதுரைக்காஞ்சி என்னும் நூலுள் புகழ்ந்து பேசுகிறார். இவனது நல்லாட்சியின் சிறப்புகள் மற்ற இடங்களுக்கும் பரவ வேண்டும் என்று வாழ்த்தியுள்ளார். கொற்கைக்காவலன் பரதவர் தலைவன் என்று இவன் போற்றப்

[22] புறம், 59.
[23] புறம், 19, 23.
[24] புறம், 78.
[25] புறம், 24.

படுகிருன். வைதிக சமயப்பற்று மிக்கவன். பல வேத வேள்விகள் செய்தான்; அந்தணர்களை நன்கு ஆதரித்தான்; புலவர்களைச் சிறப்பாக மதித்தான். இவனது அரசவையில் மாங்குடி மருதன் தலைமையில் ஒரு சிறந்த புலவர் குழு இருந்ததாகக் குறிப்பிடப் பட்டுள்ளது.[27] நக்கீரர், பரணர் போன்ருேர் இவன் அவைக் களத்தில் இருந்தனர்.

## கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி

இவன் சங்ககாலப் பாண்டிமன்னர்களுள் கடைசி அரசனுகக் கருதப்படுபவன். இவன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் மகன் என்று கருதுவர். கானப்பேர் என்னும் அரணைத்தாண்டி அப்பகுதியை ஆட்சிபுரிந்த வேங்கைமார்பனைக் கைப்பற்றியதால் இப் பெயர் பெற்றனன் என்பர்.[28] இக் கானப் பேர் தற்போது காளையார்கோவில் என்னும் சிறு ஊராகும். இவன் காலத்தில் சேர நாட்டைச் சேரமான் மாவண்கோவும் சோழநாட்டை இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் ஆண்டு வந்தனர். அவ்விருவரும் இவனுக்குச் சிறந்த நண்பர்களாய் இருந்தனர். இம்மன்னன் அரசவையில்தான் திருக்குறள் அரங் கேறியது என மொழிவர். இவ் அரசனே அகநானூற்றுப் பாடல்களைத் தொகுக்க வழி செய்தான் என்பர். இவன் இயற்றிய பாடல்கள் அகநானூற்றிலும் (26) நற்றிணையிலும் (98) உள்ளன.

இப் பாண்டிய மன்னர்களேயன்றி மேலும் பல பாண்டி மன்னர்களைப் பற்றிய சில குறிப்புகள் சங்க நூல்களில் விரவிக் கிடக்கின்றன. இவற்றுள் பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி, இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன் ஆகியோர் பெருமை பெற்றவராகத் தெரிகிறது. வெள்ளியம்பலத்துத்துஞ்சிய பெரு வழுதி சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவ னுடைய நண்பன். காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ண ஞரால் பாடப்பட்டவன் (புறம் - 58). கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி வடவரை வென்றவன் என்றும், பல மன்னர்களிட மிருந்து திறை பெற்ருன் என்றும் தெரிகிறது.[29] இலவந்திகைப்

[26] பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக். 154, வரி. 100-102.

[27] புறம், 72.

[28] புறம், 21. சதாசிவப் பண்டாரத்தார், 'பாண்டியர் வரலாறு' பக். 27-28.

[29] புறம், 51, 52.

பள்ளித்துஞ்சிய நன்மாறனுக்கு, படைச்செருக்குக் கூடா தென்றும், நீதிகோடலே நன்று என்றும் அறிவுரை பகர்ந் துள்ளார் புலவர். நக்கீரர், காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் இவன் பராக்கிரமத்தைப் புகழ்ந்துள்ளனர். இவன் காலத்தில் யவனர்கள் மதுவகைகளை விற்று வாணிபம் செய்த செய்தி கூறப்படுகிறது. கீரன் சாத்தன் என்னும் பாண்டிய மன்னன் புறமுதுகிட்டோடும் மன்னரைத் தடுத்து நிறுத்தி அபயம் அளிப்பவன் என்பதாகப் புகழ்கின்றார் ஆவூர் மூலங்கிழார்.

மதிவாணன், பொற்கைப் பாண்டியன், கருங்கை யொள்வாட் பெரும்பெயர் வழுதி, பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி, நல்வழுதி, குறுவழுதி, நம்பி நெடுஞ்செழியன் ஆகியோரைப் பற்றியும் சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது. பன்னாடுதந்த மாறன் வழுதி சிறந்த செந்தமிழ்ப்புலவன். நற்றிணை இவனால் தொகுக்கப்பட்டது என்று கருதப்படுகிறது.[30]ஏ இவர்கள் அனை வரும் மன்னர்களாக இருந்து அரசோச்சினர் என்பதும் அவர் களுக்குள்ள உறவுபற்றியும் உறுதியாகக் குறிப்பிடச் சான்றுகள் இல்லாதது ஒரு குறையாகும். ஒரே காலத்தில் பல பகுதிகளையும் ஆண்ட பாண்டியர் சிலர் ஆட்சி பொறுப்பேற்று இருக்கலாம். சிலர் அரச குமாரர்களாகவும் இளவரசர்களாகவும் இருந்திருக்க லாம்;

## சங்ககால அரசியல்

### 1. மன்னராட்சி :

தமிழகத்தின் பிற பகுதிகளில் இருந்தாற்போல் மன்னராட்சி தான் பாண்டியப்பகுதியிலும் நிலவி வந்தது. ஆட்சிமுறையில் வேந்தனே முதலிடத்தை வகித்தான். மன்னனே மக்கட்கு இறைவன் என்ற முறையில் கருதப்பட்டான். எனினும் சக்கர வர்த்தி போன்ற உயர்ந்த பட்டங்களை இக்கால மன்னர் சூட்டிக் கொண்டதாகத் தெரியவில்லை. மேலும் பேரரசு சார்பான (imperial) கொள்கைகளையும், அதற்கெனச் செயல்முறைகளையும் கொண்டிலங்கவில்லை. அருகிலுள்ள மற்ற நாடுகளுடன் அடிக்கடி போர் புரிந்து சில பகுதிகளை அவ்வப்போது வென்றதுடன் இப்பாண்டிய மன்னர் தம் பேரரசுத் தன்மையை நிறுத்திக் கொண்டனர்.

மன்னர்கள் பாண்டியர், செழியன், மாறன், வழுதி போன்ற பொதுவான பட்டப் பெயர்களைச் சூட்டிக் கொண்டனர்.

[30]ஏ சதாசிவப் பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு பக். 29.

இவ்வாறே அவர்கள் ஆற்றிய பல சிறப்புச் செயல்களைக் குறித்த சொற்றொடர்களைத் தம் பெயருக்கு முன் பட்டப் பெயர்களாகச் சூடும் வழக்கத்தைக் கைக்கொண்டிருந்தனர். உதாரணமாக, பல யாகங்களை நடத்தியதால் 'பல்யாக சாலை' என்றும், தலையாலங்கானம் என்னுமிடத்தில் நடைபெற்ற போரில் வெற்றி பெற்றதனால் 'தலையாலங்கானத்துச் செரு வென்ற' என்றும், கானப்பேர் (தற்கால காளையார் கோயில்) என்னுமிடத்தில் மதிலைக் கடந்து சென்று வெற்றி பெற்றதனால் கானப் பேரெயில் கடந்த' என்றும் பட்டப் பெயர்களைப் பெருமையுடன் சூடிக் கொண்டனர். இவ்வகையில் இப் பாண்டியரது இயற்பெயரை அறிவது சற்றும் இயலாததாகவே உள்ளது என்பதைக் குறிப்பிட வேண்டும்.

அரசன் கல்வியறிவு படைத்தவனாக விளங்கினான். சங்கப் பாடல்கள் பலவற்றை யாத்த பெரும்புலவர்களாகப் பாண்டி மன்னர்கள் திகழ்ந்தனர். தமிழ்மொழியை ஆவலுடன் போற்றி வளர்த்தவர்கள் இப் பாண்டி மன்னர்கள். ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் பாடல் மூலம் இம் மன்னர்கள் ஆசிரியர்களுக்கு 'உற்றுழி உதவியும், உறுபொருள் கொடுத்தும், பிற்றைநிலை முனியாது' கற்றனர் என்பது பெறப்படும்.[30]

மன்னன் இறந்தபின் யார் ஆட்சிப் பொறுப்பேற்பது என்ப தற்கான நடைமுறை விதிகள் ஏதும் இக்கால அளவில் வகுக்கப் பட்டிருந்ததாகத் தெரியவில்லை. தலைவனைத் தேர்ந்தெடுக்கத் தேர் தல் முறையும் இருந்ததாகத் தெரியவில்லை. எனினும், தந்தைக்குப் பின் தலைமகன் ஆட்சிப் பொறுப்பேற்றான் என்பது பொதுவான நடைமுறை வழக்கமாக இருந்துள்ளது. ஆயினும் இவ் வழக்கம், சேர, சோழ மரபுகளில் தவறியதற்கான சான்றுகள் இருப் பினும் பாண்டிய மரபில் தவறியதற்கான சான்றுகள் இதுவரை கிடைக்கவில்லை. பாண்டி நாட்டில் அரசுரிமைக்காகப்போராட் டங்கள் நிகழ்ந்ததாகவும் குறிப்புகள் இல்லை. இக்கால ஆட்சி முறையில் ஆட்சிப் பொறுப்பினைப் பகிர்ந்துகொள்ள 'இளவரசன்' என்னும் பதவிமுறை இருந்ததாகக் குறிப்பிடலாம். இது பற்றிச் சிலப்பதிகாரம் சான்று பகர்கின்றது. பாண்டியன் நெடுஞ் செழியன் மதுரையில் ஆண்டுவந்த காலத்தில் கொற்கை நகரில் வெற்றிவேற் செழியன்ஆட்சி புரிந்தனன் என்று இந்நூல் பகர் கின்றது. எனினும் இம் முறையின் தொன்மைபற்றிய செய்திகள் நமக்கு ஏதும் கிடைத்தில.

[30] புறம், 183.

4

மன்னனுக்குத் துணைபுரிய சில அமைப்புகள் செயல்பட்டு வந்தனவாக அறிகிறோம். சங்க இலக்கியங்கள் இக் குழுக்களை 'சுற்றம்' என விளிக்கும். 'பூத்த சுற்றத்தின்' நடுவினில் விளங்கினான் பாண்டியன் நெடுஞ்செழியன் என்று மாங்குடி மருதனார் போற்றுவர்.[31] இது போன்ற வேறொரு குழுவினைப் பற்றி மதுரைக்காஞ்சி 'காவிதி மாக்கள்' என்று குறிக்கும். இக்குழுவின் அமைப்பு, செயல்முறைகள் ஆகியவைபற்றி விரிவாக அறிய இயலவில்லை எனினும், இக்குழு ஆலோசனைச் சபையாக இருந்து அரசனுக்கு நன்மை தீமைகளைப் பற்றி அறிவுரை வழங்கியது என்பது தெரியற்பாலதாகும்.[32] 'நாற்பெருங்குழு' ஒன்றைப் பற்றியும் மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.[33] பூண் அணிந்தவரும், சிறந்தோரான ஐவரைப் பற்றியும் இந்நூல் வேறிடத்தில் கூறுகிறது.[34] இக்குழுக்களில் செயல்பட்ட ஆய்வாளர்கள் யார் என்பன போன்ற விவரங்கள் ஏதும் நமக்குத் தெரிந்தில.

ஐம்பெருங் குழு, எண்பேராயம் போன்ற குழுக்கள் பாண்டியர் அவையில் செயல்பட்டதற்கான நேரடிச் சான்றுகளில்லை எனினும் சற்றுப் பிற்பட்ட இலக்கியமாகக் கருதப்படும் சிலப்பதிகாரம் இவ்விரண்டு அவைகளும் சோழர், சேரர் அவைகளில் செயல்பட்டனவெனக் குறிப்பிடுகிறது.[35] எனவே, மற்ற மன்னர்கள் அவையில் செயல்பட்ட இக் குழுக்கள் பாண்டியர் அவையிலும் செயல்பட்டிருக்கக்கூடும்.

நாட்டின் உட்பிரிவுகளைப் பற்றிய அதிகமான செய்திகள் ஏதுமில்லை. சங்ககாலத்தனவாகக் கருதப்படும் பிராமிக் கல்வெட்டுகளில் நாடு என்ற உட்பிரிவு குறிப்பிடப்பட்டுள்ளது. ஊர், நல்லூர், குடி போன்ற கடைநிலைப் பிரிவுகளைப் பற்றியும் அறியலாம். தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் மிழலைக்கூற்றத்தைக் கைப்பற்றினான் என்ற குறிப்பைப் பார்க்கும் போது கூற்றம் என்ற இடைநிலை உட்பிரிவு இக்காலத்தே அரசனால் உருவாக்கப்பட்டனவா என்பது சரியாகத் தெரியவில்லை.

ஆட்சியைச் செவ்வனே நடத்த வருவாய் இன்றியமையாதது. பாண்டி நாட்டின் வருவாய்க் கண்காணிப்புக்காக ஒரு

[31] மதுரைக் காஞ்சி, வரி 763-780.
[32] மதுரைக் காஞ்சி, 494-499.
[33] மதுரைக் காஞ்சி, 510.
[34] மதுரைக் காஞ்சி, 775.
[35] சிலப்பதிகாரம், 5:157; 26:31; 3:126.

துறை இயங்கிற்று எனலாம். இவ் வருவாய்த் துறையின் அலுவலர்களைப்பற்றி அதிகம் அறிய முடியவில்லை. வருவாய்க்காக நாட்டுக் குடிமக்கள்மீது பல்வேறு வகையான வரிகள் விதிக்கப்பட்டு வசூலிக்கப்பட்டன. இக்காலத்தில் வரிகள் இறை, புரவு என்ற சொற்களால் குறிப்பிடப்பட்டன. நாட்டின் வருவாயின் பெரும் பங்கு நிலவரியிலிருந்து கிடைத்திருக்கலாம். நிலவரியின் அளவு பற்றியும், எவ்வாறு நிர்ணயிக்கப்பட்டன என்பதுபற்றியும் தெளிவாகத் தெரியவில்லை. ஆறிலொன்றை அரசன் வரியாகப் பெற்றான் என்று வரலாற்றாசிரியர்கள் பலர் உரைப்பர்.[36] இவ் விகிதம்தான் தர்மசாத்திரங்களில் விதிக்கப்பட்டுள்ளது. மக்கள் இறையைக் காசாக, அல்லது தானியமாகச் செலுத்தியிருக்கலாம். வென்ற மன்னர்களிடமிருந்து திறை பெறுவதும் உண்டு. உள்நாட்டு, வெளிநாட்டு வணிகப் பொருள்கள்மீது சுங்கம் விதிக்கப்பட்டது. இவ்வகையான வருவாய் இரண்டாவது முக்கியமான வருவாய் ஆகும்.

பாண்டி மன்னர் வரி வசூலிப்பதில் சில நடைமுறைகளைக் கைக் கொண்டிருந்தனரெனத் தெரிகிறது. துன்புறுத்தித் தனக்குச் சேரவேண்டிய பகுதிக்கும்மேல் இறையாகப் பெறும் அரசனைக் கொடுங்கோலன் என மக்கள் தூற்றுவர் என்று பாண்டியன் நெடுஞ்செழியன் குறிப்பிடுகிறான்.[37] பாண்டியன் அறிவுடை நம்பிக்கு வரி கொள்ளும் நெறியை விளக்க வந்த பிசிராந்தையார், வரிகொடுக்கும் அளவுக்குத் தக்கவாறு மக்களிடம் சிறுகச் சிறுக இறை கொள்வதே நல்ல அரசனுக்கு அழகாகும் என்பர்.[38] இவற்றிலிருந்து அக்கால அரசர் ஓரளவு எளிய முறையில் வரி வசூலித்தனர் எனலாம்.

மன்னனின் முறையான அலுவல்களில் நீதி வழங்குதலும் ஒன்றாகும். நீதியின் உருவமென மன்னனை மக்கள் கருதினர். நீதி வழங்குதலுக்கு முறையான விதிமுறைகள் ஏதும் அக்காலத்தில் இருந்தனவாகப் புலப்படவில்லை. மன்னன் கொலு வீற்றிருக்கும் இடமே உயர்ந்த நீதி மன்றமாகக் கருதப்பட்டது. இந்த அவை மதுரையில் இருந்தது என்பதை மதுரைக் காஞ்சி 'சிறந்த கொள்கை அறங்கூ றவையம்' என்று குறிப்பிடுகிறது.[39] அரசன் நீதிநெறியினின்று பிறழ்வது கொடுஞ்செயல் என்ற கருத்து நிலைபெற்றிருந்தது. விசாரணை செய்து நீதி வழங்கினர்

[36] சு. வித்தியானந்தன், தமிழர் சால்பு, பக். 74.
[37] புறம், 72.
[38] புறம், 184.
[39] மதுரைக் காஞ்சி,

என்பது பொருத்தமேயானாலும், தக்க விசாரணையின்றி நீதி வழங்கலும் அவையில் இருந்துள்ளது என்பதற்குப் பாண்டிய அவையில் கோவலனுக்கு விதிக்கப்பட்ட தண்டனையிலிருந்து தெளிவாகும்.

சங்க காலக் கடைசிப் பகுதியில் நீதி வழங்கும் முறையில் பலநீதி நூல்களின் செல்வாக்கைக் காணமுடிகிறது. திருக்குறள் பாண்டியன் அவையில் அரங்கேறியது என்றாலும் திருக்குறளில் கூறப்பட்ட நீதிமுறைகளைப் பாண்டிய மன்னர் எவ்வளவு பூரணத்துவத்துடன் மேற்கொண்டனர் என்பதை அறிவது இயலாததாம். இதேபோல் வட இந்தியாவில் தோன்றிய மனுதர்மம், தென்னாட்டில், குறிப்பாக, பாண்டிய நாட்டில் எவ்வாறு போற்றப்பட்டது என்பதையும் அறிவதற்குச் சான்றுகள் ஏதும் இதுகாறும் கிடைத்தில. எனினும், இக் காலத்தில் வட பகுதியினருடன் ஏற்பட்ட பல்வேறு தொடர்புகளால் நீதிநெறி முறைகளிலும் ஒரு மாற்றம் தோன்றுவதற்கு வாய்ப்புண்டு.

### சமுதாயம்

பாண்டியநாட்டுப் பகுதியில் வாழ்ந்த மக்கள் தமிழகத்தின் மற்றப் பகுதிவாழ் மக்களின் சமுதாய நிலையோடு ஒத்த பழக்க வழக்கங்களையே கொண்டிருந்தனர் எனினும், தம் பகுதிக் கேற்பச் சிலசில மாறுதல்களையும் கொண்டிருந்தனர். பொதுவாக இப்பகுதி மக்கள் எளிய வாழ்க்கையும், நல்பண்புகளும் பெற்றுத் திகழ்ந்தனர்.

நிலஇயல் அமைப்புக்கேற்றாற்போல் பாண்டியர் சமுதாயம் பிரிக்கப்பட்டிருந்தது,[41] குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை போன்ற ஐவகை நிலப்பாகுபாடுகள் இருந்தன. இந்நிலப் பாகுபாட்டிற்கு ஒத்த வாழ்க்கை நிலையினை மக்கள் கொண்டிருந்தனர். குறிஞ்சிநில மக்கள் குறவர், கானவர் எனப்பட்டனர். ஆடுமாடுகளை மேய்த்தலைத் தொழிலாகக் கொண்ட ஆயர்கள் முல்லை நிலத்தில் வாழ்ந்தனர். உழவர்கள் மருத நிலத்திலும், பரதவர் நெய்தல் நிலத்திலும் வாழ்ந்தனர். பாலைநிலம், காடு ஆகிய பகுதிகளில் வாழ்ந்தவர்கள் மறவர், எயினர் எனப் பட்டனர். ஆரம்பகாலத்தில் இருந்துவந்த இச் சமூக நிலையில் சமூக ஏற்றத்தாழ்வுகள் ஏதும் இருந்ததாகத் தெரியவில்லை. கற்றறிந்தோர் அனைவரும் சிறந்தோர் எனப் போற்றப்பட்டனர்.

40 மதுரைக் காஞ்சி, 492

41 சு. வித்தியானந்தன், முன் குறித்த நூல், பக் 202-211.

தொழிலின் அடிப்படையில் தீவிரமான வேற்றுமைகள் தோன்றி யிருக்கவில்லை.

சங்ககாலத்தின் பிற்பகுதியில் இவ்வழக்கங்கள் சற்று மாறுதலுற்றன. தொழிலின் அடிப்படையில் வேற்றுமைகள் தோன்ற ஆரம்பித்தன. ஆயினும், தீவிரமான வேறுபாடுகள் தோன்றி யிருக்கவில்லை. எனினும், 'நால்குடி' என்னும் அமைப்பு இங்கு மெல்ல மெல்ல வளர ஆரம்பித்தது. இதன் அடிப்படைத் தன்மையைப்பற்றித் தெளிவாக அறிய இயலவில்லை. சாதிப்பூசல், சமயப்பிணக்கு ஆகியவை பாண்டியநாட்டு பகுதியில் இருந்ததற்கான சான்றுகள் இக்காலத்தில் இல்லை.

சமூகத்தில் குடும்பம் ஒரு சிறந்த நிலைக்களனாக விளங்கியது. தாய் தந்தையரது கடமைகள்பற்றிச் சில செய்திகள் கிடைக்கின்றன. குடும்பத்தில் மூத்தோன் முதலிடம் பெற்றான். எனினும் கல்வியறிவு சிறப்பான தகுதியாகக் கருதப்பட்டது.[42] சமுதாயத்தில் பெண்கள் உயர்ந்த இடத்தைப் பெற்றிருந்தனர். பெண்கள் பொது விழாக்களில் பங்கேற்றனர். சுயேச்சையாகப் பெண்கள் தமக்கேற்ற கணவனைத் தேர்ந்தெடுக்கும் வழக்கம் இருந்துள்ளது. காதல் மணம் தடைசெய்யப்படவில்லை. திருமணம் எளிய முறையில் நடைபெற்றது. முதியவர் தலைமையில், சுற்றம் சூழ மணவினை நடைபெற்றது. கற்புடன் வாழ்ந்த சிறந்த இல்லக்கிழத்தியாதல் நன்று என அறிவுரை வழங்கப் பட்டது. இல்லற ஒழுக்கம் சிறந்ததெனப் போற்றப்பட்டது. கணவன் இறந்தபின் மனைவி தீப்புகும் வழக்கம் இக் காலத்தில் இருந்துள்ளது.[43] பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு கணவன் இறந்தவுடன் தீப்பாய்ந்தாள். ஆயினும், இவ்வழக்கம் சாதாரண மக்களிடையே அதிக அளவில் நிலவியிருந்தது என்பதற்குத் தக்க சான்றுகள் இல்லை. கைம்பெண்கள் இச் சமூகத்தில் இருந்துள்ளனர். ஆயினும், இவர்களது நிலை மிகப் பரிதாபகரமானதாகும்.[44] ஒழுக்கம் சிறப்பான பண்பாகக் கருதப்பட்டது. ஒழுக்கத்தினின்று தவறுதல் பெருங்குற்றமாகக் கருதப்பட்டது. ஆண்களின் பல்வேறு தொழில்களில் பெண்களும் துணை செய்தனர். மனைப் பெண்டிரன்றி, பாசறையில் வினையாற்றும் மகளிராகவும் இக் காலத்தில் பணியாற்றினர். பொதுமகளிர் பலரும் இக்காலத்தில் இருந்துள்ளனர். பொதுமகளிரின் செயல்

42 புறம், 183.
43 புறம், 246, 247.
44 புறம், 246.

களையும் வஞ்சகச் சூழ்ச்சிகளையும் பற்றி மதுரைக்காஞ்சி விரிவாக உரைக்கும்.

## சமயம்

பல்வேறு சமயங்கள் இக்காலத்தில் நிலவி வந்துள்ளன. தமிழக மக்கள் அக்கால வட இந்தியச் சமயக் கருத்துகளுக்குச் சற்று மாறுபட்டுத் திகழ்ந்தனர் எனலாம். முருக வழிபாடு சிறப்பிடம் பெற்றிருந்தது. குரவைக்கூத்து ஆடி முருகனை மகிழ்வித்தல் முக்கியமான வழிபாட்டு முறையாகக் கருதப்பட்டது. வேலனுக்காக ஆடப்படும் 'வெறியாட்டம்' இக்காலத்தில் மற்றொரு சிறப்பான வழிபாட்டு முறையாகும். முருகனின் தாய் கொற்றவை எனப்பட்டாள். இவளை வெற்றித் தெய்வமாக மக்கள் வழிபட்டனர். ஐம்பூதங்களைப் படைத்தவன் என்றும் முழுவினையுடையவன் என்றும் சிவனை வாழ்த்தி வழிபட்டனர். மூவெயில் எறிந்த சிறப்பினையும் மதுரைக் காஞ்சி குறிப்பிடும். மால், அல்லது மாயோனையும் வழிபட்டனர். மாநிலக்காவலன் என்று பூவும் நறும்புகையுமிட்டு ஓணநாள் விழா எடுத்தனர். திருமாலிருஞ்சோலை மலையின் சிறப்பையும் அங்கு எழுந்தருளியிருக்கும் கண்ணபிரான், பலதேவன் ஆகிய இருவரது பெருமையையும் பரிபாடல் எடுத்துரைக்கிறது. பாண்டிய அரசன் கடலுண்மாய்ந்த இளம்பெருவழுதி அப் பெருமானிடம் பேரன்பு கொண்டிருந்தான். மதுரை நகரிலுள்ள கூடலழகரைப் பற்றி அகநானூறு குறிக்கின்றது. திருமகளும் வணக்கத்திற்குரிய தெய்வமாகக் கருதப்பட்டாள். திருமகளின் திருஉருவம் பொருந்திய கதவுகளைப்பற்றி மதுரைக் காஞ்சி குறிப்பிடும். இறந்தோரை வழிபடும் வழக்கம் இருந்துள்ளது. நடுகற்களையும் இக்கால மக்கள் வழிபட்டனர். மேலும் சிறு தெய்வங்கள் ஊர்த் தெய்வங்கள் ஆகியவற்றையும் இம்மக்கள் தொழுதனர்.

சமண பௌத்த மதங்களின் செல்வாக்கினையும் இக்காலத்தில் காண்கிறோம். சமண முனிவர்கள், மதுரைக்கருகில் சோலைகளில் அதிக அளவில் வாழ்ந்தனர் எனத் தெரிகிறது. இத் துறவிகள் நல்லொழுக்கத்தை மேற்கொண்டவர் என்றும், விரதங்களை நோற்றும் இளையாத உடம்பையுடையவர் என்றும் குறிப்பிடப்படுகின்றனர். இவர்கள் குண்டிகைகளை வடங்களில் இட்டுத் தம் தோளில் பூட்டிச் செல்வர் என மதுரைக்காஞ்சி குறிப்பிடும். பௌத்த மதத்தினரின் செல்வாக்கும் இக்காலத்தில் ஓரளவு இருந்துள்ளது. மலைக்குகைகளில் பிராமி எழுத்துகள் எழுதப்பட்ட இடங்களில் சமண பௌத்தத் துறவிகள் வாசம் செய்துள்ளனர். இவ்விடங்கள் அவர்கள் நோயுற்ற இடமாகவும் இருக்கக்கூடும்.

இக்கால சமயத் தத்துவங்களில் வேதம், மந்திரங்கள் தனி மதிப்பைப் பெறுகின்றன. ஆரிய முறைப்படி வேதம் ஓதுதலும், வேள்வி யாத்தலும் கைக்கொள்ளப்பட்டன. பலயாகங்களைச் செய்து பெருமை பெற்றவனுகப் போற்றப்படுகிறுன் முதுகுடுமிப் பெருவழுதி. முத்தீ வளர்த்தலும் அந்தணர்க்குரிய அறுதொழி லும் சிறப்பெய்தின. நிலையாமை என்னும் சமயத் தத்துவம் முக்கியத்துவம் பெறுகிறது. இந் நிலையாமையை உணர்த்த எழுந்த நூலே மதுரைக்காஞ்சியாகும். கொல்லாமை, மது அருந்தாமை போன்ற சமண பௌத்த சமயக் கருத்துகளும் இக்காலத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன. இவற்றை நோக்கும் போது தமிழ் மரபும் ஆரிய மரபும் பல்வேறு துறைகளிலும் ஒன்று கலந்து பரிமளித்தன என்று கருதலாம்.

பாண்டிய நாட்டுப் பகுதியில் அக்காலத்தில் மதக் காழ்ப்பு இருந்ததற்கான சான்றுகள் இல்லை. எல்லா மதத்தினரும் சமயப் பொறை கொண்டு வாழ்ந்தனர். மக்கள் மற்ற மதக் கருத்துக் களை ஏற்காவிடினும் எதிரிகள் என்ற காழ்ப்புணர்வுடன் பழக வில்லை. இருந்தும், பிற்காலத்தில் மதவெறி சிற்சில சமயங்களில் தலைதூக்கியது என்பதை இலக்கியங்கள் உணர்த்தும்.

## பொருளாதாரம்

சங்க காலப் பொருளாதாரம் விவசாயத்தை அடிப்படை யாகக் கொண்டது. நாட்டின் பெரும்பாலான பகுதிகளில் உழவுத் தொழிலே நடைபெற்றது. ஆறு, குளங்களிலிருந்து நீர்பாய்ச்சி உழவைப் பெருக்கினர். நீர் நிலைகள் வேளாண்மைக்கு இன்றி யமையாதவை என்று உணர்ந்திருந்தனர்.[45] மலை, காடுகளில் வாழ்ந்தோர் வேட்டையாடுதலைத் தம் தொழிலாகக் கொண் டிருந்தனர். பரதவர் மீன் பிடித்தலைத் தம் தொழிலாகக் கொண்டனர். இத் தொழில்களுடன் கொல்லர், அணிகலன்கள் இழைப்போர், தச்சர், நெசவாளர் போன்ருேரும் தத்தம் தொழில்களைச் செய்து வந்தனர். முத்துக்குளித்தலும் சங்கறுத் தலும் சிறப்பான தொழிலாகக் கருதப்பட்டன.

வணிகர்களும், வணிகக் குழுக்களும் இக்காலத்தில் செயல் பட்டன. உள்நாட்டு வாணிபம் சிறக்க நடைபெற்றது. இவ் வணிகர்கள் அறநெறி பிழையாத அறத்தினையுடையவர் என்று மதுரைக்காஞ்சி இயம்புகிறது.[46] தூர தேசங்களிலிருந்து பொருள்

[45] புறம், 18.

[46] மதுரைக் காஞ்சி, வரி. 500.

களைக் கொணர்ந்து விற்கும் வணிகர்களைப்பற்றியும் மதுரைக் காஞ்சி சான்று பகர்கிறது. இவ் வணிகர் குழுக்களில் குதிரை வணிகர்களைப் பற்றிச் சிறப்பாகக் குறிப்பிடலாம். உப்பு, புளி, மீன் ஆகியவற்றைப் பாண்டியர் ஏற்றுமதி செய்தனர், பாண்டியர் பண்ட மாற்றாக வெளிநாட்டு வணிகர்களிடமிருந்து பெற்றனர். இக்காலத்தில் ரோம் நாட்டுடன் நடைபெற்ற வணிகத்தைப் பற்றிச் சிறப்பாகக் குறிப்பிட வேண்டும்.

பாண்டிநாட்டில் பல நகரங்கள் சிறப்புடன் இலங்கி வந்தன. தலைநகரான மதுரை, தாமரைப் பூ வடிவில் அமைந்திருந்தது என்பர்.[47] நெடிய மதில் ஆழ்ந்த கோட்டையையும், ஆழமான அகழியையும் கொண்டது. நீண்ட தெருக்களும், அவற்றில் அங்காடிகளும் இருந்தன. சுருங்கைகள் பலவும் இருந்தன என்ற மதுரைக்காஞ்சி குறிப்பிடும். இந்து சமயக் கோவில்களும் பௌத்தப்பள்ளிகளும் நகருள் இருந்தன. மதுரைக்கடுத்த மிகச் சிறந்த நகரமாகக் கொற்கை கருதப்படுகிறது. இச் சிறப்பு வாய்ந்த நகர் முத்துக்குளித்தலில் தலையாய இடம் வகித்தது. இத் துறைமுகத்தில் சிறைக் கைதிகளையே முத்துக்குளிக்க அனுமதித்தனர் என்று பெரிப்புளூஸ் குறிப்பிடுகிறது.[48] இக் கொற்கை நகரில் அதிக அளவில் பரதவ மக்கள் வாழ்ந்தனர். பாண்டிய நாட்டின் மற்றொரு முக்கிய நகராக நெல்சிந்தி (Nelcinda) என்ற துறைமுகம் இருந்ததெனப் பிளினி குறிப்பர்.[49] இந்நகருக்கு கொட்டநரா (கேரளத்திலுள்ள கொளத்துநாடு) என்னும் பகுதியிலிருந்து ஏற்றுமதிக்காக மிளகு சென்றது என்பர். மற்றுமொரு முக்கிய நகரம் குமரி ஆகும். குமரித் துறை சிறப்புடன் இலங்கிற்று என்று புறநானூறு குறிப்பிடும்.[50]

கி.பி. முதல் நூற்றாண்டில் எழுதப்பட்ட 'எரித்திரயக் கடலின் பெரிப்ளூஸ்' என்னும் நூலில் பழைய குமரியைப்பற்றியும் கொற்கையைப் பற்றியும் கண்டுள்ள சில குறிப்புகளை இங்குக் காண்பது பொருத்தமாக இருக்கும். இந்நூலை இயற்றிய ஆசிரியர் இந்தியாவின் மேற்குக் கடற்கரையில் இருந்த பல வாணிக மையங்களை நேரிற் சென்று கண்டவர். பாரிகாஜா (புரோச்), சுபாரா (பம்பாய்க்கு வடக்கில் இருக்கும் சோபாரா), கால்லியெனு (கல்யன்) போன்ற மேற்குக் கடற்கரைத் துறை

47 மயிலை சீனி. வேங்கடசாமி, சங்ககாலத் தமிழக வரலாற்றில் சில செய்திகள், என்ற நூலில், 'சங்ககாலத்து மதுரை' என்னும் பகுதி பக் 151.

48 K. A. Nilakanta Sastri, **Foreign Notices of South India, p. 59.**

49 மேற்குறித்த நூல், பக்கம் 57 59.

50 புறம், 67.

முகங்களைப் பற்றியும் திருவிதாங்கூர்க் கடற்பகுதியிலுள்ள வர்க்கலை என்னும் துறைமுகத்தைப்பற்றியும் குறிப்பிட்டுவிட்டுக் குமரியைப் பற்றியும் கொற்கையைப்பற்றியும் சில குறிப்புகளை எழுதியுள்ளார்.[51] 'கொமிரி'யைப் பற்றிப் பின்வரும் குறிப்புக் காணப்படுகிறது. 'அங்கேதான் குமரிமுனையும் துறைமுகமும் இருக்கின்றன. தங்களுடைய வாழ்நாளில் எஞ்சியுள்ள பகுதியைப் புனிதத் தொண்டுக்கென ஒதுக்கிவைக்க விரும்பிய மனிதர்கள் அங்கு வந்து குடியேறி அந்தக் கடலில் நாள்தோறும் நீராடிப் பெண்களுடன் உடலுறவு கொள்ளாத வாழ்க்கையை நடத்துகிறார்கள். பெண்களும் அத்தகைய புனிதத் துறவு வாழ்க்கையை மேற்கொள்கிறார்கள். குமரி முனையில் முன்னொரு காலத்தில் ஒரு பெண் தெய்வம் அவ்வாறு வாழ்ந்ததாகச் சொல்கிறார்கள்.'

'கொல்சி' (கொற்கை)யைப் பற்றிப் பின்வருமாறு குறிக்கப்பட்டுள்ளது. 'குமரி முனையிலிருந்து இன்னும் சிறிது தொலைவு போனால் கொல்சி என்னும் ஊர் இருக்கிறது. அங்கேதான் முத்துச் சலாபம் நடைபெறுகிறது. அந்த ஊர் பாண்டிய மன்னனுடைய ஆட்சியில் உள்ளது. முத்துக்குளிக்கும் வேலையைத் தண்டனையடைந்த குற்றவாளிகள் செய்கிறார்கள். கொல்சிக்கு அப்பால் கடற்கரைநாடு (சோழநாடு) இருக்கிறது.[52] வெளிநாடுகளுடன் தொடர்புகொள்வதிலுள்ள நலங்களைப் பாண்டியர் உணர்ந்திருந்தனர். உரோம் நாட்டு அரசன் அகஸ்டஸ் சீசரிடம் இரண்டு தூதுக்குழுக்கள் பாண்டிய நாட்டுலிருந்து சென்றன. (கி.மு. முதல் நூற்றாண்டு) ஆரியப் படைகடந்த நெடுஞ்செழியன் ஆட்சியில் மதுரைக் கோட்டை வாயில் காப்பாளராக உரோமப் படைவீரர்கள் பணியாற்றினர்.[53]

[51] நீலகண்ட சாஸ்திரி: தென்னிந்தியாவைப்பற்றி வெளிநாட்டினர் குறிப்புகள்.

[52] மேற்படி.

[53] சிலப்பதிகாரம் 14: அடிகள் 66-67; வி. கனகசபை, ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம் ப. 70-71.

# 5. முதல் பாண்டியப் பேரரசு
## அல்லது
# கடுங்கோன் வழிவந்த பாண்டியர் ஆட்சி

***களப்பிரர் ஆட்சி*** *(சுமார் கி.பி. 300 முதல் 575 வரை)*

சங்க காலத்தின் இறுதியில், ஏறத்தாழக் கி.பி. மூன்றும் நூற்றுண்டின் இடைப்பகுதியில், தமிழக வரலாற்றில் ஒருவித இருள் சூழ்ந்து கொண்டது எனலாம். தொன்றுதொட்டுத் தமிழகத்தில் ஆட்சி புரிந்த சேர, சோழ, பாண்டியரைக் களப் பிரர் என்ற ஒரு புதிய அரச மரபினர் வென்று தங்களது ஆட் சியைநிலை நாட்டினர். சுமார் மூன்றும் நூற்றுண்டு இறுதி முதல் ஆறும் நூற்றுண்டின் கடைப்பகுதி வரை தமிழகம் முழு வதையும் ஏறத்தாழ 300 ஆண்டுகள் தடுமாறச் செய்த இக் களப்பிரர் யார் என்பதைப் பற்றிப் பல கருத்துகள் வெளியிடப் பட்டுள்ளன.[1] ஆனல், அண்மைக்காலங்களில் நடந்த ஆராய்ச்சி யின்படி களப்பிரர் கருநாடக நாட்டைச் சார்ந்தவர் என்ற கருத்து ஏற்றுக் கொள்ளத் தக்கதாயுள்ளது. இக் கருத்துக்குப் பெரிய புராணம், கல்லாடம் போன்ற தமிழ் இலக்கியச் சான்று களும் கன்னட நாட்டில் சிரவணபெலகோலா போன்ற பகுதி களில் கிடைத்துள்ள கல்வெட்டுச் சான்றுகளும் துணைசெய் கின்றன.

'கானக் கடிசூழ் வடுகக்கருநாடர் காவன்... பொழில்சூழ் மதுராபுரி காவல் கொண்டான்' என்று பெரிய புராணமும், 'படைநான் குடன்று பஞ்சவன் துரந்து மதுரை வவ்விய கரு நாடர் வேந்தன் அருகர்ச் சார்ந்து நின்றரன் பணியடைப்ப' என்று கல்லாடமும் கூறுவதனல் பாண்டிய நாட்டைக் கருநாடக வேந்தன் கவர்ந்தான் என்பது தெளிவாகின்றது. மேலும் சேர சோழ பாண்டியரை வென்று அவர்களது நாட்டை ஆண்டனர் என்ற செய்தி தமிழ் நூல்களின் மூலமும் பாண்டியர் செப்பேடுகள்

[1] இக் கருத்துக்களுக்குப் "பாண்டியர் செப்பேடுகள் பத்து" என்ற நூலுள் பிற்சேர்க்கை என்ற பகுதியைப் பார்க்கவும்.

மூலமும் நன்கு விளங்குகின்றது. யாப்பருங்கல விருத்தியுரையில் சேர சோழ அரசர்கள் களப்பிரரால் சிறைப்படுத்தப்பட்ட போது களப்பிரரைச் சிறப்பித்துப் பாடிய வெண்பாக்கள் காணப்படு கின்றன. மேலே விவரிக்கப்பட்ட குறிப்புகளிலிருந்து களப்பிர ருடைய படையெடுப்புத் தமிழக அரசியல் நிலையில் ஒரு பெரும் மாறுதலை உண்டாக்கியது என்பது தெரிகின்றது. இம் மாறுதல் அரசியலுடன் நிற்கவில்லை. சமயம், சமூகம் கலாசாரத் துறை களிலும் சில புரட்சிகரமான மாறுதல்களைத் தோற்றுவித்தது. களப்பிரர் வைதீக மதங்களுக்கு எதிராகவும், பௌத்தம், சமண மதங்களுக்கு ஆதரவாகவும் செயல்பட்டதன் காரணமாய்த் தொன்றுதொட்டு வந்த பல சமூக சமயக் கோட்பாடுகள் பாதிக் கப்பட்டன; வேதவேள்விகள் நிறுத்தப்பட்டன; அவற்றிற்காக அளிக்கப்பட்ட தானங்கள் பறிக்கப்பட்டன; கோவில்களில் பூஜை நிறுத்தப்பட்டது. சமண மதத்தின் செல்வாக்கு அதிகரித் தது. வஜ்ரநந்தி என்ற சமண முனிவர் மதுரையில் கி.பி. 470-ல் திராவிட சங்கத்தை நிறுவினார். களப்பிர அரசன் அச்சுத விக் கந்தன் என்பவன் பௌத்த மதத்திற்கும் சமண மதத்திற்கும் பேராதரவு கொடுத்தான் என்று 'அபிதம்மவதாரம்', 'வினயவ வினிச்சயம்' என்ற நூல்கள் மூலம் அறிகின்றோம்.

### களப்பிரர் வீழ்ச்சி

ஏறத்தாழ மூன்று நூற்றாண்டுகள் களப்பிரர் ஆட்சி நீடித்திருந்தது. 6ஆம் நூற்றாண்டின் கடைப் பகுதியில் தொண்டை நாட்டில் பல்லவ அரசன் சிம்மவிஷ்ணுவும், பாண்டிய நாட்டில் கடுங்கோனும் களப்பிரரை வென்று தங்களது ஆட்சியை நிலைநாட்டினர் என்று அவர்களது செப்பேடுகள் கூறுகின்றன.[2] பாண்டிய நாட்டில் இது கிட்டத்தட்ட கி.பி. 575-ல் நடந்தது என்று கருதப்படுகிறது.

களப்பிரரைப் பற்றியோ அவர்களது ஆட்சியைப் பற்றியோ முழுமையான விவரங்கள் கிடைக்காத காரணத்தால் தமிழக வர லாற்றில் இக்காலத்தை ஓர் இருண்ட காலமாகவே கருது கின்றனர்.

### 1. கடுங்கோன் (சுமார் கி.பி. 575 முதல் 600 வரை)

களப்பிரரது ஆட்சியிலிருந்து பாண்டிய நாட்டை மீட்ட பெருமை கடுங்கோன் என்னும் பாண்டியனுக்கு உரியது.

[2] பல்லவ அரசன் சிம்மவிஷ்ணு (கி.பி. 575-600) களப்பிரரை முறி யடித்த பெரு வீரனாக வேலூர் பாளையப் பட்டயம் கூறுகின்றது. சாளுக்கிய ரும் களப்பிரரை வென்றதாகக் கூறிக் கொள்கிறார்கள்.

சுமார் கி.பி. 575 முதல் 600 வரை அவன் அரசாண்டான் என்று கருதலாம். இதற்கு நேரிடைச் சான்று இல்லை. எனினும் பல்லவ சிம்மவிஷ்ணுவும் களப்பிரரை இதே காலத்தில் வென்றான் என்று பார்க்கும்போது இக் காலவரையறை பொருத்தமாக உள்ளது.[3] இவன் கடைச் சங்கப்பாண்டியரின் வழித்தோன்றலாக மறைந்து வாழ்ந்து வந்து, பிறகு பாண்டியர் ஆட்சிக்குப்புத்துயிர் கொடுத்தவன் ஆவான். இதனை வேள்விக்குடிச் செப்பேடுகள் பின்வரும் அழகிய செய்யுளால் கூறுகின்றது.

'களப்பிர னென்னும் கலியரைசன் கைக்கொண்டதனை
இறக்கியபின் படு கடன் முளைத்த பருதிபோற்
பாண்டியாதி ராசன் வெளிப்பட்டு...
...தரணி மங்கையைப்
பிறர்பா லுரிமை திறவிதி னீக்கித்
தன்பா லுரிமை நன்கனம் அமைத்த
மானம் போர்த்த தானை வேந்தன்
ஒடுங்கா மன்னர் ஒளிநக ரழித்த
கடுங்கோ னென்னுங் கதிர்வேற் றென்னன்'

தளவாய்புரச் செப்பேடுகளும் இச் செய்தியை

'களப்பாழரைக் களைகட்ட மற்றிரள் தோள்
மாக்கடுங் கோன் மானம்
போர்த்தருளிய கோன்' என்று கூறுகிறது.

பகைவரது ஒளி பொருந்திய நகரங்களை அழித்தவன், தொல்லை தந்தவரை ஒடுக்கியவன் என்று பொதுப்படையாக வேள்விக்குடிச் செப்பேடுகள் சுட்டுகின்றனவேயன்றிக் குறிப்பாக இம் மன்னன் நடத்திய போர் நிகழ்ச்சிகளைத் தெரிவிக்கவில்லை. களப்பாழரை வேரறுத்தவன், திரண்ட தோள்களையுடையவன், மறையோருக்கு திருமங்கலம் என்னும் கிராமத்தைச் சீர் செய்து தானம் அளித்தான் என்று தளவாய்புரச் செப்பேடு கூறுகிறது. கடுங்கோனைப் பற்றிய மற்ற விவரங்கள் கிடைக்கவில்லை.

## 2. மாறவர்மன் அவனி சூளாமணி (c. 600 - 620)

கடுங்கோனுக்குப் பிறகு அவனது மகன் அவனி சூளாமணி அரசாண்டான். 'மாறவர்மன்' என்ற பட்டமும் இவனுக்கு உண்டு. இவனை 'உண்மையின் தோழன்' என்றும் கடல் போன்ற சேனையைப் பெற்றிருந்தான் என்றும் செப்பேடுகள் குறிக்கின்றன.

[3] கடுங்கோன் ஆட்சி 590 முதல் 620 வரையென்று தோராயமாகப் பேராசிரியர் சாஸ்திரி கணித்துள்ளார். South Indian History p. 172.

'மாறவர்மன்', 'சடையவர்மன்' என்று பட்டப்பெயர்களைப் பாண்டிய மன்னர் மாறி மாறி வைத்துக் கொள்ளும் மரபு இவன் காலத்திலேயே காண்கிறோம்.

### 3. செழியன் சேந்தன் (கி.பி. 620 - 642)

மாறவர்மன் அவனி சூளாமணியின் மகன். இவனைச் 'செங்கோற் சேந்தன்' என்றும், 'வேந்தர் வேந்தன்' என்றும் வேள்விக்குடிச் சாசனம் புகழ்கிறது. 'வானவன்' என்றும் குறிக்கப் பெறுவதால் இவன் சேரரை வென்றிருக்கக்கூடும். அரிகேசரி மாறவர்மனின் தந்தையாகச் செப்பேடுகளில் குறிக்கப்படும் ஜயந்தனும் இவனே. அவ்வாறாயின் செழியன் என்பது ஜயந்தனுக்குரிய தமிழ்ப் பெயராகும். இவ்வரசனைப் பற்றிய செய்திகள் அதிகம் கிடைக்கவில்லை. அண்மையில் இவனது கல்வெட்டொன்று திருநெல்வேலி மாவட்டம் மலையடிக்குறிச்சிக் குகைக் கோவிலில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. அதில் அவன் 'மாறன் சேந்தன்' அல்லது மாறன் மகன் சேந்தன் என்று குறிக்கப்படுகிறான். அவனது 17ஆம் ஆண்டில் பொறிக்கப்பட்ட இக் கல்வெட்டு அக்கல் திருக்கோயில் செய்வித்ததைப் பற்றிக் குறிக்கிறது. அண்மையில் மதுரையில் வைகைக்கரையில் கண்டெடுக்கப்பட்ட மற்றொரு கல்வெட்டும் இச் சேந்தனுடையதாகும் என்று சிலர் கருதுவர். மற்றொரு கருத்துப்படி இக் கல்வெட்டு இவனது மகனான அரிகேசரி மாறவர்மனுடையதாகும். இரண்டு கருத்துகளுக்கும் சில தடைகள் உண்டு. ஆனால், கிடைத்துள்ள சான்றுகளைக் கொண்டு பார்க்கும் போது வைகைக் கல்வெட்டு அரிகேசரி மாறவர்மனுடையதாகக் கொள்வது பொருத்தமாக உள்ளது. இதைப் பற்றி மேலே ஆராய்வோம்.

அரசனது பெயரும் அவனது ஆட்சியாண்டும் அக் கல்வெட்டில் பின்வருமாறு குறிக்கப்பட்டுள்ளன. பாண்டிய குல மணி பரதீபனாய்...கலிகடந்து செங்கோனடாவி நின்ற கோச் சேந்தன் மற்றைம்பதாவது ராஜ்ய சம்வத்ஸரஞ் செல்லா நிற்க வைகை சொன் மதகு படுத்தரி கேசரியானெனப் பியரிட்டு...' 'மற்றைம்பதாவது' என்று கொண்டால் இது சேந்தனின் ஐம்பதாவது ஆண்டாகக் கொள்ளவேண்டும்.[4] ஆனால், இதை கோச் சேந்தன் 'மாறன் ஐம்பதாவது' என்று படித்தால் சேந்தன் மகன் மாறனின் ஐம்பதாவது ஆண்டாகக் கொள்ள இடமுண்டு.[5] மேலும், அவன் கட்டிய மதகிற்கு 'அரிகேசரியான்' என்று

[4] Krishnan, K. G., Ep. Ind. XXXVIII - Part I
[5] Nagaswamy, R. கல்வெட்டு எண். 9.

பெயரிட்டதைக் கல்வெட்டுக் குறிக்கின்றது. சேந்தனது கல்வெட்டாகக் கொண்டால், அவன் தனது மகன் பெயரை வைத்ததாகக் கொள்ளவேண்டும். ஆனால் அரிகேசரி மாறவர்ம னுடையதாகக் கொண்டால், அவன் கட்டிய மதகிற்கு அவனது பெயரிலேயே 'அரிகேசரியான்' என்று பெயரிட்டான் என்று கொள்ளலாம். இரண்டாவது கருத்தே அக் காலமரபிற்குப் பொருத்தமுடையதாக உள்ளது என்பதனால் வைகைக்கல்வெட்டு அரிகேசரி மாறவர்மனுடையதாக நாம் கொண்டு மேலே ஆராய் வோம்.[6]

## 4. மாறவர்மன் அரிகேசரி (கி.பி. 642 - 700)

வேள்விக்குடிச் சாசனத்தில் நான்காவதாகவும் சேந்தனின் மகனாகவும் அரிகேசரி மாறவர்மன் என்ற அரசன் சிறப்பாகப் பேசப்படுகிறான். சின்னமனூர்ச் சிறிய செப்பேடும் ஜயந்தனின் (அதாவது சேந்தனின்) மகனாக இவனைக் குறிக்கின்றது. இவன் கண்ட பல வெற்றிகளை வேள்விக்குடிச் சாசனம் வரிசைப்படுத்திக் கூறுகின்றது. 'பாழி வாயமர் கடந்து' என்றும் 'நெல்வேலிச் செருவென்று என்றும்' என்ற தொடர்களில் பாழிப் போரும் நெல்வேலிப் போரும் குறிக்கப்பட்டுள்ளன. பாழிப்போரைப் பற்றிப் பாண்டிக் கோவையிலும் பாடல்கள் உள்ளன. பாழி என்னும் ஊர் எங்குள்ளது என்பது தெளிவாகவில்லை. நெல்வேலி வெற்றி இவனுக்குச் சிறப்பாகக் கொள்ளப்பட்டது. நெல்வேலி எங்குள்ளது? அங்கு இவன் எவரைத் தோற்கடித்தான் என்பதும் நிச்சயமாகத் தெரியவில்லை. நெல்வேலியில் வில்லவனைத் தோற் கடித்ததாகச் சின்னமனூர்ச் சாசனம் 'வில்லவனை நெல்வேலியின் புறங்கண்ட பராங்குசன்' என்று கூறுகிறது. இவ்வெற்றி இவனுக்குப் பெரும் புகழைத் தேடித் தந்தது. இவனை 'நெல்வேலி வென்ற நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்' என்று சுந்தரமூர்த்திநாயனார் புகழ்ந்து பாடியுள்ளார். இவன் தோற் கடித்த 'வில்லவன்' யார்? 'வில்லவன்' என்பது சேரரைக்

[6] அரிகேசரி மாறவர்மனுடையதாகக் கொள்வதில் சில தடைகளில் லாமல் இல்லை. 'மங்கலபுரம் நகராக்கி'' என்பது ஒரு பெரும் சாதனையாக இக்கல்வெட்டில் குறிக்கப்படுகின்றது. இது நெடுமாறனுக்குச் செப்பேட்டிலோ இலக்கியத்திலோ சாதனையாகக் குறிப்பிடப்படவில்லை என்பதும் நெடு மாறனுக்குப் பெருமை அளித்த நெல்வேலி வென்றது போன்ற சாதனைகள் இக் கல்வெட்டிலும் குறிக்கப்படாததும் இது நெடுமாறனுடையது தானா என்ற ஐயப்பாட்டை உண்டாக்குகிறது. மேலும், அரிகேசரி மாறவர்மனுடையதாக இக் கல்வெட்டைக் கொண்டாலும் அதே பெயருடைய இரண்டாம் அரிகேசரி யையும் இது குறிப்பதாக ஓர் ஐயம் ஏற்படுகிறது. ஏனெனில், அவனது தந்தையும் மங்களபுரம்வரைச் சென்று மாரதரை அழித்தான். அவ் வெற்றியை மனத்தில் கொண்டு 'மங்கலபுரம்' என்னும் வெற்றி நகரை இவன் பாண்டிய நாட்டில் அமைத்தான் என்று கொள்வது பொருத்தமாய் உள்ளது. இவை மேலும் ஆராய்ச்சிக்குரியவை.

குறிக்கலாம். ஆனால், சேரனுடன் போரிட்டு வெற்றி பெற்றது வேறோர் இடத்தில் தனியாகக் குறிப்பிடுவதால் இங்கே குறிப் பிடப்படும் வெற்றி அவர்களிடம் பெற்ற வெற்றியாக இருக்க முடியாது. இதை வல்லவன் அல்லது வல்லவர் என்பதன் திரிபாகக் கொண்டு சாளுக்கியரைக் குறிப்பதாகச் சில அறிஞர்கள் கருதுவது பொருத்தமாக உள்ளது. இக் கருத்தின்படி சாளுக்கிய விக்கிரமாதித்தியன் பல்லவர்களை வென்று உறையூரில் தங்கிய பிறகு பாண்டிய நாட்டையும் தாக்க முற்பட்டான் என்றும், அப் போது நெடுமாறன் அவர்களுடன் போரிட்டுப் புதுக்கோட்டைப் பகுதியிலுள்ள நெல்வேலி என்னும் ஊரில் பெருவெற்றி அடைந் தான் என்றும் கருதப்படுகின்றது. பெரியபுராணமும் நெல்வேலி யில் நெடுமாறனொடு சண்டையிட்டவர் 'சேய்புலத்தெவ்வர்' அதாவது நெடுந்தூரத்திலிருந்து வந்த பகைவர், 'வடபுலத்து மன்னர்' என்றும் குறிப்பிடுவதால் இவர்கள் சாளுக்கியராகத்தாம் இருந்திருக்கவேண்டும் என்று கருதப்படுகிறது.[7]

நெடுமாறனிடம் தோற்ற சாளுக்கியன் பின்னர் பல்லவ அரசன் பரமேச்சுரவர்மனைப் பெருவள நல்லூரில் தோல்வியுறச் செய்தான். சாளுக்கிய விக்கிரமாதித்தனின் தமிழகப் படை யெடுப்பு கி.பி. 674-75-ல் நடந்ததாகக் கணிக்கப்படுகின்றது. 'ரணரசிகன்' என்னும் விக்கிரமாதித்தியனை வென்றமையால் பல்லவ அரசன் பரமேஸ்வரனும் அவனுக்கு உதவி செய்த மகன் இராசசிம்மனும் ரணஜயன் என்ற விருதை ஏற்றனர். நெடு மாறனின் மகனான கோச்சடையனும் 'ரணதீரன்' என்ற விருதை ஏற்றான். நெல்வேலிப் போரில் தனது தந்தைக்கு உதவி புரிந்த தைக் கொண்டே அவனும் 'ரணதீரன்' என்ற விருதை ஏற்றான் போலும். 'வில்லவனை நெல்வேலியிலும் விரிபொழிற் சங்கர மங்கைப் பல்லவனை உடம்புறங்கண்ட பராங்குசன்......' என்று சின்னமனூர்ப் பெரிய சாசனம் குறிக்கின்றது. இதனால் பல்லவர் களைச் சங்கர மங்கைப் போரில் தோற்கடித்தான் என்று தெரி கின்றது. அடுத்தபடியாகப் 'பரவரைப் பாழ்படுத்தி' 'குறு நாட்டவரை குலங் கெடுத்தும்' என வேள்விக்குடிச் சாசனத்தில் குறிப்பிடப்படுகின்றன. பரவர் தென்பாண்டிய நாட்டுக் கட லோரப் பகுதியில் வாழ்ந்த பரதவரே ஆவர். தென் பரதவர் என்றே இவர்களைச் சங்க இலக்கியங்கள் பகரும். அக் காலத்தில் குறுநாடு என்று வழங்கப்பட்டது எது என்பது விளங்கவில்லை.

அடுத்தபடியாக இவன் செந்நிலத்துப் போரில் பகைவர்களைப் பெரிய யானைப்படையைச் செலுத்தி வென்றான் என்று கூறப்படு

[7] மா. இராசமாணிக்கனார், பல்லவர் வரலாறு. ப. 1412.

கிறது (கைந்நலத்த களிறு உந்திச் செந்நிலத்துச் செருவென்றும்). பிற்காலத்திலும்கூட, பராந்தக வீரநாராயண பாண்டியனும், செந்நிலத்தில் ஒரு வெற்றி கண்டான் என்று நாம் அறிகிறோம். அரிகேசரியின் செந்நில வெற்றியைப் பற்றிய பாடல்களைப் பாண்டிக் கோவையிலும் காணலாம். இவற்றிலிருந்து செந்நிலம் ஒரு முக்கியமான பகுதியாக இருந்திருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது. ஆனால் இது எங்குள்ளது, மேலே சொல்லப்பட்ட 'பகைவர்' யார் என்பதைப் பற்றிய விவரங்கள் தெரியவில்லை.

வலிமை வாய்ந்த கேரளனைப் பல முறையும் தோற்கடித்தான் என்றும் அவனுடைய முக்கிய நகரமான புலியூரை வென்று கைப்பற்றினான் என்றும் சாசனம் கூறுகிறது. 'மாமதிற் புலியூர்' என்று வருணிக்கப்படும் இவ்வூர் கேரள நாட்டின் முக்கியத் துறை முகப்பட்டினமாக இருந்திருக்க வேண்டும். இது அநேகமாக ஆய்வேளிர் ஆண்ட விழிஞமாகக்கூட இருக்கக்கூடும். பிறகு உறையூருக்குச் சென்று அக் கேரளனையும், அவனுக்குத் துணை புரிந்த சோழனையும் வென்றான் என்று தெரிகின்றது. (மாமதிற் புலியூர் பகல்நாழிகை பிறவாமைக் கோழியுள் வென்று கொண் டும்). மாறவர்மன் அரிகேசரி ஆட்சியில்தான் பாண்டியரின் ஆதிக்கம் பாண்டிய நாட்டின் எல்லையையும் கடந்து பல திக்கு களிலும் பரவியது. சேரரும் சோழரும் பரவர் போன்ற குறுநிலத் தலைவர்களும் இவனது ஆட்சிக்குட்பட்டிருந்தனர். இவன் வேந்தர் வேந்தனாய்ச் சிறப்புற்று வாழ்ந்தான். இதன் காரண மாகவே இக் காலத்தைப் 'பாண்டியரின் முதல் பேரரசு காலம்' (First Pandyan Empire) என்று பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி யார் குறித்தார்.

இவ்வேந்தன் வைதிக மதங்களுக்குப் பேராதரவு அளித்த பக்திசீலன், இரணியகர்ப்பம், துலாபாரம் போன்ற மகா தானங்களைச் செய்தான் என்றும் 'அந்தணர்களுக்கும் அசக் தருக்கும் வந்தணைக என்று ஈத்தளித்தான்'' என்றும் வேள்விக் குடிச் சாசனம் பகர்கிறது. இவனே சைவ சமய வரலாற்றில் கூன்பாண்டியன் என்றும் நின்றசீர் நெடுமாறன் என்றும் சிறப் பிக்கப்படுகிறான். இவன் முதலில் சமணனாக இருந்து பின் திருஞான சம்பந்தரின் அறிவுரையால் சைவனானான் என்று பெரியபுராணம் கூறும். நெடுமாறனும், அவன் மனைவி மங்கையர்க்கரசியும், அமைச்சரான குலச்சிறையாரும் 63 நாயன் மார்கள் வரிசையில் இடம் பெற்றுள்ளனர். வைதிக பக்தி நெறி யைப் பரப்பும் இயக்கத்தில் இவர்கள் தலையாய பங்கேற்றனர்.

நெடுமாறன் திருஞான சம்பந்தரின் சமகாலத்தவனுனதால் 7ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவனுவான். திருநாவுக்கரசரும் மகேந்திரவர்ம பல்லவனும் (கி.பி. 600) சமகாலத்தவர். மகேந்திரனுக்குப் பின் வந்த நரசிம்மவர்மன் மாமல்லனின் சேனைத் தலைவரான சிறுத்தொண்டரும் ஞானசம்பந்தரும் சமகாலத்தவராதலால், நின்றசீர் நெடுமாறனும் ஏறக்குறைய அதேகாலத்தில் வாழ்ந்தவன் எனலாம். சிறுத்தொண்டர் வாதாபியைக் கைப்பற்றியது கி.பி. 642-ல். பல்லவர் நரசிம்மவர்மன் காலத்தில் காஞ்சிக்கு விஜயம் செய்த சீனப்பயணி யுவான் சுவாங் பாண்டிய அரசன் இறந்த செய்தியையும் அங்குப் பெரும் பஞ்சம் ஏற்பட்டிருந்ததையும் தான் கேள்விப்பட்டதாகக் குறித்துள்ளான். இறந்த மன்னன் மாறவர்மனின் தந்தை அதாவது செழியன் சேந்தன் என்று கருத இடமுண்டு. மாறவர்மன் சுமார் கி.பி. 642ல் பட்டத்திற்கு வந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. வைகைக் கல்வெட்டின்படி ஐம்பது வருடங்களுக்குமேல் இவன் அரசாண்டதால் இவனது ஆட்சி சுமார் 642 முதல் 700 வரை நடைபெற்றதாகக் கொள்ளலாம்.

### 5. கோச்சடையன் ரணதீரன் (c. 700 - 730)

இவன் அரிகேசரி மாறவர்மனின் மகனுவான். இவனைப் பற்றி வேள்விக்குடிச் செப்பேட்டில் பல செய்திகள் கிடைக்கின்றன. இவன் 'மன்னர் மன்னன்', 'கொங்கர் கோமான்', வானவன் செம்பியன்', 'மதுரகரு நாடகன்' என்றெல்லாம், புகழப்படுகிறுன். ஏற்கெனவே இவனது தந்தை சேரர், சோழர், குறு நாட்டார் போன்றுேரை அடக்கிப் பாண்டிய ஆதிக்கத்தை அங்கெல்லாம் பரப்பியதைப் பார்த்தோம். அதன் விளைவாகவே இவ்வரசன் வானவன், செம்பியன் போன்ற பெயர்களால் புகழப்படுகிறுன் போலும். கொங்கர் கோமான் என்பதால் கொங்கு நாட்டையும் கைப்பற்றினுன் என்று தெரிகின்றது. 'கருநாடகன்' என்பதால் கொங்கு நாட்டையும் தாண்டி கருநாடகப் பகுதிகளிலும் இவனது படைஊடுருவியது எனலாம். இவன் மங்கலபுரத்தில் மாரதரை வென்றதையும் வேள்விக்குடிச் சாசனம் சுட்டுகிறது. ('மங்கலபுரமெனு மாநகருண் மாரதரை யெறிந்தழித்த') இதனுல்பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி அவர்கள் மங்கல்புரம் என்பது கருநாடகத்திலுள்ள மங்கலபுரமேயாகும் (மங்களுர்) என்றும், இங்குத்தான் மாரதரை (அதாவது சாளுக்கியரை) இவன் முறியடித்தான் என்றும் கூறுவார். ஆனுல், அறிஞர் தூப்ரே இதைச்சாளுக்கிய அரசன் முதலாம் விக்கிரமாதித்தனின் தமிழகப் படையெடுப்புடன் தொடர்புபடுத்தி அவன் உறையூர் அதாவது திருச்சிப் பகுதிவரை முன்னேறியபோது அவனை அங்கே சந்தித்

துத் தோற்கடித்தான் என்கிருர்.[8] அறிஞர் சதாசிவப் பண்டாரத் தாரும் துப்ராயின் கருத்தை ஏற்று மங்கலபுரம் என்பது திருச்சி மாவட்டத்திலுள்ள கொள்ளிட[illegible]கரையில் அமைந்திருக் கும் மங்கலமாக இருத்த[illegible]ண்டும் என்கிருர். ஆனல் 'மங்கலபுர மாநகர்' என்ற[illegible]ப்பேட்டின் வாசகத்திற்கு இது பொருந்துவதாக இல்லை. [illegible]ண்டிய நாட்டிலேயே நிறுவப்பட்ட மங்கலபுரமாக இருத்தல்[illegible]ண்டும் என்பது மற்ருெரு கருத்து இக் கருத்தின் [illegible] பார்த்தால் மேலைச் சாளுக்கியர் பாண்டி நாட்டிற்குள்ளே [illegible]நுழைந்திருப்பர் என்னும் நிலை ஏற்படுகிறது இதற்கு வேறு து[illegible]ன்றுகள் இல்லை. இவ்வாறு நடந்திரு தால் சாளுக்கியர்கள் [illegible]தைப் பெருமையாகச் சொல்லிக் கொ வார்கள். ஆனல், சாளுக்கியச் சான்றுகள் ஏதும் இதைக் குறி தில. ஆகையால், பாண்டியர் படை மங்களூர்வரை சென்ற என்ற பேராசிரியர் சாஸ்திரியின் கருத்தே பொருத்தமாயுள்ளது அக்காலத்தில் அலுபர்கள் (Alupas) என்பவர்கள் அப் பகுதியி ஆண்டுவந்தனர் அலுபர்களைப் பாண்டிய வம்சத்தோடு தொடர் புடையவர்கள. அவர்களது சாசனங்கள் பகர்கின்றன 'கருநாடகன்' [illegible]னதீரன்' என்ற விருதுகள் இவன் சாளுக்கிய ரைத் தோற்[illegible]த்ததை ஐயமின்றி உணர்த்துகின்றன.

இம் ம[illegible]னன் பாண்டி நாட்டின் தென்கோடிப் பகுதியி ஆண்டுவந்த ஆய்வேளை மருதூரில் தோற்கடித்தான் என்று வேள்விக்குடிச் சாசனம் தெரிவிக்கின்றது. மருதூர் என்பது திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள திருப்புடை மருதூராக இருத்தல் வேண்டும் என்று கருதப்படுகின்றது. மேலும் செங் கோடு, புதன்கோடு என்றவிடங்களில் நடைபெற்ற போர் களிலும் இம் மன்னன் வெற்றிவாகை சூடினன். இதில் கூறப் பட்டுள்ள 'செங்கோடு', 'புதன்கோடு' யாவை என்று சரியாகத் தெரியவில்லை. ஆனல், இவை சேரநாட்டுப் பகுதிகளாகத் தாம் தோன்றுகின்றன.

இம் மன்னன் காலத்தில்தான் சுந்தரமூர்த்தி நாயனுரும் சேரமான் பெருமானும் மதுரைக்கு வந்தனர். இம் மன்னனும், அவனுடைய மகளை மணந்து மதுரையில் தங்கியிருந்த சோழ மன்னனும் சைவசமயக் குரவர்களை உபசரித்தனர் என்பது சைவ சமய வரலாற்றுச் செய்தியாகும். வேள்விக்குடிச் சாசனச் செய்தி இதனுடன் நன்கு பொருந்துகிறது. அது இம் மன்னனைச் செம்பியன், சோழன் என்றே அழைப்பதனல் பாண்டிய நாட்டு எல்லை சோழ நாட்டையும் உட்கொண்டது என்பது விளங்கு

[8] Dubreuil J. The Pallavas, p. 68.

கிறது. நெடுமாறன் சோழ அரசியை மணந்ததுபோல் அவனது மகன் ரணதீரன் தனது புதல்வியைச் சோழ இளவரசனுக்கு மணம் செய்வித்தது வரலாற்றுப் பின்னணியுடன் பொருந்துகிறது.

### 6. அரிகேசரி பராங்குச மாறவர்மர் அல்லது முதலாம் இராசசிம்மன் (730-768)

இவன் கோச்சடையன் ரணதீரனின் மகனாவான். இவனது இயற்பெயர் தமிழில் அரிகேசரி என்றும் வடமொழியில் இராசசிம்மன் என்றும் வழங்கிற்று. இவன் தந்தையைப் போன்று இவனும் பல வெற்றிகளைக் கண்ட பெருவீரனாவான். அவற்றுள் மிக முக்கியமானது பல்லவரிடம் கண்ட வெற்றிகளேயாகும். ஸ்ரீவரமங்கலச் செப்பேடு இவனைப் 'பல்லவபஞ்சனன்' அல்லது பல்லவர்களை அழித்தவன் என்ற சிறப்புப் பெயரால் அழைக்கின்றது. வேள்விக்குடிச் செப்பேடும் இதை உறுதிப்படுத்துகிறது. பல்லவ மன்னனைப் போர்க்களத்தில் புறங்காட்டி ஓடச் செய்தான் என்று கூறுகிறது.[9] நந்திவர்மப் பல்லவமல்லன், சாளுக்கிய அரசர்களான இரண்டாம் கீர்த்திவர்மன், விக்கிரமாதித்தியன், கங்க அரசன் ஸ்ரீபுருஷன் இவர்கள் சமகாலத்தவர்களாதலால் இவனது ஆட்சிக் காலத்தை நிர்ணயிப்பது கடினமன்று. இவனது ஆட்சி சுமார் கி.பி. 730 முதல் கி.பி. 768 வரை நிலவியது என்று கருதப்படுகிறது. கி.பி.768-ல் இவனது மகன் நெடுஞ்சடையன் பராந்தகன் பட்டத்திற்கு வந்தான் என்பது அவனது திருப்பரங்குன்றக் கல்வெட்டிலிருந்து நிச்சயமாகத் தெரியவருகின்றது. நந்திவர்மன் நேர்முறையில் அரசனாகவில்லை. நாட்டுமக்களின் ஒரு பகுதியினரால் சித்திரமாயனுக்கு உதவியாக நந்திவர்மனுடன் போரிட்டதாக அறிஞர் துப்ராய் கருதுவர். அவர் கருத்துப்படி அரிகேசரி பராங்குசன் அல்லது இராசசிம்மன் தாய்வழியில் பல்லவ அரசன் இராசசிம்மன் பெயரனாவான்.[10]

பிறகு இவன் மழகொங்கு நாட்டைக் கைப்பற்றினான். கொங்கு நாட்டிற்கு படையெடுத்துச் சென்றபோது திருப்பாண்டிக் கொடுமுடி என்னும் திருப்பதியில் சிவபெருமானை வணங்கினான். இவ்வரசன் கொங்கு நாட்டையும் கடந்து கங்கர் நாட்டில் ஊடுருவியபோது, கங்க அரசன் தன் மகள் பூசுந்தரியை இவனுக்கு மணம் செய்து கொடுக்க விரும்பினான். அப்போது பூர்வ

[9] வேள்விக்குடிச் சாசனம், வடமொழிப் பகுதி.

[10] Dubruil, J. Pallavas - p. 68.

ராசர்களும் சாளுக்கியரும் ஒன்று சேர்ந்து இவனை எதிர்த்தனர், வெண்பை என்னுமிடத்தில் நடந்த பெரும் போரில் இவன் பெரிய வெற்றி பெற்றான். இப் போரில் இவனது முதன் மந்திரியான மாறங்காரி பெரும் பங்கேற்று, கங்க அரசன் மகளான பூசுந்தரி யையும் இவனுக்கு மணம் செய்து வைத்தான் என்று வேள்விக் குடிச் சாசனம் கூறுகிறது. இப்படி இவன் கங்க அரசனுடன் உறவு கொண்டதை வேள்விக்குடிச் செப்பேடு 'கங்கராசனோடு சம்பந்தஞ் செய்து' என்று குறிக்கின்றது. இவன் நெடுவயல், குறுமடை, மண்ணிக்குறிச்சி திருமங்கை, பூவாளூர், கொடும் பாளூர் முதலான இடங்களில் பெற்ற வெற்றிகளை வரிசைப்படுத் திக் கூறுகின்றது. இங்கெல்லாம் தோல்வியுற்றவர்கள் யார் யார் என்பது தெரியவில்லை. பிறகு குழம்பூர் என்னுமிடத்தில் பல் லவனைத் தோற்கடித்தான். இது எங்குள்ளது என்பதும் தெரிய வில்லை. ஆனால், இத் தோல்விகளையொட்டியே நந்திவர்மபல்லவ மல்லன் நத்திக்கிராமத்தில் முற்றுகையிடப்பட்டுச் சிறைபடுத்தப் பட்டான் என்று ஊகிக்க இடமுண்டு.

கும்பகோணத்திற்கு அருகிலுள்ள நந்திக்கிராமத்தில் எதிரி களால் சூழப்பட்ட பல்லவ அரசன் நந்திவர்மனை விடுவிக்க, அவனது படைத்தலைவன் உதயசந்திரன் தீவிரமான போரை நிகழ்த்தி நந்திவர்மனை விடுவித்தான் என்ற செய்தியை உதயேந் திரச் செப்பேடு கூறுகின்றது. அச்சாசனம் சங்கரமங்கையிலும், நெல்வேலியிலும் பல்லவர்களே வெற்றி கண்டதாகக் கூறுகிறது.[12] திருமங்கை ஆழ்வாரும் நென்மேலி, மண்ணை முதலிய இடங்களில் நிகழ்ந்த போர்களில் பாண்டியனைப் பல்லவன் தோற்கடித்தான் என்று குறித்துள்ளார்.[13] ஆகையால், இவ்விருவிதக் கூற்றுகளி லிருந்தும் சில இடங்களில் பல்லவரும், சில இடங்களிலிருந்து பாண்டியரும் வெற்றி கண்டனர் என்று தெரிகிறது.

வைணவப் பெரியாரான பெரியாழ்வார், பராங்குச மாற வர்மன் காலத்திலும் அவனுடைய மகன் நெடுஞ்சடையப் பராந் தகன் காலத்திலும் வசித்தவர் என்று ஆராய்ச்சிப் பேரறிஞர் திரு. மு. இராகவய்யங்கார் சுட்டிக் காட்டியுள்ளார்.[13]அ பெரியாழ்

[11] Sastri, K. A N, History of South India, p. 156.

[12] S. I. I. Vol. II, pp 361; ARE 1907 para-II

[12] பரமேஸ்வர் விண்ணகரப் பதிகம்.

[13] அ மு. இராகவ அய்யங்கார் : ஆழ்வார்கள் காலநிலை. பெரியாழ்வார் தொடர்ந்து ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் காலத்திலும் வாழ்ந்திருக்கக்கூடும் என்பது எனது கருத்து. அவர்து திருமாலிருஞ்சோலை பதிகத்தில் கூறும் 'கோ நெடு மாறன்' அவனே என்று தோன்றுகிறது. ஸ்ரீவல்லபனுக்கு 'நெடுமாறன்' என்ற விருது உண்டு என்பதைத் திரு ஆர் நாகசாமி காட்டியுள்ளார். (கல் வெட்டு எண் 9).

வார், ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் காலத்திலும் சைவ நாயன்மார் களும், வைணவ ஆழ்வார்களும் ஆன்மிக ஆற்றலைப் பரப்பி வந்த அக்காலத்தில் அரசர்கள் இரு சமயங்களையும் வித்தியாசமின்றி ஆதரித்தனர். வைணவ நூல்களின்படி பெரியாழ்வார் பாண்டியன் அவைக் களத்தில் பொற்கிழி அறுத்து வைணவத்தின் பெருமையை நிலைநாட்டினார் என்றும், பாண்டிய அரசனால் கொண்டாடப்பெற்றார் என்றும் கூறப்படுகின்றது. பாண்டியன் கொண்டாடப்பட்டர் பிரான் வந்தானென்று' என்ற தனியன் மூலம் பெரியாழ்வாரை வைணவர்கள் சிறப்பித்துக் கூறுவர். பெரியாழ்வார் தம் காலத்துப் பாண்டிய அரசன் மாறன் திருமாலிருஞ்சோலையின் மீது கொண்டுள்ள ஈடுபாட்டினைப் பின்வரும் பாடலில் குறிக்கின்றார்.

> 'கொன்னவில் கூர்வேற்
> கோன் நெடுமாறன் தென் கூடற்
> தென்னன் கொண்டாடும் கோன்
> தென் திருமாலிருஞ்சோலையே''.

மற்றொரு வைணவப் பெரியாரான நம்மாழ்வாரும் மாறவர்மன் பராங்குசன் காலத்தில் வாழ்ந்தார் எனக் கருதுவதற்கு இடமுண்டு. இவனுக்கும் 'மாறன்' 'பராங்குசன்' என்ற பெயர்களுமுண்டு. இவர் வரகுணமங்கையையும், ஸ்ரீவரமங்கலத்தையும் பாடியுள்ளார் என்பதால் இவர் மாறவர்மன் பராங்குசனின் மகனான வரகுணன் காலத்திலும் தொடர்ந்து வாழ்ந்தார் என்று தெரிகின்றது. இவரது சீடரான மதுரகவி ஆழ்வாரும் மேற்சொன்ன இரு பாண்டிய அரசர்களிடமும் உத்தர மந்திரியாக இருந்தார்.[14] மதுரகவி என்ற சிறப்புப் பெயருள்ள மாறங்காரி என்னும் உத்தரமந்திரி நெடுஞ்சடையப் பராந்தகன் ஆட்சித் தொடக்கத்தில் அதாவது கி.பி. 770-ல் ஆனைமலையில் திருமாலுக்குக் கோயில் எடுப்பித்து அது முடிவதற்கு முன் இறந்துவிட்டார் என்று அவ்வூர்க் கல்வெட்டு தெரிவிக்கின்றது. இதற்கு வேள்விக்குடிச் சாசனமும் நல்ல சான்று பகர்கின்றது. இச் சாசனத்துக்கு ஆணத்தி தந்தவனே கரவந்த புரத்து பேரரையனாகிய மாறங்காரி ஆகும். கங்கராஜனுடைய பெண்ணை மாறவர்மனுக்கு மணம் செய்வித்துக் கொடுக்கும்போது அதை எதிர்த்த பூர்வ

[14] அமைச்சர்களாக இருந்தவர்கள் சமயத்தொண்டு செய்தனர் என்பதற்கு மாணிக்கவாசகரின் வாழ்க்கை மற்றோர் எடுத்துக்காட்டாகும். இவர் இரண்டாம் வரகுணனின் முதலமைச்சராகப் பணிபுரிந்து சமயத் தொண்டு செய்தவர். சிறுத்தொண்ட நாயனார் பல்லவ அரசன் நரசிம்மவர்மனின் படைத் தலைவராகப் பணியாற்றியவர். மதுரகவி ஆழ்வார் நம்மாழ்வாரைப் பற்றிப் பாடிய 10 பாசுரங்கள் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் சேர்க்கப்பட்டுள்ளன.

ராசரையும் வல்லபனையும் (சாளுக்கியரையும்) வெண்பைப் போரில் முறியடித்து வெற்றிகண்டான் என்று மாறங்காரி புகழப் படுகிறான். இதிலிருந்து மாறங்காரியான மதுரகவி மாறவர்மன் பராங்குசனுக்கு முதலமைச்சராக நெருங்கிப் பணிபுரிந்தார் என்று விளங்கும். ஆகையால் பெரியாழ்வார், அவரது மகள் ஆண்டாள், நம்மாழ்வார் அவரது சீடர் மதுரகவி இந்நால்வரும் அரிகேசரி மாறவர்மன் காலத்திலும், நெடுஞ்சடையன் பராந்தகன் காலத்திலும் வாழ்ந்தவர்கள் என்று புலனாகிறது.[15] அதாவது கி.பி. 8ஆம் நூற்றாண்டின்நடுப்பகுதியிலும் பிற்பகுதியிலும் வாழ்ந்தவர்கள் என்று சொல்லலாம். மாறவர்மன், அவனது மகன் நெடுஞ்சடையப் பராந்தகன், அவனது மகன் ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன் என்ற மூன்று பாண்டிய அரசர்களும் வைணவர்களானார்கள். ஆயினும் சைவ சமயத்தையும் பெருமதிப்புடன் போற்றினர் என்பதை மேலே காணலாம். இவ்வரசனும் எண்ணிறந்த கோசகஸ்ரம், துலாபாரம் போன்ற மகா தானங்களைச் செய்தான். 'கூடல் வஞ்சிக் கோழி என்னும் மாடமதில் புதுக்கியும்' என்னும் வாசகத்தால் இம் மூன்று ஊர்களையும் அதாவது மதுரை, வஞ்சி அல்லது கரூர், கோழி அல்லது உறையூர் இவற்றை அழகுறச் செய்தான் என்று தெரிகின்றது. இவனது ஆதிக்கம் சோழநாடு, கொங்குநாடு இவற்றிற்குப் பரவியிருந்ததையே மேலே சொன்ன சொற்றொடர் உணர்த்துகிறது.

## 7. நெடுஞ்சடையன் பராந்தகன் அல்லது முதலாம் வரகுணன் *(கி.பி. 768 - 815)*

மாறவர்மன் இராசசிம்மனுக்கும், கங்கநாட்டு இளவரசியான பூசுந்தரிக்கும் பிறந்த மகனே நெடுஞ்சடையன் பராந்தகன். ஜடிலன் என்ற வடமொழிப் பெயரும் இவனுக்கு உண்டு. சின்னமனூர்ப் பெரிய சாசனத்தில் இவனே வரகுணன் என்று குறிக்கப் படுகிறான். பாண்டியர் வரலாற்றில் இவனே முதலாம் வரகுணன் எனலாம். இவ் வேந்தன் தனது 3ஆம் ஆட்சியாண்டில் வேள்விக்குடிச் சாசனத்தையும், 17ஆம் ஆட்சியாண்டில் ஸ்ரீவரமங்கலச் சாசனத்தையும் வழங்கினான். இவ்விரு சாசனங்களும் இவ் வேந்தனைப் பற்றியும், இவனது முன்னோர்களைப் பற்றியும் பல அரிய செய்திகளைத் தந்துள்ளன என்பதை மேலே பார்த்தோம். திருப்பரன்குன்றத்திலுள்ள இவனது 6ஆம் ஆண்டுக் கல்வெட்டு கலி ஆண்டு 3874 (=கி.பி. 773) என்று குறிக்கப்படுவதால் அவன்

[15] பெரியாழ்வார், நம்மாழ்வார், திருமங்கை ஆழ்வார், இம்மூவரும் சமகாலத்தவர் என்ற வைணவ மரபிற்கும் இது பொருந்துகிறது. பராங்குச மாறவர்மனின் எதிரியான நந்திவர்மனின் (731-796) காலத்தில் திருமங்கை ஆழ்வார் வாழ்ந்தார் என்று ஏற்கெனவே பார்த்தோம்

கி.பி. 768-ல் ஆட்சிக்கு வந்திருக்க வேண்டும் என்று கணிக்கலாம்.[16]

இவனது முன்னோனான பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி தன் காலத்தில் கொற்கைக் கிழான் நற்கொற்றனுக்கு வழங்கியிருந்த வேள்விக்குடி என்னும் ஊரைக் களப்பிரர் கவர்ந்து கொள்ளவே, அந்தக் கொற்கை கிழான் வம்சத்தில் வந்த நற்சிங்கனுக்கு மீண்டும் அதே ஊரை நெடுஞ்சடையன் வழங்கினான். இதை உணர்த்துவதுதான் வேள்விக்குடி என்னும் ஊரை ஸ்ரீவரமங்கலச் செப்பேடு கூறும்.

இனி இவ்வரசனைப் பற்றிய செய்திகளை நோக்குவோம். இவன் தனது ஆட்சித் தொடக்கத்தில் பல்லவர்களை காவிரிக்கரையிலுள்ள பெண்ணாகடத்தில் தோற்கடித்த செய்தியே முதன்மையாகக் கூறப்படுகின்றது. இது அவனது 3ஆம் ஆட்சி ஆண்டுக்குள், அதாவது சுமார் கி.பி. 771ஆம் ஆண்டிற்குள் நடந்திருக்க வேண்டும். தோல்வியுற்ற அரசன் நந்திவர்ம பல்லவனேயாகும். (கி.பி. 731 - 796). பெண்ணாகடம் என்பது தஞ்சைக்கருகிலுள்ள ஒரு சிறிய ஊர். அரிகேசரி மாறவர்மன் காலத்திலேயே சோழநாடும் கொங்குநாடும் பாண்டியர் ஆதிக்கத்தின்கீழ் வந்தன என்பதைப் பார்த்தோம். இவ்விரு பகுதிகளையும் மீட்கப் பல்லவர்கள் மீண்டும் முயற்சி செய்தனர் போலும். இதற்காகவே பல்லவமல்லன் பெரும்படையுடன் காவிரியாற்றை நோக்கிப் படையெடுத்தான். ஆயினும் பெண்ணாகடத்தில் தோல்வியுற்றான். சீவரமங்கலச் செப்பேடு மேலும் பாண்டியன் பெற்ற சில வெற்றிகளைப்பற்றிக் கூறுகின்றது. பாண்டியனை எதிர்த்துக் கொங்குநாட்டானாகிய அதியன் போர் செய்தான் என்றும் அவனுக்கு உதவியாகக் கேரளனும் பல்லவனும் வந்தபோது அம்மூவரையும் பாண்டியன் வென்றான் என்றும் சாசனம் கூறுகின்றது. ஆயிரவேலி, அயிரூர், புகழியூர் என்ற இடங்களில் அதியமான் தோற்கடிக்கப்பட்டு மதுரையில் சிறை வைக்கப்பட்டான் என்றும் கூறப்படுகிறது. இவ் வெற்றியின் காரணமாகக் கொங்கு நாட்டை மீண்டும் கைப்பற்றி அங்குள்ள காஞ்சி வாய்ப்பேரூர் சென்று திருமாலுக்கு ஒரு பெரும் கோயிலையும் எழுப்பினான் என்று பின்வரும் செப்பேடு வாசகத்தால் அறியலாம்.

> கொங்க பூமி அடிப்படுத்துக் கொடுஞ்சிலையூட் டிழிவித்துப்
> பூஞ்சோலை அணிபுறவிற் காஞ்சி வாய்ப்பே ரூர்புக்கு

[16] S. I. I. XIV p. ii

திருமாலுக்கமர் துறையக்
குன்ற மன்னதோர் கோயிலாக்கி.[16 எ]

பிறகு இவன் சேரநாட்டிலுள்ள வேணாட்டைக் கைப்பற்றிய செய்தி சொல்லப்படுகின்றது. வேணாட்டை ஆய்வேள் என்னும் ஆய்குடியினர் நீண்ட காலமாகச் சங்க காலம் தொட்டே ஆண்டு வந்தனர். இது ஆய்நாடு என்றும் வழங்கப்படும். இவர்களுக்கு விழிஞம் என்ற கடற்கரை நகரம் மிக முக்கியமாக இருந்தது. இலங்கையைப் போல் அரணாற் சிறந்து விளங்கிய விழிஞத்தை அழித்து வேணாட்ட ரசனைவென்று, அவனுடைய களிறுகளையும், குதிரைகளையும், தனங்களையும் கைப்பற்றினான் என்று சாசனம் கூறுகின்றது.

ஆய்வேளிர் ஒவ்வொரு பாண்டிய அரசர் காலத்திலும் எதிர்ப்புத் தெரிவித்துக் கொண்டிருந்தனர். அவர்களைக் கண் காணிக்கவே நெடுஞ்சடையப் பராந்தகன் திருநெல்வேலிப் பகுதியில் இப்போது உக்கிரன் கோட்டை என வழங்கப்படும் பழைய கரவந்தபுரம் அல்லது களக்குடி என்ற ஊரில் பெரும் கோட்டை கட்டி அங்கே ஒரு பெரும் காவற்படையும் அமைத்தான். இக் கோட்டையை அழிந்த நிலையில் இன்றும் காணலாம்.[17]

நெடுஞ்சடையப் பராந்தகன் 'பரம வைஷ்ணவன்' என்றும் 'குருசரிதம் கொண்டாடியவன்' என்றும் ஸ்ரீவரமங்கலச் செப்பேடு கூறுகிறது. இவனது தந்தை அரிகேசரி பராங்குசன் பெரியாழ்வாரை ஞான குருவாகப் பெற்று வைணவனானவன் என்று ஏற்கெனவே நோக்கினோம். அவன் மகன் நெடுஞ்சடையன் வைணவனாகவே பரிணமித்திருக்க வேண்டும் என்று கருதுவதும் பொருத்தமே. வேள்விக்குடிச் சாசனமும் 'மாறன் மகனாகி மாலுருவின் வெளிப்பட்டு' என்று நெடுஞ்சடையனின் பிறப்பைப் பற்றிச் சொல்லுவது இதையே உணர்த்துகிறது. 'குருசரிதம் கொண்டாடியவன்' என்ற செப்பேட்டு வாசகத்திற்கிணங்க இவனது காலத்திலும் பெரியாழ்வார் தொடர்ந்து ஞானகுருவாகக் கொண்டாடப்பட்டார் என்று அறிஞர் மு. இராகவய்யங்கார்கூறுவது பொருத்தமாக உள்ளது.

நெடுஞ்சடையப் பராந்தகனுக்குப் பல விருதுகள் உண்டு. மனு காட்டிய நெறியில் நின்றவன் என்பதனால் 'மனுசரிதன்'

[16 எ] ஸ்ரீவரமங்கலச் செப்பேடு - வரிகள் 34-36.

[17] K. V. Raman- Uggaran Kottai or Kavavandapuram-An ancient fortified City of the Pandyas J. I. H. Vol. LII (1974)

என்றும், புலவர்களை ஆதரித்தமையால் 'பண்டிதவத்சலன்' என்றும்' இசையில் வல்லவனுயிருந்ததால் 'கீத கின்னரன்' என்றும் அழைக்கப்பட்டான். மேலும் தென்னவானவன், சீவரன், சினச்சோழன், புனப்பூழியன் போன்ற பல விருதுகளும் சேப்பேடுகளில் குறிக்கப்பட்டுள்ளன.

**அரசியல் தலைவர்கள் :** இவன் காலத்திலிருந்த சில அமைச்சர்கள், படைத்தலைவர்களைப் பற்றிய செய்திகளைக் கல்வெட்டு களில் காண்கிறோம்,

*1.* **மாறன்காரி :** நெடுஞ்சடையனது தந்தையான மாற வர்மன் இராசசிம்மன் காலத்திலேயே நீண்டகாலம் முதலமைச்ச ராய்ப் பணி புரிந்து வெண்பைப் போரில் பெரும் வெற்றி கண்டவன் என்று ஏற்கெனவே கூறியுள்ளோம். இவன் நெடுஞ்சடையன் ஆட்சித் தொடக்க காலத்திலும் முதலமைச்சனுகப் பணிபுரிந் தான். கரவந்தபுரமாகிய களக்குடியில் தோன்றிய அந்தணன். இவனுக்கு மதுரகவி என்ற சிறப்புப் பெயரும் உண்டு. மதுரைக் கருகில் உள்ள ஆனைமலையில் திருமாலுக்கு ஒரு கற்றளி அமைத்து அது முடிவதற்குள் இறந்துவிட்டான் என்று அங்குள்ள கி.பி. 771 ஆம் ஆண்டின் கல்வெட்டு கூறுகின்றது.[18] 'மூவேந்தன் மங்கலப் பேரரையன்' என்று பாண்டிய மன்னனுல் போற்றப் பட்டவன். வேள்விக்குடிச்சாசனத்திற்கு ஆணத்தியாகக் குறிக் கப்படுகிறவனும் இவனே.

2: **மாறன் எயினன் :** இவன் மேலே சொன்ன மாறங்காரியின் தம்பியாவான். 'மாறங்காரிக்குப் பின் உத்தரமந்தர பத மெய்தின பாண்டி மங்கல விசையரையன் ஆகிய மாறன்னெயினன்' என்ற கல்வெட்டு வாசகத்திலிருந்து இவன் அண்ணனுக்குப் பிறகு முதலமைச்சர் பதவியைப் பெற்ருன் என்று தெரிகின்றது. ஆனை மலை நரசிங்கப் பெருமாள் கோயிலைப் பூர்த்தி செய்தவன் இவனே.

3. **சாத்தன் கணபதி:** நெடுஞ்சடையப் பராந்தகனின் ஆரும் ஆண்டுக் கல்வெட்டொன்று திருப்பரங்குன்றம் குடைவரைக் கோயிலிலுள்ளது.[19] அக் கல்வெட்டில் இவனைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. இவனும் கரவந்தபுரத்தில் வேதியர் குலத்தில் பிறந்தவன். பாண்டியர் படைக்கு மாசாமந்தனுக (சேனுபதியாக) விளங்கியவன். சாமந்தன் கணபதி, சாமந்தன் பீமன் என்றும் அழைக்கப்பட்டான். 'பாண்டி

[18] **Ep. Ind VIII - pp. 319-320.**
[19] **Krishnan, K. G., Two Pandyan Inscs. Ep. Ind. XXXVI,**

அமிர்த மங்கல அரையன்' என்பது பாண்டிய அரசன் கொடுத்த பட்டப்பெயர். இவன் திருப்பரங்குன்றத்திலுள்ள கோயிலுக்குச் செய்த திருப்பணிகளும் அறச் செயல்களும் கல்வெட்டில் குறிக்கப் படுகின்றன. இவன் மனைவி நக்கன் கொற்றி, அக்கோயிலில் துர்க்கைக்கும், ஜேஷ்டைக்கும் கோயில்களை அமைத்தாள் என்று கல்வெட்டு அறிவிக்கின்றது.

4. **ஏனாதி சாத்தஞ் சாத்தன் :** சாத்தன் கணபதியின் சகோதரன். வேள்விக்குடிச் செப்பேட்டின் தமிழ்ப்பகுதியை இயற்றியவன். 'ஏனாதி' என்ற பட்டம் இவன் ஒரு முக்கியப் படைத் தலைவன் என்பதை உணர்த்துகிறது.

5. **தீரதீரன் மூர்த்தி எயினன் :** ஸ்ரீவரமங்கலச் செப்பேட்டிற்கு ஆணத்தியாக இருந்தவன். இசைப் பயிற்சியுடைய களக்காடு வேதிய குலத்தில் தோன்றியவன். அரசனுக்கு மகா சாமந்தனாய் இருந்தவன். 'வீரமங்கலப் பேரையன்' என்ற பட்டம் பெற்றவன் என்று செப்பேடு கூறுகிறது.

மேலே கூறப்பட்டுள்ள குறிப்புகளை நோக்குமிடத்து அக்காலத்தில் படைத் தலைவர்களாகவும், அமைச்சர்களாகவும் பணிபுரிந்தவர்கள் கலை ஆர்வமும், சமயப்பற்றும் உடையவர்களாக விளங்கினர் என்று தெரிகிறது. பல அந்தணர்கள்அமைச்சர்களாகவும் படைத்தலைவர்களாகவும் பணியாற்றினர். சமயத் தொண்டு புரிவதில் ஊக்கமுள்ளவர்களாகவும், மொழிப்பற்று, நாட்டுப்பற்று நிறைந்தவர்களாகவும் காட்சியளிக்கின்றனர்.

### 8. ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் : (கி.பி. 815–862)

நெடுஞ்சடையப் பராந்தகன் அல்லது முதலாம் வரகுணனுக்குப்பின் அவனது மகன் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் பட்டத்திற்கு வந்தான். இதைத் தளவாய்புரச் சாசனம், 'கூடலர் கோன் ஸ்ரீபராந்தகன் குறைகழற் கோச்சடையற்குச் சேயாகி வெளிப்பட்ட செங்கண்மால் ஸ்ரீவல்லபன்' என்று சந்தேகத்திற்கு இடமின்றிக் கூறுகிறது. சின்னமனூர்ப் பெரிய சாசனமும் ஸ்ரீவல்லபனின் தந்தை வரகுணன் என்பதால் நெடுஞ்சடையனுக்கு வரகுணன் என்ற பெயரும் உண்டு என்பது ஏற்படுகிறது. இவனே முதலாம் வரகுணன் என்று ஏற்கெனவே சுட்டியுள்ளோம். சின்னமனூர் வாசகத்தைத் தவறாகப் புரிந்து கொண்டு அறிஞர் திரு. சதாசிவப் பண்டாரத்தார் நெடுஞ்சடையப் பராந்தகனுக்கும், ஸ்ரீமாற ஸ்ரீவல்லபனுக்கும் இடையே இரு புதிய அரசர்களை அதாவது இரண்டாம் இராசசிம்மன்,

இரண்டாம் வரகுணன் என்பவர்களைப் புகுத்தியுள்ளார். இது தேவையற்றது மட்டுமில்லாமல், சாசனத்தில் கூறுதலைப் புகுத்துவதாகும். சின்னமனூர்ச் சாசனத்தின் தமிழ்ப் பகுதியில் பின் வரும் வரிசை சொல்லப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| பராங்குசன் | ... | (அரிகேசரி பராங்குச மாறவர்மன்) |
| ஜடிலன் | ... | (கோச்சடையன் ரணதீரன்) |
| இராசசிம்மன் | ... | (அரிகேசரி மாறவர்மன் அல்லது முதலாம் இராசசிம்மன்) |
| வரகுணன் | ... | (நெடுஞ்சடையப் பராந்தகன் அல்லது முதலாம் வரகுணன்) |
| ஸ்ரீவல்லபன் | ... | (ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன்) |
| வரகுணன் | ... | பராந்தக வீரநாராயணன். |
| (இரண்டாம் வரகுணன்) | ... | இரண்டாம் இராசசிம்மன். |

இவ்வரிசையில் ஜடிலன் என்ற பெயரை ஜடில பராந்தகன், அதாவது நெடுஞ்சடையப் பராந்தகன் என்று தவறுக எடுத்துக் கொண்டதனுல் ஸ்ரீவல்லபனுக்கு முன் இருக்கும் இராசசிம்மனேயும் வரகுணனையும் இரு புதிய அரசர்களாகச் செப்பேடு அறிமுகம் செய்வதாகத் திரு. பண்டாரத்தார் கருதிவிட்டார். இது தவருகும்.[20] 'ஜடிலன்' என்பது 'சடையன்' என்பதன் வட மொழி வழக்காகும். ஆகையால், ஜடிலன் என்பது இங்குக் கோச்சடையனைக் குறிக்கும். சாசனத்தின் தமிழ்ப் பகுதியில் இராசசிம்மனைப் பராங்குசனின் 'பௌத்ரன்' அதாவது பேரன் என்றே குறிப்பதால் இந்த இராசசிம்மன் என்பவன் அரிகேசரி இராசசிம்மனையே குறிக்கும் என்று ஐயமின்றித் தெரிகின்றது. அவனது மகன் நெடுஞ்சடையப் பராந்தகன் என்று வேள்விக் குடிச் சாசனமும் தளவாய்புரச் சாசனமும் கூறுகின்றன. அவனையே இச்சாசனத்தில் வரகுணன் என்று குறிக்கின்றுர். ஆகையால், ஸ்ரீவல்லபனுக்கு முன்னே அவனது தந்தையாகக்

20 நெடுஞ்சடையன் இறந்த பிறகு அவன் மகன் ஸ்ரீமாறன், ஸ்ரீவல்லபன் கி.பி. 815-ல் பட்டத்திற்கு வந்தான் என்பது தெளிவாகின்றது. ஊகமாகக் கி.பி. 835 என்று பண்டாரத்தார் கூறுவது தவருகும். இத்தவற்றைப் 'பாண்டியர் செப்பேடுகள் பத்து' என்ற நூலிலும் காண்கிறோம் (பக்கம் XXV-XXVI)

கூறப்பட்டுள்ள வரகுணன் நெடுஞ்சடையப் பராந்தகனேயாவான் என்று தெரிகின்றோம். இதைத்தான் தளவாய்புரச் சாசனமும் 'கூடலர் கோன் ஸ்ரீபராந்தகன் குரைகழற் கோச்சடையர்க்குச் சேயாகி வெளிப்பட்ட செங்கண்மால் ஸ்ரீவல்லபன்' என்று குறிக்கின்றது. ஆகையால், சின்னமனூர்ப் பெரிய சாசனத்தில் காணப்படும் பாண்டிய வம்சவரிசை மற்றச் சாசனங்களின் வம்ச வரிசையோடு நன்கு பொருந்தியுள்ளதே தவிரப் புதிய தாக எந்த அரசர்களையும் அது சேர்க்கவில்லை என்பதை நினைவில் கொண்டால் குழப்பம் ஏற்பட இடமில்லை.[21] நெடுஞ்சடையனுக்குப் பிறகு ஸ்ரீவல்லபன் கி.பி. 815-ல் பட்டத்திற்கு வந்தான் என்பது தெளிவாகின்றது. இவனது தந்தையைப் போலவே இவனது ஆட்சியைப்பற்றியும் செப்பேட்டுச் செய்திகளைத் தவிரக் கல்வெட்டுகளும் கிடைத்துள்ளன. இவனும் பல வெற்றிகளைக் கண்ட பேரரசன் என்பதால் 'ஏக வீரன்' என்றும் 'பரசக்ர கோலாகலன்' என்றும் மக்களால் அழைக்கப் பட்டான். சிறந்த நீதிமான் என்றும், விரிந்த இராஜ்யத்தை ஆண்டவன் என்பதால் 'அவனிப சேகரன்' என்றும் போற்றப் பட்டான்.

இவனது வெற்றிகளைத் தெரிவிக்கும் சின்னமனூர்ச் செப்பேடு 'குன்னூரிலும், சிங்களத்தும், விழிஞத்தும் வாடாத வாகை சூடி' என்று முதலில் கூறுகின்றது. குன்னூரில் யாருடன் போர் புரிந்தான் என்பது புலப்படவில்லை. விழிஞத்தில் ஆய்வேளிர் இவன் தந்தை காலத்திலேயே தோற்கடிக்கப் பட்டிருந்தனர் என்று முன்பே பார்த்தோம். இவன் காலத் திலும் அவர்கள் எதிர்த்துத் தோல்வியடைந்தனர் என்று தெரி கின்றது.

இனி இவனது சிங்கள வெற்றியைப் பற்றி ஆராய்வோம். 'குரை கடலீழங் கொண்டும்' என்று தளவாய்புரச் செப்பேடு திட்டவட்டமாகக் கூறுகிறது. இக் கூற்றை இலங்கை வரலாறான மகாவம்சம் எவ்வாறு அறுதியிடுகிறது என்பதை ஆராய்ச்சி

[21] நெடுஞ்சடையப் பராந்தகனே முதலாம் வரகுணன் ஆவான் என்ற பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியின் கருத்து, தளவாய்புரம் சின்னமனூர்ச் செப்பேடுகளால் உறுதியாகிறது. இவ்விருவரும் வெவ்வேறு என்று எண்ணிப் பராந்தகனையும் பரம சைவனான வரகுணனையும் எப்படி ஒன்று என்று சொல்ல முடியும் என்று அறிஞர் பண்டாரத்தார் ஐயுற்றார் முதலாம் வரகுணன் வைணவன், அவன் பேரன், இரண்டாம் வரகுணன் சைவன் என்பது இப் போது தெளிவாகியுள்ளது சின்னமனூர்ச் செப்பேட்டிலேயே இருவரகுணன் களைக் காண்கிறோம். ஒருவன் ஸ்ரீவல்லபனின் தந்தை, மற்றொருவன் ஸ்ரீவல்ல பனின் மகன். இரண்டாம் வரகுணனின் சைவப்பற்று பற்றித் தளவாய்புரச் செப்பேடுகள் கொடுக்கும் அரியசெய்திகளைப் பின்னே காணலாம்.

அறிஞர்கள் வெங்கய்யாவும், நீலகண்டசாஸ்திரி அவர்களும் ஆராய்ந்து ஒப்பிட்டுள்ளனர்.[22] முதல் சேனன் (கி.பி. 831-851) ஆட்சி செய்து கொண்டிருந்த காலத்தில் ஈழத்தின்மீது பாண்டியர் படையெடுத்தனர் என்று மகாவம்சம் குறிக்கின்றது. மகாதலிதா என்னுமிடத்தில் பாண்டியர் பெரும்வெற்றி கண்டனர். சிங்கள நாட்டு இளவரசன் மகிந்தன் தற்கொலை செய்துகொண்டான். பாண்டியர் படை ஈழத்துத் தலைநகரைக் கைப் பற்றி அங்கிருந்தும் புத்த விகாரங்களிலிருந்தும் விலை யுயர்ந்த பொருள்களை ஏராளமாய் எடுத்துச் சென்றது என்றும் அதனால் இலங்கை தனது பெரும் செல்வங்களை இழந்தது என்றும் மகாவம்சம் கூறுகிறது.[23] இறுதியில் ஓர் ஒப்பந்தப்படி ஓடி மறைந்த சிங்கள அரசன் சேனனுக்கே மீண்டும் ஆட்சிப் பொறுப்பு வழங்கப்பட்டது.

ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் காலத்திலும் பாண்டிய பல்லவப் போர்கள் தொடர்ந்து நடைபெற்றன. வெற்றி தோல்விகள் மாறி மாறி வந்தன. கடலானூர்[24] அல்லது ஆனூர் என்னு மிடத்தில் பல்லவனை ஸ்ரீமாறன் தோற்கடித்தான் என்று தளவாய்புரச் செப்பேடு குறிக்கின்றது. இதைப் பற்றிய வேறெந்த விவரமும் கிடைக்கவில்லை. இதையடுத்து மூன்று முக்கியப் போர்கள் நடைபெற்றன. முதலில் தெள்ளாற்றுப் போர். இவ்வூர் வடஆர்க்காடு மாவட்டத்தில் வந்தவாசித் தாலுக்காவிலுள்ளது. இங்கு கி.பி. 854-ல் நடந்த போரில் பல்லவ அரசன் மூன்றாம் நந்திவர்மனே வெற்றிபெற்றான். இதனால் 'தெள்ளாறெறிந்த நந்திவர்மன்' என்று சில சாசனங்கள் இவனைப் புகழ்கின்றன. இப் போரினால் தொண்டை மண்ட லத்தில் இருந்த பாண்டியர் ஆதிக்கம் அகற்றப்பட்டது எனலாம். இப்போரில் தொண்டை மண்டலத்தில் செல்வாக்குடன் இருந்த ஸ்ரீகண்ட பொத்தப்பி சோழன் என்பவன் பாண்டியருக்கு உதவி புரிந்ததாகக் கருதப்படுகிறது.[25]

அடுத்து, சுமார் கி.பி. 859ஆம் ஆண்டில் குடமூக்கு என்னும் கும்பகோணத்தில் நடந்த போரில் ஸ்ரீமாறன் பெரு வெற்றி

[22] திரு. வெங்கையா அவர்களின் கருத்துக்களை ARE 1907-8ல் பார்க்க லாம்.

[23] K. V. Subramanya Aiyar, Historical Sketches of Ancient Deccan- p. 140-41.

[24] 'காடவருக் கடலானூர்ப் பீடழியப் பின்னின்றும்' இத்தனைக் கொங்கு நாட்டில் நொய்யல் ஆற்றைச் சார்ந்த ஆனூராகத் திரு. பண்டாரத்தார் கருது கிறார். (பா. வ. பக். 65)

[25] **Sastri, K. A. N. A History of South India-p. 159.**

பெற்றான். இதில் பல்லவர், சோழர், கங்கர் சேர்ந்த கூட்டுப் படையை முறியடித்தான் என்பதை,

> ''கொங்கலர் பொழிற் குடமூக்கிற் போர்குறித்து
> வந்தெதிர்ந்த கங்கபல்லவ சோளகாலிங்க மாகதாதிகள்
> குருதிப் பெரும் புனற்குளிப்ப.........''

என்று சின்னமனூர்ச் செப்பேடு கூறுகிறது. இவ்வெற்றி தள வாய்புரச் செப்பேட்டிலும், நந்திவர்மன் மகனுன நிருபதுங்க வர்மனின் பாகூர்ச் செப்பேட்டிலும் குறிக்கப்படுவதிலிருந்து இது பெரிய வெற்றியாக அக்காலத்தில் கருதப்பட்டது என்பது தெரிகின்றது.

மூன்றுவதாக, அரிசிலாற்றங் கரையில் நடந்தபோர். கும்ப கோணத்திற்குத் தென்புறமாக ஓடும் இவ்வாற்றங்கரையில் ஸ்ரீவல்லபனுக்கும், நந்திவர்மனது மகனுகிய நிருபதுங்கவர்ம னுக்கும் போர் நடைபெற்றது. இதில் பல்லவனே வெற்றி பெற்றான் என்று பாகூர்ச் செப்பேடுகள் கூறுகின்றன. இவ்வெற்றியால் சோழ நாட்டின் பல பகுதிகள் பாண்டிய ஆதிக்கத்திலிருந்து கைமாறிப் பல்லவர்கள் ஆட்சிக்கு உட்பட லாயின. இதை உறுதிப்படுத்தும் வகையில் நிருபதுங்க வர்மனின் ஆட்சியாண்டுகளைக் குறிக்கும் கல்வெட்டுகளும் சோழ நாட்டில் லால்குடி, கண்டியூர், திருச்சன்னம் பூண்டி முதலிய ஊர்களில் காணக்கிடக்கின்றன.

இதே சமயத்தில் பாண்டிய நாட்டிற்கு மற்றொரு பேரா பத்தும் காத்திருந்தது. இரண்டாம் சேனன் காலத்தில் (கி.பி. 842 - 877) இலங்கை பாண்டிய நாட்டின்மீது படையெடுத்தது. இப் படையெடுப்பு நிகழ்ச்சிகளையும் மகாவம்சம் விவரிக்கின்றது. அதன்படி ஸ்ரீவல்லபனுடன் இராஜ்யத்தைக் கைப்பற்ற எண்ணி முரண்பட்டிருந்த மாயா பாண்டியனுடன் சேர்ந்து கொண்டு இலங்கை அரசன் பாண்டிய நாட்டின்மீது படையெடுத்து அந்நாட்டுத் தலைநகரையும் சூழ்ந்துகொண்டு தாக்கினான். தோல் வியுற்ற பாண்டிய அரசனும் அவனது மனைவியும் உயிரிழந்தனர். மாயா பாண்டியன் முடி ஆட்சி பெற்றான் என்று மகாவம்சம் கூறு கிறது. இக்கூற்றை உண்மை வரலாறுக ஏற்கத் தக்க சான்றுகள் இல்லை என்று பேராசிரியர் சாஸ்திரி முதலில் கருதினார்.[26] ஸ்ரீமாறன் மாயா பாண்டியனை ஒடுக்கியதாகச் சின்னமனூர்ச் செப்

[26] **Sastri, K. A. N - P. K.**
அறிஞர்கள் வெங்கையாவும், கே. வி. சுப்பிரமணிய ஐயரும் மகாவம்சத் தின் சம்பவங்களைப் புறக்கணிக்கவில்லை.

பேடும் கூறுகிறது. ஆனால், அண்மையில் கண்டுபிடிக்கப்பட்ட தளவாய்புரச் செப்பேடுகளில் கிடைக்கும் செய்திகளை வைத்துப் பார்த்து இச்சிங்களப் படையெடுப்பு நடந்தது உண்மையெனப் பேராசிரியர் ஏற்றுக்கொண்டார்.[27] இக்கருத்தின்படி ஸ்ரீமாறன் முதல் மகனான வரகுணனை விட்டு இரண்டாம் தாரத்தின் மகனான வீரநாராயணனைக் கி.பி. 860-ல் இளவரசனாக நியமித்தான். இதனால் மனம் வெகுண்டு வரகுணன் ஸ்ரீமாறனுடன் பகை கொண்டு இலங்கை அரசன் இரண்டாம் சேனனோடு சேர்ந்து கொண்டான் என்று சிலரால் கருதப்படுகிறது. இதன்படி வரகுணனே மாயா பாண்டியனாவான். இறுதியில் ஸ்ரீமாறன் உயிர் இழந்தான். சிங்களப் படைத்தலைவன் வரகுணனுக்கு முடிசூட்டினான் என்று கருதப்படுகிறது. தளவாய்புரச் செப்பேடு களும் இவன் பேராற்றல் காட்டிப் போர் புரிந்து போர்க் களத்தில் உயிர்துறந்தான் என்று கூறுகின்றன.[28] இவன் கி.பி. 862ஆம் ஆண்டில் இறந்திருத்தல் வேண்டும்.[29] முன்னே ஸ்ரீவல்ல பனால் இலங்கை சூறையாடப்பட்டதற்கு எதிரடியாக இப்போது இலங்கை மன்னன் பாண்டிய தலைநகரைத் தாக்கி ஏராளமான பொருள்களை மீட்டுச் சென்றனன்.

ஆகையால், ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபனின் ஆட்சி பல நிகழ்ச்சி களைக் கொண்டு 47 ஆண்டுகள் (கி.பி. 815-862) நீடித் திருந்தது. ஒரு பக்கம் சிங்களவருடனும் மற்றொரு பக்கம் பல்லவருடனும் போரிட்டு இன்னல்களுக்கிடையே தன் தந்தை பெற்றுத் தந்த இராஜ்ஜியத்தை அஞ்சாமல் காத்திடப் பேரு முயற்சி செய்தான்; பெரும் வெற்றிகளைக் கண்டான். 'பரச் சக்ர கோலாகலன்', 'அவனிப சேகரன்' என்ற பட்டத்திற்கு ஏற்ப அவ்வெற்றிகள் அமைந்தன. சில தோல்விகளையும் கண்டான். தனது மைந்தனே எதிரியுடன் சேர்ந்து செய்த சதியின் காரணமாய் இறுதியில் தோல்வியுற்றுப் போர்க் களத்தி லேயே உயிர்துறந்தான். முதல் பாண்டியப் பேரரசர்களில் இவனுக்கு உயரிய இடம் உண்டு.

## 9. இரண்டாம் வரகுணவர்மன் *(கி.பி. 862 - 885)*

இவனது தந்தை இறந்த அதே ஆண்டில் (கி.பி. 862) முடி சூட்டப் பெற்றான். இவனது எட்டாம் ஆட்சியாண்டு சகவருடம்

[27] Sastri, K. A. N. A History of South India p 160.

[28] ஒளிறிலைவேல் உபர்ய ப தலன் உடம்பர் வான் உலகணைந்த பின்.

[29] ARE. No. 705 of 1905.

792 அதாவது கி. பி. 870ஆக ஐவர் மலையிலுள்ள இவனது கல் வெட்டுக் குறிக்கின்றது. இதைக் கொண்டு இவன் கி.பி. 862ஆம் ஆண்டில் பட்டத்திற்கு வந்திருக்க வேண்டும் என்று அறுதி யிட்டுக் கூறலாம்.

இவனது தந்தையின் கடைசிக் காலத்திலேயே அரசியல் சூழ் நிலையில் பல மாறுதல்கள் ஏற்பட்டன. இதுகாறும் பல்லவர்களும் பாண்டியருமே முக்கிய வல்லரசுகளாயிருந்தனர். மாறிமாறி வந்த வெற்றி தோல்விகளுக்கிணங்க அவர்களுடைய ஆதிக்கம் பரவியிருந்தது. ஆனால், இதுகாறும் பின்தங்கியிருந்த சோழர் கி.பி. 850-ல் வெளிக்கிளம்பலாயினர். அவ்வம்சத்தைச் சார்ந்த விசயாலயன் என்பான் பாண்டியரின்கீழ் இயங்கிய தஞ்சையை முத்தரையரிடமிருந்து கைப்பற்றினன். வரகுணன் தனது ஆட்சியின் முற்பகுதியில் போர்கள் ஏதும் மேற்கொள்ளாமல் அமைதிகாத்தான் என்று தெரிகிறது. பல்லவ அரசன் நிருபதுங்க வர்மனிடம் நட்புறவுடன் இருந்தான். புதிய சோழர் எழுச்சிக் கிடையே அவர்கள் தங்களது நெடுங்காலப் பகைமையை மறந் தனர் போலும். மேலும் பல்லவர்களிடையே இரு கட்சிகள் தோன்றின. அவனது ஒன்றுவிட்ட சகோதரன் அபராஜிதனுக்கு மிடையே வேறுபாடுகள் தோன்றி ஒவ்வொருவரும் குழுச் சேர்க்க லாயினர்.[30] நிருபதுங்கனுக்குத் துணையாக வரகுணன் நின்றான். வரகுணனின் படை சோழநாட்டில் புகுந்து காவிரியாற்றுக்கு வடக்கேயுள்ள இடவை நிலப்பகுதியைக் கைப்பற்றியது. பெண்ணாற்றங்கரையில் அரசூர் என்னுமிடத்தில்கூடப் பாண்டியர் ஒரு முகாம் அமைத்தனர். பல்லவ அரசன் அபராஜிதன், கங்க அரசன் முதலாம் பிருதிவீபதி, சோழ அரசன் ஆதித்தியன் மூவரும் கூட்டுச்சேர்ந்து பாண்டிய அரசனை எதிர்த்துப் போரா டினர். இடவையிலும் அதன் பக்கத்திலுள்ள ஊர்களிலும் போர்கள் நிகழ்ந்தன. இறுதியில் கும்பகோணத்திற்கு வட மேற்கே ஐந்துமைல் தூரத்திலுள்ள திருப்புறம்பியம் என்னுமிடத் தில் நடந்த பெரும்போரில் பாண்டியன் தோல்வியுற்றான். இப் போர் கி.பி. 885ஆம் ஆண்டில் நடந்தது என்கிறார் பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி.[31] பல்லவ அரசனுக்குத் துணைநின்று போராடிய கங்க அரசன் பிருதிவீபதி கொல்லப்பட்டான். வரகுண பாண்டியன் சோழ நாட்டில் தான் கைப்பற்றிய பகுதி களை விட்டுவிட்டுப் போகும்படி நேர்ந்தது. இதனால் பாண்டியர் பலம் குன்றியது. இதுவே அவர்களது வீழ்ச்சிக்கும் ஆதித்திய

[30] K. A. N. Sastri - A History of South India-p. 174-175.

[31] மூன் குறிப்பு பக்கம் 175.

சோழனின் எழுச்சிக்கும் அடிகோலியது.[32] பல்லவ அபராஜிதன் வெற்றி பெற்ருலும் அவனது ஆதிக்கமும் சோழ நாட்டில் குன்ற ஆரம்பித்தது. தோல்வியுற்ற வரகுணன் இப் போருக்குப் பிறகு வெகுகாலம் ஆட்சி புரியவில்லை எனத் தெரிகிறது. ஆன்மீகத் துறையை அவன் மனம் நாடியது. இவன் ஆயுள் காலத்திலேயே இவனது தம்பி பராந்தக வீரநாராயணன் முடிசூட்டப்பெற்ருன். இதைக்கூறும் தளவாய்ப்புரச் செப்பேடு

> 'கோவரகுணன் பிள்ளை பிறைச்
> சடைக்கணிந்த பிஞகபாணி எம்பெருமானை
> உலகாய் காக்கின்ற நாளில்...'

என்கிறது. வரகுணன் சிவபக்தியில் முழுமையாக ஈடுபட்டிருந்த தஞல் பராந்தகன் ஆட்சிக்கு வந்தான் என்று கொள்ளலாம். வரகுணனின் சிவபக்தியை அவனது காலத்தில் அமைச்சராயிருந்த மாணிக்கவாசகர் திருச்சிற்றம்பலக் கோவையாரில்

> 'வரகுணனுந் தென்னவனேத்து
> சிற்றம்பலத்தான்'

என்று பாராட்டியுள்ளார். தளவாய்ப்புரச் செப்பேடு கண்டு பிடிப்பதற்கு முன் மாணிக்கவாசகர் எந்த வரகுணன் காலத்தி லிருந்தார் என்பதைப் பற்றிய ஐயம் இருந்தது. ஆனுல் இப் போது சிவபக்தியில் மூழ்கியிருந்த இரண்டாம் வரகுணன் காலத் தில்தான் மாணிக்கவாசகர் வாழ்ந்திருந்தார் என்று ஐயமின்றிக் கூறலாம்.[33]

இரண்டாம் வரகுணன் திருச்செந்தூர் முருகன் கோயிலுக்கு 1400 பொற்காசுகளை நிவந்தமாக வழங்கினுன். ஆண்டுதோறும் 2,800 கலம் நெல் கோயிலுக்கு வழங்க ஏற்பாடுகள் செய்தான். இச் செய்தியை அக் கோயிலிலுள்ள அவனது 13ஆம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டு அறிவிக்கின்றது.[34]

வரகுணன் காலத்தில் படைத்தலைவனுயிருந்த நக்கம்புள்ளன் என்பவனைப் பற்றிச் சில செய்திகளை ஒரு கல்வெட்டுத் தெரிவிக்

[32] கங்க அரசன் இரண்டாம் பிருதிவீபதியின் உதயேந்திரச் செப்பேடுகள் இவ்விவரங்களைத் தந்துள்ளது. SII. ii, No. 76

[33] பேராசிரியர் சாஸ்திரி முதலில் மாணிக்கவாசகரின் காலம் மிகமுந்தியது என்று கருதினுர். ஆனுல் தளவாய்ப்புரச் செப்பேட்டின் சான்று கிடைத்த பிறகு தமது கருத்தை மாற்றிக் கொண்டு இரண்டாம் வரகுணனின் காலமே என்ற கருத்தை ஏற்றுக்கொண்டுள்ளார்.

**(A History of South India p. 175)**

[34] **Ep. Ind. XXI-No. 17**

கின்றது.[35] வரகுணன் இடவைமீது படையெடுத்துச் சென்ற போது படைத்தலைவனுயிருந்து போரில் வெற்றி கண்டவன். இவனுக்குப் பராந்தகப்பள்ளி வேளாளன் என்ற பட்டமும் இருந்தபடியால் வரகுணனின் தம்பி பராந்தகநாராயணன் காலத்திலும் இவன் தொடர்ந்து படைத்தலைவனாக இருந்திருக்கக் கூடும்,

## 10. பராந்தக வீரநாராயணன்-(கி.பி. 860-905)

ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபனுக்கும், பொத்தப்பி சோழன் ஸ்ரீகண்டனின் மகள் அக்களநிம்மடிக்கும் பிறந்த மகன். இவன் வரகுணனின் மற்றொரு தாய்வழிப் பிறந்த சகோதரனுவான்.[36] தளவாய்ப்புரச் சாசனத்தை வழங்கியவன் இவனே. அது அவனது ஏழாவது ஆட்சியாண்டில் வழங்கப்பட்டது. அப்போது வரகுணனும் வாழ்ந்திருந்தான். ஆனால், அரசுகட்டிலிலிருந்து விலகி சிவபக்தியில் ஈடுபட்டிருந்தான்.

இவனது வெற்றிகளைச் சாசனம் விரிவாகக் கூறுகின்றது, இவன் செந்நிலத்தில் தன் அண்ணனைத் தோற்கடித்தான்.[37] அண்ணன் என்பது வரகுணனைக் குறிப்பதாகச் சிலர் கருதுவர். ஆனால், இது ஏற்கக் கூடியதன்று. ஏனெனில், வரகுணனைப் பற்றி இதே செப்பேட்டில் பெருமையாகக் கூறியிருப்பதால் அவனுடன் சண்டைசெய்ய முகாந்திரமில்லை. இது வேறோர் அண்ணனை அதாவது தந்தை ஸ்ரீவல்லபனோடு சண்டை செய்த அண்ணனைக் குறிக்கலாம்.[38] அடுத்து கரகிரித் தலைவனை வென்றான். கரிகிரி அக் காலத்தில் களக்குடி என்றும், கரவந்த புரம் என்றும் வழங்கப்பட்டது. நெடுஞ்சடையப்பராந்தகன் காலத்திய முக்கிய மந்திரிகளும், படைத்தலைவர்களும் இவ்வூரைச் சார்ந்தவர்களே. இது பாண்டியர்களுக்கு முக்கியப் படைத்தளமாகவும் விளங்கியது.[39] ஆனால், வீரநாராயணன் காலத்துக் கரவந்தபுரத்தலைவன் பாண்டியரை எதிர்த்ததனால் அவனுடன் போர்புரிய நேர்ந்தது போலும். இவ்வூர் இப்போது உக்கிரன் கோட்டை என்று வழங்கப்படுகின்றது. இதனைக் கொண்டு இவ்வூர்த்தலைவன் உக்கிரன் என்பவனாக இருந்திருத்தல் வேண்டும்

35 690 of 1905

36 'வரகுணவர்மனுக்கு இளையனான்' என்று சின்னமனூர்ப் பெரிய சாசனம் குறிக்கின்றன.

37 'முன்பிறந்த வேல்வேந்தனைச்... செந்நிலந்தை செருவென்றும்'.

38 இவனை மாயா பாண்டியன் என்று சின்னமனூர்ப் பெரிய சாசனத்தில் உள்ள சமஸ்கிருதப்பகுதி குறிக்கின்றது (இரண்டாம் ஏடு 20ஆவது வரி)

39 K V. Raman, Uggirankottai or Karavandapuram-An ancient fortified city of the Pandyas J. I. H. LII (1974)

என்று கருதப்படுகிறது. 'மணிமாடப்புரந்தரனது நகர் போன்று' இவ்வூர் இருந்தது என்று தளவாய்புரச் செப்பேடு கூறுகின்றது. இவ்வூரில் வீற்றிருக்கும் போதுதான் இச் செப்பேட்டையும் பராந்தக வீரநாராயணன் வழங்கினான்.

மேலும் மேற்குக் கொங்கு, பொக்கரணி, தென்மாயல், வெண்கை, பராந்தகம் என்னுமிடங்களில் எழுந்த மன்னர்களை முறியடித்தான் என்று கூறப்படுகிறது. இவற்றின் விவரங்கள் புலப்படவில்லை. பெண்ணாகட நகரை அழித்தான் என்று கூறப் படுவதால் வரகுணன் காலத்தில் இழந்த சோழநாட்டை மீண்டும் கைப்பற்ற இவன் முயன்றான் என்று தெரிகிறது.[40] வீரதுங்கன் என்பவனையும் தோற்கடித்தான் என்றும் அறிகிறோம், இவன் முத்தரையர் குடியில் வந்த சிற்றரசனாக இருக்கக்கூடும்.

இவன் பல பிரமதேயங்கள், தேவதானங்கள் செய்தான். இவன் தந்தை ஸ்ரீவல்லபன் போன்று இவனும் வைணவனாவான். இவனுக்கு வீரநாராயணன் என்ற சிறப்புப் பெயர் உண்டு, கலிப்பகை, கண்டருள்கண்டன், மதுராபுரிப் பரமேஸ்வரன், மகரகேதனன், வசுதாதிய வாசுதேவன், குருசரிதன், செந்தமிழ்க் கோன் போன்ற பல விருதுகளும் இவனுக்கு உண்டு. வானவன் மாதேவி என்னும் சேர குலத்து இளவரசி இவனது பட்டத்தரசி ஆவாள். இவளுடைய புதல்வன்தான் இரண்டாம் இராச சிம்மன்.[41]

## 11. இரண்டாம் இராசசிம்மன் (கி.பி. 900 - 920)

கி.பி. 900-ல் பட்டத்திற்கு வந்தவன் இரண்டாம் இராச சிம்மன். பராந்தக வீரநாராயணனுக்கும் சேரநாட்டு வானவன் மகாதேவிக்கும் பிறந்தவன். தன் பதினாறும் ஆட்சியாண்டில் இவன் சின்னமனூரார்ப் பெரிய செப்பேடுகளை வழங்கினான். இவ் வூருக்கு மந்தர கௌரவ மங்கலம் எனப்பெயரிட்டுப் பிரமதேய மாக வழங்கிய செய்தியை அச் செப்பேடுகள் குறிக்கின்றன. இவ்வரசனுக்கு 'மாந்தரகௌரவமேரு', 'இராகிகாமணி', 'ஸ்ரீகாந்தன்' போன்ற பல பட்டங்கள் உண்டு. இவன் பல போர்களை நடத்தியுள்ளான். உப்பிலிமங்கலத்தில் இவனுடன் போரிட்டது யாரென்று தெரியவில்லை. வஞ்சி மீது இவன்

40 கைந்நிலந்தோய் கரிகுலமும் வாஜிபிருந்தமலை காலாளுஞ் செந்நிலத்தி னிலஞ்சேரத் திண்சிலைவாய்க் கணை சிதறியும் கரிகுரிபிற் கருதாதவர் வரகரிகுல நிரைவாரியும் நிலம்பேர நிகர்கடந்து நெடும் பெண்ணாகடமழித்தும் தேவதானம் பல செய்தும் பிரமதாயம் பல திருத்தியும்...(சின்னமனூர்ப் பெரிய சாசனம்)

41 இவனை மூன்றாம் இராஜசிம்மன் என்று அறிஞர் சதாசிவப் பண்டாரத் தார் குறிப்பிட்டிருப்பது தவறாகும்.

படையெடுத்தது மட்டுமல்லாமல் தஞ்சையர் கோனை வைப்பூரி லும் நாவற்பதியிலும் தோற்கடித்தான் என்று குறிக்கப்படு கின்றது. சோழருக்குப் பக்க உறுதுணை நின்ற கொடும்பாளூர் முத்தரையருடன் போரிட்டான் என்று தெரிகிறது. இவன் காலத்தில் முதலாம் பராந்தக சோழன் ஆண்டுவந்தான். கி.பி, 907-ல் பட்டத்திற்கு வந்த முதலாம் பராந்தக சோழன் தனது மூன்றும் ஆட்சியாண்டில் அதாவது கி.பி, 910-ல் 'மதுரை கொண்ட கோப்பரகேசரி' என்று கூறிக்கொள்கிறுன்.[42] இது இவனது தந்தை முதலாம் ஆதித்தன் காலத்திலேயே நடந்திருக் கக்கூடும் என்று பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி அவர்கள் கருது கிறுர். இலங்கை மன்னனின் படை உதவியைக் கொண்டு மறுபடியும் சோழனுடன் போர் புரிந்த இராசசிம்மன் வெள்ளூர் என்னுமிடத்தில் தோற்கடிக்கப்பட்டான். வெள்ளூர்ப் போர் சுமார் கி.பி. 915இல் நடந்திருக்கக்கூடும் என்று நீலகண்ட சாஸ்திரியார் கருதுகிறுர்,[43] பராந்தகச் சோழனுக்கு இது பெரும் வெற்றியாகும். இச் செய்திகள் கங்க அரசன் இரண்டாம் பிருதிவிபதியின் உதயேந்திரச் செப்பேடுகளிலும், திருவாலங் காட்டுச் செப்பேடுகளிலும் குறிக்கப்பட்டுள்ளன,[44] இப்போரில் இலங்கை மன்னன் இவனுக்கு உதவியாகப் பெரும் சேனையை அனுப்பியிருந்தார். ஆனுல், பாண்டியன் வெற்றியடைய முடிய வில்லை. ஈழப் படையினரிடம் ஒரு கொடிய நோய் பரவி அவர் களில் பலர் இறந்தனர், எஞ்சியுள்ள சேனையை இலங்கைக்குத் திரும்புமாறு இலங்கை அரசன் பணித்தான். தன் நாட்டை இழந்த இராசசிம்மன் இலங்கைக்குச் சென்று மீண்டும் உதவி கோரினுன், இலங்கை மன்னன் நட்புடன் வரவேற்று உதவி செய்யவும் ஆயத்தமானுன். ஆனுல், அப்போது இலங்கை மன்னர்களுக்குள் குழப்பம் ஏற்பட்டதனுல் இலங்கை அரசனிடம் தன் மகுடத்தையும் அரச சின்னங்களையும் வைத்துவிட்டுத் தன் தாய் வானவன் மாதேவியின் பிறந்த நாடாகிய சேர நாட்டிற்குச் சென்று தங்கியிருந்தான் என்று மகாவம்சம் குறித்துள்ளது. பின்னர் இவனைப் பற்றிய செய்திகள் ஏதும் தெரியவில்லை.

[42] 157 of 1928 and 11 of 1931.
[43] Sastri, K. A. N. The Chola p. 123.
[44] SII vol. II. No. 76.

# 6. பாண்டி நாட்டில் சோழர் ஆட்சி

முதல் பராந்தகசோழன் பாண்டிய நாட்டை அவனது மூன்றும் ஆட்சியாண்டுக்கு முன், அதாவது கி.பி. 910-க்கு முன் கைப்பற்றியிருக்க வேண்டும். அவன் தன்னை 'மதுரை கொண்ட பரகேசரி' என்று கூறிக்கொள்கிறுன். அவன் காலத்தி லிருந்து சோழராதிக்கம் பாண்டிய நாட்டில் பரவத் தொடங் கியது. ஆனுல், இடையே சிறிது காலம் சோழன் தலைகொண்ட வீரபாண்டியன், பெருமுயற்சி செய்து சோழர்களிடமிருந்து பாண்டிய நாட்டை மீட்டு, சுமார் 20 ஆண்டுக்காலம் (946-966) தன் ஆட்சியை நிலைபெறச் செய்தான். இராசராச சோழன் காலத்தில்தான் பாண்டியநாடு முழுமையும் சோழர் ஆதிக் கத்தின்கீழ் வந்தது. இராசராசன் 'பாண்டிய குலாசனி' என்ற விருதை ஏற்றுன். அவனது மகன் இராசராசேந்திரன் காலத்தில் கி.பி. 1018-ல் பாண்டிய நாட்டை ஆள்வதற்குச் சோழ—பாண்டியன் என்ற பிரதிநிதி முதன் முறையாக நியமிக்கப் பட்டதைத் திருவாலங்காட்டுச் செப்பேடு தெரிவிக்கின்றது.[1] அது முதல் குலோத்துங்கள் ஆட்சித் தொடக்கம் வரை, அதாவது சுமார் 50 ஆண்டுக் காலம் (1018-1070), சோழ-பாண்டியர் ஆட்சி நிலவியது. குலோத்துங்கன் காலத்தில் பிரதிநிதிகள் நியமிக்கும் முறை கைவிடப்பட்டது. அவன் காலத்தில் ஐந்து பாண்டியர்கள் சேர்ந்து பாண்டிய நாட்டை விடுவிக்க முயன் றனர். பாண்டிய நாட்டில் சோழர் ஆதிக்கம் தாற்காலிகமாக நிலைகுலைந்தது. குலோத்துங்கன் கடும் போர் புரிந்து பாண்டிய நாட்டை மீண்டும் கைப்பற்ற வேண்டியதாயிற்று. இப் பாண்டியர் எழுச்சியை அடுத்த அத்தியாயத்தில் விவரிப்போம். இங்குச் சோழ-பாண்டியப் பிரதிநிதிகள் ஆட்சியைப்பற்றி மட்டும் கவனிப்போம்.

### சோழன் தலைகொண்ட வீரபாண்டியன் (கி.பி. 946-966)

சோழர் ஆதிக்கத்திலிருந்து பாண்டியப் பகுதிகளை விடுவிக்க வேண்டுமென்று முனைந்து செயல்பட்டவர்களில் சோழன் தலை கொண்ட வீரபாண்டியன் முக்கிய இடத்தை வகிக்கிறுன்,

[1] Sastri : Cholas p. 201.

இவன் இரண்டாம் இராசசிம்மனின் மகன். இவனது கல் வெட்டுகள் மதுரைத் தாலுக்காவில் கீழ்மாத்தூரிலும், திருநெல் வேலி, ராமநாதபுரம் மாவட்டங்களிலும், கன்னியாகுமரி மாவட்டத்தில் நாகர்கோவில், சுசீந்திரம் ஆகிய இடங்களிலும் கிடைத்துள்ளன. இவற்றைக் கொண்டு வீரபாண்டியன் பாண்டிய நாட்டின் தென் பகுதிகளை முதலில் தன்னுட்சிக்கு உட் படுத்தினுன் எனலாம். இவ் வீரபாண்டியன் சில கல்வெட்டுகளில் தன்னைச் ''சோழன் தலைகொண்ட வீரபாண்டியன்'' என்று புகழ்ந்து கொள்கிருன். இது வெறும் தற்புகழ்ச்சியன்று. பாண் டிய நாட்டை விடுவிக்கக்கருதி நடைபெற்ற தீவிரப் போரில் சோழ மன்னரை வென்றதாலேயே இப் பட்டப்பெயர் இவனுல் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கலாம் என்று வரலாற்ருசிரியர்கள் கருதுகின்றனர். இம் மன்னனுக்குச் 'சோழாந்தகன்' அல்லது சோழனைக் கொன்றவன் என்ற விருது இருந்ததையும் இக் கருத் துக்கு ஆதரவாகச் சுட்டலாம். இவனுடன் போரிட்டுத் தலை துணிக்கப்பட்ட சோழ அரசன் யார் என்பதற்கு நேரிடைச் சான்றுகள் இல்லை. வரலாற்ருசிரியர்களும் பல்வேறு கருத்து களைத் தருகின்றனர். இரண்டாம் பராந்தகனுன சுந்தர சோழ னுக இருக்கக்கூடும் என்று முதலில் கூறப்பட்ட கருத்து இப்போது ஏற்றுக்கொள்வதற்கில்லை. இரண்டாம் பராந்தகன் 'பொன் மாளிகைத் துஞ்சிய தேவர்' என்று கன்னியாகுமரிக் கல்வெட்டில் குறிப்பிடப்படுவது இக்கருத்திற்கு முரணுக இருப்பதாகக் கே.வி. சுப்பிரமணிய அய்யர் போன்ருேர் கருதுவர்.[2] வீரபாண்டியனுல் கொல்லப்பட்ட சோழ அரசன் முதலாம் பராந்தக சோழனே ஆவான் என்றும், இது நடந்தது கி.பி. 953-54-ல் என்றும் கல்வெட்டு அறிஞர் ஏ. எஸ். இராமநாத அய்யர் சுட்டிக்காட்டி யுள்ளதே பொருத்தமாகும்.[3] பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி 'தலைகொண்ட' என்ற சொற்ருெடருக்குத் தலையை அறுத்தான் அல்லது கொன்ருன் என்ற பொருள் கூறுவது தவறு என்று சான்றுகளுடன் விளக்கியுள்ளார். 'அவன் முடிமேல் அடி வைத்து' என்ற சொற்ருெடர் பல கல்வெட்டுகளில் குறிக்கப் படுவதைக் கருத்தில் கொண்டு போரில் வென்ற அரசன் தோற்ற அரசனின் முடிமீது காலடி வைக்கும் முறையையே' தலைகொண்ட என்ற சொல் உணர்த்துகிறது என்று கருத்துத் தெரிவித்தார்.[4]

[2] S. I. I. - Vol. III. P. 255; EI-XII p. 124-25; Sastri, K. A. N. The Pandyan Kingdom. pp. 102-3.

[3] E.I - XXV, p. 35.

[4] Ibid: p. 153.

இவ்வாறு 946ஆம் ஆண்டு பாண்டிய அரசை மறுபடியும் நிறுவிய வீரபாண்டியனைப் பற்றி அதிகப்படியான செய்திகள் ஏதும் கிடைத்தில. இவன் ஆட்சி சுமார் இருபது ஆண்டு களே (அதாவது 966 வரை) நீடித்திருக்க வேண்டும். ஏனெனில், சோழர்கள் சற்று வலிமை பெற்றவுடன் பாண்டிய நாட்டைக் கைப்பற்றும் முயற்சிகளைத் தொடங்கினர். அரிஞ்சய சோழனின் மகன் சுந்தர சோழன் என்னும் இரண்டாம் பராந்தகன் பாண்டியரைச் சேவூர் என்னுமிடத்தில் தோற்கடித் தான்.[5] அவன் பாண்டியர் படையை முறியடித்துக் குருதி வெள்ளம் பெருக்கினன் என்றும் அவனது மகன் ஆதித்தன் ஒரு யானையுடன் சிங்கக் குட்டி விளையாடுவது போல் வீர பாண்டியனுடன் விளையாடினன் என்றும் லெய்டன் செப்பேடுகள் கூறுகின்றன. இதிலிருந்து வீரபாண்டியன் தோற்கடிக்கப் பட்டான் என்று தெரிகிறது. சேவூர் வெற்றிக்குப் பிறகு சோழர் படை பாண்டிய நாட்டுக்குள் புகுந்தது. வீர பாண்டியன் மலைக்காடுகளில் புகுந்து மறைந்து கொண்டான் என்று கரந்தைச் செப்பேடுகளும், கன்னியா குமரிக் கல்வெட்டும் கூறுகின்றன. பாண்டியருக்காக இலங்கை மன்னன் ஒரு படை அனுப்பினன். இலங்கைப் படையை நேரிடையாகச் சமாளிக்கச் சோழர் படை, கொடும்பாளூர்ப் பராந்தகன் சிறிய வேளாளர் தலைமையில், இலங்கைக்குள் ஊடுருவியது. இச் செய்தியை மகாவம்சம் உறுதிப்படுத்துகிறது. அதன்படி, இலங்கை மன்னன் நான்காம் மகிந்தன் (956-72), சேனன் என்ற படைத்தலைவனை அனுப்பிச் சோழர் படையை எதிர்க்கச் செய்தான். இதில் சோழர் படை தோல்வியுற்று இலங்கையை விட்டுப் பின்வாங் கியது என்று மகாவம்சம் கூறுகிறது. இக்கூற்றை இலங்கையி லுள்ள 'மிகிந்துகல்வெட்டும்' உறுதிப்படுத்துகிறது. இலங்கைப் படையெடுப்புத் தோல்வியுற்றாலும் பாண்டிய நாடு சோழர் வசமேயிருந்தது. சுந்தர சோழன் தன்னை ''மதுரை கொண்ட இராசகேசரி' என்றும் அவனது மகன் ஆதித்தன் 'வீர பாண்டியன் தலைகொண்ட பரகேசரி' என்றும் கூறிக்கொள்வ தாலும் வீரபாண்டியன் தோற்கடிக்கப்பட்டதை உணரலாம். இவன் போரில் இறந்தான் என்று சொல்வதற்கு லெய்டன் பட்டயத்தைத் தவிர வேறு சான்றுகள் இல்லை. வீரபாண்டியன் சேவூரில் தோற்றது கி.பி. 962ஆம் ஆண்டில் என்றாலும் அவனது கல்வெட்டு கி.பி. 966 வரை கிடைத்துள்ளது. அதற்குப் பிறகு

[5] மேற்படி; p. 153.

[6] EI. Vol. XXII.

பாண்டிய நாட்டில் சோழர்களது கல்வெட்டுகளே கிடைக்கின்ற படியால் அவர்களது ஆட்சி முழுமையாக நிலைபெற்றது என்று கருதலாம்.

**சிவகாசிச் செப்பேடுகள் :** சமீபத்தில் கிடைத்த சிவகாசிச் செப்பேட்டை வழங்கிய வீரபாண்டியன் சோழன் தலைகொண்ட வீரபாண்டியனே ஆவான் என்று சில ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். இச் செப்பேட்டின்படி மானாபரணனுக்குச் சுந்தர பாண்டியன், வீரபாண்டியன் என்று இரு புதல்வர்கள் இருந்தனர். இதில் வீரபாண்டியன் கேரள இளவரசிக்குப் பிறந்தவனாவான். இவனுக்கு 'வீரகேரளன்' 'வினயகஞ்சுகன்' என்ற பட்டங்கள் உண்டு.[7] மதுரைக் கருகிலுள்ள ஆனையூர் ஐராவதேஸ்வரர் ஆலயத்தில் வீரபாண்டியனின் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. அதில் ஒன்று அவனது 10ஆவது ஆண்டில் அவன் கடவுள் அருளால் அரசனானதற்காகச் சில விசேஷ பூஜைகள் இக் கோயிலுக்குச் செய்த செய்தியைத் தெரிவிக்கின்றது. மங்கலபுரம் அரண்மனையான் 'மானாபரணன் திருமாளிகையிலுள்ள' 'வீர கேரளன்' என்ற அரியணையில் வீற்றிருக்கும்போது இக் கட்டளையை ஏற்படுத்தினான் என்று அங்குள்ள கல்வெட்டு அறிவிக்கின்றது.[8] 'மானாபரணன்' என்பது அவனது தந்தையின் பெயரையும் 'வீரகேரளன்' என்பது அவனது விருதுவையும் வைத்து இட்ட பெயர்களாகும். இராமனாதபுரம் பள்ளிமடத்திலுள்ள கோவிலுக்கும் 'சுந்தரபாண்டிய ஈச்சுவரமுடையார்' என்ற பெயர் இருந்ததாக அங்குள்ள வீரபாண்டியனின் கல்வெட்டு உணர்த்துகிறது. இது சுந்தர பாண்டியனுக்கு எழுப்பப்பட்ட பள்ளிப்படைக் கோயிலாகும். இப் பள்ளிப் படை என்ற பழைய பெயரே இப்போது 'பள்ளி மடம்' என்று திரிந்துள்ளது.[9] மற்றொரு விஷயத்தையும் நாம் நோக்க வேண்டும். தந்தை மானாபரணன், தமையன் சுந்தரபாண்டியன், தம்பி வீரபாண்டியன் இம்மூவரையும் முதலாம் இராசாதிராசன் வென்றான் என்று சோழர் சாசனங்கள் தெரிவிக்கின்றன. அச்சோழ அரசன் முதலாம் இராசேந்திரனின் மகனாவான். இவன் கி.பி. 1018 முதல் 1054 வரை அரசாண்டான். இக் காரணங்களைக் கொண்டு பார்க்கும்போது, சிவகாசிச் சாசனத்தை வெளியிட்டவன் சோழன் தலைகொண்ட வீரபாண்டியன் அல்லன், ஆனால் 11ஆம் நூற்றாண்டில் இருந்த 'வீரகேரளன்'

[7] பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக். 183-185.

[8] ARE: 1961-62 p. 16-17.

[9] SII. XIV. No. 79.

என்னும் வீரபாண்டியனுவான் என்று பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியாரின் கருத்தே சரி என்று தோன்றுகிறது.[10] இதைப் பற்றி உரிய இடத்தில் மேலும் காண்போம். சிவகாசிச் செப் பேடுகளை வெளியிட்ட வீரபாண்டியனுக்குச் 'சோழன் தலை கொண்ட' என்ற விருது செப்பேடுகளில் காணப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

எவ்வாருயினும், சோழன் தலைகொண்ட வீரபாண்டியனின் கல்வெட்டுகளில் சோழாந்தகப் பல்லவரையர், சோழாந்தகப் பிரம்மராயர் போன்ற அரசியல் தலைவர்களின் பெயர்களும் காணப்படுகின்றன. குருவித்துறை என்னும் ஊருக்குச் 'சோழாந் தக சதுர்வேதி மங்கலம்' என்ற பெயர் வைக்கப்பட்டது. கீழ் மாத்தூரிலுள்ள கோவிலுக்கு வழங்கப்பட்ட பூந்தோட்டத் திற்குச் 'சோழாந்தகன்' என்று பெயரிடப்பட்டது.[11]

**முதலாம் இராசராசன் ஆட்சியில்:** வீரபாண்டியன் மறை வுக்குப் பின்னர் பாண்டிய மன்னரைப்பற்றிக் குறிப்பேதும் கிடைக்கவில்லை. சோழர் ஆட்சி பாண்டிய நாட்டில் நிலைபெறத் தொடங்கிற்று. எனினும் முதல் இராசராசன் காலத்தில்தான் பாண்டிய நாட்டை முழுமையாகக் கைப்பற்ற முடிந்தது. அமரபுஜங்கன் என்னும் பாண்டியன் சோழரை எதிர்த்துத் தோல்வியுற்ருன் என்று திருவாலங்காட்டுச் செப் பேடுகள் கூறுகின்றன. இவன் சேரனுடன் சேர்ந்து சோழனை எதிர்த்ததாகத் தெரிகின்றது. இவனைத் தோற்கடித்த பிறகு மேலும் தெற்கே சென்று விழிஞத்தையும், காந்தளூர் சாலை யையும் கைப்பற்றினன். இராசராசன் 'பாண்டிய குலாசனி' என்ற பட்டத்தையும் ஏற்ருன். பாண்டியப் பகுதிகள் முழுமை யான சோழராட்சிக்குட்பட்டவுடன் பாண்டி நாடு இராசராச மண்டலம் என்று இராசராசனல் பெயரிடப்பட்டது.

**முதலாம் இராசேந்திரன் ஆட்சியில்:** இம் மன்னனது ஆட்சி யில் தொடர்ந்து பாண்டிய நாடு முழுமையான சோழர் ஆதிக் கத்தின்கீழ் இருந்தது. இவனது ஆரும் ஆண்டில் (கி.பி. 1017) இவன் ஈழத்தின்மீது படையெடுத்து ஈழத்தரசனிடமிருந்து பாண்டியரது பண்டைய மகுடத்தையும் இராச சின்னங்களையும் கைப்பற்றினன். நிலையான நிர்வாக ஏற்பாடுகளையும் இம் மன்னன் காலம் முதல் காண்கிரேம். சுமார் கி.பி, 1018-

[10] பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக். 185.
[11] K. V. Raman, Some Aspects. p. 16-17.

19ஆம் ஆண்டில் முதன்முறையாகப் பாண்டிய நாட்டிற்குத் தனது மகனையே பிரதிநிதியாக நியமித்தான்.[12] இவ்வாறு நியமிக்கப்பட்ட பிரதிநிதிகள் சோழ பாண்டியர் என்று அழைக்கப்பட்டனர். முதல் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டவன் சடையவர்மன் சுந்தர சோழபாண்டியன் என்ற பட்டப் பெயருடன் மதுரையையாண்டான். அடிக்கடி பாண்டிய நாட்டில் எதிர்ப்புகள் வருவதை அடக்கி ஒடுக்கவே இம்முறை கையாளப் பட்டது. மேலும், மக்களது மனத்தில் சோழர்கள் வேறு பாண்டியர் வேறு என்ற நினைவை அகற்றவே 'சோழ பாண்டியர்' என்ற பட்டத்தை வழங்கியிருக்கக்கூடும். இராசேந்திரன் மதுரையில் ஒரு பெரிய அரண்மனையைக் கட்டினான், சோழ பாண்டியர்களுக்கு நிறைய அதிகாரம் கொடுக்கப்பட்டது. அரசு ஆணைகளை அவர்களே பிறப்பித்தனர். சோழர் படைப் பிரிவுகள் பாண்டிய நாட்டில் ஆங்காங்கு வைக்கப்பட்டன. சேர நாட்டின் ஆட்சிப் பொறுப்பும் இவர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. இச் சோழ பாண்டியரின் ஆட்சியைப்பற்றிச் சற்று விரிவாக இங்கு ஆராய்வோம்.

### (1) சடையவர்மன் சுந்தர சோழ பாண்டியன் (கி.பி. 1018-1040)

இவன் சுமார் கி.பி. 1018 முதல் கி.பி. 1040 வரை பிரதிநிதியாக ஆண்டுவந்தான். சேரநாடும் இவனது அதிகாரத்திற்குட்பட்டிருந்தது. தந்தை இராசேந்திரனின் 'திருமன்னி வளர' என்று ஆரம்பிக்கும் மெய்க்கீர்த்தியே இவனது கல்வெட்டிலும் காணப்படுகிறது. இவன் காலத்தில் மன்னார்கோவில், இராசராச சதுர்வேதிமங்கல மென்று வழங்கப்பட்டது. அவ்வூரிலுள்ள கோவில் இராசேந்திர சோழ விண்ணகர் என்றும் வழங்கப்பட்டது.[33] சேரமாதேவிக்கு 'நிகரிலிச் சோழ சதுர்வேதி மங்கலம்' என்றும் அங்குள்ள கோவில் 'சோழேந்திர சிம்மேச்சுரம்' என்றும் வழங்கப்பட்டன.[14] பெருங்குளம், 'உத்தம சோழ நல்லூர்' என்று வழங்கப்பட்டது. இப் பெயர்களிலிருந்து பாண்டிய நாட்டில் சோழர் ஆதிக்கமும் செல்வாக்கும் நன்கு பரவி விட்டதை உணரலாம். சோழரது படைகளும் ஆங்காங்கு வைக்கப்பட்டிருந்தன. கோட்டாறு ஒரு முக்கிய சோழர் படைத்தளமாக இருந்தது. பெருங்குளத்திலும் ஆனை

[12] Sastri : Cholas p. 203.

[13] SII. XIV. No. 144.

[14] மேற்படி. 137.

யூரிலும் படைகள் வைக்கப்பட்டிருந்தன என்று தெரிகின்றது.[15] அப்படியும் இராசேந்திரனின் ஆட்சி இறுதியிலேயே பாண்டிய நாட்டில் எதிர்ப்பும் குழப்பமும் உருவாகியதைக் காண்கிறோம். இதில் மானுபரணன் அவனது இருபுதல்வர்களான சுந்தர பாண்டியன் வீரபாண்டியன் என்ற மூவரும் பெரும்பங்கு கொண்டதாகத் தெரிகின்றது. இதை அடக்கும்பொருட்டு இராசேந்திரன் மகன் முதலாம் இராசாதிராசன் போர் நிகழ்த்த வேண்டி வந்தது. மானுபரணனும் வீரகேரளனும் கொல்லப் பட்டனர். சுந்தரபாண்டியனும் தோற்றோடிவிட்டான்.[16] மேலும், விக்கிரபாண்டியன் என்னும் மற்றொருவன் இலங்கைக்கு ஓடி விட்டான் என்றும் தெரிகின்றது.

சோழர்கள் தங்களது ஆதிக்கத்தைப் பலப்படுத்தப் பல முயற்சிகள் செய்தபோதிலும், பாண்டியர் அவ்வவ்போது எதிர்த்துப் போரிட்டனர். பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி கூறுவதுபோல், இதற்கு ஒரு முக்கியக்காரணம் மக்கள் மனத்தில் தொன்றுதொட்டுப் பாண்டியர்களுக்கிருந்த செல்வாக்காகும். மேலும் சேரநாடும் ஈழநாடும் சோழர்களின் ஆதிபத்தியத்தைக் தடுக்க அவ்வப்போது பாண்டியர்களுடன் கூட்டுச்சேர்ந்து எதிர்ப்பை உருவாக்கியது மற்றொரு காரணமாகும்.[17]

## 2. மாறவர்மன் விக்கிரம சோழ பாண்டியன்

இவன் ஆரம்பத்தில் சிலகாலங்கள் சடையவர்மனுடன் ஒன்று சேர்ந்து ஆட்சி செலுத்திவிட்டுப் பின் தனியாகப் பாண்டிய நாட்டைச் சோழர் சார்பில் ஆண்டிருக்கக்கூடும். இவனது கல்வெட்டுகள் திருநெல்வேலிப் பகுதியில் கிடைத் துள்ளன. ஆற்றூரிலுள்ள இவனது கல்வெட்டு அவ்வூர் இராசாதி ராச சதுர்வேதி மங்கலம் என்று வழங்கப்பட்டதைத் தெரிவிக் கின்றது. சேரமாதேவியிலுள்ள கோவிலின் சுற்றுலைக்கு இராசாதி ராசன் திருச்சுற்றுலை என்று பெயர் வழங்கப்பட்டது.[18] இவற்றி லிருந்து இவன் இராசாதிராசன் காலத்திலும் பதவி வகித்தவன் என்று தெரிகிறது. திருநெல்வேலியை அடுத்துள்ள ஆத்தூரில் இவனது 25ஆம் ஆண்டுக் கல்வெட்டுக் கிடைத்துள்ளது. ஆனல், மதுரை இராமநாதபுரப் பகுதிகளில் இவனது கல்வெட்டுகள் கிடைக்கவில்லை.

15 K. V. Raman: **Some aspects** - p. 19.
16 SII - III p. 56
17 K. A. Nilakanta Sastri. **The pandyan Kingdom**, 9.112.
18 SII - XIV. 186, 189.

### 3. சடையவர்மன் சோழ பாண்டியன்

அடுத்துப் பதவிக்கு வந்த இவன் சோழ அரசன் வீரராசேந்திரனின் மகனுவான் *(1062-1070)*. இவனது கல்வெட்டுகள் எண்ணிக்கையில் குறைவே. அவை திருநெல்வேலிப் பகுதியிலேயே கிடைத்துள்ளன. சுசீந்திரத்தில் இவனது 24, 25ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுகள் கிடைத்துள்ளன.[19] இராசேந்திர சோழபுரத்திலுள்ள அரண்மனையிலிருந்து ஆட்சிபுரிந்தான் என்று இவனது சேரமாதேவிக் கல்வெட்டுக் கூறுகிறது.[20]

### 4. மாறவர்மன் பராக்கிரம சோழ பாண்டியன்

சோழபாண்டியப் பிரதிநிதிகளில் கடைசியாக வந்தவன் இவனே. இவனது இரு கல்வெட்டுகளும் திருநெல்வேலிப்பகுதியிலேயே உள்ளன.

இச்சோழ பாண்டியரது ஆட்சி வெகு காலம் நீடிக்கவில்லை. குறிப்பாக, முதலாம் குலோத்துங்கன் காலத்தில் சோழ நாட்டில் பல பகுதிகளில் குழப்பங்கள் தோன்றின. இவற்றைப் பயன்படுத்திக் கொண்டு பாண்டியர்கள் தங்களது நாட்டைச் சோழர் ஆதிக்கத்திலிருந்து விடுவித்துக்கொள்ள முயற்சிகள் எடுத்துக் கொண்டு வெற்றியும் கண்டனர், 'சோழ-பாண்டியர்' என்ற பிரதிநிதிகளை நியமிக்கும் முறை குலோத்துங்கன் காலமுதல் கைவிடப்பட்டது. பாண்டியரின் எழுச்சியைப்பற்றி அடுத்த இயலில் விரிவாகக் காண்போம், அதற்குமுன் அவர்களுடைய காலத்தில் எப்படிச் சோழரது ஆதிக்கத்தைப் பாண்டிய நாட்டில் புகுத்த முயற்சி செய்தனர் என்பதைச் சற்றுக் காண்போம்.

### ஆட்சி முறை

முதலாம் இராசேந்திரன் காலத்தில் பாண்டிய மண்டலம் நான்கு வளநாடுகளாகப் பிரிக்கப்பட்டது. அவை,

*(1)* இராசேந்திர வளநாடு

*(2)* மதுராந்தக வளநாடு

*(3)* முடிகொண்ட சோழ வளநாடு

*(4)* உத்தம சோழ வளநாடு

அவர்களது ஆட்சியின்போது ஊர்த் தெருக்களிலிருந்து நகரம், வளநாடு மண்டலம் போன்ற பகுதிகளுக்கெல்லாம் பழைய

[19] மேற்படி, ப. V.

[20] மேற்படி. No. 194.

பாண்டியரது பெயர்களை அகற்றி, சோழர்களது பெயரையே வைத்தனர். எடுத்துக்காட்டாக, திருநெல்வேலிப் பகுதியிலுள்ள மன்னார்கோவில் இராசேந்திர சோழ விண்ணகர் என்றும் வழங்கப்பட்டதை முன்னரே கண்டோம். மன்னார்கோவில் இருந்த பகுதி முல்லி நாடு என்றும் இது இராசராசப் பாண்டி நாட்டிலுள்ள முடிகொண்ட சோழ வளநாட்டில் இருந்ததாகவும் கல்வெட்டு உணர்த்துகின்றது. மேலும் கல்வெட்டில் கையொப்ப மிட்டவர்களின் ஊர்ப்பெயர்களெல்லாம் 'சோழர் மயமாக' உள்ளன. எடுத்துக்காட்டாக,[21]

1. மும்முடிச் சோழச் சேரி, (2) அருள்மொழி தேவர் சேரி, (3) நித்த விநோதச் சேரி, (4) சுந்தர சோழச் சேரி, (5) குந்தவைச் சேரி, (6) உலக மாதேவிச் சேரி ஆகிய ஊர்ப் பெயர்களைக் குறிக்கலாம். அம்பாசமுத்திரத்திலுள்ள ஒரு தெருவின் பெயர் 'இராசேந்திர சோழப் பெருந்தெரு' என்று இருந்ததாக அறிகிறோம்,[22] சோழமாதேவி கோவிலிலுள்ள பிராகாரத்திற்கு இராசாதிராசன் திருச்சுற்றுலை என்று பெயரிடப் பட்டது.[23] மேற்கூறிய கருத்துகளிலிருந்து எவ்வளவு தூரம் சோழரது ஆதிக்கம் பாண்டிய நாட்டில் இருந்தது என்பது புலனாகும். சோழர்கள் பாண்டிய நாட்டைக் கைப்பற்றிய சில காலங்களுக்குள் பாண்டியரது பெயர்களை அகற்றிச் சோழர் மணம் கமழச் செய்ய முயன்றனர் என்பது வெளிப்படையாகத் தெரிகின்றது. ஆனால், இம் முயற்சி வெற்றி பெறவில்லை. முதலாம் குலோத்துங்கன் காலத்திலிருந்து பாண்டியர்களின் எழுச்சி தொடங்கியது. அவர்கள் மீண்டும் பாண்டிய நாட்டைக் கைப்பற்றியதும் சோழப் பெயர்களை நீக்கி, மீண்டும் பாண்டியப் பெயர்களை நிலைக்கச் செய்தனர். எடுத்துக்காட்டாக, 'பாண்டிய குலாசனி வளநாடு' என்பது 'பாண்டிய குலபதி வளநாடு' என்று மாற்றப்பட்டது. 'விக்கிரமபாண்டிய வளநாடு', 'வரகுண வளநாடு' போன்ற பெயர்கள் மீண்டும் வழக்கத் திற்கு வந்தன.[24]

21 SII - XIV, 145
22 SII - XIV, 14.
23 மேற்படி - 190.
24 K. V. Raman. Opit. p. 41.

# 7. பாண்டியர் எழுச்சி

## முதல் முயற்சிகள்

சோழ பாண்டியப் பிரதிநிதிகள் பாண்டிய நாட்டில் ஆட்சி புரிந்த காலத்திலேயே பாண்டிய மரபைச் சார்ந்த அரசர்கள் ஆங்காங்கு தங்களது ஆதிக்கத்தை மீண்டும் ஏற்படுத்திக் கொண்டு செயல்படத் தொடங்கினர் என்று ஏற்கெனவே குறித்தோம். அவ்வாறு இயங்கியவர்களில் பலரது பெயர்கள் நமக்குக் கல்வெட்டுகள் வாயிலாகக் கிடைக்கின்றன. இரண்டாம் இராசேந்திர சோழன் காலத்திலிருந்த ஸ்ரீவல்லப பாண்டியன் என்பவன் அவர்களில் ஒருவன் ஆவான். பிறகு அவனுடைய மகன் பாண்டிய வீரகேசரி என்பவன் வீரராசேந்திர சோழ னோடு போர்புரிந்து உயிர் நீத்தான் என்று அச்சோழ மன்னனின் மெய்க்கீர்த்தியால் தெரிய வருகிறது. வீரராசேந்திர சோழன் இறந்த பிறகு சில மாதங்களில் அவனது மகன் அதிராசேந்திரனும் நோய்வாய்ப்பட்டு இறந்தான். பட்டத்திற்குரிய சோழ அரச குமாரன் ஒருவரும் இல்லை. இதனால் இராச்சியத்தில் குழப்பம் ஏற்பட்டிருந்தது. இச் சமயத்தில் சோழ பாண்டியப் பிரதிநிதி களும் இயங்கியதாகத் தெரியவில்லை. பாண்டியர் சிலர் இழந்த தம் நாட்டை மீட்டு ஆங்காங்குத் தங்கள் ஆட்சியை நடத்த ஆரம்பித்தனர், இதே சமயத்தில்தான் சோழராச்சியத்தின் பகுதியாக இருந்த இலங்கையும் தன்னை விடுவித்துக்கொண்டது.[1]

கிழக்குச் சாளுக்கிய மரபைச் சார்ந்த முதலாம் குலோத் துங்கன் கி.பி. 1070ஆம் ஆண்டு சோழர் அரியணை ஏறிய பிறகு தான் சோழராட்சி மீண்டும் வலுப்பெற்றது. இலங்கையை இழந்துவிட்ட சோழ அரசன் பாண்டிய நாட்டையும் இழக்க விரும்பவில்லை. இவனது ஆட்சியின் தொடக்க காலத்திலேயே ஐந்து பாண்டியர்கள் ஒன்றுசேர்ந்து இவனை எதிர்த்ததாக இவனது சிதம்பரம் கல்வெட்டொன்று கூறுகிறது. வடமொழியி லுள்ள இக் கல்வெட்டு இவனது பாண்டிய நாட்டுப் படை

[1] Nilakanta Sastri, K. A. The Cholas. p. 310.

யெடுப்பை விவரமாகக் கூறுகிறது.[2] முறியடிக்கப்பட்ட ஐந்து பாண்டியர்களும் காடுகளில் புகுந்து மறைந்துகொண்டனர். கோட்டாற்றிலுள்ள கோட்டை எரிக்கப்பட்டது. பிறகு கேரளப் படையையும் முறியடித்து வெற்றித் தூண் நாட்டியதையும் இக் கல்வெட்டுக் குறிக்கின்றது. ஐந்து பாண்டியர்களையும் அவர்களுக்குத் துணை நின்ற சேரர்களையும் குலோத்துங்கன் முறியடித்த செய்தியை ''விக்கிரம சோழன் உலா'', ''கலிங்கத்துப்பரணி'' போன்ற இலக்கியங்கள் உறுதிப்படுத்துகின்றன.[3] இது நடந்தது சுமார் கி.பி. 1084ஆம் ஆண்டில். முறியடிக்கப் பட்ட பாண்டியர் ஐவர் யாவர் என்பது விளங்கவில்லை.[4] பாண்டிய நாட்டைக் கைப்பற்றினும் பழையபடி பிரதிநிதிகளை நியமித்து ஆட்சிபுரியும் முறை கைவிடப்பட்டது. அதற்குப் பதிலாகப் பாண்டிய மரபினரிடையே ஆட்சியை ஒப்படைத்து சோழர்க்குத் திறை செலுத்தும் முறை கையாளப்பட்டதாகப் பேராசிரியர் சாஸ்திரி சுட்டிக் காட்டியுள்ளார்.[5] மேலும், பாண்டி நாட்டிலும் கேரளப் பகுதிகளிலும் ஆங்காங்கே நிலைப் படைகளை வைத்து எதிர்ப்புகளை ஒடுக்க வகை செய்தனர். இவற்றிலிருந்து பாண்டிய நாட்டின்மீது சோழரது நேரிடை ஆட்சி இல்லை என்றே சொல்ல வேண்டும். குலோத்துங்கன் பெயரிலேயே வெளியிடப்பட்ட கல்வெட்டுகள் பாண்டிய நாட்டில் அதிகமாக இல்லை. பதிலாக, அவனது காலத்தில் சற்றுச் சிறப்புடன் இருந்த பாண்டியன் சடையவர்மன் ஸ்ரீவல்லபனின் கல்வெட்டுகள் பாண்டிய நாடு முழுவதும் நிறையக் கிடைத்துள்ளன. இவனது 10ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் குலோத்துங்கனின் 31ஆம் ஆட்சியாண்டு (1101) குறிக்கப் பட்டிருப்பது இவன் சோழர்க்கு உட்பட்டிருந்ததை உணர்த்தும்.[6]

### சடையவர்மன் ஸ்ரீவல்லபன் (1090-1116):

இவன் குலோத்துங்கனால் தோற்கடிக்கப்பட்ட பாண்டியர் ஐவருள் ஒருவனாக இருந்திருக்கக்கூடும் என்று நீலகண்ட சாஸ்திரி முதலில் கருதினார்.[7] ஆனால், மேலும் பரிசீலனை செய்ததில், பாண்டியர்கள் முறியடிக்கப்பட்ட பிறகு குலோத்துங்கனின்

[2] SII · III p. 147.

[3] விட்டதண்டெழ மீனவர் ஐவருங் கெட்ட கோட்டினைக் கேட்டிலை போரிலு நீ (கலிங். 368)

[4] இதைப்பற்றிய சுவாமிக்கண்ணுப்பிள்ளை, கிருஷ்ண சாஸ்திரி, ராபர்ட் சீவல் போன்றோரின் கருத்துப்பார்க்க. K.A N. Sastri P.K. P. 120-122.

[5] K.A. Nilakanta Sastri. **The Cholas.** p. 313.

[6] 27 of 1927

[7] **The Cholas.** p. 336, Note 60.

ஒப்புதலுடன் மீண்டும் பாண்டிய ஆட்சிப் பொறுப்பை ஏற்றிருக்கக்கூடும் என்ற கருத்தைத் தெரிவித்துள்ளார். குலோத்துங்கனின் 31ஆவது ஆண்டு (கி.பி. 1101) ஸ்ரீவல்லபனின் 10ஆம் ஆண்டாகக் குறிக்கப்படுவதால் இவனுடைய ஆட்சி கி.பி. 1090-ல் தொடங்கியிருக்க வேண்டும் என்று தெரிகிறது.[8] இவனது இரண்டாம் ஆட்சியாண்டிலிருந்து 26ஆம் ஆண்டு வரையிலுள்ள சுமார் 70 கல்வெட்டுகள் திருநெல்வேலி, இராமனுதபுரம் பகுதிகளில் காணப்படுகின்றன.[9] பல அரிய உண்மைகளை இக் கல்வெட்டுகளிலிருந்து நாம் அறிகின்றோம். 'திருமடந்தையும் ஜயமடந்தையும்' என்று ஸ்ரீவல்லபனின் மெய்க்கீர்த்தி தொடங்குகிறது. இவன் வண்டமிழ்க் கூடலாம் மதுரையில் பட்டாபிடேகம் செய்துகொண்டான்.[10] மதுரை அரண்மனையிலுள்ள அழகிய பாண்டியன் என்ற மண்டபத்தில் 'பாண்டியராஜன்' என்ற பள்ளிக்கூடத்தில் வீற்றிருந்து செங்கோலோச்சியதை ஒரு கல்வெட்டுக் குறிக்கிறது.[11] இவனது அரசிக்கு உலகமுழுதுடையாள் என்ற பட்டப்பெயர் வழங்கியது.[12] இவனது மகன் பிள்ளையார் சுந்தரபாண்டிய தேவர் ஒரு சமயம் கோவில்பட்டி அருகிலுள்ள சோழபுரம் என்னும் ஊரில் தங்கி அவ்வூர்ச் சபையினரின் குறைகளைக் கேட்டு அங்குள்ள சுந்தர பாண்டிய விண்ணகர் என்னும் கோயிலுக்குத் தானம் வழங்கினான். சோழபுரம் சுந்தரபாண்டிய சதுர்வேதிமங்கலமாக மாற்றப்பட்டது. இச் சுந்தர பாண்டியன் அரியணை ஏறவில்லை என்றும் தெரிகிறது.[13] ஸ்ரீவல்லபனுக்கு முன்னரோ அவனுடனே பராக்கிரம பாண்டியன் ஒருவன் ஆட்சி புரிந்திருக்கலாம்.[14] மானாபரணன் என்ற உத்தரமந்திரியும் சேனாதிபதி இராசராச வல்லப நாடாள்வார் என்பவனும் குறிக்கப் பெறுகிறார்கள். இவனது காலத்தில் வேணாட்டில் இரவி கோதைவர்மன் என்பான் ஆட்சி புரிந்து வந்ததை ஒரு கல்வெட்டுத் தெரிவிக்கின்றது. இவன் திருக்கோட்டியூரிலுள்ள அழகிய மாணவாளப் பெருமாள் கோவி

[8] இவனது ஆட்சி தொடக்கம் கி.பி. 1120-22 ஆண்டாக இருக்கும் என்று சொல்லப்பட்ட கருத்துச் சரியென்று தோன்றவில்லை.

ARE: 1962-63 P. 31.

[9] SII - XIV

[10] ARE. 1962-3 p. 31.

[11] திருபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீவல்லபதேவர் மதுரைக் கோயிலில் உள்ள அழகிய பாண்டிய கூடத்துப்பள்ளிக் கட்டில் பாண்டிய ராஜனில் எழுந்தருளியிருந்து...

[12] SII - XIV. 200, 208

[13] Raman, KV. Some aspects. p. 21-22.

[14] மேற்படி: பராக்கிரம பாண்டிப் பேராறு என்று குறிக்கப்படுவதும் இந்த உணர்த்தும்.

லுக்கு ஒன்பதுநாள் திருவிழா நடத்தத் தானம் வழங்கினன்.[15] இவனது பெயரைக் கொண்டே ஒரு வளநாடு ஸ்ரீவல்லப வளநாடு என்று வழங்கலாயிற்று. இவற்றிலிருந்து எப்படி இடையில் வந்த சோழப் பெயர்கள் அகற்றப்பட்டுப் பாண்டியரின் பெயர்கள் மீண்டும் வழக்கில் வரத்தொடங்கின என்பதை நாம் அறியலாம்.

## மாறவர்மன் பராக்கிரம பாண்டியன் (1087-1110)

இவனும் முதலாம் குலோத்துங்கன் காலத்தில் வாழ்ந்தவன். இவனது 23ஆம் ஆட்சியாண்டுக் (கி.பி. 1110) கல்வெட்டு, குலோத்துங்கனின் 40ஆவது ஆட்சியாண்டுடன் இணைந்து கல்வெட்டில் குறிக்கப்படுகிறது.[16] அப்படியென்றால் இவன் சுமார் கி.பி. 1087ஆம் ஆண்டிலேயே அதாவது சடையவர்மன் பதவிக்கு வருமுன்னமேயே அதிகாரம் பெற்றான் என்று தெரிகிறது. ஸ்ரீவல்லபன் கல்வெட்டுகளில் பராக்கிரம பாண்டியனைப் பற்றிய சில குறிப்புகள் வருவதை ஏற்கெனவே சுட்டிக் காட்டியுள்ளோம். ஸ்ரீவல்லபனுடன் இவனும் தொடர்ந்து அரச பதவியை வகித்தான் போலும். இவனது கல்வெட்டுகளில் 'திருமகள் புணர' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி காணப்படுகின்றது.

## சடையவர்மன் பராந்தக பாண்டியன்

முதலாம் குலோத்துங்கன் காலத்தில் வாழ்ந்தவன். இவனது 9ஆம் ஆண்டுப் பெரிய கல்வெட்டொன்று கன்னியாகுமரியில் உள்ளது. இவனது மெய்க்கீர்த்தி 'திருவளர் செயம்வளர தென்னவன்தம் குலம்வளர' என்று தொடங்குகிறது. 'தென்னவர்தம் குலதெய்வம்' என்று பேசப்படுகின்ற குமரி அன்னையைத் தைப் பூசத் திருவிழாவிற்கு வழிபடவரும் அடியார்களுக்கு வசதிகள் அளிக்க நிவந்தமாக ஒரு நாடு முழுவதையும் இவன் வழங்கினன். இவன் சேர மன்னனை வென்று திறைகொண்டு, கூபக மன்னனின் (தென் திருவாங்கூர்) மகளை மணந்து கொண்டதையும் காந்தளூர்ச் சாலையில் கலமறுத்ததையும், விழிஞத்தைக் கைப்பற்றியதையும் நாம் அறிகிறோம். தெலுங்கு வீமனது தென்கலிங்க நாட்டையும் வென்றான். இவ் வெற்றி சோழ அரசன் விக்கிரம சோழனுடன் சேர்ந்து கண்ட வெற்றியாயிருத்தல் வேண்டும். மேலும், தென்காசிக்கு அருகிலுள்ள கருங்குளம் 'தெலுங்க குலகால சதுர்வேதிமங்கலம்' என்று வழங்கப்பட்டது.[16அ]

[15] மேற்படி.
[16] ARE 1909. P. 29; 1910 P. 32.
[16அ] TAS I, pp. 19-25

திருவனந்தபுரத்தில் எழுந்தருளியுள்ள திருமாலுக்குப் பத்து மணி விளக்குகள் அமைத்தான். இவன் சோழ அரசர்கள் குலோத் துங்கனுடனும் விக்கிரம சோழனுடனும் நட்புடன் இருந்தான் என்று தெரிகின்றது. கலிங்கப்போரில் சோழர்களுக்கு உறு துணையாக நின்று உதவி செய்திருக்கக்கூடும் என்று பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி கருதுகிறார்.

### மாறவர்மன் ஸ்ரீவல்லபன் *(1132-1163)*

இவனுடைய கல்வெட்டுகளும் திருநெல்வேலிப் பகுதியில் தான் அதிகமாகக் கிடைத்துள்ளன.[17] திருநெல்வேலியில் முனைய தரையன் என்ற அரியணையில் வீற்றிருந்தான் என்று இவனது 2ஆம் ஆண்டுக் கல்வெட்டு அறிவிக்கின்றது. இவனது 31ஆம் ஆண்டுக் கல்வெட்டு வரதுங்கதேவ நல்லூரில் கிடைத்துள்ளது. அதில் அவன் பிறந்த (பூரட்டாதி) நட்சத்திரத்தன்று அவ்வூர்க் கோயில் விசேட சந்தி ஒன்று நடத்த அவன் 'எழுத்து மண்டபம்' என்ற அலுவலகத்திலிருந்து பிறப்பித்த ஆணை அக் கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளது. 'ஜயமடந்தையும்' என்று இக் கல் வெட்டுத் தொடங்குகிறது.[18] இவனது மற்றச் சில கல்வெட்டு களில் 'பூமகள் ஜயமகள்' என்ற மெய்க்கீர்த்தி காணப்படுகிறது. இவன் சுமார் கி.பி. 1132 முதல் 1162-63 வரை பதவி வகித் திருக்கக்கூடும். திருவிதாங்கூர்ப் பகுதியையாண்ட வீரரவிவர்மன் இவனுக்குத் திறை செலுத்தி வந்தான் என்றும் அறிகிறோம்.[19] இவன் சுசீந்திரம் கோயிலுக்கு நிலதானம் அளித்துள்ளான்.

### சடையவர்மன் குலசேகரன் *(1162-1177)*

மாறவர்மன் ஸ்ரீவல்லபனின் கல்வெட்டுகளில் பிள்ளையார் குலசேகர தேவர் என்று குறிப்பிடப்படுவதால் அவனது மகன் என்று புலப்படுகிறது.[20] திருப்பத்தூரிலுள்ள இவனது ஐந்தாம் ஆண்டுக் கல்வெட்டில் கொடுக்கப்பட்டுள்ள காலக்கணிப்புப்படி அது கி.பி. 1166ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது. இதன்படி கி.பி. 1162ஆம் ஆண்டு இவனது ஆட்சி தொடங்கியிருக்க வேண்டும்.[21] 'பூதல மடந்தை' என்று தொடங்கும் மெய்க் கீர்த்தி இவனது கல்வெட்டுகளில் காணப்படுகிறது. இவனது தந் தையைப் போலவே இவனும் திருநெல்வேலியையே தலைநகராகக்

17 SII. XXV. P. 84
18 243 of 1939-40
19 ARE. 1896. P. 15
20 49 of 1896
21 101 of 1908; I.A Vol. VI. P. 255
Sastri : The Pandyan Kingdom, P. 127

கொண்டு ஆட்சி புரிந்தான். ஆனால், அதே சமயத்தில் பாண்டிய நாட்டு வடபகுதியில் மதுரையைத் தலைநகராகக் கொண்டு பராக்கிரம பாண்டியன் என்பான் ஆண்டு வந்தான். இவர்களின் உறவு என்ன என்பது திட்டவட்டமாக விளங்கவில்லை. ஆனால், இருவரும் சகோதரர்களாக இருந்திருக்கலாம். குலசேகரன் மதுரையைக் கைப்பற்ற எண்ணித் தன் படையுடன் சென்று கி.பி. 1168-69இல் மதுரையை முற்றுகையிட்டான். இதனால் பாண்டிய நாட்டில் உள்நாட்டுக் கலகம் மூண்டது. இலங்கைச் சரிதமாகிய மகாவம்சமும், ஆரப்பாக்கம், திருவாலங்காடு, பல்லவராயன்பேட்டை போன்ற இடங்களில் உள்ள சோழர் கல்வெட்டுகளும் இப்போரின் பல விவரங்களைத் தந்துள்ளன.[22] மதுரை முற்றுகையிடப்பட்டவுடன், பராக்கிரம பாண்டியன் இலங்கை வேந்தன் பராக்கிரமபாகுவின் உதவியை நாடினான். இலங்கையரசன் இலங்காபுரித் தண்டநாயகன் என்ற படைத் தலைவனின் தலைமையில் இலங்கைப் படையை அனுப்பினான். ஆனால், உதவி வருவதற்கு முன்பே குலசேகரன், பராக்கிரம பாண்டியனையும் அவன் மனைவி மக்களையும் கொன்று மதுரையைக் கைப்பற்றிவிட்டான். சிங்கள அரசன் தனது படையை மதுரையை நோக்கி முன்னேறும்படி பணித்தான். இலங்காபுரித் தண்ட நாயகன் தலைமையில் சிங்களவர் வெகுவாக முன்னேறி பாண்டிய சேனையுடன் போர்புரிந்து பல வெற்றிகளைக் கண்டனர். குலசேகர பாண்டியன் சோழனின் உதவியை நாடினான். சோழரின் தலையீடு யாதொரு பயனையும் அளிக்கவில்லை. குலசேகரன் தோற்கடிக்கப் பட்டுப் பாண்டிய நாட்டிலிருந்து வெளியேற்றப்பட்டான். பிறகு இறந்துபோன பராக்கிரம பாண்டியனின் மகனான வீர பாண்டியன் என்பவன் அழைக்கப்பட்டு அரசனாக்கப்பட்டான். இப்பெரும் வெற்றிகளைக் கண்ட சிங்களவர் தொண்டி, திருவேகம்பம் போன்ற பல ஊர்களைத் தாங்கள் கைப்பற்று வதற்கு உதவிபுரிந்த தலைவர்களிடமே அப்பகுதிகளை ஒப்படைத் தனர். குலசேகரன் மீண்டும் ஒரு படைதிரட்டிக்கொண்டு வீரபாண்டியனுடன் போரிட்டு மதுரை மாநகரை விட்டோடும் படி செய்துவிட்டான். இதைக் கண்ட இலங்காபுரித் தண்ட நாயகன் ஈழநாட்டிலிருந்து தனக்குத் துணைப்படை அனுப் பும்படி கோரினான். ஜகத் விஜயதண்ட நாயகன் என்பவன் தலைமையில் பெரும்படை அனுப்பப்பட்டது. இவ்விரு சிங்களத் தலைவர்களும் குலசேகரனைத் தோற்கடித்து வீரபாண்டியனையே மீண்டும் அரியணையில் ஏற்றினர். ஆனால், இதுவும் வெகு நாட்கள் நீடிக்கவில்லை. குலசேகரன் இறுதியில் சோழர்களின்

[22] 20 of 1899; 465 of 1905; 433 of 1924.

உதவியை நாடவேண்டியதாயிற்று. அப்பொழுது சோழநாட்டை ஆண்டுவந்த இராசாதிராசன், பெருமாநம்பிப் பல்லவரையன் தலைமையில் பெரும்படையொன்றை அனுப்பி வைத்தான். ஆனால், இவ்வுதவி பயனொன்றும் அளிக்கவில்லை. இவர்களுக் கிடையே தொண்டி பாசிப்பட்டினம் போன்ற இடங்களில் நடந்த போர்களில் சிங்களப் படையினரே வெற்றி கண்டனர். வீர பாண்டியனே மீண்டும் அரசனாக்கப்பட்டான். மகாவம்சத்தின் கூற்றுக்கும் நமது கல்வெட்டுகளில் கிடைக்கும் சில சம்பவங் களுக்குமிடையே சில வேறுபாடுகளும் முரண்பாடுகளும் இருப் பதைப் பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி அவர்கள் சுட்டிக் காட்டியுள்ளார்.[23] ஆனால், முக்கிய சம்பவங்களில் அவ்வளவு குழப்பமில்லை. சிங்களவர்களின் வெற்றி தமிழ் மக்களுக் களிடையே பேரச்சத்தை உண்டாக்கியது என்றும் இராமேச்சுரக் கோயிலில் அவர்கள் செய்த தீச்செயலையடுத்து அவர்கள் சிவத் துரோகிகளாக கருதப்பட்டனர் என்றும் ஆர்ப்பாக்கம் கல்வெட்டு நமக்கு உணர்த்துகிறது. இறுதியில் இலங்காபுரித் தண்ட நாயகனும் ஜகத்விஜய தண்டநாயகனும் பல்லவராயர் என்ற சோழர் படைவீரனால் தோற்கடிக்கப்பட்டனர் என்றும் அக் கல் வெட்டுக் கூறுகிறது.[24] இராசாதிராச சோழனின் பல்லவராயன் பேட்டைக் கல்வெட்டும் இதை உறுதிப்படுத்துவதோடல்லாமல் நம்பி பல்லவரையன் ஈழத் தளபதிகளைக் கொன்று அவர்களின் தலைகளை மதுரையில் இருந்த கோட்டை வாயிலில் தைப்பித்தான் என்றும் கூறுகிறது. இது எவ்வளவு உண்மையென்று தெரியவில்லை. ஆனால், குலசேகர பாண்டியன் மீண்டும் சுமார் கி.பி. 1169-ல் பாண்டிய நாட்டு மன்னனாக முடிசூட்டப் பெற்றான் என்தில் ஐய மில்லை. 'பாண்டிய நாடு ஈழ நாடாகாதபடி பரிகரித்து'[25] என்று கல்வெட்டுக் கூறுகிறது.

குலசேகரனின் ஆட்சி அமைதியாக இல்லை. மீண்டும் குழப்பங்கள் உருவாயின. தோல்வியுற்ற சிங்கள அரசன் பராக்கிரமபாகு மீண்டும் மதுரையைக் கைப்பற்ற ஏற்பாடுகள் செய்தான். ஊரத்துறை, புலைச்சேரி, வல்லிக்காமம் போன்ற இடங்களில் தனது கப்பல் படையை ஆயத்தம் செய்து வந்தான். இதையறிந்த சோழ அரசன் தனது படையை அண்ணன் பல்லவராயன் தலைமையில் ஈழத்தை நோக்கிச் செலுத்தினான். ஈழத்தரசன் பராக்கிரமபாகுவின் மருமகனான

[23] K. A. Nilakanta Sastri : Op. cit. p. 131-133
[24] SII. VI. No. 456
[25] Ep. Ind. XXI. No. 31.

ஸ்ரீவல்லபனும் சோழர் படைக்கு உதவி புரிந்தான். சோழர் படை ஈழத்துக்குள் புகுந்து புலேச்சேரி, மாதோட்டம் போன்ற இடங்களைத் தாக்கிப் பலத்த சேதம் உண்டாக்கியது. இந் நிகழ்ச்சியின் விவரங்கள் வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள ஒரு கல்வெட்டிலிருந்து நாம் அறிகின்றோம்.[26] இதற்கிடையில் ஈழத்தரசன் குலசேகரனுக்குப் பரிசில்கள் பல அனுப்பி அவனைப் பாண்டிய அரசனாக ஏற்றுக்கொண்டான். பாண்டிய அரசன் குலசேகரனும் சோழர்கள் தனக்குச் செய்த உதவிகளை மறந்து சிங்கள அரசன் பராக்கிரமபாகுவுடன் நட்புறவு கொள்ளத் தொடங்கினான். அதுமட்டுமன்றிச் சோழர்க்கு எதிராகச் செயல் படவும் தொடங்கினான். சோழர்க்குத் துணைபுரிந்து வந்த மறவப் படை வீரர்களையும் ஏழகத்தாரையும் பாண்டிய நாட்டை விட்டு வெளியேற்றினான். மேலும், மதுரைக் கோட்டையில் வைக்கப்பட்டிருந்த சிங்களச் சேனாதிபதிகளின் தலைகளையும் அகற்றினான். இவற்றையறிந்த சோழ அரசன் தனது படைத் தலைவனான அண்ணன் பல்லவரையனுக்குக் குலசேகரனை அகற்று மாறு பணித்தான். அவ்வாறே குலசேகரன் அகற்றப்பட்டு வீரபாண்டியன் என்பவன் முடிசூட்டப் பெற்றான். இந் நிகழ்ச்சி களையெல்லாம் கல்வெட்டு விரிவாகக் கூறுகிறது. இவை சுமார் கி.பி. 1169- 1177 இடையே நடைபெற்றிருக்க வேண்டும் என்று பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி கூறுகிறார்.[27]

வீரபாண்டியனின் ஆட்சியும் சில காலமே நீடித்தது. இவனும் சோழருக்கு எதிராகச் சிங்களரோடு உறவாடத் தொடங்கினான். கி.பி. 1178ஆம் ஆண்டில் மூன்றாம் குலோத் துங்கன் சோழ அரசனாகப் பதவி ஏற்றான். அகற்றப்பட்ட குலசேகர பாண்டியனின் மகன் விக்கிரமபாண்டியன் தனது தந்தை செய்த தவற்றை உணர்ந்து குலோத்துங்க சோழனை அணுகி மீண்டும் அரசுரிமை பெற அவனது ஆதரவை நாடினான். சோழ மன்னனும் இதற்கிணங்கி வீரபாண்டியனோடு போரிட் டான். இதில் வீரபாண்டியன் தோற்கடிக்கப்பட்டு அரசுரி மையை இழந்தான். விக்கிரம பாண்டியன் அரசனாக்கப் பட்டான். வீரபாண்டியனுக்கு உதவிபுரிய வந்த மறவப் படையும் சிங்களப் படையும் முறியடிக்கப்பட்டன. மதுரையில் வெற்றித்தூண் நாட்டப்பட்டது. இவ் விவரங்களைச் சிதம்பரத்தி லுள்ள குலோத்துங்கனின் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது. இதைப்பற்றிய மேலும் சில சுவையான தகவல்களைத் திருக்

[26] 465 of 1905.
[27] K. A. Nilakanta Sastri : The Colas p. 368-72,

கடையூர், திருவிடைமருதூர் போன்ற இடங்களிலுள்ள கல்வெட்டுகள் அளிக்கின்றன. பதவியிலிருந்து அகற்றப்பட்ட வீரபாண்டியன் மற்றொரு முறை எதிர்த்தபோது நெட்டூர் என்னுமிடத்தில் 1189ஆம் ஆண்டில் மீண்டும் தோற்கடிக்கப் பட்டான். பிறகு வேணாட்டுக்குச் சென்று அந்நாட்டு மன்னன் வீரகேரளனின் உதவியை நாடினான். ஆனால், வீரகேரளன் உதவி தர மறுத்து வீரபாண்டியனையும் அழைத்துக்கொண்டு குலோத்துங்கனின் வேளத்தில் சேர்ந்தனர் என்றும், வீரபாண்டி யனின் முடிமீது குலோத்துங்கன் அடி வைத்தான் என்றும் திருக்கடையூர்க் கல்வெட்டும் ஸ்ரீரங்கம் கல்வெட்டும் கூறு கின்றன.[28] இது சுமார் 1189-90-ல் நடைபெற்றது. வீர பாண்டியன் அமைதியுடன் சோழருக்கு அடங்கியே தனது ஆட்சி யைக் கழித்துவிட்டான். இவ் வெற்றிக்குப் பிறகு பாண்டி மண்டலம் 'சோழ பாண்டியன் மண்டலம்'' எனவும், மதுரை நகர் 'முடித்தலை கொண்ட சோழபுரம்' எனவும் மாற்றப் பட்டன. சோழனுக்கும் 'சேர பாண்டியன்-தம்பிரான்' என்று விருது அளிக்கப்பட்டது என்று புதுக்கோட்டை மாவட்டத்தி லுள்ள குலோத்துங்கனின் 34ஆம் ஆண்டுக் கல்வெட்டு கூறு கிறது. இதற்குப் பிறகு 'மதுரையும் பாண்டியன்—முடித் தலையும் கொண்டருளிய' என்ற விருதும் குலோத்துங்கனின் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன.[29]

மேலே கூறப்பட்டவையிலிருந்து பாண்டியர் சிங்களவ ருடனும் சேரருடனும் கூட்டுச் சேர்ந்து பல முறைகள் சோழரைத் தொடர்ந்து எதிர்த்த வண்ணம் இருந்தனர். ஆனால் வெற்றி பெறவில்லை. பாண்டியர்களுக்கிடையே உள்நாட்டுப் போர் களும் பூசல்களும் அவர்களுடைய பலவீனத்திற்கு முக்கிய காரணமாயிருந்தன. இப் பூசல்கள் சோழர்களுக்குச் சாதகமாக அமைந்தன. சோழர்களும் சில தோல்விகள் அடைந்த போதிலும், மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் சோழராதிக்கம் மதுரைமீது நன்கு ஊன்றியது எனலாம். பாண்டிய அரசன் சோழராதிக்கத்திற்குட்பட்டு இயங்க வேண்டியதாயிற்று. இந் நிலையிலிருந்து பாண்டியர் எப்படித் தங்களை விடுவித்துக் கொண்டனர் என்பதை அடுத்த இயலில் பார்ப்போம்.

[28] 254 of 1925 and SII. III 88.
K. A. Nilakanta Sastri. **The Colas** p. 380-81.
[29] மேற்படி ப. 381

# 8. இரண்டாம் பாண்டியப் பேரரசு

*(கி.பி. 1190-1310)*

சுமார் பதின்மூன்றும் நூற்றுண்டுத் தொடக்கத்திலிருந்து பாண்டியர்கள் தம் அடிமைத் தளையை வேருடன் ஒழிக்க முற்பட்டனர். தம்முடைய செல்வாக்கையும் வலிமையையும் பெருக்கிக் கொண்டனர். அந்நூற்றுண்டு இறுதி வரை, சுமார் நூறுண்டு காலத்தில், பாண்டியரின் ஆதிக்கம் உயர்நிலையை அடைந்து, வடக்கே கடப்பை, நெல்லூர்ப்பகுதிகள் வரை பரவியது. அடுத்தடுத்து வந்த ஆற்றல் மிக்க பாண்டிய மன்னர்களின் தலைமையில் இரண்டாம் பாண்டியப் பேரரசு விரை வாக வளர்ந்து தென் இந்திய அரசியலில் வலிமை மிக்க பேரர சாக விளங்கியது.[1] நீண்டநாள் உள்நாட்டுக் கலகங்களாலும், சோழர், சிங்களவர் போன்றோரின் ஊடுருவல்களாலும், பாதிக்கப்பட்டு அவதியுற்ற பாண்டிய அரசு புத்துயிர் பெற்று உயர்நிலையை அடைந்தது. இக்காலம் பாண்டிய வரலாற்றில் புதியதொரு சகாப்தம் ஆகும். இப்பாண்டிய எழுச்சிக்கு அன்று நிலவிய அரசியல் சூழ்நிலைகள் சாதகமாக அமைந்தன. மூன்றும் குலோத்துங்கனுக்குப் பிறகு சோழர் மரபில் வலிமைமிக்க அரசர் யாரும் தோன்றவில்லை. வலிமையான தலைமை இல்லாத கார ணத்தால் சிற்றரசர்கள் பலர் வலிமை பெற்று ஆங்காங்கே தங்களது செல்வாக்கை நிலைநாட்டிக் கொள்ளத் தொடங்கினர். இதன் காரணமாகச் சோழப் பேரரசு நிலைகுலைய ஆரம்பித்தது. பாண்டிய மன்னர்கள் இச்சூழ்நிலையை நன்கு பயன்படுத்திக் கொண்டு தங்களது ஆதிக்கத்தைப் பரப்ப வழிசெய்து கொண் டனர்.

இரண்டாம் பாண்டியப் பேரரசின் வரலாற்றினைத் தொகுத்து எழுதுவதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் ஏராள மாக உள்ளன. பாண்டியரின் கல்வெட்டுகளைத் தவிர அக்காலச் சோழர், போசளர், காடவர், சம்பூவரையர், தெலுங்கச் சோடர், காகதியர் போன்றோரின் கல்வெட்டுகளும் துணை

[1] Sastri, K.A.N. P.K. p. 139.

செய்கின்றன. திருபுவனம் செப்பேடுகள் போன்ற செப்பேட்டுச் சான்றுகளும் உள்ளன. ஆனால், பாண்டியரின் மற்றச் செப் பேடுகள் போல் திருபுவனச் சாசனத்தில் அவர்களின் வம்சாவளி கொடுக்கப்படாதது ஒரு குறை எனலாம். இக் கல்வெட்டுச் சான்றுகளிலிருந்து பாண்டிய அரசர்களின் வெற்றிகள் அவர்கள் வழங்கிய தானங்கள் மற்றும் பல சாதனைகளைப் பற்றியெல்லாம் நாம் விவரங்கள் அறிய முடிகின்றது. ஆனால், அவ்வரசர்களின் வம்ச வரிசையைப் பற்றியும் அவர்களது உறவு முறைகளைப் பற்றிய குறிப்புகளும் அதிகமாகக் காணப்படாதது ஒரு பெரும் குறைபாடாக உள்ளது. ஒரேகாலத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட பாண்டிய அரசர்களது கல்வெட்டுகள் கிடைத்திருப்பதும் ஒரே பெயருடைய பல அரசர்கள் இருந்ததும் சில சிக்கல்களை ஏற்படுத்தியுள்ளன. கல்வெட்டுகளில் கிடைத்துள்ள காலக் குறிப்புகளை ஆராய்ந்து கீல்ஹார்ன், சீவெல், ஜகோவி, சுவாமிக் கண்ணுப்பிள்ளை போன்ற அறிஞர்கள் சில முடிவுகளைக் கொடுத் துள்ளனர். அவற்றின் துணைகொண்டு இக்காலப் பாண்டிய மன்னர்களின் காலத்தை ஒருவாறு வரிசைப்படுத்த முடிகின்றது.

### சடையவர்மன் குலசேகரன் *(கி.பி. 1190-1217)*

விக்கிரம பாண்டியனுக்குப் பிறகு பாண்டிய அரியணை ஏறிய குலசேகரன், அவனது மகன்தானா என்பது நிச்சயமாகத் தெரிய வில்லை. இவனது கல்வெட்டுகள் மதுரை, இராமனாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களில் கிடைத்துள்ளன. இவனது ஆட்சி பாண்டிய நாடு முழுமையும் பரவியிருந்ததுபோல் தோன்றுகிறது, இவனது மெய்க்கீர்த்திகள் 'பூதல மடந்தை', 'பூவின் கிழத்தி', 'பூதல வனிதை' என்ற மூன்று வடிவங்களிலும் தொடங்குகின்றன.[3] மதுரையிலிருந்த இவனது அரண்மனையில் 'புகழாபரணன்' என்னும் கூடத்திலிருந்த பள்ளிக்கட்டில் 'மழவரையன்' என்று வழங்கப்பட்டது.[4] இதைத் தவிரக் 'காலிங்கரையன்', 'முனையதரையன்' என்ற பெயர்களையுடைய அரியணைகளையும் பெற்றிருந்தான்.[5] 'மழவரையன்', 'காலிங் கரையன்' என்ற பெயர்கள் பாண்டிய ஆட்சியில் பொறுப்பு வாய்ந்த அரசியல் தலைவர்களின் பதவிப் பெயர்களாகும் என்பது நினைவிற் கொள்ளத்தக்கது. செம்பொன்மாரி என்ற பகுதிக்கு மழவச் சக்கரவர்த்தி என்பான் தலைவனாக இருந்தான். முன்பு

[2] மேற்படி; p. 140

[3] 5, 14, 13 of 1894

[4] 459 of 1909.

[5] 29 of 1924; 660 of 1916

நடைபெற்ற சிங்களப் படையெடுப்பின்போது சிங்களப் படைத் தலைவன் இலங்காபுரித் தண்டநாயகன் செம்பொன்மாரியைக் கைப்பற்றி மீண்டும் மழவச் சக்கரவர்த்தியிடமே ஒப்படைத் தான் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. திருப்பத்தூரில் உள்ள ஒரு கல்வெட்டு இம் மழவச் சக்கரவர்த்தி குலசேகர பாண்டி யனின் கீழ்ப் பணியாற்றினன் என்று குறிக்கிறது. சேரமா தேவியிலுள்ள இவனது கல்வெட்டு ஒன்று, இவனது மைத்துனன் சேர இளவரசன் கோதை இரவிவர்மன் அவ்வூர்க் கோவிலுக்கு அளித்த நன்கொடையைப்பற்றிக் கூறுகிறது. இதிலிருந்து சேரர் களுடன் இவன் நட்புறவு கொண்டிருந்ததை அறியலாம்.[6] இதே சேர இளவரசன் சேத்தூரில் உள்ள பெருமாள் கோவிலைக் கட்டினன். அதற்குச் 'சேரங்கராயன் விண்ணகர்' என்று பெயரிடப்பட்டது. குலசேகர பாண்டியன் காலத்தில் வேம்பத் தூர்ப் பகுதியில் நிலங்கள் அளக்கப்பட்டு நிலவரி புதிதாக வகுக் கப்பட்டது என்பதும் ஒரு கல்வெட்டின் மூலம் தெரிகின்றது. 'களவழி நாடாள்வான்' என்பவனின் பொறுப்பில் அவ்வேலை நடந்தது.

இவனது காலத்தில் கி.பி. 1205ஆம் ஆண்டில் குலோத்துங்க சோழன், பாண்டிய நாட்டின்மீது மூன்ருவது முறையாகப் படை யெடுத்தான். அதைப்பற்றிய செய்திகளைப் புதுக்கோட்டையில் உள்ள குலோத்துங்கனின் கல்வெட்டுகள் கூறுகின்றன. அதன்படி குலோத்துங்கன் முதலில் கருரில் வீராபிடேகம் செய்துகொண்டு 'சோழ கேரளன்' என்ற பட்டப்பெயரை ஏற்றுக்கொண்ட பிறகு, மதுரையிலும் வீராபிடேகம் செய்துகொள்ள விரும்பினன். ஆனல், குலசேகரபாண்டியன் இதற்கு உடன்படவில்லை என்று அறிந்த குலோத்துங்கன், தான் அவனுக்கு முடி வழங்கியதையும் மறந்து, தனக்கு எதிராகச் செயலாற்றுவதை நினைத்துச் சினம் கொண்டு, பாண்டிய நாட்டின்மீது போர் தொடுத்தான். இவர் களுக்கிடையே மட்டியூர் (இராமநாதபுரம்) கழிக்கோட்டை என்ற ஊர்களில் நடந்த போர்களில் பாண்டியப்படைகள் முறியடிக்கப்பட்டன. குலசேகரபாண்டியன் மதுரையைவிட்டு ஓடிவிட்டான். சோழ அரசன் குலோத்துங்கன் தனது படை யுடன் மதுரை மாநகருள் புகுந்து, அங்குள்ள பாண்டிய அரண் மனையைக் கைப்பற்றினன். தான் எண்ணியவாறு, வீராபி டேகம் செய்துகொண்டு, 'சோழபாண்டியன்' என்னும் பட்டத் தையும் சூட்டிக் கொண்டான். ஆனல் சில ஆண்டுகளுக்குப் பிறகு, பாண்டிய நாட்டைக் குலசேகரனுக்கே மீண்டும் அளித்

[6] 665 of 1916.

தான் என்றும் தெரிகிறது.[7] இச் செய்திகளால் மூன்றும் குலோத்துங்கன் காலத்தில் பாண்டியர்கள் சோழருக்கு அடங்கியே இயங்கினர் என்பது தெளிவாகிறது. இவனது அரசி தரணி முழுதுமுடையாள், அழகர்மலையிலுள்ள சுனை அருகில், ஒரு நந்தவனம் அமைத்த செய்தியை அழகர்கோயில் கல்வெட்டொன்று குறிக்கின்றது.[8] இவ்வரசன், தனது ஆட்சியின் 25ஆம் ஆண்டில், சில ஊர்களை ஒன்றுகச் சேர்த்து இராசகம்பீர சதுர்வேதி மங்கலம் என்ற பெயருடன் அந்தணர்களுக்கு பிரமதேயமாக அளித்தான்.[9]

## முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1216-1239)

கி.பி. 1216ஆம் ஆண்டில் பட்டத்திற்கு வந்த மாறவர்மன் சுந்தரபாண்டியன் குலசேகரனின் தம்பி எனக் கருதப்படுகிறுன். ஏனென்றால், இவ்விருவரும் விக்கிரமபாண்டியனைப் பெரிய நாயனுர் என்று குறிக்கின்றுர்கள். அதுபோல அழகப் பெருமான் என்னும் தலைவனை இருவரும் தங்களது மைத்துனனுகக் குறித்துள்ளார்கள். இச் சான்றுகளிலிருந்து குலசேகரனும் சுந்தர பாண்டியனும் சகோதரர்களாக இருத்தல் வேண்டும் என்று கருதப்படுகின்றது. பாண்டியர் எழுச்சிக்குக் காரணமாயிருந்த பேரரசர்களில் மாறவர்மன் சுந்தரபாண்டியன் முதன்மையானவன். சோழர் ஆதிக்கத்திற்குட்பட்டுப் பாண்டியர் இதுகாறும் இயங்கிய நிலையை மாற்றிச் சோழநாட்டையும் கைப்பற்றிச் 'சோணுடு கொண்டருளிய தேவர்' என்ற சிறப்புப் பெயரைப் பெற்ற பெருமை இவ் வேந்தனுக்கே உரியது. இவனுடைய பெருமைக்குந் தக்கவாறு இவனுடைய கல்வெட்டுகளும் அவற்றிலுள்ள மெய்க்கீர்த்திகளும் அழகிய தமிழ் நடையில் அமைந்துள்ளன. இவனது மெய்க்கீர்த்தி, 'பூமருவிய திருமடந்தையும்' என்ற வாசகத்துடன் தொடங்குகிறது. சிலவற்றில் 'பூமருவிய திருமாலும்' என்ற வாசகமும் காணப்படுகின்றது.[10] இவனது ஏழாம் ஆட்சி ஆண்டில் பொறிக்கப்பட்ட நீண்டதொரு கல்வெட்டு, திருப்பரன்குன்றத்தின் பின்புறக் குகைக் கோயிலில் காணப்படுகின்றது. இவனது ஆட்சியில் நடந்த முக்கியச் சம்பவங்களை அது அழகாகத் தொகுத்து அளிக்கிறது. தங்களுக்கு ஏற்பட்ட அவமானத்தை நீக்கிச் சோழர்கள்மீது பழிவாங்குவதற்காகச் சமயம் பார்த்துக் கொண்டிருந்த சுந்தரபாண்டியன் மூன்றும் குலோத்துங்கன் காலத்திலேயே (1218-19 ஆம் ஆண்டு)

[7] Sastri, K A N. The Cholas: p. 385
[8] 300 of 1929-30.
[9] Ep. Ind. XXV. No. II
[10] 488 of 1916

சோழ ராச்சியத்தின்மீது படையெடுத்தான்.[11] விரைவாக முன்னேறிச் சோழ அரசனைப் போரில் வென்று உறையூர், தஞ்சாவூர் போன்ற நகரங்களைக் கைப்பற்றினான். அங்குள்ள பல மண்டபங்களும் மாளிகைகளும் இடிக்கப்பட்டுக் கொளுத்தப் பட்டன. முற்காலத்தில் சோழன் கரிகாலன் என்பான் தன்மீது பட்டினப்பாலை பாடிய உருத்திரங் கண்ணனாருக்குப் பரிசிலாக வழங்கியிருந்த பதினாறுகால் மண்டபம் ஒன்றுதான் சோழ நாட்டில் இடிக்கப்படாமல் விடப்பட்டதாகவும் மற்றவையெல் லாம் அழிக்கப்பட்டுவிட்டன என்றும் பாண்டியனின் திருவெள்ள றைக் கல்வெட்டுச் சற்று மிகைப்படுத்தியே கூறுகிறது என்றாலும் சோழநாட்டில் பலத்த சேதம் உண்டாக்கினான் என்பது 'தஞ்சையும் உறந்தையும் செந்தழல் கொளுத்தி...கூடமும் மாமதிலுங் கோபுரமு மாடரங்கும், மாடமு மாளிகையு மண்டபமும் பலவிடித்து...செம்பியனைச் சினமிரியப் பொருது சுரம்புகவோட்டி' என்ற மெய்க்கீர்த்தி வாசகங்களால் நன்கு தெரிகின்றது. தோல்வியுற்ற குலோத்துங்கன் தலைநகரைவிட்டு ஓடிவிட்டான். சுந்தரபாண்டியன் சோழர் தலைநகரங்களுள் ஒன்றான பழையாறையில் (கும்பகோணத்திற்கு அருகில் உள்ளது) ஆயிரத்தளி என்னும் அரண்மனையில் வீராபிடேகம் செய்து கொண்டான். பிறகு பிற்கால சோழர்க்கு முக்கிய நகரமாக விளங்கிய சிதம்பரம் சென்று 'பொன்னம்பலம் பொலிய ஆடுவாரை' வணங்கி மனமகிழ்ந்தான் என்றும் இப் பாண்டியனின் மெய்க்கீர்த்தி குறிக்கின்றது.

பின்னர்ப் பாண்டிய அரசன் தன் நாட்டிற்குத் திரும்பும் போது பொன்னமராவதியிலிருந்த தனது அரண்மனையில் தங்கி யிருந்தான். தோற்கடிக்கப்பட்டு நாட்டையிழந்து நிற்கும் சோழ அரசன் குலோத்துங்கனையும் அவனது மகனையும் அழைப்பித்துத் தன்னை வீழ்ந்து வணங்குமாறு செய்து பிறகு அவனது நாட்டை யும் முடியையும் வழங்கினான். இதை இவனது மெய்க்கீர்த்தி பின்வருமாறு கூறுகிறது. '...பெற்ற புதல்வனை நின்பேரென்று முன்காட்டி வெற்றி யரியணைக்கீழ் வீழ்ந்து தொழுதிரப்பத்... ண்டிழந்த சோளபதியென்னுநாமமுந் தொன்னகரும் மீள வழங்கி விடை கொடுத்து விட்டருளி...' இந்நாள் வரை, அதுவும் குறிப்

[11] இங்நிகழ்ச்சியே மூன்றும் இராசராசன் காலத்தில் நடந்ததாகப் பேரா சிரியர் சாஸ்திரி முதலில் கருதினார். (P.K. 143-46) ஆனால் அதற்குப் பிறகு அவரது சோழர் வரலாற்றில் குலோத்துங்கன் இறுதிக் காலத்திலேயே சோழ நாடு பாண்டியரால் கைப்பற்றப்பட்டது என்று சுட்டிக்காட்டியுள்ளார். (Colas: 393 97 இராசராசன் அரியணையேறிய பிறகே பாண்டியர் படை யெடுப்பு நிகழ்ந்தது என்று T.V.S. பண்டாரத்தார் கூறுகிறார், பிற்காலச் சோழர் சரித்திரம்-பக். 173,

பாக மூன்ரும் குலோத்துங்கன் காலத்தில், சோழமன்னர் பாண்டியரைத் தோற்கடித்துப்பின் அவர்களுக்கே மீண்டும் முடியை வழங்கி வந்த நிலையை முற்றிலும் மாற்றி, சோழர் பாண்டியருக்கு அடிபணிந்து கப்பம் கட்டும் நிலையை உருவாக்கிஞன் மாறவர்மன் சுந்தரபாண்டியன். 'சோணுடு கொண்டருளிய தேவர்' என்றும் 'சோணுடு வழங்கியருளிய சுந்தரபாண்டியதேவர்' என்றும் இவனது கல்வெட்டுகள் இவ்வேந்தனைப் பெருமையுடன் குறிக்கின்றன.[12] இந் நிகழ்ச்சிகள் சுந்தரபாண்டியனின் மூன்ரும் ஆட்சி ஆண்டில், அதாவது கி.பி. 1219இல், நடந்தன என்று கருதலாம்.[13]

இவ்வாறு சோழர் தோற்கடிக்கப்பட்டு பாண்டியரின் ஆதிக்கம் சோழநாட்டிலும் பரவி அவரது கை ஓங்கிவரும் நிலையைத் தடுத்து மீண்டும் சமநிலையை உருவாக்க வேண்டி மைசூர்ப் பகுதியை ஆண்டுவந்த போசள அரசர்கள் தமிழக அரசியலில் வெகுவாகத் தலையிட ஆரம்பித்தனர். போசள மன்னன் இரண்டாம் வல்லாளனின் மனைவி சோழ வம்சத்தைச் சார்ந்தவள். தோல்வியுற்ற சோழ அரசன் போசளரின் உதவியை நாடியிருக்கக் கூடும். தவிர, தமிழக அரசியல் குழப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு தங்களது செல்வாக்கைப் பரப்பும் நோக்கமும் இருந்திருக்கலாம். இது எவ்வாருயினும், தோல்வியுற்ற சோழர் சார்பில் வல்லாளனின் புதல்வன் வீரநரசிம்மன் தலைமையில் போசளப்படை கி.பி. 1217இல் ஸ்ரீரங்கத்திற்கு வந்தது என்று தெரிகின்றது.[14] மேலும் தன்னைச் 'சோழகுலரட்சகன்' என்றும் சோழகுலத்தை மீண்டும் நிலவச் செய்தவன் (சோழ ராஜ்ய பிரதிஷ்டாபஞசார்யர்) என்றும் தனது கல்வெட்டுகளில் கூறிக் கொள்கிருன்.[15] சோழரை இக்கட்டிலிருந்து மீட்க வீரநரசிம்மன் புரிந்த வீரச்செயல்களை விவரிக்கின்றது ஒரு கல்வெட்டு. வேருெரு கல்வெட்டு, பாண்டிய யானைக்குப் போசளர் சிங்கமாக (பாண்டிய கஜகேசரி)[16] இருந்தனர் என்று கூறுகிறது. இவற்றை நோக்கும்போது பாண்டிய அரசன் தான் கைப்பற்றிய சோழ நாட்டை மீண்டும் சோழ அரசனுக்கே திருப்பி வழங்கியதற்குப் போசளரின் தலையீடு ஒரு காரணமாய் இருந்தது என்று விளங்கும். 'ஜகன்னுத விஜயம்' என்னும் கன்னட நூலும் சோழரை மீண்டும்-

[12] 362 of 1906

[13] Sastri, K.A.N. The Cholas - p. 395.

[14] Sastri, K.A.N: The Cholas - p. 396

[15] EC. IV. Nl. 63.

[16] E.C. IV. Kr. 63

நிலைபெறச் செய்யவே வல்லாளன் தனது படையை அனுப்பினன் என்று கூறுகிறது.[17]

## மாறவர்மன் சுந்தரனின் இரண்டாம் படையெழுச்சி கி.பி. 1231

கி.பி. 1218இல் மூன்றும் குலோத்துங்கன் இறந்த பிறகு அது வரை அவனுடன் சேர்ந்து ஆட்சிபுரிந்த மூன்றும் இராசராசன் அரியணை ஏறினன். சில ஆண்டுகளுக்குப் பிறகு பாண்டியருக்குச் செலுத்த வேண்டிய திறையைச் செலுத்த மறுத்ததுமன்றி அவர் களுக்கு எதிராக ஒரு படையையும் அனுப்பினன். இது முன் செய்த ஒப்பந்தத்திற்கு முரணனதால் பாண்டிய அரசன் சினம் கொண்டு சோழர் படையை எதிர்க்கத் தனது படையை அனுப்பி ஞன். சோழரது படை பலத்த சேதமடைந்தது. பாண்டியர் படை சோழநாட்டை மீண்டும் கைப்பற்றியது. அரசன் முடிகொண்ட சோழபுரத்தில் வீராபிடேகம் செய்து கொண் டான்.[18] தோல்வியுற்ற சோழ அரசன் மனைவி மக்களுடன் நட்பு நாடான குந்தள நாட்டை நோக்கிச் செல்லும்போது தெள்ளாறு என்னுமிடத்தில் சேர்ந்தமங்கலத்தைத் தலைநகராகக் கொண்டு இயங்கிவந்த சோழச் சிற்றரசன் காடவன் கோப்பெருஞ்சிங்கன் என்பவன் திடீரென்று சோழ அரசனை வழிமறித்துச் சேந்த மங்கலத்திலிருந்த கோட்டையில் சிறைவைத்தான். இதைக் கேள்வியுற்ற போசள அரசன் வீரநரசிம்மன் தனது படையுடன் ஸ்ரீரங்கத்தருகில் தங்கி, தனது படைத்தலைவர்களான அப்பண்ண தண்டநாயகன், கொப்பைய தண்டநாயகன் என்பவர்களை அனுப்பிச் சோழ அரசனைச் சிறையினின்று மீட்டான். இவ் விவரங் ளனைத்தும் திருவேந்திரபுரத்திலுள்ள ஒரு நீண்ட கல் வெட்டும் 'கத்தியகர்ணமிருதம்' என்னும் சமஸ்கிருத நூலும் நமக்கு தொகுத்து அளிக்கின்றன. கோப்பெருஞ்சிங்கனது வயலூர்க் கல்வெட்டு அவன் இராசராசனைத் தெள்ளாற்றில் வென்று சிறைப்பிடித்த செய்தியைக் குறிக்கின்றது. அதே சமயத்தில் பாண்டியர்களைப் போசள மன்னனு வீரநரசிம்மனே எதிர்த்துப் போராடினன். காவேரிக்கரையிலுள்ள மகேந்திர மங்கலம் என்னுமிடத்தில் நடந்த போரில் போசள மன்னன் வெற்றிபெற்முன் என்று 'கருதியகர்ணமிருதம்' கூறுகிறது.

[17] "ராஜராஜ பிர்திஷ்டாபனர்த்தம்" என்று கூறுவதனல் இராசராசன் சோழ அரசனுக்கப்பட்டான் என்று கருத இடமுண்டு குலோத்துங்கனின் இறுதி ஆண்டுகளிலேயே இராசராசனும் சேர்ந்து அரசு புரிந்தானதலால் இவன் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது என்று பேராசிரியர் சாஸ்திரி கருதுகிருர் (The Cholas - P. 397)

[18] முடிகொண்ட சோழபுரம் என்பது கும்பகோணத்திற்கருகே பழையாறை நகராகும்.

போசளர் கல்வெட்டுகளும் இவ் வெற்றியைக் குறிக்கின்றன. பாண்டியர் கல்வெட்டுகள் இந் நிகழ்ச்சியைப் பற்றி ஒன்றும் குறிக்கவில்லை. இந் நிகழ்ச்சிகளின் விளைவாகச் சோழநாடு மீண்டும் இராசராசனிடம் ஒப்படைக்கப்பட்டது. ஆகையால், இரண்டாம் முறையாகச் சோழரின் சார்பாகப் போசளர் பாண்டியரை எதிர்த்துச் சோழ நாட்டை மீட்டுக் கொடுத்தனர். இந் நிகழ்ச்சி கி.பி. 1232இல் நடந்ததாகும். சோழ அரசுக்கு அவ்வப்போது புத்துயிர் அளிக்கும் இம் முயற்சிகள் நீண்டநாள் பயனளிக்கவில்லை. சோழநாட்டை நிரந்தரமாகப் பாண்டிய நாட்டுடன் இணைப்பதற்குப் போசள ஆதிக்கம் சிலகாலம் ஒரு தடையாக இருந்தது. சடையவர்மன் சுந்தரபாண்டியன் பாண் டிய அரியணை ஏறிய பிறகுதான் இத்தடை நீக்கப்பட்டுப் பாண்டியர் செல்வாக்கு வடக்கே நெல்லூர் வரை பரவிற்று. பாண்டிய நாட்டில் போசளப் படையினரின் ஊடுருவலால் குழப்பம் ஏற்பட்டதற்குச் சில கல்வெட்டுகள் சான்று பகர் கின்றன. இக் குழப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு சிலர் திருப்பத்தூர்க் கோவிலில் புகுந்து அதன் கருவூலத்தை உடைத் துக் கொள்ளையடித்தனர் என்றும் பிறகு அவர்கள் பிடிபட்டுத் தண்டிக்கப்பட்டனர் என்றும் சுந்தரபாண்டியனின் 22ஆம் ஆட்சி யாண்டுக் (கி.பி. 1239) கல்வெட்டுக் கூறுகிறது.[19] போசளப் படை ஊரைக் கொள்ளையடிக்காமல் இருப்பதற்காக அதன் தலைவன் மகாபிரதானி போகதண்ட நாயகனுக்குக் கொடுக்க வேண்டிய நிதிக்காக இளையாங்குடிக் கிராமத்து மக்களிடம் விசேஷ வரி வசூலிக்கப்பட்ட விவரத்தை மற்றொரு கல்வெட்டுக் குறிக்கின்றது.[20] இச் செய்திகளிலிருந்து எவ்வளவு தூரம் போசளப் படையினர் பாண்டிய நாட்டில் சேதமும் அச்சமும் விளைவித்தனர் என்பது புலனாகும். தென்திருப்பேரையிலுள்ள விஷ்ணு அரசன் பெயரில் 'ஞானசுமத்திரமண்டபம்' என்னும் மண்டபம் கட்டப்பட்டது. இதிலிருந்து இவ்வரசனுக்கு 'ஞான சமுத்திரன்' என்ற சிறப்புப் பெயர் இருந்தது என்று தெரிகிறது. அவ்வூரும் சுந்தரபாண்டிய சதுர்வேதிமங்கலம் என்று வழங்கப் பட்டது.

திருப்பத்தூரிலுள்ள இவனது கல்வெட்டில் பாண்டிய நாட் டின் பல பகுதிகளில் இயங்கிய அதிகாரிகளின் விவரங்கள் கிடைக் கின்றன.[21] குலசேகரன் என்பான் உத்தர மந்திரியாக பணிபுரிந்

19 170 of 1935-36
20 294 of 1949-50; Raman, K.V., Some aspects: pp. 27-28.
21 176 and 186 of 1935-36.

தான். சோழன் உய்யநின்றுடுவான் குருகுலத்தரையன் என்பான் இராமநாதபுர மாவட்டம் திருத்தங்காவிலுள்ள சிவன் கோவிலி லும் திருமால் கோவிலிலும் பல திருப்பணிகள் செய்தான்.[22] மேலும், மழவர் சக்கரவர்த்தி அல்லது மழவர் மாணிக்கம், கந்தன் காங்கேயன், கப்பளூர் மானாபரணன், மூவேந்தவேளாண் பெருமாநல்லூர்ப் பல்லவரையன், திருபுவனம் அதிகமான் போன் றோர் இவன் கீழ்ப் பணியாற்றினர்.[23]

சுந்தர பாண்டியனின் ஆட்சி அவனது 23ஆம் ஆண்டுவரை அதாவது கி.பி. 1238-39 வரைநீடித்திருந்தது. அவனுக்குப் பிறகு சடையவர்மன் குலசேகரன் என்பான் சிறிதுகாலம் (சில மாதங்கள்) ஆண்டதாகத் தெரிகிறது. அவனது கல்வெட்டோ மற்றச் செய்திகளோ ஒன்றும் கிடைக்கவில்லை. ஆனால் 1238ஆம் ஆண்டிலேயே இரண்டாம் மாறவர்மன் அரியணை ஏறினான்.

## இரண்டாம் மாறவர்ம சுந்தரபாண்டியன் *(1238-1251)*

இவன் காலத்தில் பாண்டிய நாட்டின்மீது சோழர் படை யெடுப்பு ஒன்று நடந்தது. அப்போது மூன்றும் இராஜேந்திரன் சோழ அரசனாயிருந்தான். தந்தையின் காலத்தில் சோழருக்கு ஏற்பட்ட அவமானத்தைப் போக்க எண்ணிச் சோழ நாட்டின் மீது படையெடுத்து இரண்டாம் மாறவர்மன் சுந்தரனைப் போரில் வென்று தனக்குக் கப்பம் செலுத்துமாறு செய்தான். இவனது கல்வெட்டில் 'இருவர் பாண்டிய முடித்தலை கொண் டருளிய நரபதி' என்று கூறப்படுவதால், இவன் பாண்டியர் இருவரோடு போர்புரிந்து வெற்றிபெற்றிருத்தல் வேண்டும், இவ் விருவருள் ஒருவன் சுந்தர பாண்டியனாகவும் மற்றொருவன் அவனுக்கு முன் சிறிது காலம் ஆண்ட இரண்டாம் சடையவர்மன் குலசேகரனாக இருத்தல் கூடும் என்று கருதப்படுகிறது. அப்போது பாண்டியருக்கு உதவியாகப் போசள அரசன் வீரசோமேஸ்வரன் வந்தான். இவன் வீரநரசிம்மனின் மகன். சோழ அரசன் இராசேந்திரனோடு பகைமைகொண்டு அவனைத் தோற்கடித்துப் புறம்காணச் செய்தான் என்று அவனது கல்வெட்டுகளிலிருந்து அறிகிறோம். போசள மன்னன் வீர சோமேஸ்வரனின் கல் வெட்டுகளில் அவன் 'பாண்டியகுல சம்ரட்சகன்' என்று புகழப் படுகிறான்.[24] இவ்வாறு முன்னர், பாண்டியர் சோழரை முறி யடித்தபோது போசளர் சோழரைக் காப்பாற்றினர். இப்போது

[22] 554 of 1922.
[23] Raman K.V., Op.cit. pp. 28-29
[24] Ep. Car. V, pt.-i.

சோழரது கை ஓங்கும்போது பாண்டியருக்கு உதவினர். இவற்றி லிருந்து போசளர் எப்படிப் பக்கம் மாறிமாறி உதவி புரிந்து தங்களது செல்வாக்கைத் தமிழகத்தில் நன்கு அதிகரித்துக் கொண்டனர் என்பது விளங்கும்.[25] பாண்டியருடனும் சோழ ருடனும் போசளர் சம்பந்தம் செய்துகொண்டு மேலும் தமிழகத் துடன் தங்களது உறவை வலுப்படுத்திக்கொண்டனர். மாற வர்மன் சுந்தரபாண்டியன் போசள அரசன் சோமெஸ்வரனைத் தனது 'மாமடி (மாமன்) என்று கூறிக்கொள்கிறான்.[26] திருச்சி யருகிலுள்ள தண்ணனூர்க் கொப்பம் போசளரது இரண்டாம் தலைநகரமாகவே விளங்கியது. அவ்வூரில் போசளரால் எழுப்பிக் கப்பட்ட போசளேச்சுரம் என்ற கோயிலையும், இடிந்த நிலையில் அவர்களது கோட்டையையும் இன்றும் காணலாம்.

## முதல் சடையவர்மன் சுந்தரபாண்டியன் *(1261-1271)*

இரண்டாம் பாண்டியப் பேரரசின் தலைசிறந்த அரசன் இவனேயாவான். இவனது தலைமையில் பாண்டியர் ஆதிக்கம் தமிழகமெங்கும் பரவியதுமட்டுமன்றி ஆந்திரப் பகுதியில் நெல் லூர், கடப்பை வரை ஊடுருவியது. மலைநாடும் கொங்கு நாடும் பாண்டியரின்கீழ் வந்தன. 'எம்மண்டலமும் கொண்டருளிய சுந்தரபாண்டிய தேவர்' என்ற சிறப்புப்பெயர் இவனுக்குப் பொருத்தமாக அமைந்தது. இவன் ஆட்சியில் எல்லாத் துறையி லும் பாண்டியரது புகழ் உச்சநிலையை எய்தியது. இவனுக்குப் பாண்டிய வம்சத்தைச் சேர்ந்த பல இளவரசர்களும் உறவினர் களும் உறுதுணை செய்தனர், அவர்களுள் தலையாயவன் சடைய வர்மன் வீரபாண்டியன் ஆவான்.[27] சுந்தர பாண்டியனின் கல் வெட்டுகளில் 'பூமலர் வளர் திகழ' என்று தொடங்கும் மெய்க் கீர்த்தி காணப்படுகிறது. 'சமஸ்த ஜகதாதார சோம குலதிலக' என்று தொடங்கும் பிரசஸ்தி காணப்படுகின்றது. கி.பி. 1251 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் இவன் அரியணை ஏறினன் என்று திட்டமாகக் கணக்கிடப்பட்டுள்ளது.[28] ஸ்ரீரங்கத்திலுள்ள

[25] தமிழகத்தில் போசளர் செல்வாக்கைப்பற்றிய செய்திகளை S. K. Iyengar "South Indian and her Muhammadan Invaders" என்னும் நூலிலும் K. R. Venkataraman "Hoysalas in Tamil Country என்னும் நூலிலும் விவரமாகக் காணலாம்.

[26] 156 and 138 of 1894.

[27] ஒரே சமயத்தில் பல பாண்டிய அரசர்கள் ஆண்டனர் என்ற கருத்தை எல். டி. சுவாமிக்கண்ணுப் பிள்ளை முதலில் தெரிவித்தார் ஆனால், பிறகு அக் கருத்தை மாற்றிச் சடையவர்மன் என்றும் மாறவர்மன் என்றும் பெயருடைய வர்கள் இருவித அரசவரிசையைச் சேர்ந்தவர்கள் என்ற கருத்தை தெரிவித் தார். ஆனால், இது ஏற்கக்கூடியதன்று என்று பேராசிரியர் நிலகண்ட சாஸ்திரியார் கருதி, கீல்ஹார்ன் போன்றவர்களைப் பின்பற்றித் தமது ஆராய்ச்சி முடிவுகளைத் தந்துள்ளார்.

[28] Ep.Ind. IV-p. 227; I.A. Xliv

இவனது நீண்ட வடமொழிக் கல்வெட்டு ஒன்று இவனது அறச் செயல்களையும் வெற்றிகளையும் விரிவாகக் கூறுகிறது. அவ்வாறே திருநெல்வேலி, சிதம்பரம், திருப்புட்குழி, காஞ்சி போன்ற ஊர்களிலும் பல வடமொழிச் சுலோகங்கள் இம் மன்னனின் வெற்றிகளைப் புகழ்ந்து பாடுகின்றன. தஞ்சை மாவட்டம் திருப்பூந்துருத்தியிலுள்ள கல்வெட்டு இவனது ஆட்சியின் தொடக்ககால நிகழ்ச்சிகளைக் குறிக்கின்றது.[29]

முதலில் இவன் சேரனை வென்று மலைநாட்டைக் கைப்பற்றினான் என்பதைச் 'சேரனுந் தானையுஞ் செருக்களத் தொழிய வாரசும் புலரா மலைநாடு நூற...' என்று மெய்க்கீர்த்தி குறிக்கின்றது. இவன் காலத்தில் சேர நாட்டை அரசாண்ட வீரரவி உதய மார்த்தாண்டவர்மன் என்பவன் சுந்தரபாண்டியனிடம் தோல்வியுற்றிருக்க வேண்டும். இதைக் கொண்டே இவனுக்கு 'ரவி வென்றான்' என்ற விருது இருந்ததை இவனது திருநெல்வேலிக் கல்வெட்டு உணர்த்துகிறது.[30] 'கேரள வம்ச நிர்மூலன்' என்று வடமொழிக் கல்வெட்டொன்று குறிக்கின்றது.[31] பிறகு, இவன் சோழ அரசனை வென்று தனக்குத் திறை செலுத்தும்படி செய்தான். மூன்றும் இராசராசன் காலத்திலேயே பல இன்னல்களுக்குள்ளாகி வலிவிழந்து கிடந்த சோழ நாடு மூன்றும் இராசேந்திரன் காலத்தில் தனது தனித் தன்மையையுமிழந்து, பாண்டிய ஆளுகைக்குட்பட்டுவிட்டது. இதைச் 'சென்னியைத் திறைகொண்டு' என்று சுருக்கமாகவே மெய்க்கீர்த்தி கூறுகிறதால் சோழரை வென்றது ஒரு பெரும் செயலாகக் கூடக் கருதப்படவில்லை என்று தெரிகின்றது. இராசேந்திரனுக்குப் பிறகு பட்டம் பெற்றுச் சோழ நாட்டை அரசாண்ட மன்னன் ஒருவனும் இல்லை. எனவே, இவனோடு சோழரது தனியரசும் முடிவுற்றது (கி.பி. 1279). ஆனால், அப்போது சோழநாட்டில் போசளரின் ஆதிக்கம் அதிகரித்திருந்தது. திருச்சிக் கருகிலுள்ள கண்ணனூரைத் தம் இரண்டாம் தலைமையகமாகக் கொண்டு போசளர் தங்களது அதிகாரத்தைச் செலுத்தி வந்தனர் என்பதை ஏற்கெனவே குறித்துள்ளோம்.[32] ஆகையால், சுந்தரபாண்டியன் அவர்களுடன் சண்டை செய்ய வேண்டியிருந்தது. பெரும்படையுடன் சென்று அவர்களது நகரான கண்ணனூர்க் கொப்பத்தை முற்றுகையிட்டுக் கைப்பற்றினான். அங்கு நடைபெற்ற போரில் போசளவீரர் பலரும் சிங்

[29] 166 of 1894.

[30] 75 of 1927

[31] 179 of 1892.

[32] கண்ணனூர் என்பது திருச்சிராப்பள்ளிக்கு அருகே தற்போது சமயபுரம் என்று வழங்கப்படுகிறது.

கணன் போன்ற தண்டநாயகர் பலரும் கொல்லப்பட்டனர். இதை இவனது மெய்க்கீர்த்தி பின் வருமாறு குறிக்கின்றது.

'பொன்னி நாட்டுப் போசளத்
தரைசர்களைப் புரிசையி லடைத்துப்
பொங்கு வீரப் புரவியஞ் செருவிற
லாண்மைச் சிங் கணன் முதலாய
தண்டத் தலைவருந் தானையு மிழி
பட.........கண்ணனூர்க் கொப்
பத்தைக் கைக்கொண்டருளி
கருநாட ராசனைக் களிறுதிறை
கொண்டு.........'

சுந்தரபாண்டியன் தனது ஏழாம் ஆட்சியாண்டில் அதாவது கி.பி. 1258-க்கு முன்பே இப் பெரும் வெற்றியையடைந்தான். இவனிடம் தோற்ற போசள மன்னன் வீரசோமேச்சுவரனுவான் என்று ஸ்ரீரங்கத்திலுள்ள பாண்டியக் கல்வெட்டுக் குறிக்கின்றது.[33] வீரசோமேச்சுவரன் கொல்லப்பட்டான். அவனது மகன் வீரராமனுதன் மீண்டும் கண்ணனூரைக் கைப்பற்றச் சில முயற்சிகள் செய்தான். ஆனுல், சுந்தரபாண்டியன் ஆட்சி புரியும் வரை இம் முயற்சிகள் வெற்றி பெறவில்லை.

பிறகு சுந்தரபாண்டியனது கவனம் காடவன் கோப்பெருஞ் சிங்கன்பால் திரும்பியது. சுமார் 10 ஆண்டுகளுக்கு முன் இராசராச சோழனைச் சிறைப்படுத்திப் பிறகு போசளரின் தலையீட்டால் விடுவித்தான். இவன் கி.பி. 1243-ல் ஆட்சிக்கு வந்து நீண்ட காலம் அரசியலில் ஈடுபட்டவன். ஒரு சமயத்தில் இவனது ஆதிக்கம் வடக்கே காஞ்சியையும் கடந்து கர்னூல் திராட்சாராமா (கோதாவரி) வரைகூடப் பரவியது. அங்கெல்லாம் அவனது கல்வெட்டுகள் காணப்படுகின்றன.[34] 'சகலபுவனச் சக்கரவர்த்தி' என்னும் விருதையும் ஏற்றுன். சுமார் கி.பி. 1253ல் போசளரைப் பெரம்பலூர் என்னுமிடத்தில் வென்று அவர்களது செல்வத்தையும் பெண்டிரையும் கொண்டதாகக் கூறிக்கொள்கிருன். இது பாண்டியருக்குத் துணையாகச் செய்த போரா என்பது தெரியவில்லை. கி.பி. 1262ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் பாண்டியருக்குத்தான் உதவியதைக் கூறிக்கொள்கிருன். அது எவ்வாருயினும், காடவன் அனுப்பிய திறைப்பொருளை ஏற்க மறுத்து அவனது தலைநக

[33] E.I., iii, pp. 11 and 14.
[34] 198 of 1905; 419 of 1893

ராகிய சேந்தமங்கலஞ்சென்று அதனை முற்றுகையிட்டு அவனுடைய யானை, குதிரைகளையும் பிற செல்வங்களையும் கைப் பற்றிக் கொண்டான்.[35] பிறகு சேந்தமங்கலப் பகுதியை அவனிடமே ஒப்புவித்து அவனைத் திறைசெலுத்தும்படி செய்தான். இவை சுந்தரபாண்டியனின் 'ஏழாம் ஆண்டாகிய கி·பி. 1258க்கு முன்னர் நிகழ்ந்தவை. பிறகு சுந்தரபாண்டியன் கொங்கு நாட்டையும் அதையடுத்துள்ள மகதை நாட்டையும் கைப்பற்றினான். சேலத்திற்கும் ஆர்க்காடு மாவட்டங்களுக்கும் இடையேயுள்ள பகுதிகளுக்கு மகதைநாடு என்று பெயர். வாணகோவரையர் அல்லது வாணாதிராசர் என்னும் சிற்றரசர்களிடம் அப்பகுதி தொன்றுதொட்டு இருந்தது.

பின்னர்ச் சுந்தரபாண்டியனின் திக்குவிஜயம் காஞ்சியின் பக்கம் திரும்பிற்று. அப்போது காஞ்சி ஒரு நிலையான அரசின் பிடியில் இருக்கவில்லை. சிறிதுகாலம் போசளர்கள் ஆதிக்கம் அங்கு இருந்தது. பிறகு தெலுங்கச் சோழர் அப்பகுதியைக் கைப் பற்றினர். இக்கால வரைவில் சுந்தரபாண்டியன் காஞ்சியில் புகுந்து தெலுங்கச் சோழ அரசன் விசயகண்ட கோபாலனைக் கொன்று பிறகு நெல்லூர் வரை சென்று காகதிய அரசன் கணபதியையும் தோற்கடித்து அங்கு வீராபிடேகம் செய்துகொண்டான்.[36] பிறகு கண்டகோபாலன் தம்பியர் வந்து வணங்கவே அவர்களுக்குக் காஞ்சிப் பகுதியை மீண்டும் வழங்கித் தனக்குக் கப்பஞ் செலுத்தும்படி பணித்தான்.

இவ்வாறு பல திக்குகளிலும் சுந்தரபாண்டியனது ஆதிக்கம் பரவியது. மலைமண்டலம், சோழமண்டலம், கொங்குமண்டலம், தொண்டை நாடு, வடக்கே நெல்லூர் போன்ற இப் பரவலான பகுதியை ஆண்ட முதல் பாண்டியப் பேரரசன் இவனே. இதைக் கொண்டே இவனுக்கு 'மகாராஜ ராஜ பரமேச்சுவரன்', 'எம் மண்டலமும் கொண்டருளிய தேவர்', 'எல்லாம் தலையான பெருமாள்' போன்ற சிறப்புப் பட்டங்கள் அளிக்கப்பட்டன.

இவ் வெற்றிகளால் இவனுக்குக் கிடைத்த பெரும் செல்வத்தின் ஒரு பகுதியைப் பலநல்ல காரியங்களுக்குப் பயன்படுத்தினான். தில்லையம்பலத்திலும், திருவரங்கத்திலும் பல துலாபார தானங்களும் மற்றும் பல திருப்பணிகளும் செய்தான். இருகோயில்களையும் பொன் வேய்ந்தும் சிறப்பித்தானாதலால் இவனுக்குக்

[35] காடவன் கோப்பெருஞ்சிங்கனைப் பற்றியும் இப் போர்களைப் பற்றியும் வேறு சில கருத்துகளும் உண்டு. (கே. வி. சுப்பிரமணிய ஐயர், "Historical Sketches of Ancient Dekhan; S. K. Aiyengar, "South India and her Muhamaden invaders"

[36] SII. IV. Nos. 624 and 631.

'கோயில் பொன் வேய்ந்த பெருமாள்' என்றும் 'ஹேம சந்தன ராஜா' என்றும் விருதுகள் அளிக்கப்பட்டன. ஸ்ரீரங்கம் கோயி லில் இவன் முடிசூட்டிக்கொண்டமையோடு பல தானங்கள் செய்ததை இப் பின்வரும் அழகிய மெய்க்கீர்த்திச் சொற்கள் கூறுகின்றன.

'இருபெருங் காவிரி யிடைநிலத் திலங்குந் திருவரங்கம் பெருஞ் செல்வம் சிறப்பப்பன் முறையணி துலாபாரமேறிப் பொன் மலையென்னப் பொலிந்து தோன்றவும் பொன்வேய்ந் தருளிய செம்பொற் கோயிலுள் வளந்திகழ் மாசிலுதைய வெற் பெனத் திருவளர் குலகனி சிங்காசனமிசை மரகத மலையென மகிழ்ந்தினி தேறித்தினகரோ தயமெனச் செழுங்கதிர் சொறியும் கனகமாமுடி கவின் பெறச் சூடி.........'

இவன் திருவரங்கத்திற்குச் செய்த திருப்பணிகள் இவனது செல்வச் செழிப்பை உணர்த்தும் வகையிலும், தான்கண்ட வெற்றிகளுக்கு நன்றி செலுத்தும் முறையிலும் அமைந்தவை. பொன்னால் செய்த திருமாலின் திருமேனி ஒன்று அமைத்தருளி ஞன். கருவறை உட் சுவரையும் மூன்று விமானங்களையும் பொன் வேய்ந்தான். விலையுயர்ந்த நவரத்தின ஆபரணங்கள், முத்தா ரம், பொற்கிரீடம், பொற்கலசங்கள், பொற்குடை போன்றவை களைத் தானமளித்தான். அவற்றில் காடவன் கோப்பெருஞ் சிங்கனிடம் கைப்பற்றப்பட்ட மரகத மாலையும் ஒன்று என்று ஒரு கல்வெட்டுக் கூறுகிறது.[37] சிதம்பரம் கோயிலிலுள்ள மேற்குக் கோபுரம் 'சுந்தரபாண்டியன் கோபுரம்' என்ற பெயரால் வழங் கப்பட்டது. அதையும் இவன் கட்டியிருக்கக்கூடும்.

இவ்வாறு பல திக்குகளிலும் பெரும் வெற்றிகளைக் கண்ட பாண்டிய ஆட்சிக்கே ஒரு புதிய பொலிவும் பெருமையும் அளித்த சுந்தரபாண்டியன் பல விருதுகளால் போற்றப்பட்டது இயற்கையே. 'ராஜசூர்யன்' என்றும் 'க்ஷிதிபதிரவி' என்றும் அழைக்கப்பட்டான். காஞ்சியையும் கைப்பற்றியதால் 'காஞ்சீ புரம் கொண்டான்' என்றும் 'காஞ்சீபுரவரதீசுவரர்' என்றும் அழைக்கப்பட்டான்.[38] எல்லா நாட்டிற்கும் தலைவனாக விளங் கினான் என்பதை உணர்த்த 'எல்லாந் தலையான பெருமான்' என்ற விருதும் இவனுக்கு வழங்கப்பட்டது.[39] இவ் விருதை அவனது

[37] Ep Ind. III - pp. 7-17, இத் திருப்பணிகளை ஸ்ரீரங்கம் கோவில் பேரிலர்றுன் "கோயிலொழுகு"ம் குறிக்கின்றது.

S. K. Aiyengar: South India and Her Muhammadan Invaders, p. 48-50.

[38] 64 of 1927

[39] Raman K.V., Op. Cit. 9-30

நாணயங்களிலும் அச்சிட்டான். இவன் தனது பிறந்த சித்திரைத் திங்கள் மூலநாளில் திருவானைக்காத் திருக்கோயிலில் 'சேரனை வென்றான் திருநாள்' என்னும் திருவிழாவை ஆண்டு தோறும் நடத்தினான்.[40] இவன் இலங்கை அரசனையும் தனக்குத் திறை செலுத்துமாறு செய்ததால் 'கோதண்டராமன்' என்ற விருதை யும் ஏற்றான் என்று எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் அவர்கள் கருதுவர். இவ்விருது ஏற்றவன் இவனுக்குப் பிறகு வந்த ஒரு சுந்தரபாண்டியன் என்று நீலகண்ட சாஸ்திரி கருதுவர்.[41] அழகர் கோயிலில் 'கோயில் பொன்வேய்ந்த பெருமாள் திருமண்டபம்' என்ற மண்டபத்தையும் இவன் கட்டினான்.[42]

சுந்தரபாண்டியனின் பல வெற்றிகளுக்கும் இவனது சகோ தரர்களும் நெருங்கிய உறவினர்களும் உறுதுணையாக இருந்தனர் என்பது தெரிகின்றது. அவர்களில் குலசேகரன், மாறவர்மன் விக்கிரம பாண்டியன், வீரபாண்டியன் என்பவர்கள் குறிப்பிடத் தக்கவர்கள். குலசேகரன் என்பவன் 'அண்ணாழ்வி' என்று சுந்தரபாண்டியனின் கல்வெட்டில் குறிக்கப் பெறுகிறான்.[43] இவனே இரண்டாம் சடையவர்மன் குலசேகரனாக இருக்கலாம் என்று சாஸ்திரி கருதுகிறார்.[44] மேலே கடைசியாகக் குறிக்கப் பட்ட வீரபாண்டியனைப் பற்றிய செய்திகளைப் பின்னர் நோக்கு வோம்.

சுந்தரபாண்டியனின் கடைசி ஆட்சியாண்டு எது என்பது நிச்சயமாகக் கூறமுடியவில்லை. அவன் பத்தொன்பது ஆண்டு களுக்குச் சற்றுக் கூடுதலாக ஆண்டிருக்கக்கூடும் என்று கருதப்படு கின்றது. அதாவது சுமார் கி.பி. 1270-71 வரை ஆண்டிருக்கக் கூடும் என்று கருதலாம்.[45]

### சடையவர்மன் வீரபாண்டியன் (1253-1274)

இம் மன்னன் சுந்தரபாண்டியனுக்குத் துணைநின்று அவனுடைய பல வெற்றிகளிலும் பங்கு கொண்டவன். ஏறக் குறைய கி.பி. 1253 முதல் 1274-75 வரை இவனுடைய கல்

[40] 28 of 1937-38

[41] "இலங்கை காவலனையும் யிறைகொண் டருளி. . . . . ."
Aiyengar S. K., Op. Cit p. 253.

[42] 85 of 1928-29

[43] ARE. 1914 Part ii

[44] மன்னார்குடியில் "விக்கிரம பாண்டிய மண்டபம்" என்று சுந்தர பாண்டியனின் கல்வெட்டொன்றில் குறிக்கப்படுகின்றது. (90 of 1897)

[45] K.V. Subramanya Aiyar, "Historical Sketches of Ancient Dekhan" p. 168; Sastri K.A.N: Op. Cit. p. 173.

வெட்டுகள் திருநெல்வேலி, இராமனுதபுரம், புதுக்கோட்டைப் பகுதிகளில் கிடைத்துள்ளன.[46] காஞ்சிபுரப் பகுதியிலும் சில கிடைத்துள்ளன. இவனது மெய்க்கீர்த்தி 'திருமகள் வளர' என்று தொடங்குகிறது. ஈழம், கொங்கு, சோழநாடு இவற்றைக் கைப்பற்றியதையும் சிதம்பரத்தில் இவன் வீராபிடேகமும் விஜயாபிடேகமும் செய்துகொண்ட செய்தியும் இவன் கல்வெட்டு களில் குறிக்கப்படுகின்றன. தில்லையில் 'வீரபாண்டின் திரு மண்டபம்' என்ற மண்டபம் உள்ளது.[47] ஈழப்போரில் அந்நாட்டரசருள் ஒருவனைக் கொன்று மற்ருெருவனுக்கு முடிசூட்டியதும் திருக்கோணமலை திரிகடகிரி என்பவற்றில் மீன் கொடி பொருத்தியதும் சொல்லப்பட்டிருக்கின்றன. இவை சுந்தரபாண்டியனுடன் சேர்ந்து பெற்ற வெற்றிகளாகும். இவன் சுந்தரபாண்டியனுடன் சேர்ந்து ஆட்சி புரிந்ததாகக் கருதப்படுகின்றது. இவன் காலத்தில் பாண்டியர்கள் ஒற்றுமையுடன் செயல் புரிந்ததால் பல வெற்றிகளைக் காணமுடிந்தது எனலாம்.

### முதலாம் மாறவர்மன் குலசேகரன் *(1268-1311)*

இவனும் சுந்தரபாண்டியனோடு சேர்ந்து சுமார் மூன்று ஆண்டுகள் *(1268 முதல் 1271 வரை)* ஆட்சிபுரிந்தான். சுந்தர பாண்டியன் ஆட்சி முடிந்த பிறகு தொடர்ந்து சுமார் 40 ஆண்டுக் காலம் அரசாண்டான். 'கலேஸ்தேவர்' என்று முகமதிய ஆசிரியர்களும் 'அஷார்' என்று மார்கோபோலோவும் இவனைக் குறித்துள்ளனர். இவன் காலத்தில் பாண்டியநாடு பாண்டிய அரசர் ஐவரால் ஆளப்பட்டதாகவும் அவர்களுள் மூத்தவனும் தலைசிறந்தவனும் இவனே என்றும் மார்க்கோ போலோ என்னும் வெனிஸ் நாட்டு ஆசிரியர் குறித்துள்ளார். மேலும், பாண்டிய சகோதரர்கள் ஒருவருடன் ஒருவர் சண்டை போடாதவாறு அவர்களது தாயார் அமைதி காத்து வருகிருர் என்றும், அவருக்குப் பிறகு அவ்வமைதி காக்கப்படுவது நிச்சய மில்லை என்றும் மார்கோபோலோகுறித்துள்ளார். ஒரே சமயத்தில் பல பாண்டிய சகோதரர்கள் ஆண்டு வந்ததை மகமதிய ஆசிரியர் வாசாபின் குறிப்பும் இலங்கை வரலாற்று நூலான மகாவம்சமும் குறித்துள்ளன. அவர்களுள் சிறந்தவன் குலசேகரன் என்றும் அவன் சுமார் 40 ஆண்டுகள் நாட்டை ஆண்டான் என்றும் வாசாப் குறித்துள்ளார். இதை உறுதிப்படுத்தும் வகையில் 13ஆம் நூற்றாண்டுப் பிற்பகுதிக் கல்வெட்டுகளில் பல பாண்டிய அரசர்களின் பெயரில் வெளியிடப்பட்டுள்ளன. அவர்களில் மாற

[46] I A. Xlin. p. 196

[47] 616 of 1929-30. சதாசிவப் பண்டாரத்தார், "பாண்டியர் வரலாறு" பக்கம் 136.

வர்மன் விக்கிரமபாண்டியன், சடையவர்மன் சுந்தரன், சடைய வர்மன் வீரபாண்டியன், மாறவர்மன் ஸ்ரீவல்லபன் (1257) போன்றோரின் பெயர்களிலேயே கல்வெட்டுகள் ஆங்காங்குக் கிடைத்துள்ளன. மாறவர்மன் சுந்தரன் காலத்தில் பாண்டியப் பேரரசு தென் இந்தியாவில் பலபகுதிகளிலும் ஆட்சி புரிந்ததன் காரணமாய் அப் பகுதிகளை நன்கு இணைக்கும் பொருட்டுப் பல சகோதரர்கள் ஒன்றாகச்சேர்ந்து ஒவ்வொருவரும் ஒவ்வொரு பகுதியை ஆண்டிருக்கக்கூடும் என்று பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் குறிக்கின்றார்.

மாறவர்மன் குலசேகரனின் கல்வெட்டுகள் தமிழ்நாட்டில் பல பகுதிகளிலும் காணப்படுகின்றன. 'தேர்போல்' என்ற சொற்களுடன் அவனது மெய்க்கீர்த்தி தொடங்குகின்றது. சோழநாடு, கொங்குநாடு, மலாடு (சேதிநாடு), தொண்டை நாடு, தெலுங்குநாட்டுப்பகுதி, மலைநாடு இவையெல்லாம் இவனுக்குத் திறைசெலுத்தியதைக் கீழ்வரும் வரிகளில் காண லாம்.

'கானிலை செம்பியன் கடும்புலி யாளவும்
மீனம் பொன்வரை மேருவி லோங்கவும்
சிங்கணம் கலிங்கந் தெலிங்கஞ் சேதிபம்
கொங்கணல் குதிரம் போசளங் குச்சரம்
முறைமையி னுறு முதுநல வேந்தர்
திறைமுறை காட்டி சேவடி வணங்க...'

இவனது ஆட்சித் தொடக்கத்திலேயே சுமார் கி.பி. 1274-ல் சேர மலைநாடாகிய திருவிதாங்கூர் என்ற பகுதியின்மீது படை யெடுத்துக் கொல்லம் என்ற பெருநகரைக் கைக்கொண்டான். அது பற்றியே இவனுக்குக் 'கொல்லங் கொண்ட பாண்டியன்' என்றும் 'சேரனை வென்றான்' என்றும் பட்டங்கள் வழங்கப்பட்டன.[48] சோழநாடு, சேதிநாடு, தொண்டை நாடுகளிலும், இவனது கல் வெட்டுகள் கிடைத்திருப்பதால் அவை இவன் ஆட்சிக்கு உட்பட்டிருந்தன என்பது விளங்குகிறது. இவை ஏற்கெனவே முதல் சடையவர்மன் காலத்திலேயே பாண்டியப் பேரரசின்கீழ் வந்துவிட்டன. இவன் காலத்தில் அவை தொடர்ந்து பாண்டிய ரிடமே இருந்தன. இதைக்கொண்டே குலசேகரனும் சுந்தர பாண்டியன் போலவே 'எம்மண்டலமும் கொண்டருளிய' என்ற விருதைப் பெற்றான். திருநெல்வேலியிலுள்ள இம் மன்னனது

[48] ARE 1927 Part ii.

கல்வெட்டு சேரர், சோழர், போசளர் இவர்களைப் போரில் வென்றபோது கிடைத்த பொருள்களைக் கொண்டு திருநெல் வேலிக் கோயிலின் பிராகாரங்களைக் கட்டினான் என்று அவ்வூர்க் கல்வெட்டு கூறுகிறது.[49] கொங்குநாடும் பாண்டியர் ஆதிக்கத் தின்கீழ் இருந்தது. கருரைத் தலைநகராகக் கொண்டு ஒரு பாண்டியன் அதைக் கண்காணித்துவந்தான் என்று முகமதிய ஆசிரியன் வாசாப் குறித்துள்ளான்.[50]

குலசேகரன் சுமார் கி.பி. 1284-ல் ஈழத்தின்மீது படை யெடுத்தான். அப்பொழுது மூன்றும் பராக்கிரமபாகு இலங் கையை ஆண்டுவந்தான். இந்த ஈழப்படையெடுப்பைப் பற்றிய விவரங்கள் மகாவம்சத்தில் காணப்படுகின்றன.[51] அதன் கூற்றுப் படி குலசேகரனும் அவன் தம்பிமார்களும் தங்களது சிறந்த படைத்தலைவனை ஆரியச் சக்கரவர்த்தியின் தலைமையில் ஒரு பெரும் படையை அனுப்பினர். அப் படைத்தலைவன் பல பகுதி களைக் கொள்ளையிட்டு அழித்துச் சுபகிரி என்னும் நகரிலிருந்த பெரும் கோட்டையையும் கைப்பற்றினான். இறுதியில் அங்கு இருந்த புனிதச் சின்னமாகப் போற்றப்பட்ட புத்தபிரானது பல்லை அபகரித்துக் கொண்டு பாண்டிய நாட்டிற்குத் திரும்பி னான். இலங்கை வேந்தன் குலசேகர பாண்டியனைப் பணிந்து நட்புரிமை கொண்டு அதனை மீட்டுச் செல்ல வேண்டியதாயிற்று. ஈழப்போரில் பாண்டியர் படையின் தலைவனை 'மதிதுங்க தனிநின்று வென்றான் பெருமாள் ஆரிய சக்கரவர்த்தி' செவ் விருக்கை நாட்டிலுள்ள சக்கரவர்த்தி நல்லூரைச் சார்ந் தவன் என்று ஒரு கல்வெட்டு அறிவிக்கின்றது.[52] அவன் ஸ்ரீரங்கம் கோயிலுக்கு வழங்கிய தானங்களை அது குறிக் கின்றது. மாறவர்மனின் அரியணையைப் பற்றிய சில குறிப்புகள் கிடைத்துள்ளன. உறையூர்க் கூற்றத்தில் 'வீரதாவளம்' என்னும் அரண்மனையில் 'கச்சிக்கு வாச்சான்' என்னும் அரியணை இருந்தது.[53] அரண்மனைக்கு 'உய்யக்கொண்டான் திருமாளிகை' என்று மற்றொரு பெயரும் உண்டு.[54] அவ்வாறே சயங்கொண்ட சோழபுரத்திலுள்ள அரண்மனையில் 'காலிங்கரையன்' என்ற அரியணை இருந்ததாகவும் நாம் அறிகிறோம்.[55] சோழநாடு

[49] 29 of 1927

[50] Elliot & Dowson, Vol. III - p. 54.

[51] S. Krishnaswami Iyengar: South India and Her Muhammadan Invaders p. 57

[52] 7 of 1936-37.

[53] 319 of 1950.

[54] 242 of 1941-42

[55] ARE 1949-50

பாண்டியப் பேரரசோடு நன்கு இணைக்கப்பட்டுவிட்டதை இவை குறிக்கும்.

குலசேகரன் கீழ்ப் பணிபுரிந்த சிற்றரசர்களுள் வாணாதரையர் என்னும் மரபினர் குறிப்பிடத்தக்கவர்கள். அவர்களில் காலிங்கரையன் என்பவன் குலசேகரனின் நன்மைக்காகப் பல அக்கிரகாரங்களும் பல கோவில்களும் தோற்றுவித்தான் என்று இளையாங்குடி வேணுகோபாலர் கோவிலிலுள்ள கல்வெட்டுக் கூறுகிறது. குலசேகரனின் காலத்தில் குலசேகர மாபலிவாணாதரையன் என்பவனைப்பற்றியும் அறிகிறோம். புதுக்கோட்டை நாட்டிலுள்ள கோனாடு இவன் மேற்பார்வையில் இருந்ததாகத் தெரிகின்றது. ஸ்ரீவில்லிபுத்தூர், அழகர்கோவில் போன்ற இடங்களிலுள்ள கல்வெட்டுகள் மூலம் இவனது தானங்களைப் பற்றிப் பல விவரங்களை அறிகிறோம். சடையவர்மன் சுந்தரபாண்டியன் தனது பேராற்றலால் பாண்டியர் ஆதிக்கத்தைப் பல திக்குகளிலும் பரவச் செய்து பாண்டியப் பேரரசை நிறுவினான் என்றால் அதைச் சுமார் 44 ஆண்டுக் காலம் கட்டிக்காத்து, பலம் குன்றாதவாறு கண்காணித்த பெருமை மாறவர்மன் குலசேகரனுக்கு உண்டு. இவ்விரு வேந்தர்களும் 'எம்மண்டலமும் கொண்டருளிய' என்ற விருதை ஏற்றது மிகவும் பொருத்தமே. மாறவர்மன் குலசேகரனுக்குப் பிறகு பாண்டியநாடு மீண்டும் உள்நாட்டுக் கலகத்தால் பாதிக்கப்பட்டுத் தனது ஆதிக்கத்தையும் செல்வாக்கையும் இழக்கத் தொடங்கியது.

### மார்கோபோலோவின் குறிப்புகள்

குலசேகரனின் (கலேஸ்தேவரின்) 40 ஆண்டுக் கால ஆட்சி வளமிக்க ஆட்சியாக இருந்தது என்று வாசாப் புகழ்ந்துள்ளார். அரசு கருவூலத்தில் 1200 கோடிப்பொன் சேமிக்கப்பட்டிருக்கிறது என்றும் குறித்துள்ளார். 'இவன் காலத்தில் காயல் பட்டினம் முக்கியத் துறைமுகமாகத் திகழ்கிறது. ஆர்மோஸ், ஏடன் அரேபியா போன்ற மேலைநாடுகளிலிருந்து கப்பல்கள் குதிரைகளையும் மற்றப் பொருள்களையும் கொண்டு வருகின்றன. அங்கு வணிகர் பெருவாரியாக கூடுகின்றனர். அரசன் செல்வச் செழிப்புடன் திகழ்கிறான். விலையுயர்ந்த ஆபரணங்களை அணிந்துள்ளான்; இப் பெரிய நாட்டை நீதிநெறி வழுவாமல் ஆள்கிறான்; உள்நாட்டு, வெளிநாட்டு வணிகர்களுக்கு நல்ல ஆதரவு அளிக்கிறான்; அவர்கள் இவனது நாட்டிற்கு வருவதை மிகவும் விரும்புகிறார்கள்' என்று வாசாப் குறித்துள்ளார்.[56] மாறவர்மன் குல

[56] S. K. Iyengar Op.Cit p. 55

சேகரன் காலத்தில் அவனது பிரதிநிதியாகப் பல பகுதிகளில் சில பாண்டிய அரசர்கள் ஆண்டு வந்தனர் என்று மேலே குறிப்பிட்டோம். இவர்களை இளைய அரசர்கள் என்று கூறலாம். அவர்களுள் சடையவர்மன், சுந்தரபாண்டியன், மாறவர்மன் விக்கிரம பாண்டியன், மாறவர்மன் வீரபாண்டியன் என்போர் குறிப்பிடத் தக்கவர்கள். அவர்களைப் பற்றிக் கிடைத்துள்ள சில குறிப்புகளை இங்குச் சற்று நோக்குவோம்.

### சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி 1276-1292-93)

இவன் சுமார் கி.பி. 1276 முதல் 1292-93 வரை பதவி வகித்தவன். மார்கோபோலோ இவனைச் 'சொந்தர் பாண்டி தேவர்' என்றும் வாசாபு 'சுந்தர் பாண்டி' என்றும் குறித்துள்ளனர். ஹிஜிரா வருடம் 692 (1292)-ல் இவன் இறந்ததாக வாசாபு குறித்துள்ளார். இவனது கல்வெட்டுகள் தஞ்சை, தென் ஆர்க்காடு, சேலம், செங்கல்பட்டு போன்ற பகுதிகளில் கிடைக்கின்றன. இவனுக்குக் கருவூர் தலைநகராயிருந்தது என்பர்.[57]

### மாறவர்மன் விக்கிரமபாண்டியன் (1283-1296)

இவன் தனது கல்வெட்டில் குலசேகரனை 'அண்ணாழ்வார்' என்று குறிப்பிடுவதால் அவனுடைய தம்பி என்று நிச்சயமாகச் சொல்லலாம்.[58] மேலும் பாண்டியநாடு ஐந்து சகோதரர்களால் ஆளப்படுகின்றது என்று வாசாபும் மார்கோபோலோவும் குறிப்பிட்டுள்ளது உண்மையெனத் தெரிகிறது. இவனது வடமொழிக் கல்வெட்டுகளில் சமஸ்த புவனேக வீரன் என்றும் தமிழ் சாசனங்கள் 'திருமகள் ஜயமகள்' 'திருமலர் மாது' என்ற சொற்றொடர்களுடன் தொடங்குகின்றன. சிதம்பரத்திலுள்ள இவனது கல்வெட்டொன்று பாண்டியர் வேணாட்டையும் காகதிய நாட்டையும் கைப்பற்றியதைப் பற்றிக் குறிக்கின்றது.[59] இவனுக்குப் 'புவனேக வீரன்' என்ற விருது இருந்தது. இவ் விருது மாறவர்மன் குலசேகரனுக்கும் இருந்தது. ஆகையால் 'புவனேக வீரன்' என்ற பெயர் பொறிக்கப்பட்ட நாணயத்தை இவர்களில் ஒருவன் வெளியிட்டிருக்க வேண்டும். 'ராஜாக்கள் நாயன்' 'கொற்கைகாவலன்' என்ற விருதுகளும் விக்கிரமபாண்டியனுக்கு உண்டு. இவன் சுமார் 1283 முதல் 1295-96 வரை பதவி வகித்தான் என்று கருதப்படுகிறது. தென் ஆர்க்காட்டுப் பகுதியில் இவனது பெயரைக் கொண்டே ஒரு நாடு விக்கிரம பாண்டிய வள

[57] Sastri P.K.
[58] 462 of 1921.
[59] 123 of 11858; ARE 1914 ii Para 20.

நாடு என்று வழங்கப்பட்டது.[60] மதுரையிலுள்ள இவனது அரியணை 'முனையதரையன்' என்றும் இராஜேந்திரம் என்னுமிடத்திலுள்ள அரியணை 'மலையதரையன்' என்றும் வழங்கப்பட்டன.[61]

[60] K.V. Raman Op. Cit. p. 34; 137 of 1956-57
[61] ARE 1924 II Para 36.

# 9. உள்நாட்டுக் கலகமும் மகம்மதியர் வருகையும்

பல இன்னல்களுக்கிடையே திறமையுடன் நாட்டை ஆண்டு வந்த மாறவர்மன் குலசேகரனின் இறுதிக்காலம் மிகத் துன்பகர மாய் முடிந்தது. குலசேகரனுக்குச் சுந்தரபாண்டியன், வீரபாண் டியன் என்ற புதல்வர் இருவர் இருந்தனர். அவர்களுள் சுந்தர பாண்டியன் பட்டத்தரசியின் மகன் என்றும் வீரபாண்டியன் வேறு மனைவியின் மகன் என்றும் வாசாப் குறிப்பிட்டுள்ளார். இருவரும் தம் தந்தை ஆட்சிபுரியும் காலம் தொட்டே இளவரசர் களாய் ஆட்சி புரிந்தனர். வீரபாண்டியன் கி.பி. 1296-97-ல் இளவரசப் பட்டம் எய்தினான். அதற்கு ஐந்தாறு வருடங்களுக்குப் பிறகு அதாவது சுமார் கி.பி. 1303-ல் சுந்தரபாண்டியன் பட்டம் ஏற்றான்.[1] இவ்விருவருக்கும் மூண்ட பொறாமையும் பகையும் பாண்டிய நாட்டையே பெருங் குழப்பத்தில் ஆழ்த்தி, பாண்டி யரின் வீழ்ச்சிக்கு அடிகோலியது எனலாம். இச் சோக வரலாற்றை வாசாப் மிகவும் தெளிவாகப் பின்வருமாறு வரைந் துள்ளார்.

'வீரபாண்டியனின் திறமையையும் வீரத்தையும் கண்டு அவனே தனக்குப்பின் அரசனாக வேண்டுமெனக் குலசேகரன் பணித்தான். சுந்தரபாண்டியன் இதைக் கண்டு வெகுண்டு நன்றிகெட்டுத் தன் தந்தையையே கொலை செய்து மதுரையில் முடிசூட்டிக் கொண்டான். இது H. 709 (கி.பி. 1310)-ல் நடந்தது. தனது தந்தையைக் கொலை செய்த கொடுமைக்குப் பழிதீர்ப்பதற்காக வீரபாண்டியன் சுந்தரபாண்டியனோடு போரிட் டான்'. வாசாபின் குறிப்பிலிருந்து அரசன் கொலை செய்யப் பட்ட செய்தியைக்கேட்ட மக்களும் படையினரும் மிக்க குழப்ப முற்றுப் பரபரப்படைந்தனர் என்று தெரிகின்றது. இக் குழப் பத்தில் சுந்தரபாண்டியன் யானை, குதிரைகளின் மீது ஏராள மான பொன்னும் பொருளும் ஏற்றி அவற்றுடன் தானும்

[1] Sastri, K. A. N., The Pandyan Kingdom, p. 201.

மதுரையைவிட்டு 'மாங்குள்' (மாங்குளம்) என்னும் ஊரை நோக்கிச் சென்றான் என்றும் வீரபாண்டியனே அவனைத் துரத்திச் சென்று சண்டையிட்டான் என்றும் வாசாப் குறிக்கின்றார். இச் சண்டை மதுரைக்கருகிலுள்ள 'தலச்சி' என்னும் ஏரிக்கரையில் நடந்தது என்றும் அதில் வீரபாண்டியன் காயமுற்று ஓடிவிட்டான் என்றும், அதனால் ஏராளமான பொன்னும் பொருளும் சுந்தரபாண்டியனுக்குக் கிடைத்தன என்றும் வாசாப் குறித்துள்ளார்.[2] மேலும் வாசாப் பின்வருமாறு எழுதியுள்ளார்: ''நன்றி மறந்தவன் தண்டிக்கப்படுவது உறுதி என்ற சான்றோர் வாக்குப் பொய்யாக வில்லை. குலசேகரதேவரின் (பெண்வயிற்று) பேரனும் கரூர்ப்பகுதிக்குத் தலைவனுமான 'மானர் பெருமான்' வீரபாண்டியனுக்கு உதவி புரிந்தான். வீரபாண்டியன் H. 710 (கி.பி. 1310)-ல் பெரும்படையுடன் சுந்தரபாண்டியனை எதிர்க்கச் சென்றான். சுந்தரபாண்டியன் நடுங்கி ஓடி டில்லி அலாவுதீனிடம் தஞ்சம் புகுந்தான். வீரபாண்டியனே பாண்டியர் அரியணை ஏறினான்.'[3]

## மாலிக்காபூரின் படையெடுப்பு (கி.பி. 1310)

மேலே கொடுக்கப்பட்டுள்ள வாசாபின் குறிப்பு அக்கால நிலையை நன்கு விளக்குவதாக அமைந்துள்ளது. இரு சகோதரர்களுக்குள் தோன்றிய பகைமையே குழப்பத்திற்குக் காரணம் என்பதை முகம்மதிய ஆசிரியரான அமிர்குசுரு என்பவர் குறிப்பிட்டுள்ளார்.[4] சகோதரர் இருவர் அரியணைக்காகப் போரிட்டுக் கொண்டிருக்கும் வேளையில் டில்லி சுல்தான் அலாவுதீன் கில்ஜியின் படைத்தலைவன் போசள நாட்டின் தலைநகரான துவாரசமுத்திரத்தைக் கைப்பற்றியபின் தமிழகத்தின் செல்வ வளத்தைக் கேள்வியுற்றுத் தெற்கு நோக்கி வந்து கொண்டிருந்தான். அத்தருணத்தில் பாண்டிய நாட்டில் நிலவிய இக் குழப்பம் அவனை மேலும் ஊக்குவித்திருக்க வேண்டும். மாலிக்காபூரின் தமிழகப் படையெடுப்புக்கு இது ஒரு முக்கியக் காரணமாக வரலாற்றாசிரியர்களால் கருதப்படுகின்றது. ஒரு நாட்டுக்கு வெளியிலிருந்து தாக்குதல் வரும்போது அந்நாட்டிலுள்ள பல்வேறு சக்திகள் தங்கள் பகைமையை மறந்து ஒன்றுசேருவது வரலாற்றில் வழக்கமாகக் காணப்படும் உண்மை. ஆனால், இதற்கு விதிவிலக்காக வெளிநாட்டுப் படையெடுப்பு வரும்போது பாண்டிய அரசர்கள் தங்களுக்குள் உள்ள பகைமையை மிகைப்படுத்திக் கொண்டதோ

[2] Elliot and Dowson. Op. cit; Vol. III.
[3] மேற்படி
[4] மேற்படி. III, p. 88

டல்லாமல் அப் படையெடுப்புக்கு உறுதுணையாகவும் நின்றனர். சுந்தரபாண்டியன் மாலிக்காபூரின் உதவியை நாடினன்.[5] மாலிக்காபூருக்குச் சுந்தரபாண்டியன்மீது ஒன்றும் தனிப்பற்றோ வீரபாண்டியன் மீது பகைமையோ கிடையாது. அவன் பற்றுத லெல்லாம் தென்னாட்டிலுள்ள பொன் மற்றும் விலையுயர்ந்த பொருள்மீதுதான். ஆனால், மாலிக்காபூர் போசள நாட்டைத் தாக்கியபோது, போசளருக்கு உதவியாக வீரபாண்டியன் ஒரு குதிரைப் படையை அனுப்பினன் என்று அமிர்குசுரு குறிப்பிட்டுள்ளார். வீரபாண்டியனுக்கு எதிராக மாலிக்காபூர் தனது படையைச் செலுத்தியது ஒரு காரணமாக இருக்கக்கூடும் என்று பேராசிரியர் சாஸ்திரி கருதுவார். ஆகையால், மதுரையை நோக்கி அவன் விரைவாக முன்னேறினன். இப் படையெடுப்பை எப்படியும் தடுத்து நிறுத்த முடியாது என்று அறிந்த சுந்தர பாண்டியன் அவனது உதவியை நாடியிருக்க வேண்டும். பாண்டிய சகோதரர்கள் வீரபாண்டியனுக்கும் சுந்தரபாண்டியனுக்கும் சண்டை மூண்ட செய்தி மாலிக்காபூருக்குத் தெரிவிக்கப்பட்டது என்பதை அமிர்குசுருவும் குறித்துள்ளான்[6]. இது நடந்தது H. 710 அதாவது கி.பி. 1310-11 ஆம் ஆண்டு. இவ்வாண்டு, பாண்டிய வரலாற்றில் ஒரு முக்கிய மைல் கல்லாகும்; பல முக்கியச் சம்பவங்கள் நிகழ்ந்தன. மாறவர்மன் குலசேகரன் கொலை செய்யப்பட்டது, சுந்தரபாண்டியன் மதுரையில் முடி சூட்டிக் கொண்டது, அவனுக்கும் வீரபாண்டியனுக்கும் கலகம் மூண்டது, மாலிக்காபூர் பாண்டிய நாட்டின்மீது படையெடுத்துத் தாக்கியது போன்ற பல கோவையான சம்பவங்கள் கி.பி. 1310-11 ஆம் ஆண்டு நடைபெற்றன.

மாலிக்காபூரின் பாண்டிய நாட்டுப் படையெடுப்பைப் பற்றிய விவரங்கள் அமிர்குசுரு, ஜியாவுதீன் பார்னி ஆகியோரின் குறிப்புகளிலிருந்து கிடைக்கின்றன. அவற்றுள் சில ஊர்ப் பெயர்களும் மற்ற சில விவரங்களும் இன்னும் தெளிவு பெறவில்லையெனினும் அறிஞர் டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் 'தென் இந்தியாவும் மகம்மதியர் படையெடுப்பும்' என்ற தமது அரிய ஆராய்ச்சி நூலில் இலக்கியம், கல்வெட்டுகள் போன்ற பல சான்றுகளைக் கொண்டு அந் நிகழ்ச்சிகள் அனைத்தையும் தொகுத்து அளித்துள்ளார்.[7]

[5] சுந்தர பாண்டியன் நேரடியாக டில்லி சுல்தானிடம் முறையிடவில்லை என்றும் அவனது படைத்தலைவனை மாலிக்காபூரிடம் சரணடைந்திருக்க வேண்டும் என்றும் டாக். எஸ். கிருஷ்ணசுவாமி ஐயங்கார் கூறும் கருத்துப் பொருத்தமாயுள்ளது. South India and her Muhammeden Invaders. p. 696.

[6] Elliot and Dowson Op. cit. III - p. 88

[7] Aiyengar, S K., South India and her Muhammeden Invaders. (1921)

இப் படையெடுப்பின் விளைவுகளைப்பற்றிச் சிறிது ஆராய்வோம். நிரந்தரமான விளைவுகள் ஏதும் இதனால் ஏற்படவில்லை என்பது தெளிவு. மாலிக்காபூரின் படையெடுப்பு நாட்டைக்கைப் பற்றும் நோக்கத்துடன் செய்யப்பட்டதன்று என்று முன்னர்க் குறித்தோம், ஆனால், தென் இந்திய அரசர்களிடமும் அங்குள்ள கோவில்களிலும் மலிந்து கிடக்கும் செல்வத்தை அபகரித்துச் செல்லவே மேற்கொள்ளப்பட்ட படையெடுப்பாகும். இக் குறிக்கோளில் அவன் பெருமளவு வெற்றி பெற்றான் என்றே சொல்ல வேண்டும். அமிர்குசுருவின் கூற்றுப்படி பாண்டிய நாட்டிலிருந்து 512 யானைகள், 5,000 குதிரைகள், 500 மணங்குப்பொன், முத்துகள், அணிகலன்கள் அடங்கிய பல பெட்டிகளையும் மாலிக்காபூர் கொள்ளையடித்துச் சென்றான்.[8] இது சற்று மிகையாக இருப்பினும் இக் கூற்று ஏராளமான செல்வம் சூறையாடப்பட்டதை உணர்த்தும். மாலிக்காபூர் மதுரையில் நுழைந்த போது பாண்டிய அரசன் தன் பரிவாரங்களுடன் ஓடிவிட்டான் என்றும் பார்னி குறிப்பிட்டுள்ளான். இது எவ்வளவு தூரம் உண்மையெனத் தெரியவில்லை. 'மாபாரில் இரு அரசர்கள் ஆண்டு வந்தனர். இருவர்களிடமிருந்த யானைகளையும் பொருட் செல்வங்களையும் கைப்பற்றி அவற்றுடன் மகம்மதியர் சேனை வெற்றிநடை போட்டது' என்று பார்னி குறிப்பிட்டுள்ளான். மாலிக்காபூர் மதுரையைக் கைப்பற்றிய பிறகு சுந்தரபாண்டியனை அரியணையில் ஏற்றினான் என்ற கருத்திற்குச் சற்றும் ஆதாரம் கிடையாது என்பதைப் பேராசிரியர் சாஸ்திரியார் சுட்டிக்காட்டியுள்ளார். அதுபோல மகமதியர் படையையோ பிரதிநிதியையோ அங்கு விட்டுச் செல்லவில்லை. மாலிக்காபூரின் படையெடுப்பினால் பாண்டிய நாட்டில் எப்பகுதியும் கைப்பற்றப்படவில்லையெனினும் நாட்டு மக்களிடையே பெரும் குழப்பமும் பீதியும் உண்டாயின என்பதில் ஐயமில்லை. பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி கூறியுள்ளது போல் இரண்டாம் பாண்டியப் பேரரசின் பலவீனத்தையும் அதன் வீழ்ச்சியின் தொடக்கத்தையும் பறைசாற்றும் வகையில் இப்படையெடுப்பு அமைந்தது.

## சேரன் இரவிவர்மன் குலசேகரனின் படையெடுப்பு (கி.பி. 1311-12)

மாலிக்காபூர் போனபிறகு மீண்டும் சுந்தரபாண்டியனும் வீரபாண்டியனும் போட்டி போட்டுக் கொண்டு சிறிது காலம் ஆட்சி புரிந்ததாகத் தெரிகின்றது. ஆனால் அது வெகுநாள்கள் நீடிக்கவில்லை. பாண்டிய நாட்டின் மீது மற்றொரு திசையிலிருந்து

[8] Elliot and Dowson, Vol III - p. 204

படையெடுப்பு நிகழ்ந்தது. இப்போது நிலவிய குழப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு திருவாங்கூர்ப் பகுதியையாண்டு வந்த சேரமன்னன் இரவிவர்மன் குலசேகரன் பாண்டிய நாட்டின் மீது மிக விரைவாகப் படையெடுத்துப் பல பகுதிகளைக் கைப்பற்றினான். அவன் வடக்கே காஞ்சிவரை சென்றான். அங்குள்ள வேகவதி நதிக்கரையில் இரண்டாம் முறையாக முடிசூட்டுவிழாவும் செய்து கொண்டான் என்று வரதராஜஸ்வாமி கோவில் கல்வெட்டொன்று கூறுகின்றது.[9] தொண்டைமண்டலம் வரை பரவியிருந்த பாண்டியர் ஆதிக்கம் ஒடுக்கப்பட்டதைச் சித்திரிக்கும் வகையில் பாண்டியரது கயல்கள்மீது சேரனின் அங்குசம் பாய்வது போன்ற சிற்பமும் அதன் பக்கத்தில் சேரமன்னன் குலசேகரனின் கல்வெட்டும் சென்னைக்கருகிலுள்ள பூந்தமல்லிப் பெருமாள் கோவில் சுவரில் காணலாம். அக் கல்வெட்டுச் சேரன் சுந்தர பாண்டியனையும் வீரபாண்டியனையும் வென்றதைக் குறிக்கின்றது.[10]

சேர அரசன் எவ்வளவு விரைவில் முன்னேறினானோ அவ்வளவு விரைவிலேயே பின்வாங்க நேர்ந்தது. காஞ்சிப் பகுதி அவனிடமிருந்து காகதிய அரசன் பிரதாபருத்திரனால் கைப்பற்றப்பட்டு அவனது பிரதிநிதியான மானவீரனிடம் ஒப்படைக்கப்பட்டது. ஆகையால், பாண்டியர் காஞ்சிப் பகுதியை இழந்தனர். அடுத்தடுத்து வந்த தோல்விகளினால் பாண்டியர் பலமும் ஆட்டம் கண்டது. ஆங்காங்கே சிற்றரசர்கள் சுயத்தன்மை பெறத் தொடங்கினர். வடஆர்க்காட்டுப் பகுதியில் சிற்றரசர்களாயிருந்த சம்புவரையர்கள் சுயேச்சையாக இயங்கத் தொடங்கினர். அது போலவே தென் ஆர்காட்டுப் பகுதியில் சேதிராயரும், பாண்டிய நாட்டில் சில பகுதிகளில் வாணாதரையர் போன்ற சிற்றரசர்களும் சுயேச்சையாக இயங்கத் தொடங்கினர். இக் காரணங்களால் தொண்டைமண்டலம் வரை பரவியிருந்த பாண்டியர் ஆதிக்கம் ஒடுக்கப்பட்டது. இச் சூழ்நிலையில் தென் இந்தியாவில் மற்றும் இரு மகமதியர் படையெடுப்புகள் நடந்தன. கி.பி. 1319-ல் குசுரோகான் மாபார் வரை வந்து திரும்பினான். கி.பி. 1323-ல் உலுக்கான் என்பான் (பிற்காலத்தில் அவன் மகமத் பின் துக்ளக் என்று அழைக்கப்பட்டான்) மதுரையை கைப்பற்றினான். இப் படையெடுப்புத் தென்னாட்டுச் செல்வத்தைச் சூறையாடிச் செல்வதற்கு மட்டும் மேற்கொள்ளப்படவில்லை. நாட்டைக் கைப்பற்றி டில்லியின் ஆதிக்கத்தைத் தென்னகத்தில்

[9] E. I. IV, p. 146; Raman K. V: Sri Varadaraja Swami Temple Kanchi p. 24.

[10] 33 of 1911

பரப்பும் ஆக்கிரமிப்பு நோக்குடன் அது மேற்கொள்ளப்பட்டது. அவன் பாண்டிய அரசனை வென்று டில்லி சுல்தானின் ஆட்சியை அங்குக் கி.பி. 1323-ல் நிறுவினான். 'மாபார்' என்று வழங்கிய பாண்டியநாடு துக்ளக் ராஜ்யத்தின் 23 மாகாணங்களில் ஒன்றாக இணைக்கப்பட்டது.[11] சில ஆண்டுகளுக்குப் பிறகு டில்லி சுல்தானின் தொடர்பையும் அகற்றிவிட்டு ஜலாலுதீன் ஆசன்ஷா என்பவன் தன்னை மதுரைச் சுல்தானாகப் பிரகடனப்படுத்திக் கொண்டான். இது கி.பி. 1334-35-ல் நடந்ததாகக் கருதப் படுகிறது. ஜலாலுதீன் கி.பி. 1335-ல் தனது பெயரிலேயே நாணயங்களை வெளியிடத் தொடங்கினான்.

## மதுரையில் சுல்தான் ஆட்சி (கி.பி. 1335-1378)

கி.பி. 1335-ல் நிறுவப்பட்ட இவ்வரசு 50 ஆண்டுக் காலம் கூட நீடிக்கவில்லை. இக்குறுகிய காலத்திலும் அவர்களுடைய ஆட்சி பாண்டியநாடு முழுவதும் பரவியிருந்ததாகச் சொல்ல முடியாது. ஏனெனில், பல பகுதிகளில் பாண்டிய அரசர்களின் பெயரிலேயே கல்வெட்டுகள் வெளியிடப்பட்டு வந்தன. திருப் பத்தூர்த் தாலுக்கா வேலங்குடிக் கிராமத்திலுள்ள உருத்திரக் கோடீசுரர் கோவிலில் சுல்தான் ஆட்சியைக் குறிக்கும் கல்வெட் டொன்று உள்ளது. ஹிஜ்ரா ஆண்டு H. 734-ல் அதாவது கி.பி. 1335-36-ல் மகாராஜன் சுரத்தான் (சுல்தான்) ஆண்டு வந்ததை அது குறிக்கின்றது. காயல்பட்டினத்திலும் சுல்தான்களின் ஆட் சியைக் குறிக்க அரபிய தமிழ்க் கல்வெட்டுகள் உள்ளன. அங்குச் சுல்தான் முகம்மது ஜலாலுதீனுக்கு ஒரு மசூதி கட்டப்பட்ட செய்தியை ஒரு கல்வெட்டுக் குறிக்கிறது.[12] அது H. 737 அதாவது கி.பி. 1336ஆம் ஆண்டு பொறிக்கப்பட்டது. அவர் களது சில கல்வெட்டுகள் புதுக்கோட்டைப் பகுதியில் கிடைத் துள்ளன.[13] ஜலாலுதீனுக்குப் பிறகு அலாவுதீன் உடாஜி, குதுபு தீன், கியாசுதீன், நாசிருதீன், அடில்ஷா, பக்ருதீன் முபாரக்ஷா, அலாவுதீன் சிக்கந்தர்-ஷா என்போர் 'மாபார் சுல்தான்'களாக, அதாவது மதுரைச் சுல்தான்களாக அரசாண்டனர். அவர்களது ஆட்சியைப் பற்றிய விவரங்கள் அதிகமாகக் கிடைக்கவில்லை. அவர்கள் வெளியிட்ட நாணயங்கள் சில நமக்குக் கிடைத் துள்ளன.[14] கியாசுதீன் சுல்தானாக இருந்தபோதுதான் இபன் பதூதா என்ற வரலாற்றாசிரியர் மதுரைக்கு வந்தார். சுல்தான்

[11] Elliot and Dowson, III - pp. 574-75.

[12] ARE 1958-59; Raman K. V., Some Aspects, p. 35.

[13] Insc. of Pudukkottai State: Nos. 669-70

[14] Hussaini, S. A. R., "The History of the Madurai Sultanate" Journal of Asiatic Society, (Part) II-90-130

முஸ்லிம் அல்லாதோருக்கு இழைத்த கொடுமைகளைப்பற்றி மனம் நொந்து எழுதியுள்ளார்.[15]

## படையெடுப்பின் விளைவுகள்

மகம்மதியர் பாண்டிய நாட்டில் ஊடுருவிய போதும், பிறகு அங்கு அவர்கள் சிறிது காலம் தனியாட்சி புரிந்த போதும் நாட்டில் அமைதியின்மையும் கொந்தளிப்பும் இருந்ததை அக் காலக் கல்வெட்டுகளும் இலக்கியமும் நன்கு பிரதிபலிக்கின்றன. அறிஞர் சதாசிவப் பண்டாரத்தார் கூறுவது போன்று 'அவர்கள் காலங்களில் உள்நாட்டில் கலகங்கள் மிகுந்திருந்தமையினால் மக்களெல்லோரும் அல்லல் வாழ்க்கையுடையோராயிருந்தனர். அப்போது பல திருக்கோயில்கள் கொள்ளையடிக்கப்பட்டு நாள் வழிபாடும் ஆண்டு விழாவுமின்றிப் பல ஆண்டுகள் மூடப்பட்டிருந்தன என்று சில கல்வெட்டுகள் கூறுகின்றன. சமயக் கொள்கைபற்றிப் பொதுமக்கள் பலவகைத் துன்பங்களுக்கு ஆளாயினர் என்பது மகமதிய வரலாற்று ஆசிரியன் இபின் பதூதாவின் குறிப்புகளால் தெரிகிறது.'[16] மகமதியர் தெற்கு நோக்கி வரும்போது ஸ்ரீரங்கத்தைத் தாக்கினர். இதை எதிர் பார்த்து அங்குள்ள வைணவர்களின் தலைவரான பிள்ளை லோகாச் சாரியார் அரங்கநாதர் விக்கிரத்தை எடுத்துக்கொண்டு மதுரை அருகிலுள்ள அழகர் கோவிலில் சிறிது காலம் தங்கி, பிறகு தெற்கே ஜோதிஷ்குடி போகும்போது இறந்துவிட்டதாகவும் அதற்குப் பிறகு அவருடைய சீடர்கள் காட்டுவழியாக அரங்க நாதப் பெருமானை எடுத்துச்சென்று திருப்பதியில் வைத்து மறைத்தனர் என்றும் 'கோவில் ஒழுகு', 'பிரபன்னாமிருதம்' போன்ற நூல்கள் கூறுகின்றன. ஸ்ரீரங்கத்திலுள்ள பல வைணவப் பக்தர்கள் கொலை செய்யப்பட்டதையும், சிலர் இன்னல்கள் தாங்காமல் கோபுரத்திலிருந்து விழுந்து உயிர் நீத்தனர் என்பதையும் அந்நூல்கள் குறிக்கின்றன.[17] இது போன்று திருப்பரங் குன்றத்திலும் சிலர் கோபுரத்திலிருந்து விழுந்து தங்களை மாய்த்துக் கொண்டனர் என்று அங்குள்ள ஒரு கல்வெட்டுக் குறிக்கின்றது.[18] மதுரை மக்கள் அனுபவித்த இன்னல்களை 'மதுரைத் தலவரலாறு' என்னும் பழைய நூல் விவரிக்கின்றது. இவற்றைத் தவிர, ஆங்காங்குக் கோயில்களிலுள்ள கல்வெட்டுக்களும் பல அரிய சான்றுகளைத் தருகின்றன. திருச்சிக்கு அருகி

[15] Sastri K. A N, Foreign Notices, p 279.

[16] சதாசிவப் பண்டாரத்தார்: பண்டியர் வரலாறு: ப 152.

[17] Aiyangar, S. K. Sources of Vijayanagar History,

[18] Raman, K. V. Op. cit., p 63

லுள்ள கண்ணனூரிலுள்ள போசளீச்சுரர் கோவில் மசூதியாக மாற்றப்பட்டதையும் பிறகு விசயநகர ஆட்சியின்போது அது மீட்கப்பட்டதையும் அங்குள்ள கல்வெட்டுக் கூறுகிறது.[19] இராமநாதபுரம் மாவட்டம் திருப்பத்தூரிலுள்ள திருத்தளிநாதர் கோவில் தாக்கப்பட்டு அங்குள்ள பொன்னும் பொருளும் கொள்ளையடிக்கப்பட்டது அவ்வூர்க் கோவில் சுவரில் கல்வெட்டாகப் பொறிக்கப்பட்டுள்ளது. பிறகு பாண்டிய அரசன் சடையவர்ம வீரபாண்டியன் மீண்டும் பதவிக்கு வந்தபிறகு (அதாவது 1339-41) அக் கோவிலில் வழிபாடு முறைப்படி தொடங்கப்பட்டது, இதை முன்னின்று செய்தவன் விசயாலய தேவர் என்பவன். அவன் செய்த இப் பேருதவிக்காக அவ்வூர் மக்கள் அக் கோயிலில் அவனுக்குப் பல மரியாதைகள் செய்தனர் என்றும் அங்குள்ள கல்வெட்டுகள் குறிக்கின்றன.[20]

இது போன்று கல்வெட்டுகள் பாண்டிய நாட்டில் பல கோவில்களில் காணப்படுகின்றன. இவற்றிலிருந்து மகமதியரின் படையெடுப்பு நகரங்களில் மட்டுமன்றி கிராமப்புறங்களிலும் ஊடுருவி மக்களிடையே பெரும் குழப்பத்தையும் பாதுகாப்பின்மையையும் உண்டாக்கின என்பதை உணரலாம்.

### போசள மன்னன் மூன்றும் வல்லாளனின் தாக்குதல் (கி.பி. 1342)

முன்னே குறிப்பிட்டுள்ளபடி மதுரையில் சுல்தான் ஆட்சி நிறுவப்பட்ட போதிலும் பழைய பாண்டிய அரசர்களின் செல்வாக்கு அடியோடு மறையவில்லை. அவர்களில் சடையவர்மன் வீரபாண்டியன் போன்றோர் தொடர்ந்து சில பகுதிகளில் இயங்கி வந்தனர் என்பது அவர்களது கல்வெட்டுகளிலிருந்து தெரிகின்றது. ஆனால், பொதுவாக இவர்கள் திருநெல்வேலி, இராமநாதபுரம் பகுதிகளில் மட்டும் இயங்கிவந்தனர் என்று சொல்லலாம். இவர்கள் நேரிடையாக மதுரைச் சுல்தான் ஆட்சியை எதிர்த்துப் போராடினார்களா என்பதும் தெரியவில்லை. ஆனால் துவாரசமுத்திரத்திலும், பிறகு திருவண்ணாமலையிலும் ஆட்சி புரிந்து வந்த போசள மன்னனான மூன்றும் வல்லாளன் தனது முதிர்ந்த வயதிலும் இச் சுல்தான் ஆட்சியை முறியடிக்கப்பெரும் முயற்சிகள் செய்தான். கிட்டத்தட்ட ஒரு லட்சம் பேர் கொண்ட படையுடன் திருச்சிக்கு அருகிலுள்ள கண்ணனூர்க் கொப்பத்தை அடைந்தான். அங்கிருந்து மகமதியர் படையைக் கடுமையாகத்

[19] Ibid. - p. 36
[20] 119 and 120 of 1908; Also 161 of 1936.

தாக்கி வெற்றிகண்ட நேரத்தில் ஒரு சூழ்ச்சியின் காரணமாகப் படுகொலை செய்யப்பட்டான் என்று இபன்பதூதா குறிப்பிட்டுள்ளார். வல்லாளனின் சடலம் வைக்கோல் அடைக்கப்பட்டு மதுரையில் தொங்கவிடப்பட்டிருந்ததை இபன்பதூதா நேரில் கண்டதாகக் குறித்துள்ளார்,[21] இக் கொடுஞ்செயலுக்குப் பிறகு சில நாட்களுள் கியாசுதீன் சுல்தானும் அவனது சுற்றத்தார் பலரும் காலரா நோயினால் மாண்டனர். இவன் காலத்தில் இந்து மக்கள் (Kafir) நூற்றுக்கணக்கில் இழிவுபடுத்தப்பட்டுக் கொல்லப்பட்டனர் என்றும் அவர்களது சடலங்கள் தோல் உரிக்கப்பட்டு அங்கங்களோடு தொங்கவிடப்பட்டிருந்தன என்றும் இபன்பதூதா குறித்துள்ளார். இதைப்பற்றி அவர் பின்வருமாறு கூறியுள்ளார். 'இத்தகைய கொடுமையை வேறு எந்த அரசனும் செய்யக் கண்டதில்லை. இக் காரணம் கொண்டே கியாசுதீனை ஆண்டவன் வெகுவிரைவில் கொன்றுவிட்டான்.[22]

### மகம்மதியர் ஆட்சி முடிவும், விஜயநகர் ஆட்சித் தொடக்கமும் *(கி.பி. 1371)*

இதற்கிடையில் கர்நாடகப்பகுதியில் பல முக்கிய அரசியல் நிகழ்ச்சிகள் நடந்து கொண்டிருந்தன. தென்னகம் முழுவதிலும் மகம்மதியர் படை ஊடுருவிச் செய்த இன்னல்களைத் தடுக்க வித்தியாரண்யர் என்னும் பெரியாரின் அறிவுரையின் விளைவால் துங்கபத்திரா நதிக்கரையில் கி.பி. 1336-ல் ஹரிஹரன், புக்கன் என்னும் இரு வீரர்களால் விசயநகர சாம்ராச்சியம் நிறுவப்பட்டது. தென்னாட்டில் முக்கிய அரசியல் தலைவர்களாயிருந்த போசளர், பாண்டியர், காகதியர், தேவகிரியிலுள்ள யாதவர் எல்லோரும் ஒவ்வொருவராய் மகம்மதியரின் ஆக்கிரமிக்குப் பலியான பிறகு, நாட்டைக் காக்கக்கூடிய சக்தி எதுவுமின்றி அரசியலில் ஒருவிதச் சூன்யம் நிலவிய சமயம் அது. ஆனால் சமயத் தலைவர்களிடமும் மக்களிடையேயும் எதிர்ப்பு உணர்ச்சி பரவியது. ஆங்காங்கே பல சிறிய தலைவர்கள் ஒன்றுசேர்ந்து எதிர்ப்புக்குரல் எழுப்பினர். அப்பொழுது பொங்கி எழுந்த நாட்டுப்பற்றும் சமயப் பற்றுமே விசயநகர ஆட்சியை மலரச் செய்தது. தென்னகத்தை மகம்மதியர் ஆதிக்கத்திலிருந்து விடுவிப்பது அதன் முக்கியக் குறிக்கோளாக இருந்தது. குறிப்பாக, மதுரையில் இயங்கிய சுல்தான் ஆட்சியை அகற்றுவது அதன் முக்கியப் பணிகளில் ஒன்றாகக் கருதப்பட்டது. கி.பி. 1342-ல் போசள மன்னன் [illegible]டிக்கப்பட்டுக் கொலையுண்ட செய்தி பெரும் பரபரப்பை

[21] Aiyangar, S K, South India and Her Mh. Invaders.
[22] Sastri, K. A N. Foreign Notices, p. 279

உண்டாக்கியிருக்க வேண்டும். இதனைக் கேட்ட விசயநகர மன்னன் ஹரிஹரன் கி.பி. 1344-ல் தனது சகோதரனை புக்கனைப் படையுடன் பாண்டிய நாட்டிற்கு அனுப்பினன்.[23] அவன் குர்பத் ஆசன் கங்கு என்னும் சுல்தானைத் தோற்கடித் தான். இதனல் மதுரைச் சுல்தானின் ஆட்சியில் கி.பி. 1344 முதல் 1356 வரை ஒரு தடை ஏற்பட்டது என்று கருதப்படு கின்றது. விசயநகர்ப்படை திரும்பிய பிறகு மீண்டும் அதில்-ஷா என்பவன் சுல்தானக ஆனன்.[24] ஆனல், அவனது ஆட்சி வெகு நாட்கள் நீடிக்கவில்லை. புக்கனின் மகனக வீரகுமாரகம்பணனின் தலைமையில் ஒரு பெரும்படை தமிழகத்தை நோக்கி அனுப்பப் பட்டது. இப் படையெடுப்பு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது. கம்பணனின் வீரச்செயல்களும் அவன் கண்ட வெற்றிகளும் மிக விவரமாக அவனது மனைவி கங்காதேவி எழுதி யுள்ள 'மதுரா விஜயம்' அல்லது 'கம்பணராயர் விஜயம்' என் னும் அழகிய சமஸ்கிருத நூலில் விவரமாகச் சொல்லப்பட் டுள்ளன. 'சாளு வாப்யுதயம்' என்னும் நூலும் அவனது வெற்றிகளைப் பற்றிக் கூறுகின்றது. தவிர, கம்பணனின் நூற் றுக்கு மேலான கல்வெட்டுகள் தமிழகமெங்கும் கிடைத்துள்ளன. இவற்றைக் கொண்டு கம்பணனின் வெற்றிகளைப் பற்றியும் அவனது ஆட்சியைப் பற்றியும் தெளிவான விவரங்கள் நமக்குக் கிடைத்துள்ளன.[26]

முதலில் கம்பணனின் படை தொண்டை மண்டலத்தை நோக்கிச் சென்று அங்கு அதிகாரியாயிருந்த சம்புவராயனைத் தோற்கடித்தது. இச்சம்புவரையர் என்னும் சிற்றரசு மரபினர் தொண்டை மண்டலத்தின் பெரும் பகுதியை ஆண்டு வந்தனர். வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள இராசகம்பீரம் என்னும் ஊர் இவர்களது தலைநகராயிருந்தது. இவர்கள் முதலில் சோழர்களுக் கும் பிறகு பாண்டியர்களுக்கும் சிற்றரசர்களாகச் சேவை செய் தனர். பாண்டியர் செல்வாக்குத் தொண்டை மண்டலத்தில் மறைந்ததும் இவர்களது கை ஓங்கியது. கர்நாடகத்திலிருந்து கிளம்பிய கம்பணன் வடஆர்க்காடு வழியாக வரும்போது வழியில்

23 இப்படையெடுப்பைப் பற்றி, ஷாம்சி-சிராஜ்-அரிப் என்றும் முகம்மதிய வரலாற்றாசிரியன் குறிப்பிட்டுள்ளான். புக்கனை "பக்கன்" என்று குறிப்பிட் டுள்ளான். (Elliot & Dowson: Vol 3 - p. 339) S. K Aiyangar **Op. cit** **p. 186-7** 'பக்கன்" என்னும் பெயர் குமாரகம்பனனையே குறிக்கும் என்று வெங்கடரமணையா கூறியுள்ளது சரியெனத் தோன்றவில்லை.

24 A. Krishnaswami, **The Tamil Country under Vijayanagar,** pp 2-3

25 Madura Vijayam: by S. Tiruvenkatachari, S K. Aiyanagar, **L.** Saswati, **Sources of Vijayanagara History** pp. 22-28.

26 **Krishnasamy, A. Op. cit** p. 8

சம்புவரையர் தலைவனை இராசநாராயண சம்பூவரையனுடன் போரிட்டு வென்ருன். இது சக ஆண்டு 1285 (கி.பி. 1363)ல் நடந்தது என்று மாடம்பாக்கம் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது.[27] பிறகு காஞ்சிமாநகரம் வந்து சாளுவமங்கு என்னும் தனது படைத்தலைவனை அதற்கு பிரதிநிதியாக்கிவிட்டுத் தெற்கு நோக்கி முன்னேறினன். போகும் வழியில் ஸ்ரீரங்கத்திற்குச் சென்று அங்கு வெகு நாட்களாய் வழிபாடு இல்லாமல் இருந்த அரங்க நாதர் கோவில் பெருமானை, தனது படைவீரனும் செஞ்சித் தலைவனுமான கோபணராயன் என்பவன் உதவியைக் கொண்டு, மீண்டும் பிரதிஷ்டை செய்து கோவில் வழிபாட்டைத் தொடக்கி வைத்தான். இந்து மக்களுக்கு இது ஒரு பெரும் வெற்றியாகத் திகழ்ந்தது. இந் நிகழ்ச்சியை 'மதுரா விஜயம்' பெருமையுடன் கூறுகிறது. மேலும் சிதம்பரம், திருவானைக்கா போன்ற கோவில் களிலும் நின்றிருந்த பூசைகளை மீண்டும் நடைபெறச் செய்தான் என்றும் அந்நூல் கூறுகிறது. இதன் பின் மதுரையை நோக்கிக் கம்பணனின் படையெழுச்சி முன்னேறியது. அப்போது மதுரை எவ்வாறு காட்சியளித்தது என்பதை 'மதுராவிஜயம்' பின் வருமாறு விவரிக்கின்றது.

'மதுரையைச் சுற்றியுள்ள அழகிய தோப்புகள் அறுவறுப் பாகக் காட்சியளிக்கின்றன. தென்னை மரங்களுக்குப் பதிலாக ஆங்காங்கு மனிதர் மண்டை ஓடுகள் ஏந்திய தூண்கள் அணி யணியாக நிறுத்தப்பட்டிருக்கின்றன. தாம்பிரபரணியாற்றில் வெட்டப்பட்ட பசுக்களின் குருதி வெள்ளமாய்ப் பாய்கின்றது. வேதமிசைக்கும் ஒலி நின்று விட்டது. நீதிநெறிமுறைகள் மறைந்து ஒழிந்தன. திராவிட மக்களிடம் துன்பமும் நம்பிக்கை யின்மையும் குடி கொண்டிருக்கின்றன.'[28]

தொன்றுதொட்டு இப் பகுதியையாண்டு வந்த பாண்டிய மன்னரைப் பற்றியும் அந்நூல் மனம் வருந்திக்கூறுகிறது. 'அகத் தியர், சிவபெருமான் கொடுத்த வாளினைப் பாண்டியருக்கு அளித் திருந்தார். இப்போது போர் செய்ய முடியாத நிலையில் இருக்கும் பாண்டியரிடமிருந்து அவ்வாளினைப் பெற்றுக் கம்பணனிடம் அளித்துள்ளார்' என்ற கருத்தை அந்நூல் கூறுகிறது. இதன்படி கம்பணனும் பழைய பாண்டிய மரபைத் தொடர்ந்து ஆட்சி புரியவும் அவர்கள் விட்டுச் சென்ற பணியினைப் பூர்த்தி செய்யவும் வந்துள்ளான் என்ற எண்ணம் மக்களின் மனத்தில் இருந்ததை

[27] 287 of 1919.

[28] 'மதுரா விஜய'த்தின் குறிப்புகளும் இபன்பதூதாவின் குறிப்புகளும் ஒன்றியிருப்பது நோக்கத்தக்கது.

உணர்த்துகிறது. அப்பணி என்ன? பாண்டிய நாட்டை யவனர்களிடமிருந்து (மகம்மதியர்) விடுவித்து மக்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதும், கோவில் வழிபாடு, சமய சமூக ஒழுக்கங்கள் சீராக நடைபெறச் செய்தலுமே அம் முக்கியப் பணிகளாகும் என்று அந்நூல் குறிக்கின்றது. கி.பி. 1358-க்கு முன்பே கம்பணன் மதுரையைக் கைப்பற்றியிருக்க வேண்டும் என்று கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் கருதினர். வேறு சில வரலாற்றாசிரியர்கள் சுமார் 1364-ல் நடந்திருக்ககூடும் என்று கருதினர். ஆனல், கிடைத்துள்ள சான்றுகளை உற்றுநோக்கும் போது இது கி.பி. 1371-ல் நடந்தது என்ற கருத்து ஏற்கக்கூடியதாக உள்ளது.[29] இதற்குச் சான்று கூறும் வகையில் 'மதுரைத் தல வரலாறும்' விரோதி கிருது வருடம் (சகம் 1293 = கி.பி. 1371) கருநாடக வேந்தன் கம்பண உடையார் மகம்மதியரை வென்று மதுரையைக் கைப் பற்றினர்' என்று குறிக்கிறது. ஸ்ரீரங்கம் கோவில் வரலாறான 'கோயிலொழுகும்' கம்பணன் அங்கு வந்து அரங்கநாதப் பெருமாளைப் பிரதிஷ்டை செய்தது சக ஆண்டு 1293-ல் தான் என்று குறிப்பிடுகிறது. அங்குள்ள கல்வெட்டும் இதைக் குறிக்கிறது. இதிலிருந்து கி.பி. 1371-ல்தான் கம்பண உடையார் பாண்டிய நாட்டைக் கைப்பற்றினன் என்று சொல்வது பொருத்தமாகும். இராமேஸ்வரத்திற்கு அருகிலுள்ள ஜகன்னாதசுவாமி (தர்ப்பசயனப் பெருமாள்) கோவிலில் கம்பணனின் மூன்று கல்வெட்டுகள் கிடைத்துள்ளன.[31] அவை கி.பி. 1371ஆம் ஆண்டைச் சார்ந்தவை. அக்கோவிலுக்குக் கம்பணன் அளித்த தானங்களைப் பற்றி அவை குறிக்கின்றன. மதுரையைக் கைப்பற்றிய பிறகு அவன் இராமேஸ்வரம் சென்று வணங்கி அருகிலுள்ள புண்ணியத்தலமான ஜகன்னாதப் பெருமாளையும் வணங்கி இந் நன்கொடைகளை அளித்திருக்க வேண்டும். வீரகம்பணனிடம் தோல்வியுற்ற மதுரைச் சுல்தான் யார்? இதற்குத் திட்டமான விடையளிக்கக் கூடிய சான்று கிடைக்கவில்லை. கிடைத்துள்ள மதுரைச் சுல்தான் நாணயங்களைப் பார்க்கும் போது கி.பி. 1359 முதல் 1370 வரை (A.H. 761-770) உள்ள காலப்பகுதியில் பக்ருதீன் முபாரக்ஷா வெளியிட்ட நாணயங்களேயாதலால் கம்பணன் கி.பி. 1371-ல் வரும்போது மதுரையில் சுல்தானாகவிருந்தவன் அவனேயாகும் என்ற கருத்துப் பொருத்தமாக உள்ளது.[32] கம்பணனோடு

[29] Krishnaswamy, A. **Op. cit.** p. 29.

[30] Sathiyanathiyar, R. : **The Nayaks of Madurai** - p. 374.

[31] **ARE** 106 and 111 of 1963; A. Krisanaswamy **Op cit.** - p. 33

[32] அலாவுதீன் சிக்கந்தர் ஷாவினால் கி.பி. 1377 78 (H. 779ல்) வெளியிடப்பட்ட நாணயங்கள் கிடைத்திருப்பதைக் கொண்டு சுல்தான் வம்சத்தினர் விஜயநகர ஆட்சியைச் சில ஆண்டுகள் எதிர்த்தனர் என்று அறியலாம்.

போரிட்ட சுல்தான் கொல்லப்பட்ட செய்தியை 'மதுராவிஜயம்' கூறுகிறது. ஆனல் சுல்தான் பெயரைக் குறிக்கவில்லே. இவ் வெற்றியில் சாளுவமங்கு என்னும் படைத்தலைவன் கம்பண னுக்குத் துணைநின்று உதவிபுரிந்தான் என்று 'சாளுவாப்யுதயம்' என்னும் தெலுங்கு நூல் குறிப்பிடுகிறது.

கி.பி. 1371-இல் இவ்வெற்றிக்குப் பிறகு பாண்டிய நாடும் விசயநகர சாம்ராஜ்ஜியத்தின் ஒரு பகுதியாகச் சேர்க்கப்பட்டது. கி.பி. 1352 ஆம் ஆண்டு தொடங்கித் தொண்டைநாடு, கொங்கு நாடு, பிறகு சோழநாடு போன்ற பகுதிகள் கம்பன உடையாரின் ஆற்றலால் ஏற்கெனவே கைப்பற்றப்பட்டன. பாண்டியநாடு மட்டும் சுல்தானின் ஆட்சியில் இருந்ததால் அது எதிர்த்து வந்தது. இப்போது அதுவும் இணைக்கப்பட்டது. இதனல் தமிழகம் முழுவதும், ஏனைய தென்இந்திய நாடுகளைப் போன்று, விசயநகரப் பேரரசின் குடைக்கீழ் வந்தது. அதன் பிரதிநிதியாய் மகாமண்டலேச்சுவரர் என்னும் பட்டத்துடன் கம்பணவுடையார் அப்பகுதியைப் பராமரித்து வந்தான். கம்பணனின் வெற்றியை யும் அவனது ஆட்சியையும் பாண்டிய நாட்டுமக்கள் ஒரு நன்மை யாகக் கருதி வரவேற்றனர். பதவி ஏற்றபிறகு அவன் மதுரையில் கேட்பாரற்றுக் கிடந்த கோவில்களில் வழிபாடுகளை மீண்டும் தொடங்கி வைத்தான் என்றும் அறக்கட்டளைகளைப் புதுப்பித் தான் என்றும் 'மதுரைத் தலவரலாறு' கூறுகிறது.[33] மேலும் உள்நாட்டுக் கலகத்தாலும் வெளியார் படையெடுப்புகளாலும் அல்லலுற்றுக்கிடந்த மக்களுக்கு ஓர் அமைதியும் பாதுகாப்பும் அளித்த செய்தியைத் தமிழகத்திலுள்ள அவனது கல்வெட்டுகள் பறைசாற்றுகின்றன.[34] குருஷ்கரை (துலுக்கரை) நீக்கி நாயக்கன் மார்களை நியமித்து ஆட்சியை ஒழுங்குபடுத்துகிறுன் என்று ஒரு பாண்டியக் கல்வெட்டுக் குறிக்கின்றது.[35] ஆட்சிமுறையில் பல சீர்திருத்தங்களை நியமித்தும் நாட்டில் குழப்பத்தை நீக்கி நல்லாட்சி அளித்தான். விசயநகர சாம்ராஜ்யம் தோற்றுவிக்கப் பட்ட நாள் முதல் தென்இந்திய வரலாற்றில் ஒரு புதிய சகாப்தம் தொடங்கியது. தமிழகத்தில் அச் சகாப்தத்தை உருவாக்கிய பெருமை பேராற்றல் படைத்த வீரகம்பணனையே சாரும்.

[33] Taylor, Oriental/Manuscripts I, p 35

[34] Krishnasamy, A. **Op. cit.** p. 44-46

[35] **ARE** 19!6 ii

# 10. பிற்காலப் பாண்டியர்

கி.பி. 1310ஆம் ஆண்டில் மதுரையில் நடைபெற்ற மாலிக் காபூரின் படையெடுப்பிற்குப்பின் பாண்டியர்களது ஆட்சி நிலை குலையத் தொடங்கியதை முன்னர்க் கண்டோம். அதற்குப்பின் நடந்த சுல்தான் ஆட்சியின் போதும் அவர்களை அகற்றிடப் பாண்டியர்கள் நேரிடை முயற்சிகள் செய்தார்களா என்பது தெரிய வில்லை. அக் காலம் முதற்கொண்டே மதுரைப் பகுதியில் அவர்களது ஆட்சியின் அறிகுறிகள் காணப்படவில்லை. விசய நகரத் தலைவன் வீரகம்பணன் கி.பி. 1371-ல் சுல்தான் ஆட்சியை அகற்றி மதுரையைக் கைப்பற்றிய பிறகு அப்பகுதி விசயநகரப் பேரரசின் ஆட்சிக்குள் வந்தது. அவர்கள் தங்களது பிரதிநிதி களைக் கொண்டு பாண்டிய நாட்டை ஆட்சி செய்து வந்தனர். மதுரை நாயகர் வம்சத்தினர் முதலில் அவர்களது பிரதிநிதி களாகத்தான் இயங்கினர். பாண்டிய மரபினர் மீண்டும் மதுரையைக் கைப்பற்ற முடியவில்லை. பதினான்காம் நூற்றாண் டின் பிற்பகுதியிலிருந்து அவர்களது கல்வெட்டுகள் பாண்டிய நாட்டின் வடபகுதிகளில் காணப்படவில்லை. திருநெல்வேலி தென்காசிப் பகுதிகளில் மட்டுமே இவர்களது கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. ஆகவே, அக்காலம் முதற்கொண்டு இவர்கள் தங்களது தலைநகரான மதுரையை இழந்து தென்பாண்டிய நாட்டிற்குச் சென்றுவிட்டனர் என்று தெரிகிறது. திருநெல் வேலியைத் தலைநகராகக் கொண்டு ஒரு குறுகிய நிலப்பகுதியை மட்டும் ஆண்டுவந்தனர். விசயநகரப் பேரரசர்களும் பழம் பெரும் பாண்டிய மரபினரை அகற்றிடாமல் அவர்களைத் தொடர்ந்து சிறிய பகுதியில் இயங்க அனுமதித்தனர். இப் பாண்டிய அரசர்கள் விசயநகரப் பேரரசின் பிரதிநிதிகளான நாயக்க மன்னருடன் சண்டையிடாமல் நட்புறவு கொண்டு இயங்கினர். இப் பிற்காலப் பாண்டியர் திருநெல்வேலிப் பாண்டியர் என்றும் தென்காசிப் பாண்டியர் என்றும் அழைக்கப் பட்டனர்.

பதினான்காம் நூற்றாண்டிலிருந்து கிட்டத்தட்ட 17ஆம் நூற்றாண்டு இறுதிவரை இவர்கள் தென்பாண்டிய நாட்டில்

தொடர்ந்து ஆட்சி செய்துவந்தனர். இவர்களைப் பற்றிய பல கல்வெட்டுகளும் சில செப்பேடுகளும் கிடைத்துள்ளன. புதுக் கோட்டைச் செப்பேடுகள், ஸ்ரீவில்லிபுத்தூர் செப்பேடுகள் போன்றவை இம் மன்னர்களது வம்சாவளியையும் அவர்கள் அளித்த தானங்களின் விவரங்களைப் பற்றியும் பல செய்திகளைத் தருகின்றன. அவர்களுக்கும் விசயநகர அரசுக்குமிடையே நிலவிய தொடர்பைப் பற்றியும் அவர்களுக்கும் நாயக்க மன்ன ருக்குமிருந்த உறவைப் பற்றியும் சில செய்திகள் தெரிகின்றன. இவற்றைத் தவிரத் தென்காசி, திருநெல்வேலிப் பகுதிகளில் கிடைத்துள்ள இவர்களது கல்வெட்டுகளும் இவர்களது ஆட்சியின் வரலாற்றிற்கு மிக்க துணைசெய்கின்றன. இக் கல்வெட்டுகளில் சக ஆண்டும் மற்றைய நாள் குறிப்புகளும் காணப்படுவதால் அவற்றின் காலக் கணிப்பில் இடர்பாடுகள் ஏதுமில்லை. கரிவலம் வந்த நல்லூர், மூவரை வென்ருன், தென்காசி, திருநெல்வேலி போன்ற இடங்களில் இவர்களது கல்வெட்டுகள் காணப்படு கின்றன. தென்காசியிலுள்ள விசுவநாதர் கோவிலில் அரிகேசரி பராக்கிரமனின் கல்வெட்டும் அவனுக்குப்பின் வந்தோரின் கல்வெட்டுகளும் காணப்படுகின்றன. அக் கோவில் கட்டப்பட்ட விவரங்களைத் தரும் கல்வெட்டும் அங்குள்ளது. இவற்றைக் கொண்டு கல்வெட்டறிஞர் கோபிநாதராயரும் பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியாரும் திருநெல்வேலிப் பாண்டியரின் வரலாற்றைச் சுருக்கமாகத் தந்துள்ளனர்.[1] சமீப காலங்களிலும் சில புதிய கல்வெட்டுகள் வெளிவந்துள்ளன. அவற்றின் துணை கொண்டு அவர்களது ஆட்சிகாலத்தைப் பின்வருமாறு குறிக்க லாம்.

## சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் *(கி.பி. 1422-1461)*

திருநெல்வெலிப் பாண்டியர்களில் இவ்வரசனைப் பற்றித்தான் முதன்முதலில் நமக்குக் கணிசமான செய்திகள் கிடைக்கின்றன. இவனுக்கு முன் மூன்று அரசர்கள் இருந்தார்களெனத் தெரிகிறது. அவர்களுள் இருவர் பராக்கிரம பாண்டியன் என்ற பெயருடை யவர்கள். மூன்றுவதாக வந்தவனின் பெயர் ஜடிலவர்மன் குலசேகரன் (கி.பி. 1395) ஆகும். முதலில் குறித்த பராக்கிர மன் கி.பி. 1365-லிலும் மற்றொருவன் கி.பி. 1384-லிருந்தும் ஆட்சியில் இருந்தவர்களெனத் தெரிகின்றது. மூன்ருவதாக வந்த

[1] T. A. Gopinatha Rao, Inscriptions of the Later Pandyas, Tr. Arch. Series, Vol-I. திருநெல்வேலிப் பாண்டியர்களைப பற்றிப் பிரசுரிக்கப்படாத நீண்ட ஆராய்ச்சிக் கட்டுரை ஒன்று சென்னைப் பல்கலைக்கழகத்தில் உள்ளது. 1946 ஆம் ஆண்டில் 'இண்டாரிகஸ்' என்பவரால் எழுதப்பட்ட இக் கட்டுரை நல்ல பல செய்திகளை அளிக்கின்றது.

ஜடிலவர்மன் குலசேகரன் கி.பி. 1395-ல் ஆண்டுவந்ததாக இலஞ்சியிலுள்ள அவனது கல்வெட்டுக் குறிக்கின்றது.[2] இவர்களில் சிலர் ஒரே சமயத்திலும் அரசாட்சி செய்திருக்கக்கூடும்.

அரிகேசரி பராக்கிரம பாண்டியன் கி.பி. 1422 முதல் 1461 வரை அரசாண்டான். தென்காசிக் கோவிலை எடுப்பித்தவன் இவனே. அக் கோயிலிலுள்ள 'பூமிசை வனிதை நாவினிற் பொலிய' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி இவனது வெற்றிகளையும் திருப்பணிகளையும் பற்றிக் கூறுகிறது. இவனுக்கு, பொன்னிப் பெருமாள், மானுபரணன், மானபூஷணன், கொற்கை வேந்தன், பெருமாள்வழுதி, தென்காசி கொண்டவுடையார், பராக்கிரமமாறன் போன்ற விருதுகள் உண்டு. இவன் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள சில இடங்களில் சில சிறிய வெற்றிகளைக் கண்டான். ஆனால், அங்கெல்லாம் இவனை எதிர்த்துப் போரிட்டவர் யார் என்பது குறிப்பிடப்படவில்லை. செம்மை என்னுமிடத்தில் சேரரை வென்றதாகக் கூறிக்கொள்கிறான். இவ்வரசனின் கனவில் இறைவன் தோன்றி வடகாசியிலுள்ள தம் திருக்கோயில் அழிந்த நிலையிலுள்ளதால் அங்கு ஓர் ஆலயம் கட்டும்படி பணித்தார் என்றும், அதன்படி இவன் இக் கோயிலைக் கட்டத் தொடங்கினான் என்றும் தென்காசிக் கோவில் நுழைவாயில் அருகிலுள்ள கல்வெட்டுக் கூறுகிறது.[3] விஸ்வநாதருக்கும் உலக முழுதுடைய நாச்சியாருக்கும் சன்னதிகள் கட்டி முடித்துப் பிரதிஷ்டையும் செய்தான். அர்த்த மண்டபம், இடைநாழிகை, மகாமண்டபம், சோபானம், ஆவரணம், கோபுரம் இவையனைத்தும் கட்டினான். இக் கோவிலுக்கு இலஞ்சி, புலியூர், வீரபாண்டிய நல்லூர் போன்ற சில ஊர்களில் நிலங்களும் அளித்தான். இப்பெரிய கோவிலைக் கட்டுவதற்கு 17 ஆண்டுகள் ஆயின. (சகஆண்டு 1368 முதல் 1383 வரை அதாவது, கி.பி. 1446-1461) ஒன்பது நிலைக்கோபுரத்தின் கல்லாலான கீழ்ப்பகுதியை இவன் கட்டி முடித்தபிறகு சகஆண்டு 1385-ல் (அதாவது கி.பி. 1464-ல்) இவன் இறந்தான் என்பதைக் 'கற்பணியாறுண்டில் முடித்துக் கயிலை சென்றான்' என்று கல்வெட்டுக் குறித்துள்ளது. திருப்புடைமருதூர், செம்பகவனம், திருக்குற்றாலம் போன்ற ஊர்களிலுள்ள கோவில்களுக்கும் பல திருப்பணிகள் செய்தான். திருநெல்வேலி நெல்லையப்பர் கோவிலுக்கு அர்த்தஜாம வழிபாட்டிற்கு நிபந்தங்கள் அளித்தான். இவனுக்குத் தென்காசியே தலைநகரமாக அமைந்தது. இவன் வழிவந்த பாண்டியர்களுக்கு இக்

[2] 520 of 1908
[3] ARE 1918 - p. 61.

கோயிலில் முடிசூட்டுவிழா நடைபெற்று வந்தது. இக் கோவிலைப் பாதுகாக்கச் சிவனடியார்களையும் இவன்பின் வந்த அரசர்களையும் தானே இயற்றிய அழகான பாடல்கள் மூலமாக வேண்டினான். இவன் இக்கோவிலுக்குச் செய்த அருந்தொண்டினை மதித்து இவனது படிமம் இக்கோவிலில் வைக்கப்பட்டுள்ளது. இவனுக்குப் பின்வந்த அரசர்கள் தங்களது முடிசூட்டு விழாவை இக் கோவிலில் நடத்தினர்.

## 2. அழகன் பெருமாள் குலசேகரன் அல்லது ஸ்ரீவல்லபன் (கி.பி. 1429-30-1473).

அரிகேசரி பராக்கிரம பாண்டியனுடன் கூடவே அவனது சகோதரர்கள் சிலர் அரசாட்சி செய்தனர். முன் போலவே ஒரே காலத்தில் பலபாண்டியர் சேர்ந்து கூட்டாட்சி செய்யும் முறை இக் காலத்திலும் வழக்கில் இருந்தது. அவர்களில் குலசேகரன் என்னும் ஸ்ரீவல்லபன், வீரபாண்டியன், மாறவர்மன், விக்கிர பாண்டியன், ஜடிலவர்மன், குலோத்துங்கபாண்டியன் போன்றோரது பெயர்கள் செப்பேடுகளில் காணப்படுகின்றன. இவர்கள் ஒற்றுமையுடன் கூட்டாட்சியோ, ஒவ்வொருவர் ஒவ்வொரு பகுதியையோ ஆண்டு வந்தனர். அவர்களது கல்வெட்டுகளில் குறிக்கப்படும் ஆட்சியாண்டுகள் அவர்கள் சமகாலத்தில் வாழ்ந்ததை உணர்த்துகின்றன. புதுக்கோட்டைச் செப்பேடுகளை ஸ்ரீவல்லபன், வரதுங்கன் என்னும் இரு அரசர்கள் சேர்ந்தே வெளியிட்டனர் என்பதைப் பார்க்கும் போது அவர்கள் ஒற்றுமையாகவே அரசு புரிந்தனர் என்பது விளங்கும்.

அழகன் பெருமாள் குலசேகரன் என்னும் ஸ்ரீவல்லபன் அரிகேசரி பராக்கிரமனின் தம்பியாவான். இவன் அண்ணன் அரியணை ஏறி ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு அதாவது கி.பி. 1430-ல் பட்டம் ஏற்றான்.[4] கிட்டத்தட்ட 42 ஆண்டுகள் அரசாண்டான். அண்ணனுடன் சேர்ந்து கூட்டரசனாகப் பணியாற்றினான். அண்ணன் (அண்ணாழ்வி) தொடங்கிய தென்காசிக் கோவில் திருப்பணிகளை இவன் தொடர்ந்து செய்து முடித்து வைத்தான் என்று அக்கோவிலிலுள்ள இவனது கல்வெட்டுக் கூறுகின்றது.

> 'விண்ணுடர் போற்றுந்தென் காசிப்பொற் கோபுர
> மீதிலெங்கள்
> அண்ணாழ்வி செய்த பணியிப் படிக்குறை வாய்க்கிடக்க

[4] Tr. Arch Series VI - 405 சக ஆண்டு 1351 (கி.பி. 1429-30) இவன் அரியணை ஏறியதாகக் குறிக்கப்படுகிறது.

ஒண்ணு தெனக்கண் டுயர்ந்த தட்டோடெங்கு
மூன்றுவித்தான்
மண்ணுளு மாலழகண்குலசேகர மன்னவனே' [5]

காசி விசுவநாதர் கோவிலுக்கு வடபுறம் இவன் ஒரு விஷ்ணு கோயிலைக் கட்டினுன். இவனுடைய கல்வெட்டுகள் திருநெல் வேலி, செங்கோட்டை போன்ற பகுதிகளில் காணப்படுகின்றன. இவன் கிட்டத்தட்ட 42 ஆண்டுகள் அதாவது கி.பி. 1473 வரை அரசாண்டான்.

இவனும் அரிகேசரி பராக்கிரமனின் சகோதரன், அவனுடன் அரசனுகத் திகழ்ந்தவன். தென்காசியின் ஒரு பகுதி இவன் பெயரைக் கொண்டு வீரபாண்டிய சதுர்வேதி மங்கலம் என வழங்கலாயிற்று. அப்பகுதியில் வாழ்ந்த அந்தணர்கள் தென் காசிக் கோயிலில் வேதம், புராணம் பஞ்சாங்கம் போன்றவற்றை ஓதும் கடமையை மேற்கொண்டனர்.

மேலும் சில பாண்டிய அரசர்கள் ஏறக்குறைய இதே காலத் தில் அரசாண்டனர். திருச்செந்தூரிலுள்ள கி.பி. 1433-34 ஆண்டைச் சேர்ந்த இருகல்வெட்டுகள் மாறவர்மன் விக்கிரம பாண்டியன் என்னும் அரசனைக் குறிக்கின்றன. தவிர இரா மேசுரம் கோயிலுக்குப் பொன்வேய்ந்த ஸ்ரீவல்லபன் என்னும் அரசன் அரிகேசரி பராக்கிரமனின் தம்பி எனக் குறிக்கப்படு கிருன்.[6] அரிகேசுரன் என்னும் மற்ருெரு சகோதரனும் குறிப் பிடப்படுகிருன்.[7] கலியுகராமன் திருநெல்வேலிப் பெருமாள் வீர பாண்டியன் என்னும் மற்ருெரு அரசனும் இக்காலத்தில் வாழ்ந் தவன். சேரமாதேவியில் அவனது கல்வெட்டுகள் காணப்படு கின்றன.[8]

### ஸ்ரீவல்லபன் (கி.பி. 1534-43)

இதற்குப் பிறகு பாண்டிய அரசுரிமை சிலகாலம் அரிகேசரி பராக்கிரமனின் சகோதரி வழியில் வந்தோரிடம் மாறியது. அதில் முக்கியமானவன் ஸ்ரீவல்லபனுவான். இவன் ஆஹவராம னின் மைந்தன். பாண்டிய ராஜ்யத்தை மீண்டும் நிலைபெறச் செய்தவன். 'ராஜ்ய ஸ்தாபனுசாரியன்' என்றும் 'இருண்ட காலம் எடுத்த' என்றும் புகழப்படுகிருன்.[8] இவன் சகஆண்டு

[5] 514 of 1909 and 198 of 1895.
[6] Tr. Arch Series A.E.F. p. 251.
[7] A R E. 1918 p. 57.
[8] 86, 88 of 1905; 178/1895.

1456 (கி.பி. 1534-ல்) அரசு பட்டம் ஏற்ருன். இதற்குச் சில ஆண்டுகள் முன்னரே திருவடிராஜ்யத்தின் (திருவிதாங்கூர்) அரசனுன உதயமார்த்தாண்டவர்மன் பாண்டிய நாட்டில் ஊடுருவிப் பல பகுதிகளைக் கைப்பற்றினுன். அவனது கல் வெட்டுகள் பிரம்மதேசம், சேரமாதேவி, அம்பாசமுத்திரம் போன்ற இடங்களில் கிடைத்துள்ளன. இதை எதிர்த்துப் பாண்டிய அரசன் ஸ்ரீவல்லபன், விசயநகர அரசன் அச்சுத ராயனிடம் முறையிட்டான். அச்சுதராயன் தனது மைத்துனன் சளகராசனின் தலைமையில் ஒரு படையைத் தெற்குநோக்கி அனுப்பினுன். தாமிரபரணியாற்றங்கரையில் நடந்த போரில் திருவிதாங்கூர் அரசன் தோல்வியடைந்தான். சில நிபந்தனை களுடன் விசயநகரப் பேரரசு அவனுடன் சமாதானம் செய்து கொண்டது. இச் செய்திகள் 'அச்சுதராயாப்யுதயம்' என்னும் நூலில் விவரிக்கப்பட்டுள்ளன.[9] தாமிரபரணியாற்றங்கரையில் வெற்றித்தூண் (விஜயத்தம்பம்) நடப்பட்டது என்றும், திருநெல் வேலிப் பகுதி மீண்டும் பாண்டியரிடமே ஒப்படைக்கப்பட்டது என்றும் குறிக்கப்பட்டுள்ளது. விசயநகர அரசன் பாண்டிய அரசனின் பெண்ணையும் மணந்தான் என்று காஞ்சியிலுள்ள ஒரு விசயநகரக் கல்வெட்டுக் குறிக்கின்றது.[10] விசயநகர அரசின் துணைகொண்டு பாண்டிய நாட்டைச் சேர அரசனிடமிருந்து மீட்டதனுல் இவன் 'பாண்டிய ராஜ்ய பிரதிஷ்டாபனுசாரியன்' விருதை ஏற்ருன்.

இவ்வரசனுக்குப் பிறகு பராக்கிரம பாண்டிய குலசேகரன், திருநெல்வேலிப் பெருமாள் குலசேகரன் (கி.பி. 1551-62) போன்ருேர் புதுக்கோட்டைச் செப்பேடுகளில் குறிப்பிடப் பட்டுள்ளனர். இவ்விருவர்களும் சகோதரர்கள். திருநெல்வேலிப் பெருமாளுக்குச் சலிவதிபதி, அழகன்பெருமாள், தர்மப்பெருமாள் போன்ற பெயர்களும் உண்டு. 'இருண்டகாலம் எடுத்த ஸ்ரீவல்லபன்' இவனுக்கு ஒன்றுவிட்ட அண்ணன் எனத் தெரி கின்றது. அவனது ஆட்சியின்போது அவனேடு ஒத்துழைத்து அவனது முக்கிய அதிகாரியாய்ப் பணியாற்றினுன். இவன் சக ஆண்டு 1474-ல் (கி.பி. 1551) முடிசூட்டிக் கொண்டதைத் தென்காசியிலுள்ள கல்வெட்டிலிருந்து அறிகிருேம்.[11] சகஆண்டு 1385 (கி.பி. 1563) வரை இவன் பதவி வகித்தான். தென்காசி விசுவநாதர் கோவில் வழிபாட்டிற்கு இவன் பல அறக்கட்டளைகள்

[9] அச்சுதராயாப்யுதயம் VI; Aiyengar S. K. Sources of Vijayanagar History.

[10] A.R.E. 1900 - p 27.

[11] ARE 1918: 386, 389, 587, 531, 651, 466, 659, 660, etc.

செய்வித்தான். இவ்வரசன் தமிழ்ப் புலமை பெற்றவன். விசுவ நாதப் பெருமாள் மீது வெண்பாமாலை இயற்றியுள்ளான். இவ னுக்கு 'வீரவெண்பாமாலை' என்ற விருதும் உண்டு.

## முதலாம் அதிவீரராம பாண்டியன் (கி.பி. 1564-1606)

இவன் திருநெல்வேலிப் பெருமாளின் மகன்; புனர்வசு நட்சத்திரத்தில் பிறந்தவன். அழகன் பெருமாள் அதிவீரராம ஸ்ரீவல்லபன் என்பது இவனது முழுப்பெயராகும்.[12] இவன் புதுக் கோட்டைச் செப்பேடுகளிலும், தென்காசிச் செப்பேடுகளிலும் குறிக்கப்படுகிறான்.[13] இவன் காலத்தில் தலைநகர் திருநெல் வேலியிலிருந்து தென்காசிக்கு மாற்றப்பட்டதாகச் சொல்லப் படுகிறது. இவன் விசயநகர அரசன் முதலாம் வேங்கடனின் ஆட்சிக்குட்பட்டு இயங்கினான்.[14] கோவில் திருப்பணிகளிலும் இலக்கியப் பணிகளிலும் சிறந்து விளங்கினான். தென்காசியில் தந்தை குலசேகரரின் பெயரில் குலசேகரமுடையார் என்ற கோவிலைக் கட்டினான்.[15] விசுவநாதர் கோவிலுக்குள் சொக்க நாதர் பெருமானுக்கும் சீவல விண்ணகர் எம்பெருமானுக்கும் தனிச்சன்னதிகள் கட்டினான்.[16] ஸ்ரீவில்லிபுத்தூரில் கிருஷ்ணன் கோவில் ஒன்று இவன் காலத்தில் கட்டப்பட்டது.[17]

அதிவீரராம பாண்டியர் செந்தமிழ்ப் புலமையிற் சிறந்து விளங்கியவர் என்பது இவர் இயற்றிய நூல்களால் நன்கு விளங்கும். வடமொழியில் ஹர்ஷன் இயற்றியுள்ள நைஷதம் என்ற நூலை இவர் தமிழில் மொழிபெயர்த்துப் பாடியுள்ளார். இது நைடதம் என்று வழங்கப்படுகிறது. உயர்ந்த நடையும் கற்பனைத் திறனும் கொண்டு விளங்கும் இந்நூல் புலவர்களால் உயர்வாக மதிக்கப்படுகின்றது. இவர் இயற்றிய பிறநூல்கள் கூர்மபுராணம், காசிகாண்டம், வாயுசங்கிதை, லிங்கபுராணம் என்பவை இவரது தமிழ்ப்புலமைக்கும் வடமொழிப் புலமைக்கும் சான்றுபகர்கின்றன. குழந்தைகளுக்காக அவர் எழுதிய நீதி நூலான வெற்றிவேற்கை என்பது மிகவும் எளிய நடையில் அமைந்த ஒரு சிறுநூல்.

[12] 617/1918.
[13] 591; 592/1926.
[14] A.R.E. 1916 - p 37.
[15] 535 of 1910.
[16] 498 and 501 of 1918; 530 of 1918.
[17] 592 of 1926.
[18] 590 and 605 of 1918.

**வரதுங்கராமன்** *(கி.பி. 1588-1609)*

இவன் பராக்கிரம குலசேகரனின் இரண்டாவது மகன். அபிராமசுந்தரேசுவரன் என்றும் வீரபாண்டியன் எனவும் கல்வெட்டுகளில் குறிக்கப்படுகிறான்.[18] சகஆண்டு 1510-ல் (கி.பி. 1588) முடிசூட்டப்பட்டான் என்று தென்காசியிலுள்ள கல்வெட்டுக் குறிக்கின்றது. ஆக, முதலாம் அதிவீரராமனுடன் இவன் கூட்டாட்சி புரிந்தான் என்று தெரிகின்றது. தென்பாண்டிய நாட்டில் சில பகுதிகளைக் கரிவலம்வந்த நல்லூரிலிருந்து இவன் அரசாண்டான். இவனும் தமிழ்மொழியில் பெரும் புலமை பெற்றுத் திகழ்ந்தவன். கரிவலம்வந்த நல்லூரிலுள்ள சிவபெருமான் மீது இவன் பாடிய பதிற்றுப்பத்தந்தாதி, கலித்துறையந்தாதி, வெண்பா அந்தாதி என்னும் மூன்று அந்தாதிகள் சிறப்புமிக்கவை.

**வரதுணராமன் குலசேகரன்** *(கி.பி. 1615)*

இவன் சகஆண்டு 1537, அதாவது கி.பி. 1615-16 ஆம் ஆண்டில் பட்டம் எய்தியவன். முதலாம் அதிவீரராமனின் சகோதரனாக இருந்திருக்கக்கூடும். இவன் சோமயாகம் நடத்தியதால் 'குலசேகர சோமயாஜி' என்ற பெயர் பெற்றான். 'தீட்சிதர்' என்ற விருது இவனுக்கு உண்டு. இவனுக்குப் பின் வந்த சிலரும் தீட்சிதர் என்ற பெயரைச் சேர்த்துக் கொண்டனர். இவனுடைய கல்வெட்டுகள் தென்காசி, குற்றாலம் போன்ற இடங்களில் காணப்படுகின்றன. இவன் நடத்திய வேள்வியில் கலந்துகொண்ட அந்தணர்களுக்குக் குடியிருப்பு அமைத்துக் கொடுத்து நிலங்களும் தானம்அளித்தான். இவனுக்குப்பின் இம்மரபினரைப் பற்றிய விவரங்கள் தெளிவாகத் தெரியவில்லை. அபிராம அதிவீரராமன், சீவலவரகுணராமன் போன்றோரைப் பற்றிய கல்வெட்டுக் குறிப்புகள் காணப்படுகின்றன. சீவலகுணராமன் சக ஆண்டு 1675-(கி.பி. 1753)-ல் அரசாண்டான்; குற்றாலநாதசுவாமி கோயிலுக்கு அறக்கட்டளைகள் அளித்தான். 'சங்கீத சாகித்திய சார்வபௌமன்' என்ற விருதும் அதில் குறிக்கப்படுகின்றது.

ஆக, நீண்ட நெடுங்காலம் பாண்டியர் மரபினர் அவர்களது குலப்பெருமைகளையும் மரபுகளையும் காத்தனர். பிற்காலத்தில் வலிவு குன்றிக் குறுநில மன்னர்களாக இயங்கவேண்டிய நிலை வந்தபோதிலும், பழைய மரபுகளைப் பேணிக்காத்து இடைவிடாமல் தெய்வத்தொண்டும், தமிழ்த்தொண்டும் செய்துவந்தனர். இவ்வளவு நீண்டகாலம் அரசியல், சமயம், மொழி போன்ற

கலாசார மரபுகளைத் தொடர்பற்றுப் போகாமல் பேணிக்காத்த பெருமை உலகவரலாற்றில் வேறெரு மரபினரிடம் காண்பதரிது.

### திருநெல்வேலிப் பாண்டியரின் குடிவழிப் பட்டியல்[1]

- அரிகேசரி பராக்கிரம மாறுபரணன் (மிருகசீர்ஷம்) (கி.பி. 1422-62)
- குலசேகரன் என்னும் ஸ்ரீவல்லபன் (உத்தராடம்) (கி.பி. 1429-73)
  - பராக்கிரமன் என்னும் குலசேகரன் (கார்த்திகை) (கி. பி. 1479-1499)
- அரிகேசரி (கி.பி. 1436-70)
- சகோதரி

(பராக்கிரமன் என்னும் குலசேகரன் — சகோதரி)

- சடையவர்மன் என்னும் வீரபாண்டியன் (அவிட்டம்) (கி.பி. 1473-1506.)
  - குலசேகர பராக்கிரமன் (அசுவனி) (கி.பி. 1543-1552)
  - சலிவாபதி திருநெல்வேலிப் பெருமாள் குலசேகரன் (கி. பி.1551-1564)
    - குணராமன்
    - வரதுங்கராமன்
    - அதிவீரராம ஸ்ரீவல்லபன் (கி.பி. 1563-1605)
      - அபிராம அதிவீரராமன்
    - ஸ்ரீவல்லபன்
- சடையவர்மன் என்னும் ஸ்ரீவல்லபன் (திருவாதிரை)
  - ஆகவராமன்
    - சடை. ஸ்ரீவல்லபன் (கி.பி. 1534-1542?)

[1] Sastri, K. A. N., Pk. - pp. 248-249.

# 11. பாண்டியர் ஆட்சி முறை

## நிலப்பரப்பு

பாண்டியநாடு தொன்றுதொட்டு நன்கு வரையறுக்கப்பட்ட எல்லைக்குள் அடங்கிய நிலப்பரப்பாக இருந்து வந்துள்ளது. கிழக்கிலும் தெற்கிலும் கடல் பரப்பு எல்லையாக அமைந்துள்ளது. மேற்கே மேற்குத் தொடர்ச்சி மலைகள் பாண்டிய நாட்டைச் சேர நாட்டினின்று பிரிக்கின்றன; வடமேற்கே கொங்குநாடு எல்லையாக அமைந்திருக்க, வடகிழக்கே புதுக்கோட்டையையும் கடந்து தென் வெள்ளாறு வரை பாண்டியநாடு பரவியிருந்தது. பாண்டிய நாட்டிற்கும் சோழ நாட்டிற்குமிடையே வெள்ளாறே எல்லைக் கோடாக இருந்து வந்துள்ளது. இந் நிலப்பரப்பு ஆரம்பத்தில் பாண்டி நாடு எனவும், ஏறக்குறையக் கி.பி. 991-லிருந்து, இராசராச வளநாடு எனவும், பின்னர் 1012-லிருந்து இராசராச மண்டலம் எனவும் வழங்கி வந்துள்ளது. சுமார் 1022-லிருந்து இப்பகுதி இராசராசப் பாண்டி நாடு எனப் பெயர் பெற்றது.

இந் நிலப்பரப்பில் சில பகுதிகள் சில காலமாகப் பாண்டியருக்கு அடங்கிய சில சிற்றரசர் மரபினரிடம் இருந்து வந்தன. கன்னியாகுமரி மாவட்டத்தில் சில பகுதிகள் ஆய்வேளிர் மரபினரின் ஆட்சிக்குட்பட்டிருந்தன. ஆய் மன்னர் பாண்டியர் ஆதிக்கத்திற்கு உட்பட்ட போதிலும் அவ்வப்போது சுயேச்சையாக இயங்க முயன்றனர். இது போன்று புதுக்கோட்டை மாவட்டத்தின் பகுதிகளில் முத்தரையர் மரபினர் வெகுகாலம் பாண்டியருக்குக் கீழ்ப்படிந்து ஆட்சிபுரிந்தனர். அக்கால வழக்கப்படி இக் குறுநில மன்னர்கள் ஆண்ட பகுதிகள் ஆய்நாடு, முத்தரையர் நாடு, கோநாடு என அழைக்கப்பட்டு வந்தன.

## உட்பிரிவுகள்

பாண்டியநாடு அல்லது பாண்டிமண்டலம் பல வளநாடுகளாகவும், வளநாடுகள் கூற்றங்களாகவும் பிரிந்திருந்தன. பிற்காலத்தில் இக் கூற்றங்களே நாடுகளாகப் பெயர்மாற்றம் பெற்றன.[1]

[1] பல கல்வெட்டுகளில் நாடும் கூற்றமும் ஒன்றாகவே பேசப்படுகின்றன. சில குறிப்புகளில் கூற்றம் பெரிய பகுதியைக் குறிப்பது போன்று காணப்படுகின்றது.

ஒவ்வொரு நாடும் (கூற்றமும்) பல ஊர்களாகப் பிரிக்கப் பட்டிருந்தது.

**வளநாடு**

பல நாடுகளைக் (கூற்றங்களை) கொண்டது வளநாடு எனப் பட்டது. இவையே பாண்டி நாட்டின் நாட்டுப் பிரிவுகளில் முதன்மையானது. முதல் பாண்டியப் பேரரசு காலத்திலேயே வளநாடு என்ற பிரிவு வழக்கில் இருந்ததாகத் தெரிகிறது. திருக்குறுங்குடியிலுள்ள இரண்டாம் வரகுணனின் கல்வெட் டொன்று வைகுண்ட வளநாட்டைக் குறிக்கின்றது. இது ஸ்ரீவைகுண்டத்தை மையமாக வைத்து அமைந்த வளநாடாக இருந்திருக்கும்.[1a] அதுபோல கேரளசிங்க வளநாடு, திருவழுதி வளநாடு, ஸ்ரீவல்லப வளநாடு, அமிதகுண வளநாடு போன்ற வளநாடுகள் இரண்டாம் வரகுணன், முதலாம் இராசசிம்ம பாண்டியன் ஆகியோர் காலங்களில் நிலவியிருந்தன.[2] இவற்றில் திருவழுதி வளநாடு என்பது ஆழ்வார் திருநகரிப் பகுதியைச் சார்ந்ததாகத் தெரிகிறது. கேரளசிங்க வளநாடு என்பது திருப்பத் தூர்த் தாலுக்காவில் பெரும் பகுதியும், புதுக்கோட்டை, சிவ கங்கை தாலுக்காக்களின் சில பகுதிகளையும் கொண்டிருந்தது. 'பாண்டி மார்த்தாண்டன்' என்பது சோழன் தலைகொண்ட வீரபாண்டியனின் சிறப்புப் பெயர். இப் பெயரைக் கொண்ட வளநாட்டைப் பற்றியும் நாம் அறிகிறோம். 'வைகுந்த வள நாடும்', 'தென் வைகை வளநாடும்' தளவாய்புரச் செப் பேட்டில் குறிக்கப்படுகின்றன என்பதால் சோழராட்சி தொடங் கும் முன்னரே பாண்டிய நாட்டில் பல பகுதிகளுக்கு 'வளநாடு' என்ற பெயர் இருந்ததை உணரலாம். பாண்டிய நாட்டில் சோழராட்சி ஏற்பட்ட பிறகு புதிய வளநாடுகள் அமைக்கப்பட்டு அவற்றிற்குப் புதிய பெயர்கள் இடப்பட்டன. முதலாம் இராசேந்திரன் காலத்தில், சுமார் 1021-ல் பாண்டி மண்டலம் நான்கு வளநாடுகளாகப் பிரிக்கப்பட்டுச் சோழ அரசர்களின் பெயர்கள் இடப்பட்டன.

1. இராசேந்திர சோழ வளநாடு
2. மதுராந்தக வளநாடு
3. முடிகொண்ட வளநாடு
4. உத்தம சோழ வளநாடு

இப் பெயர்கள் முதலாம் குலோத்துங்கன் காலத்திற்குப் பின்னர் வழக்கொழிந்தன. மதுராந்தக வளநாடு மட்டுமே 14ஆம் நூற்

[1a] Raman, K.V., Some Aspects, p. 40

[2] S.I.I. XIV, 145

ருண்டு வரை மதுரோதய வளநாடு என்ற பெயரில் நிலவி வந்துள்ளது.

## நாடும் கூற்றமும்

பாண்டிய நாட்டில் சுமார் 100 நாடுகள் இருந்தன. கூற்றம் என்னும் பிரிவு சங்க காலத்திலேயே வழக்கில் வந்துவிட்டது. மிழலைக் கூற்றத்தையும் முத்தூர்க் கூற்றத்தையும் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் கைப்பற்றியதாகப் புறநானூற்றுப் பாடல்கள் குறிக்கின்றன.[3] பாகனூர்க் கூற்றம் வேள்விக்குடிச் செப்பேட்டிலும் (கி.பி. 768) குறிக்கப்படுகின்றது. கொழுவூர்க் கூற்றம் ஸ்ரீவரமங்கலச் செப்பேட்டிலும் களவழி நாட்டு வேம்பற்றூர்க் கூற்றம் சின்னமனூர்ப் பெரிய சாசனத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றால் நாடு, கூற்றம் என்ற பிரிவுகள் தொன்மையானவை என்பது விளங்கும். இந் நாட்டுப் பிரிவு, செப்பேடுகளின் தமிழ்ப் பகுதியில் 'நாடு' என்றும், சமஸ்கிருதப் பகுதியில் 'ராஷ்டிரம்' என்றும் குறிக்கப்படுகிறது. சின்னமனூர்ப் பெரிய செப்பேட்டுச் சாசனத்தில் 'வட களவழி ராஷ்டிரம்' என்றும், 'ராஜசிம்ம குளக்கீழ் ராஷ்டிரம்' என்றும் குறிப்பிடப்படுகின்றன. பல்லவர் சாளுக்கியர் வடக்கே குப்தர் போன்றோரது ஆட்சியிலும் 'ராஷ்டிரம்' என்ற நிலப்பிரிவு இருந்துள்ளது நோக்குதற்குரியது.

நாடுகளுள் அண்டநாடு, அளநாடு, ஆசூர் நாடு, ஆண்மா நாடு, இரணியமுட்ட நாடு, வேம்ப நாடு, களக்குடி நாடு, கொற்கை நாடு, தொண்டி நாடு, முல்லி நாடு, புறம்பு நாடு, வேம்பைக்குடி நாடு, புரத்தாய நாடு, செம்பிநாடு போன்ற நாடுகளை உதாரணமாகக் குறிப்பிடலாம். தென்களவழி நாடு சீவரமங்கலச் செப்பேட்டிலும் (கி.பி. 782) களக்குடி நாடு தளவாய்புரச் செப்பேட்டிலும் (கி.பி. 900) குறிப்பிடப்படுகின்றன. கூற்றங்களுள் பாகனூர்க் கூற்றம், துவ்வூர்க் கூற்றம், நடுவில் கூற்றம், மிழலைக் கூற்றம், திருக்கானப்பேர்க் கூற்றம், கீழ்களக்கூற்றம், முத்தூர்க் கூற்றம் போன்றவைகளை உதாரணமாகக் குறிப்பிடலாம்.[4]

இவற்றில் சில கூற்றங்களின் எல்லை வரம்பு இப்பொழுது நமக்குச் சரிவரப் புலப்படவில்லை. பாண்டிய நாட்டிற்கும் சோழ நாட்டிற்கும் இடையே மிழலைக் கூற்றமும் முத்தூர்க் கூற்றமும்

[3] புறம். 24.

[4] K. S. Vaidyanathan, Ancient Geographical Divisions of Tamilnadu, Hand-book published by II World Tamil Conference, Madras, 1968.

இருந்தன. சங்க காலத்தில் இவை வேள் எவ்வியிடம் இருந்து பிறகு பாண்டியரிடம் வந்தன. மிழலைக் கூற்றம் வெள்ளாற்றுக்கும் பாம்பாற்றுக்குமிடையே உள்ள பகுதியாகும். இக்காலத்திய அறந்தாங்கி தாலுக்கா, புதுக்கோட்டை, இராமநாதபுரம் மாவட்டங்களின் சில பகுதிகளும் இப் பிரிவின்கீழ் அடங்கும். முத்தூர்க் கூற்றத்தில் பாம்பாற்றின் மேற்புறத்திலுள்ள கட்டிவயல், அஞ்சுகோட்டை, கப்பலூர், முந்தூர் போன்ற ஊர்கள் அடங்கியிருந்தன. உரத்தூர்க் கூற்றம், ஒல்லையூர்க் கூற்றம், அண்ணவாயில் கூற்றம், புன்றில் கூற்றம், வெள்ளாற்றுக் கூற்றம் என்னும் கூற்றங்கள் புதுக்கோட்டை மாவட்டப்பகுதியில் அமைந்திருந்தன.

பாண்டியர் ஆட்சிமுறையில் நாடுகள் சிறப்பிடம் வகிக்கின்றன. சில ஊர்களை ஒன்றுசேர்த்து நாடு என்று அமைத்த போது அரசியல் நிர்வாகத்தை மட்டும் முக்கிய அடிப்படை நோக்கமாகக் கொண்டு செய்யப்படவில்லை. இவ்வூர்களிடையே பலகாலம் நிலவி வந்த ஒருவிதப் பொருளாதாரப் பிணைப்பை அடிப்படையாகக் கொண்டே இவ்வமைப்பை ஏற்படுத்தியிருக்க வேண்டும். சில ஊர்கள் தங்களுக்குள் விவசாய அடிப்படையிலோ நீர்ப்பாசன வசதிக்காகவோ ஒன்றோடொன்று சேர்ந்து இயங்க வேண்டிய நிலை வந்தபோது நாடு என்ற அமைப்பு உருவாகியிருக்க வேண்டும். பிறகு இந் நாடுகளே அரசு நிர்வாக அமைப்பின் அங்கங்களாக இயங்குவதற்கான தன்மை கருதி மன்னர்கள் இவ்வமைப்பை ஏற்றுக்கொண்டனர்.

**ஊர்**

நாட்டுப் பிரிவின் அடித்தளத்தில் ஊர்கள் அமைந்திருந்தன. இவ்வூர்களில் பிராமணர் பெரும்பாலும் வாழ்ந்த பிரமதேயம், சதுர்வேதிமங்கலம் ஆகிய ஊர்கள் ஒரு வகை. இவ்வூர்களில் சபை செயற்பட்டு வந்தது. பிராமணரல்லாத வெள்ளான் வகைக் குடியிருப்புகள் அதிகம் இருந்த ஊர்கள் இரண்டாம் வகையின எனலாம். உண்மையில் இவ் வெள்ளான் வகை ஊர்களே மிக அதிகமாக இருந்தன. இவ்வூர்களில் நிலக்கிழார்களும் குடியானவர்களும் அதிகம் வாழ்ந்தனர். மூன்றும் வகையில் நகரங்களைச் சேர்க்கலாம். பின்னிரண்டு வகைக் குடியிருப்புகள் தங்கள் காரியம் கருதி ஏற்படுத்தப்பட்ட குடியிருப்புகளைக் கொண்டதாகலாம். பிரமதேயம், சதுர்வேதிமங்கலம் ஆகிய ஊர்கள் பெரும்பாலும் அரசர்களால் ஏற்படுத்தப்பட்டவை. இவ்வூர்களின் ஆட்சி அமைப்பைப் பின்னர் நாம் விரிவாக ஆராயலாம்.

சோழர் பாண்டியப் பகுதியைக் கைப்பற்றிய பின்னர் நாடு, கிராமம், நகரம், கோவில், தெரு ஆகியவற்றின் பெயர்களெல்லாம் மாற்றப்பட்டுச் சோழர்களின் பெயர்கள் இடப்பட்டன. தம்முடைய ஆதிக்கம் முழுவதையும் நிலைநாட்டுவதற்காக இவ்வாறு பெயர் மாற்றம் செய்யப்பட்டது. எடுத்துக்காட்டாக, திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள மன்னார்கோவில் இராசராச சதுர்வேதி மங்கலம் என்றும், அங்குள்ள கோவில் இராசேந்திர விண்ணகர் என்றும் மாற்றி அழைக்கப்பட்டன. பாண்டிநாடே 'இராசராசப் பாண்டிநாடு' என்றும், அதிலுள்ள மல்லிநாடு முடிகொண்ட சோழ வளநாடு என்றும் அழைக்கப்பட்டதாக மேலே குறிப்பிட்ட மன்னார்கோவில் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது.[5] அக் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள சேரிகளின் பெயர்களெல்லாமே சோழ அரசர்கள், அரசிகள் மற்றுமுள்ள குடும்பத்தினரின் பெயர்களைத் தாங்கி நிற்கின்றன. சேரிகளில் அருள்மொழித் தேவர் - சேரி, செம்பியன் மாதேவி-சேரி, சுந்தரசோழ-சேரி, குந்தவை-சேரி போன்ற பெயர்கள் அதிகரித்தன. அம்பாசமுத்திரத்திலுள்ள தெரு 'இராசேந்திர சோழப் பெருந்தெரு' என்றும்[6], சேரமாதேவி நிகரிலிச்சோழ சதுர்வேதி மங்கலமென்றும், அங்குள்ள கோவில் சுற்றுலை 'இராசாதிராசன் சுற்றுலை' என்றும் அழைக்கப்பட்டன.[7] சுருங்கக் கூறின், கோவில் சுற்றுலையிலிருந்து மண்டலம் வரை எல்லாம் சோழர்மயம் ஆக்க முயற்சிக்கப்பட்டது. இவ்வாறு செய்வதால் மக்களிடம் பாண்டியரைப் பற்றிய நினைவே அற்றுப் போய்விடும் என்று சோழர் திட்டமிட்டனர் போலும். ஆனால், இம் முயற்சி வெற்றி பெறவில்லை. முதலாம் குலோத்துங்கனுக்குப் பின்னால், பாண்டியர் மீண்டும் ஆட்சிப் பீடத்திற்கு வந்தபோது எல்லாச் சோழர் பெயர்களையும் அகற்றிப் பாண்டியர் தம்முடைய பெயர்களை மீண்டும் நிலைநாட்டினர். விக்கிரம பாண்டிய வளநாடு, வரகுண வளநாடு போன்ற பெயர்கள் வழக்கில் வந்தன.[8] 'பாண்டி குலாசனி வளநாடு' (பாண்டிய குலத்தை அழித்தவன்) என்ற பெயர் 'பாண்டிய குலபதி வளநாடாக' (பாண்டியர்குலத் தலைவன்) மாற்றப்பட்டது. பாண்டியர் எழுச்சிக்குக் காரணமாயிருந்த சடையவர்மன் ஸ்ரீவல்லபனின் கல்வெட்டுகளிலேயே இம் மாறுதல்களைப் பார்க்கின்றோம். ஒரு கல்லணையின் பெயர் 'பராக்கிரம பாண்டியக் கல்லணை' என்றும், ஒரு கால்வாய் 'வீரபாண்டியக் கால்' என்றும், ஆறு 'ஸ்ரீவல்லபப் பேராறு' என்றும் பெயரிடப்பட்டன.

[5] S.I.I. XIV, 145.
[6] மேற்படி 146.
[7] மேற்படி 190.
[8] 134 of 1956-57 and 119 of 1910, Raman, K. V., Some Aspects-pp. 18-20

**அரச பதவி**

பாண்டியர் மரபில் ஆட்சி உரிமை தந்தையினின்று மூத்த மகனுக்குச் செல்வதாகவே கருதப்பட்டது. அரசுக்கு ஏற்ற மைந்தன் இல்லாத காலங்களில் அரசனுடைய தம்பி பட்டத்தைப் பெறுதல் வழக்கமாக இருந்துள்ளது. எடுத்துக்காட்டாக, இரண்டாம் வரகுணன் அரசப் பொறுப்பினின்று ஓய்வு பெற்ற பிறகு, அவனது தம்பி பராந்தக வீரநாராயணன் அரியணை ஏறினன். முதற் பாண்டியப் பேரரசு காலத்தில் அரசுரிமைக்காகப் போட்டியோ, சண்டையோ இருந்ததாகக் குறிப்புகள் இல்லை என்பதால் முறைப்படி அரசுரிமை வழிவழியாகத் தொடர்ந்து வந்துள்ளது எனலாம். பராந்தக வீரநாராயணன் மட்டும் தனது சகோதரனுடன் போரிட்டு வென்றதாகக் கூறிக்கொள்கிறன். ஆனல், இது பட்டத்திற்காக நடந்த போட்டியா என்பது சரியாகத் தெரியவில்லை. ஆனல், பிற்காலப் பாண்டியர் ஆட்சியில் பல முறை பதவிப் போட்டிகள் ஏற்பட்டு நாடு குழப்பத்தில் ஆழ்ந்துள்ளது. தாயத்தினராகிய குலசேகர பாண்டியனுக்கும் (1162) பராக்கிரம பாண்டியனுக்கும் ஏற்பட்ட பகைமையின் விளைவால் பாண்டிய நாட்டின்மீது ஈழம் படையெடுத்தது. 14 ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் ஆண்ட மாறவர்மன் குலசேகர பாண்டியன் தனது இருமகன்களில் இளைஞனை வீரபாண்டியனுக்கு ஆட்சியுரிமையை வழங்கினன். இதை எதிர்த்து மூத்தவனாகிய சுந்தரபாண்டியன் தந்தையைக் கொலை செய்து கி.பி. 1310-ல் அரியணை ஏறினன். தம்பி வீரபாண்டியன் இதை ஏற்றுக்கொள்ளாது பாண்டிய நாட்டின் ஒரு பகுதியில் தொடர்ந்து அரசாட்சி செய்தான். பிறகு இவர்கள் இருவருக்குமிடையே உள்நாட்டுப் போர் மூண்டது.

கி.பி. 11ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பாண்டிய மன்னர் ஐவர் ஒரே சமயத்தில் பாண்டி நாட்டுப் பகுதிகளை ஐந்தாகப் பிரித்து ஆட்சி புரிந்துள்ளனர். கி.பி. 1081-ல் சோழ அரசன் முதற் குலோத்துங்கன் பாண்டி நாட்டின்மேல் படையெடுத்துச் சென்று அங்கு ஆண்டு கொண்டிருந்த ஐவரையும் போரில்வென்று அந் நாட்டையும் கைப்பற்றினன் (பஞ்சவர் ஐவரும் பொருதப் போர்க்களத்தஞ்சி). பாண்டிய நாட்டில் சோழராட்சியை எதிர்த்து முறியடிக்கவே பாண்டியர் ஐவரும் ஒன்றுகூடி ஒவ்வொருவர் ஒவ்வொரு பகுதியில் போர்க்கொடி நாட்டினர் என்று தோன்றுகிறது. 13ஆம் நூற்றாண்டிலும் பாண்டியர் ஐவர் ஆண்டு வந்ததை மார்க்கபோலாவின் குறிப்புகளிலிருந்தும் அறிகிறோம்.

**அரசர் பட்டப்பெயர்கள்**

இராசகேசரி, பரகேசரி என்ற பட்டப்பெயர்களை (அபிடேக நாமம்) சோழ மன்னர் மாற்றி மாற்றி வைத்துக்கொண்டது போல் பாண்டிய அரசர்களும் 'மாறன்', 'சடையன்' என்ற பெயர்களை வைத்துக்கொண்டனர். இம்முறையை ஏறக்குறைய 7ஆம் நூற்றுண்டு முதல் பாண்டிய ஆட்சியின் இறுதிவரை, கிட்டத்தட்ட 1000 ஆண்டுகளுக்கு மேலாகக் கையாண்டுள்ளனர். தங்களது ஆட்சியைப் பல திக்குகளிலும் பரவச் செய்வதைத் தம்முடைய முதன்மையான குறிக்கோளாக அமைத்துக் கொண்டனர். அவர்கள் ஏற்றுக்கொண்ட விருதுகள் பலவும் இதை நமக்கு நன்கு உணர்த்தும். முற்காலப் பாண்டியர்கள் 'பாண்டியாதிராசன்', 'பாண்டியமகா ராசன்', 'மன்னர் மன்னன்', 'அவனிபசேகரன்', 'பரசக்ரகோலாகலன்', 'ஏக வீரன்', என்பதைப்போலப் பல விருதுகளை ஏற்றனர். பிற்காலப் பாண்டியரும் 'சகல புவன சக்கரவர்த்தி', 'எம்மண்டலமும் கொண்டருளிய', 'எல்லாந்தலையான' போன்ற விருதுகளை ஏற்றதன் மூலம் பிற்காலத்தில் சாம்ராஜ்யத்தைத் தோற்றுவிக்கும் நோக்கத்தை வளர்த்துக்கொண்டனர் எனலாம். இவ்வாறே பாண்டிய அரசிகளும் 'உலக முழுதுடையாள்', 'அவனி முழுதுடையாள்' போன்ற பட்டப்பெயர்களை ஏற்றிருந்தனர். இவற்றைத் தவிர, 'செந்தமிழ்க்கோன்', 'கூடற்கோன்', 'மகாராசன்' போன்ற பட்டங்களையும் ஏற்றிருந்தனர்.

பண்டைக் காலத்தில் இந்திய மக்கள் அரசர்களைத் தெய்வமாக அதுவும் குறிப்பாகக் காத்தல் கடவுளான திருமாலின் அவதாரமாகக் கருதிப் போற்றினர். பாண்டிய அரசர் அவ்வாறே போற்றப்பட்டனர். எடுத்துக்காட்டாக முதலாம் வரகுணன் 'மாலுருவின் வெளிப்பட்டு' என்றும், ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் 'செங்கண்மால் ஸ்ரீவல்லபன்' என்றும் குறிக்கப்படுகின்றனர்.[9] பாண்டியர்கள் நாட்டு மக்களின் நலத்தைப் பெரிதாகக் கருதி ஆட்சி புரிந்துவந்தனர். ஆனல், பல சமயங்களில் தங்களது பெருமைக்காகவும் ஆக்கிரமிப்பு நோக்குடனும் போர் புரிந்தனர். இது அக்கால மரபெனினும் அடிக்கடி நடந்த போர்களாலும் உள்நாட்டுக் கலகங்களாலும் மக்கள் அவதியுற்றிருப்பர் என்பதில் ஐயமில்லை.

[9] சோழ அரசர்களும் இவ்வாறு போற்றப்பட்டனர். காண்க: சதாசிவப் பண்டாரத்தார், 'பிற்காலச் சோழர் வரலாறு' பகுதி மூன்று பக். 10. 'திருவுடை மன்னனைக் காணில் திருமாலைக் கண்டேனே' என்னும் நம்மாழ்வார் வாக்கிலும் இக் கருத்தைக் காணலாம்.

## தலைநகரும் அரியணையும்

பாண்டியர்களுக்குத் தொன்றுதொட்டுக் கூடல் என்னும் மதுரை தலைநகராக விளங்கியது. தங்களைக் 'கூடற்கோன்', 'கூடல் நகர் காவலன்', 'மதுராபுரப் பரமேஸ்வரன்' என்றெல்லாம் அழைத்துக் கொண்டனர். சோழநாட்டையும், சேரநாட்டையும் கைப்பற்றிய மாறவர்மன் இராசசிம்மன் 'கூடல் வஞ்சி கோழியென்னும் மாடமாமதில் புதுக்கி' என்று கூறிக்கொள்கிறான். மங்கலபுரத்தில் மானாபரணன் திருமாளிகை என்னும் அரண்மனை இருந்தது என்பதற்குச் சோழன் தலைகொண்ட வீரபாண்டியனின் கல்வெட்டுச் சான்று பகர்கின்றது. மதுரையைத் தவிர நாட்டில் முக்கிய நகரங்களிலும் சிறிய அரண்மனைகள் இருந்தன. குறைகளைக் கேட்டறிந்து நலங்களைப் பெருக்கவும் அரசன் நாட்டில் பல்வேறு பகுதிகளில் அவ்வப்போது நேரில் போய்ப் பார்த்து வந்தான். அப்போது பரிவாரங்களோடு அரசன் தங்குவதற்குப் பல ஊர்களில் சிறிய அரண்மனைகள் இருந்தன. பாண்டிய அரசர் வீற்றிருந்த அரியணை பல பெயர்களில் வழங்கி வந்தது. மதுரையிலுள்ள அவர்களது அரண்மனையில் 'அழகிய பாண்டியன்' என்னும் கூடத்தில் 'பாண்டியராசன் பள்ளிக் கட்டில்' என்னும் அரியணையில் சடையவர்மன் ஸ்ரீவல்லபன் வீற்றிருந்து அரசோச்சினான். பாண்டியரது அரியணை 'கலிங்கத் தரையன்', 'முனையதரையன்' என்ற பெயர்களுடனும் வழங்கி வந்தது.[10] மங்கலபுரத்து அரண்மனையில் இருந்த அரியணைக்கு 'வீரகேரளன் பள்ளிக்கட்டில்' என்று பெயர் வழங்கிற்று. மாறவர்மன் ஸ்ரீவல்லவன் (கி.பி. 1132-33) திருநெல்வேலியிலிருந்த 'முனையதரையன்' என்னும் பள்ளிக்கட்டில்மீது வீற்றிருந்தான் என்று அவனது கல்வெட்டுக் குறிக்கின்றது.[11] முதலாம் மாறவர்மன் சுந்தரன் காலத்தில் மதுரை அரண்மனையிலுள்ள 'மழவரையன்' என்னும் அரியணையிலிருந்து கட்டளை பிறப்பித்தான். இரண்டாம் மாறவர்மன் காலத்திய கல்வெட்டுகளில் பாண்டிய அரியணை 'மழவரையன்', 'பல்லவரையன்' என்ற பெயர்களுடன் காணப்படுகின்றது.[12]

முதலாம் குலசேகரன் காலத்தில் (1268-1312) பாண்டியர் ஆதிக்கம் சோழ நாட்டிலும் பரவியிருந்தது. அப்போது உறையூர் அருகே வீரதாவளம் என்னுமிடத்தில் ஓர் அரண்மனை இருந்ததாகத் தெரிகிறது. அதற்கு 'உய்யக்கொண்டான் திருமாளிகை'

[10] Raman, K. V., Some Aspects, pp. 22-23.
[11] 271 of 1927-28.
[12] Raman, K. V., Some Aspects-p. 29,

என்றும் அதிலுள்ள அரியணைக்குக் 'கச்சிக்கு வாச்சான்' என்றும் பெயர்கள் வழங்கப்பட்டன.[13] சயங்கொண்ட சோழபுரத்தில் அவன் இருந்தபோது அவனது அரியணை 'காலிங்கரையன்' என்று வழங்கப்பட்டது.[14] பாண்டியரின் பல முக்கிய அதிகாரிகளின் பெயர்களும் காலிங்கரையன், பல்லவரையன், முனையதரையன் என்று வழங்கப்பட்டபடியால் ஒவ்வொருவரும் ஆணை பிறப் பிக்கும்போது அவ்வதிகாரியின் பெயர் கொண்டு அழைக்கப் பட்டிருக்கலாம் என்று தோன்றுகிறது.

## பாண்டிய அரசனைப்பற்றி மார்க்கபோலோ

பாண்டிய அரசனை நேரில் கண்ட மார்க்கபோலோ அவனைப் பற்றிக் கூறியுள்ளதை இங்கு நோக்குதல் சிறப்பாக அமையும். 'ஏனைய மக்களைப் போலவே அரசனும் அதிக ஆடையின்றித்தான் இருக்கின்றான். இடையில் மட்டும் ஒரு சிறு துணியைச் சுற்றிக் கொள்கிறான். ஆனால், அந்தத் துணி நேர்த்தியானது. கழுத்தில் ஒரு மாலையை அணிந்துள்ளான். அந்த மாலை முழுவதுமே மாணிக்கம், நீலம், மரகதம் முதலிய அருங் கற்களால் ஆனது. எனவே, அந்த மாலையின் மதிப்பு மிகவும் உயர்ந்தது. மேலும் 104 முத்தும் மாணிக்கமும் கோத்த மிக நேர்த்தியான பட்டுக் கயிறு ஒன்றையும் அவன் கழுத்தில் அணிந்துகொண்டிருக்கின்றான். நாள்தோறும் காலை, மாலை ஆகிய இருவேளையும் அவன் வழிபடு கின்ற தெய்வச்சிலைகளுக்கு 104 முறை பிரார்த்தனை செய்ய வேண்டியிருப்பதால்தான் அவன் மாலையில் 104[15] முத்தும் மணியும் இருக்கின்றன என்று சொல்லுகின்றார்கள். அவர்களுடைய மதமும் வழிபாட்டு முறையும் அத்தகையவை. அவனுடைய முன் னோர்களும் அவ்வாறே செய்தார்கள். மேலும் அரசன் தனது கைகளில் தங்கக் கடகங்களும் கால்களில் பொன்னாலும் முத்தா லும் ஆன கழல்களும் அணிந்திருக்கின்றான். இத்தகைய அணி மணிகள் அவனுடைய இராஜ்யத்திலேயே கிடைத்தன. மேலும் தன்னுடைய இராஜ்யத்தில் யாரிடமேனும் பெரிய முத்தோ மணியோ இருந்தால் அதனை அரசவைக்குக் கொண்டு தருமாறும், அவ்வாறு கொண்டு வந்தால் அதற்குரிய விலையைப் போல இரு மடங்கு விலைகொடுத்து அதனைத் தானே வாங்கிக் கொள்ள விரும்புவதாகவும் அவன் ஆண்டுதோறும் பலமுறை அறிவிக் கிறான். அதனால் முத்தோ மணியோ வைத்திருப்பவர் அனைவரும்

[13] 319 of 1950; ARE. 1941-42 pt. II. p. 248.

[14] Raman, K. V., Some Aspects, p. 32.

[15] இது 108 ஆக இருக்க வேண்டும்.

மகிழ்ச்சியாக அரசனிடம் கொண்டு செல்கின்றனர். அரச னுடைய மணிமுத்துக் குவியலும் வளர்ந்துகொண்டே போகிறது.'

பாண்டிய அரசனது பரிவாரங்களைப்பற்றிக் கூறும்போது மார்க்கபோலோ பின்வருமாறு குறித்துள்ளார். 'அரசனைச் சுற்றி லும் பிரபுக்கள் பலர் எப்போதும் இருந்தனர். அரசன் வெளியே செல்லும் போது அவர்களும் உடன் செல்கிறார்கள். அவர்கள் மிகுந்த அதிகாரமும் செல்வாக்கும் பெற்றவர்களாய் இருந் தார்கள். அரசன் இறந்தால் அவன் உடலைச் சிதையிலிட்டுத் தீ வைக்கிறார்கள். அப்போது அவனுடைய நம்பிக்கைக்குரிய பிரபுக் களும் அதே சிதையில் ஏறித் தீக்குளிக்கிறார்கள். இம்மையில் அரசனுடைய துணைவர்களாய் இருந்தவர்கள் மறுமையிலும் அவ னுடைய துணைவர்களாக இருக்க வேண்டும் என்பது அவர் களுடைய கொள்கை.' அரசனுக்கு 'வேளைக்காரர்கள்' என்ற மெய்க்காவலர் இருந்ததைப் பாண்டியர் கல்வெட்டுகளும் உணர்த்தும். இவர்களைத்தாம் மார்க்கபோலோ குறித்துள்ளார் போலும். இவர்களுக்குத் 'தென்னவன் ஆபத்துதவிகள்' என்றும் பெயர்.

### கருவூலம்

பாண்டியர் கருவூலத்தைப்பற்றி மார்க்கபோலோ பின்வரு மாறு குறித்துள்ளார். 'அரசன் இறந்து போனால் அவனுடைய கருவூலத்திலுள்ள செல்வங்களை அவனுடைய மக்கள் யாருமே தொடுவதில்லை. 'எங்களுடைய தந்தையார் இந்தச் செல்வங்களை எல்லாம் தேடி வைத்தார். நாங்களும் அத்துணைச் செல்வங்களையும் திரட்டிவைக்க வேண்டாமா?' என்று அவர்கள் சொல்கிறார்கள். இவ்வாறு தலைமுறைதோறும் கருவூலத்திலுள்ள செல்வங்கள் பெருகிக்கொண்டே போகின்றன. அதனால் இந்த இராஜ்யத்தில் கணக்கற்ற செல்வங்கள் குவிந்து கிடக்கின்றன. அரசு கருவூலத் தில் ஏராளமான பொன்னும் வெள்ளியும் இருந்ததை வசாபின் குறிப்புகளிலும் காண்கிறோம்.[16]

### அமைச்சரவை

அரசனே நாட்டு நிர்வாகத்தின் தலைவன். அவன் விரும்பிய வாறு எதனையும் செய்யமுடியும் என்றாலும் நம் நாட்டு மரபுபடி அமைச்சர் பெருமக்களுடன் கலந்துதான் நாட்டுப் பணியைச் செய்து வந்தான். உத்தர மந்திரிகளும், மந்திரிகளும் அரச னுக்கு உதவி செய்ததை அறிகிறோம். அரசனுக்குத் துணைபுரிந்த

[16] மேற்படி, பக்கம்-271.

பல மந்திரிகளில் உத்தரமந்திரி சிறப்பிடம் பெறுகிறர். இவரைத் தலைமை அமைச்சர் என்று கருதலாம். அமைச்சர்கள் சிறந்த கல்விமான்களாகவும் சமயப்பற்றுடையவர்களாகவும் இருந்தனர். நின்றசீர் நெடுமாறனுக்குக் குலச்சிறையார் என்னும் சிவனடியார் அமைச்சராக இருந்தார். அரிகேசரி மாறவர்மனுக்கும் அவனது மைந்தனை முதலாம் வரகுணனுக்கும் மாறன்காரி அல்லது மதுர கவி என்னும் பேரறிஞர் உத்தர மந்திரியாகப் பணியாற்றினர். மாறவர்மனுக்காக இவர் கண்ட போர்வெற்றிகள் மூலம் இவர் சிறந்த அறிஞர் மட்டுமன்றி ஆற்றல்மிக்க போர் வீரருமாவார் என்பது விளங்கும். இவருக்கு மூவேந்தமங்கலப் பேரரையன் என்ற பட்டம் அளிக்கப்பட்டது. மதுரகவிக்குப் பிறகு அவரது தம்பி மாறன் எயினன் உத்தர மந்திரியானன். இவனுக்குப் பாண்டிமங்கலப் பேரரையன் என்ற பட்டம் வழங்கப்பட்டது. இரண்டாம் வரகுணன் அவையில் மாணிக்கவாசகர் அமைச்சராகப் பணியாற்றினர். அவருக்குத் 'தென்னவன் பிரம்மரையன்' என்ற பட்டம் வழங்கிற்று. அரசனுக்கு ஆலோசனை கூறுவதற்குப் பல அமைச்சர்கள் (மந்திரிகள்) பணியாற்றியதை ஒரு கல்வெட்டுக் குறிக்கின்றது. முதலாம் மாறவர்மன் குலசேகரனுக்கு வாணதரையன் காலிங்கரையன் என்பவன் 'மந்திரியாக' இருந்ததை அவனது கல்வெட்டுக் குறிக்கின்றது. 'பிரம்மரையன்', 'பிரம்மாராயன்' அல்லது 'பிரமாதிராசன்' என்ற பட்டங்கள் பிராமண குலத்தில் தோன்றிய அமைச்சர்களுக்குக் கொடுக்கப் பட்டன. அரசனுக்குத் தர்மத்தை உபதேசிக்க தர்மாத்யட்சர் என்னும் மந்திரி இருந்ததைச் சின்னமனூர்ப் பெரிய சாசனம் குறிக்கிறது.

### மற்ற அதிகாரிகள்

சோழ நாட்டைப் போலவே இங்கும் அதிகாரி என்ற உயர் அலுவலர் அரசு பணியாற்றினர். மன்னனின் ஆணை இவ்வதிகாரியால்தான் முறையே நிறைவேற்றப்பட்டது. பல அதிகாரிகளைப் பற்றிய விவரங்கள் கிடைக்கின்றன. திருமந்திர ஓலை என்பான் அரசன் மொழிந்த உத்தரவுகளையும் செய்திகளையும் நேரில் கேட்டு அவ்வப்போது ஓலையில் எழுதும் அதிகாரியாவான். திருமந்திர ஓலை நாயகம் என்பான் ஓலையில் எழுதியதை மேற்பார்த்துக் கையொப்பம் இடும் அதிகாரியாவான். கலியுகராமன் என்னும் வீர பாண்டியனுக்குத் தியாகவிந்த பிரம்மராஜன் என்பான் திருமந்திர ஓலையாகப் பணியாற்றியதை அவன் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது[16] அரசன் சொந்தத் தேவைகளைக் கவனிக்கப் பல அதி

[16] 279 of 1942.

காரிகள் இருந்தார்கள். அவர்கள் பொதுவாக 'அகப்பரிவார முதலிகள்' என்று அழைக்கப்பட்டனர். அவர்களில் ஒருவர் திரு வாசல் முதலி என்னும் அதிகாரி. இவரைப் பல்லவ அரசர்களிடம் பணியாற்றிய 'வாயில் கேட்பாருடன்' ஒப்பிடலாம். மனையில் பணி செய்யும் பெண்டிர் 'திருவுடையாள்' என்று அழைக்கப் பட்டனர். பாண்டியர் அரசனுக்கு 'அரையர்கள்' என்ற பட்டப் பெயர் கொண்ட அலுவலர்கள் உதவி புரிந்தனர். காலிங் கரையன் பாண்டி பல்லவரையன், பாண்டி கொங்கரையன், பாண்டி விழுப்பரையன், மழவரையன், முனையதரையன் போன்ற பல உயர் அதிகாரிகள் நாட்டின் பல பகுதிகளில் பணியாற் றினர். இவர்களது வேண்டுகோளின் பேரிலோ பரிந்துரையின் அடிப்படையிலோ மன்னன் கட்டளை பிறப்பித்ததைப் பல கல் வெட்டுகளில் காண்கிறோம்.

நாட்டின் நில வருவாய்க் கணக்கைக் கவனிக்கப் புரவுவரித் திணைக்களம் என்னும் குழு இயங்கியது.[16b] இதனைத் தற்காலத் திய வருவாய்த்துறை உயர்குழுவிற்கு (Board of Revenue) ஒப் பிடலாம். இக் குழுவின் தலைவர் 'திணைக்கள நாயகம்' எனப் பட்டார். திணைக்கள அதிகாரிகளும் நாட்டைச் சுற்றிப் பார்த்து மக்களின் நலங்களைக் கவனித்து வந்தனர். அன்றியும் அவ் வதிகாரிகள் கிராமசபை, அறநிலையங்கள், கோயில்கள் வரவு செலவு முதலானவற்றைக் கண்காணித்து வந்தனர்.

நாட்டிலுள்ள நிலங்களை அளந்து அவற்றின் தரத்தின்படி வரி விதிக்கும் பணியை 'நாடுவகை செய்வோர்' என்னும் அதிகாரிகள் செய்தனர். ஒவ்வோர் ஊரிலிருந்தும் நாட்டிலிருந்தும் வர வேண்டிய வருவாயின் கணக்குப் பதிவு செய்வோர் 'வரியிலார்' என்று அழைக்கப்பட்டனர்.

அரண்மனையில் வேறு அலுவலர் பலர் இருந்தனர். இவருள் பொற்கொல்லர், கல்தச்சர், பட்டய எழுத்தாளர், புலவர் முதலியோர் குறிப்பிடத்தக்கவர். அரண்மனைப் பொற்கொல்லர் அரண்மனைக்கு வேண்டிய அணிகலன்களைச் செய்ததோடு செப்புப் பட்டயங்களில் அரசர் ஆணைகளைப் பொறித்து வந்தனர். அவர் களுக்கும் பட்டங்கள் அளிக்கப்பட்டன. பராந்தக வீரநாராயண னின் தளவாய்புரச் செப்பேட்டைப் பொறித்தவன் பாண்டி மாராயப் பெருங்கொல்லன் சேவல்லபன் என்று குறிக்கப்பெறு

[16b] புரவுவரி அதிகாரிகள் சிவகாசிச் சாசனத்தில் குறிப்பிடப்படுகிறார்கள். ஆனைமலையிலுள்ள 9ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளிலும் குறிப்பிடப்பட் டுள்ளனர் S.I.I. XIV 100; 102

கிறுன். அவன் 'சீர் மிகு செந்தமிழ் பாத்தொடை செய் தோன்......... பண்டிதராசன் பாண்டித் தமிழாபரணன் எனும் சிறப்புப் பெயரெய்திய பாண்டிமாராயப் பெருங்கொல்லன் சீவல்லபன்' என்று புகழப்படுவதால் அவன் சிறந்த தமிழறிஞனுக இருந்திருக்க வேண்டும் என்று தெரிகிறது. பட்டயங்கள் சமஸ் கிருதம் தமிழ் இருமொழிகளிலும் எழுதப்பட்டன. அவற்றைப் புனைந்த புலவர்களுக்கும் அவற்றை எழுதிய 'கொல்லர்' அல்லது 'தச்சர்'களுக்கும் அரசனி் தானம் வழங்கிய விவரங்கள் பட்ட யங்களிலேயே குறிக்கப்பட்டன. பல்லவ நாட்டிலும் இம்முறை வழங்கிற்று. பட்டயம் எழுதிய புலவர்கள் பல்லவர் நாட்டில் 'காரணிகர்' என்று அழைக்கப்பட்டனர். வேள்விக்குடிச் செப் பேடுகளின் தமிழ்ப்பகுதியைப் பாடியவன் ஏனுதி சாத்தன் என்பான். அவன் தமிழ்ப் புலவன் மட்டுமன்றிப் படைத் தலைவனு மாவான். 'ஏனுதி' என்பது அவனுக்கு அரசனுல் அளிக்கப்பட்ட பட்டமாகும்.

## நீதி

நீதி தவறுமல் செங்கோலோச்சுவதைப் பாண்டிய மன்னர்கள் தங்களது உயர்ந்த இலட்சியமாகக் கொண்டிருந்தனர். சங்க காலத்துப் பாண்டிய அரசன் நெடுஞ்செழியன், அறியாமல் கண் ணகிக்குத் தான் விளைவித்த பெரும் கொடுமைக்கு மனம் நொந்து உயிர் நீத்தான் என்ற வரலாற்றைச் சிலப்பதிகாரம் நமக்கு எடுத் துரைக்கின்றது. அவ்வழி வந்த பிற்காலப் பாண்டியரும் நீதி தவறுமல் அரசோச்சும் இலட்சியத்தைத் தங்களது மெய்க்கீர்த்தி களில் கூறிக் கொள்கிறுர்கள். 'மனுபமன்' என்றும் 'மனுதர்சித மார்க்கத்திஞல்'[17] என்றும் நெடுஞ்சடையப் பராந்தகனும், 'மனுசமானன் வழுவாத செங்கோனடாவி',[18] என்று பராந்தக வீரநாராயணனும், 'மனுநெறி தழைப்ப மணிமுடி சூடி' என்று முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனும் கூறிக் கொள்வதைப் பார்க்கலாம். சோழ அரசர்களும் தங்களை மனுநீதிச் சோழன் மரபைச் சார்ந்தவர்களாகவே சொல்லிக் கொள்வது இங்குக் குறிப்பிடத்தக்கது. பொது வகையான வழக்குகளையெல்லாம் கேட்டுத் தீர்ப்பதற்கு 'அறங்கூறவை' இயங்கிற்று. சிறப்பான வழக்காயின் அரசனே மன்றத்திருந்து தீர்ப்பான். அரசன் நாட்டைச் சுற்றி வரும்போதும் சில ஊர்களில் தங்கும்போதும் அங்குள்ள பிரச்சினைகளையும் வழக்குகளையும் நேரில் கேட்டுத் தீர்ப் பான். பாண்டிய அரசன் இராசசிம்மனை நீதிக்குக் கொடித்

17 சீவர்மங்கலச் செப்பேடு.
18 தளவாய்புரச் செப்பேடு.

தம்பம் போன்றவன் என்று சின்னமனூர்ப் பெரிய சாசனம் கூறு கிறது.

வழக்குகள் உரிமை பற்றிய வழக்கு (Civil case), குற்றம் பற்றிய வழக்கு (Criminal case) என்னும் இக்கால வகைப்படி அக்கால வழக்குகளையும் பிரித்து ஆராயலாம். ஆனால் அக் காலத்தில் அவற்றிற்குத் தனித்தனியாக நீதிமன்றங்கள் இருந்த தாகச் சான்றுகள் இல்லை. அனைத்தைப் பற்றிய வழக்குகளும் ஓர் இடத்திலே கேட்கப்பெற்று நீதி வழங்கப்பட்டதெனத் தெரி கிறது. தர்மாசனம் என்ற நீதிமன்றத்திற்குக் குற்றவாளிகள் விசாரணைக்காக அழைத்துச் செல்லப்பட்டனர் என்று புதுக் கோட்டையிலுள்ள 13ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுக் குறிக் கிறது. தர்மாசனம் என்பது அரசனுடைய நீதிமன்றமாகக் (King's Court) கருதப்படுகிறது.

உரிமைபற்றிய வழக்குகளில் நிலத்தகராறு, நீர்த்தகராறு, எல்லைத்தகராறு, சொத்துத் தகராறு போன்றவை மேலோங்கி யிருந்தன. உரிமைகளைப் பற்றிய வழக்குகளில் ஆவணச் சான்று களுக்கு (Documentary evidence) முக்கியத்துவம் அளிக்கப் பட்டது. இதைப்பற்றிய வேள்விக்குடிச் சாசனம் தரும் பின் வரும் செய்திகளை இங்கு நோக்குவது பொருத்தமுடையதாய் இருக்கும். 'நெடுஞ்சடையப் பராந்தகனின் மூன்றாம் ஆட்சி யாண்டில் கொற்கை கிழான் நரசிங்கன் என்னும் அந்தணன் மதுரை மாநகருக்கு வந்து 'கொற்றவனே' என விளித்து முறை யிட அரசனும் அவனை உடனே அழைத்து அவன் குறை என்ன என்று கேட்டருள அதற்கு அவன் தனது முன்னோர்களுக்குப் பாண்டிய அரசன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியால் தானமாக அளிக்கப்பட்ட வேள்விக்குடி என்னும் கிராமம் களப் பிரர்களால் கைக்கொள்ளப்பட்டது என்றும் அதை மீண்டும் அவனுக்கே அளிக்கவேண்டும் என்றும் விண்ணப்பம் செய்தான். அரசனும் அதனைக்கேட்டு நன்று நன்று எனப் புன்முறுவல் பூத்துப் பழைமையாதல் காட்டிப் பெற்றுக்கொள் என்றுகூற அவனும் உரிமையைக் காட்ட அரசனும் அதனை ஏற்றுத் தம் முன்னோரால் தரப்பட்டது என்று பெருமை கொண்டு அதை மீண்டும் அவ் வந்தணனுக்கே அளித்தான்.' இதில் கூறப்படும் 'பழைமை யாதல் காட்டி' என்பது ஆவணச் சான்றையே குறிக்கும். அது செப்பேடாகவோ ஓலைச் சான்றாகவோ இருந்திருக்க வேண்டும். அதன் அடிப்படையிலேயே வேள்விக்குடிச் சாசனமும் வரையப் பட்டு அவ்வூர் மீண்டும் அவனுக்கே அளிக்கப்பட்டது. ஆவணச் சான்றுகள் இல்லாதபோது நீள்வழக்காற்றுரிமை (Prescriptive

Right), அனுபவம், ஊரார் சாட்சி போன்ற ஆதாரங்களைக் கொண்டும் உரிமைப் பிரச்சினைகள் தீர்க்கப்பட்டன. பாண்டிய அரசன் கடுங்கோன் சில மறையோருக்கு இரு கிராமங்களைத் தானமாக அளித்து அதற்கெனச் செப்பேடும் வழங்கினான். ஆனால், பிற்காலத்தில் ஏற்பட்ட மறக்கேட்டால் அச் செப்பேடு களவாடப்பட்டுவிட்டது. அவ்விரு கிராமங்களையும் மீண்டும் தங்களுக்கே வழங்கவேண்டும் என்று அந்தணர்கள் பாண்டிய அரசன் பராந்தக வீரநாராயணனிடம் விண்ணப்பம் செய்தனர். அரசன் உண்மையைக் கேட்டறிந்து அவர்களுக்கே அவ்விரு கிராமங்களை மீண்டும் தந்து அதற்காகச் சாசனமும் வழங்கினான். அச்சாசனமே இப்போது தளவாய்புரச் சாசனம் என்று வழங்கப் படுகிறது. 6ஆம் நூற்றாண்டில் கடுங்கோனால் வழங்கப்பட்ட உரிமைகளை 9ஆம் நூற்றாண்டினில் வந்த பாண்டிய அரசன் வீர நாராயணன், அதற்கான செப்பேடு மறைந்தபோதிலும், உறுதிப் படுத்தினான் என்றால் அக்காலத்தில், நீள்வழக்காற்றுரிமை, ஆட்சி (Usage) போன்றவை எவ்வாறு நன்கு மதிக்கப்பட்டன என்பது விளங்கும். நிலஉரிமை வழக்குகளுக்குக் கிராம சபை ஆவணங்களும் புரவுவரிக் கணக்குப் புத்தகங்களும் தக்க சான்று களாகத் துணைசெய்தன என்பதில் ஐயமில்லை.

கொலை, களவு, பொதுச் சொத்தை அபகரித்தல் போன்ற குற்றங்கள் தீர விசாரிக்கப்பட்டுக் கடும் தண்டனை வழங்கப் பட்டது. இவை பொதுவாக உள்ளூர்ச் சபையினரால் குறிப்பாக நியாயத்தார் என்னும் சட்ட திட்டங்களை நன்கு அறிந்தவர்களின் முன்னிலையில் விசாரிக்கப்பட்டன. இராமநாதபுரம் மாவட்டம் கருவேற்குறிச்சியிலுள்ள சிலர் கூடி அவ்வூர்க் கோயில் பூசாரியை நடுத்தெருவில் கொலை செய்துவிட்டு வெளியூருக்கு ஓடிவிட்டனர். அக்கொலையைச் செய்வதற்கு முக்கியக் காரணமாயிருந்தவனின் சொத்துகள் அனைத்தும் பறிமுதல் செய்யப்பட்டு அவ்வூர்க் கோவிலுக்கு வழங்கப்பட்டன. பிறகு குற்றவாளியும் கொலை செய்யப்பட்டான். குற்றவாளியின் மகன், பறிமுதல் செய்யப் பட்ட தனது தந்தையின் சொத்துகளைத் தனக்குத் திருப்பித் தந்திட வேண்டினான். அவ் வேண்டுகோள் சில நிபந்தனைகளின் பேரில் ஏற்றுக்கொள்ளப்பட்டுச் சொத்துகள் பிள்ளைக்குக் கொடுக்கப்பட்டன.[10] வழக்குகளுக்குத் தீர்ப்பளிக்கும்போது மனிதாபிமான குணங்களுக்கு உரிய மதிப்பு அளிக்கப்பட்டது என்பதை இது உணர்த்தும்.

[10] Sastri, K.A.N., Pk. p. 227.

13ஆம் நூற்றுண்டில் புதுக்கோட்டைப் பகுதியில் மற்றொரு வழக்கைப்பற்றிய சில விவரங்கள் கல்வெட்டில் காணப்படுகின்றன. திரு நலக்குன்றமுடைய நாயனார் கோவில் பூசாரிகள் அக்கோவில் நகைகளைக் களவாடிவிட்டனர். இதை நாட்டாரும் சபையோரும் ஒன்றுகூடி விசாரித்தனர். பூசாரிகளில் ஒருவர் குற்றத்தை ஒப்புக்கொண்டார். மற்றவர்கள் மறுத்தனர். அவர்கள் தர்மாசனம் என்னும் நீதிமன்றத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டனர். அங்குப் பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்புக் கலப்பையைக் கையில் ஏந்தித் தாங்கள் குற்றமற்றவர்கள் என்பதை நிரூபிக்கும்படி பணிக்கப்பட்டனர். அப்போது அவர்கள் தங்களது குற்றத்தை ஒப்புக்கொண்டனர். பிறகு அவர்கள் 'சிவத் துரோகிகள்' என்று கருதப்பட்டு அதற்குரிய தண்டனைக்கு உள்ளாக்கப்பட்டனர்.[19a] நேரிடைச் சாட்சியோ (Eye-Witness evidence) சூழ்நிலைச் சான்றுகளோ (Circumstantial evidence) இல்லாதபோது 'சத்தியம் செய்தல்' போன்ற சில சோதனைமுறை மூலம் (Trial by ordeal) குற்றம்புரிந்தவர் யாரென அறிந்து தக்க தண்டனைகள் தரப்பட்டன. ஆக, குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கத் தீவிர முயற்சிகள் செய்யப்பட்டதும் அவர்களை உரிய மன்றத்தில் எல்லோர் முன்னிலையிலும் பகிரங்க விசாரணை செய்யப்பட்டுக் குற்றம் நிரூபிக்கப்பட்ட பிறகுதான் தண்டனை விதிக்கப்பட்டது என்பதும் நன்கு விளங்கும். நியாயத்திற்கும் நீதிக்கும் அரசன் முதல் ஆண்டிவரை கட்டுப்பட்டிருந்தனர் என்பதை மார்க்கபோலோ சுட்டிக்காட்டி எழுதியுள்ளார். குற்றவாளிகளைத் தண்டிப்பதிலும் அவர்கள் மிகவும் கண்டிப்பாய் இருக்கிறார்கள் என்பதையும் குறிப்பிட்டுள்ளார். பாண்டிய அரசன் சாதாரண குடிமகன் போலச் சட்டதிட்டங்களுக்குட்பட்டு நடந்த நிகழ்ச்சியையும் மார்க்க போலோ குறித்துள்ளார்.[19b]

ஆனால் 14ஆம் நூற்றுண்டில் மதுரையில் சிறிது காலம் நிலவியிருந்த சுல்தான் ஆட்சியின்போது சட்டதிட்டங்கள் புறக்கணிக்கப்பட்டன. இந்துக்கள் சிறிது தவறுகள் செய்தாலும் விசாரணையின்றிக் கடும் தண்டனைக்கு உள்ளாக்கப்பட்டனர். இவற்றை நேரில் கண்ட இபன்பதூதா விவரமான குறிப்புகளை விட்டுச் சென்றுள்ளார். அவர் கூறுகிறார்: 'ஒருநாள் கியாசுத்

[19a] மேற்படி-பக். 228

[19b] நீலகண்ட சாஸ்திரி, தென்னிந்தியாவைப்பற்றி வெளிநாட்டினர் குறிப்பு பக். 277-78.

துடன் (மதுரைச் சுல்தான்) நானும் காஜியும் உணவருந்திக் கொண்டிருந்தோம், அப்போது உருவ வழிபாட்டினன் ஒருவன் சுல்தான் முன் கொண்டுவரப்பட்டான். அவனுடன் அவனுடைய மனைவியும் ஏழு வயது மகனும் இருந்தார்கள். அவனுடைய தலையை வெட்டிவிடுமாறு அரபு மொழியில் ஆணையிட்டான். உடனே நான் வேறுபுறம் திரும்பிக்கொண்டேன். பின்னர் என் மனம் ஒரு நிலைக்கு வந்தபோது திரும்பிப் பார்த்தேன். மூன்று தலைகள் அங்கே தரையில் உருண்டு கிடந்தன'. மற்றொரு சமயம் ஓர் இந்துவின் கை கால்கள் வெட்டப்பட்டு அவன் தன்னுடைய ரத்தத்திலேயே நீந்திக்கொண்டிருந்ததை இபன்பதூதா பார்த்ததைக் குறித்துள்ளார். விசாரணையின்றி நூற்றுக்கணக்கான ஆண்கள், பெண்கள், குழந்தைகள் கழுவில் ஏற்றப்பட்ட விவரத்தையும் இபன்பதூதா குறித்துள்ளார்.[20]

## பாண்டியர் படை

பாண்டிய வேந்தர்கள் பிற வேந்தருடனும் குறுநில மன்னருடனும் நிகழ்த்திய போர்களை நோக்கின், தம் படை வலிமை, ஆதிக்கம், செல்வாக்கு முதலியவற்றை யாவரும் ஒப்புக் கொண்டு தம் ஆட்சிக்கு உட்பட்டிருக்க, தாம் மன்னர் மன்னராகத் திகழ வேண்டும் என்ற உள்நோக்கே அவற்றிற்கு முக்கியக் காரணமாக இருந்தது தெளிவு. ஏகாதிபத்ய நோக்கினை நிறைவேற்றுவதற்காக இம் மன்னர்கள், திக்விஜயம், அசுவமேதயாகம் போன்ற செயல்களில் நம்பிக்கை வைத்திருந்ததை அறியலாம். சங்க காலத்தில் நெடுஞ்செழியன் தலையாலங்கானத்துப் போரில், சேரர், சோழர், வேளிர் ஐவர் ஆகியோருடைய படைகளை முறியடித்துப் பெற்ற பெரும் வெற்றியைப் பற்றி ஏற்கெனவே சுட்டினோம். பாண்டியரிடம் தேர்ப்படை இருந்தது குறிப்பிடப்பட்டுள்ளது. கடுங்கோன் வழிவந்த பாண்டியர் ஆட்சிபுரிந்த காலத்தில், சுமார் இருநூற்றைம்பது வருடகாலம், (சுமார் கி.பி. 600 முதல் 850 வரை) வடக்கே பல்லவர்களுடன் அடிக்கடி போர்கள் நடந்தன. ஒன்பதாம் நூற்றாண்டில் பல்லவர் வீழ்ச்சிக்குப் பிறகு, சோழர்களுடன் தொடர்ந்து பாண்டியர்கள் அடிக்கடி போர் புரிய நேரிட்டது. சோழர் ஆதிக்கத்திலிருந்து பாண்டிய நாட்டை மீட்கவும், நிலையான ஆதிக்கத்தைப் பாண்டிய நாட்டில் ஏற்படுத்தவும் போரிட வேண்டியதாயிற்று. இவற்றைத் தவிரக் கங்கர், சேரர், ஈழத்தவர், மாரத்தர், பரதவர், ஆய்வேளிர் போன்றோரோடும் பாண்டியர்

20 மேற்படி ப. 466-467.

நடத்திய போர்களைப் பற்றியும் பல விவரங்களை ஏற்கெனவே நாம் கண்டோம். இவர்கள் ஈடுபட்ட பல்வேறு போர்களையும் அடைந்த பல வெற்றிகளையும் நோக்கும்போது அவர்கள் சிறந்த போர்ப் படையைப் பெற்றிருந்தனர் என்பது நன்கு விளங்கும். இப்படை சதுரங்கம் என்ற நான்கு அங்கங்களைக் கொண்டு விளங்கியதாகத் தெரிகிறது. 'கருங்கடலுடுத்த பெருங்கண் ஞாலத்து நாற்பெரும் படையும் பாற்படப் பரப்பி' என்று வேள்விக்குடிச் செப்பேடு குறிக்கின்றது. இந் நாற்பெரும் படையின் அங்கங்கள் தேர், யானை, குதிரை, காலாட் படைகள் என்பவையே. சற்றுப் பிற்பட்ட காலத்திய சின்னமனூர்ச் (பெரிய) சாசனத்தில் இப்படை 'மூவகைப்படை' என்று அழைக்கப்பட்டுள்ளது. எனவே பிற்காலத்தில் 'முப்படை' முக்கியத்துவம் பெற்றிருந்தது எனலாம்.

படைப்பிரிவில் தேர்ப்படை ஆரம்பத்தில் சிறப்பிடம் பெற்றதாகத் தெரிகிறது. தலையாலங்கானப் போரில் நெடுஞ்செழியன் தேர்ப்படையைச் செலுத்தினான் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. 'மாந்தேர் மாறன்' என்ற அடைமொழியில் பாண்டியர் குதிரை பூட்டிய தேர் ஓட்டுவதில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தனர் என்று விளங்கும். நெடுஞ்சடையப் பராந்தகன் அதியனைப் போரில் தோற்கடித்து அவனது தேர்களையும் குதிரைகளையும் கைப்பற்றினான்.[20a] 'தேர்மிகுமாக்கடற்றானைத் தென்னனவர் கோன்' என்று தளவாய்புரச் செப்பேடு பாண்டியனைப் புகழ்ந்துள்ளது. பிற்காலத்தில் தேர்ப்படையின் சிறப்பு மறைந்து குதிரைகள் இவ்விடத்தைப் பெற்றுக்கொண்டனபோலும். பிற்காலத்தில் அரபு நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட குதிரைகள் பாண்டிய நாட்டுக் குதிரைப் படையில் அணிவகுத்தன. 13ஆம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டிற்கு வந்த மார்க்கபோலோ அங்கு இறக்குமதி செய்யப்படும் குதிரைகள் சரியாக வளர்க்கப்படவில்லை என்பதை ஏளனமாகக் குறித்துள்ளார். ஆதலால், ஆண்டுதோறும் சுமார் 2,000 குதிரைகளைப் பாண்டியர் இறக்குமதி செய்கிறார்கள் என்றும் குறிப்பிடுகிறார்.[21] இக்கூற்றை வசாபும் மெய்ப்பித்துள்ளார். பாண்டியரது படையில் யானைப் படை முக்கிய அங்கமாகும். பாரதப் போரில் பஞ்சபாண்டவர்க்குத் துணைநின்று யானைப்படையைச் செலுத்தினர் என்று

[20a] அதியனை ஒடுபுறங் கண்டவன்குளையுடை மணித்தேர் ஆடல் வெம்பாவையுடன் கவர்ந்தும்' - (வேள்விக்குடி)

[21] Sastri, K. A. N. Foreign Notices.

அவர்களது செப்பேட்டில் பெருமையுடன் கூறிக்கொள்கிருர்கள். (பாரதத்து பகடோட்டியும்) 'கொல்யானை பலவோட்டி கூடா மன்னர் குழாந்தவிர்த்த' என்று பல்யாக முதுகுடுமி பெருவழுதி என்னும் பாண்டியன் புகழப்படுகிருன். பல போர்களில் பாண்டியர் கைப்பற்றிய யானைகளையும் குதிரைகளையும் பற்றிக் குறிப்புகள் காணப்படுகின்றன. முதலாம் இராசசிம்ம பாண்டியன் பல்லவர்களைக் குழம்பூர் என்னுமிடத்தில் தோற்கடித்து அவர்களது யானைகளையும் குதிரைகளையும் கைப்பற்றினன்.[22] 'குன்றமன்ன கொலேக் களிறுங் கூந்தன் மாவும் குலதனமு நன்ருடு மவை கொண்டும்' என்பன போன்ற பல குறிப்புகளும் உள்ளன. 1310-ல் மாலிக்காபூர் பாண்டிய நாட்டைத் தாக்கித் திரும்பும்போது பல யானைகளைக் கைப்பற்றிச் சென்றான். யானைப் படைக்குத் தலைமை வகித்தவன் 'கஜாதியக்ஷன்' என்றும், 'ஆனை ஒழுக்கு' என்றும் அழைக்கப்பட்டான்.[23]

## கடற்படை

நீண்ட கடற்கரையை எல்லையாகப் பாண்டியர் பெற்றிருந்ததனுல் அவர்கள் கடற்படையைப் பெற்றிருத்தல் வேண்டும் எனலாம். பல்லவர்களது போன்றோ சோழர்களது போன்றோ பாண்டியர்களது கடற்படை அவ்வளவு சிறப்புற்றிருந்ததாகச் சொல்ல முடியாது. சங்க காலத்திலேயே பாண்டியர் கடற்படையைப் பெற்றிருந்தனர். வடிம்பலம்ப நின்ற பாண்டியன் கப்பற்படை கொண்டு சாலி என்னும் தீவை வென்ற செய்தியை மதுரைக் காஞ்சி கூறுகிறது. ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபனிடம் தோற்ற மாயா பாண்டியன் என்பான் ஈழத்தரசனிடம் சரண்புகுந்தான். ஈழத்தரசன் பெரும்படை திரட்டிப் பாண்டிய நாட்டின்மேல் படையெடுக்க ஆயத்தமாக இருந்தபோது ஸ்ரீமாறன், பல்லவ அரசன் நிருபதுங்கனுடன் நட்புக்கொண்டு, அவனது கடற்படைத் துணையால் ஈழத்தின்மீது படையெடுத்து வென்றான் என்று கூறப்படுகிறது.[24] காயல்பட்டினத்தில் அரேபியா, பாரசீகம் போன்ற நாடுகளிலிருந்து கலங்கள் குதிரைகளை ஏற்றிக் கொண்டு வந்தனவென்று மார்க்கபோலோ குறிப்பிட்டுள்ளதால் அது ஒரு முக்கியத் துறைமுகமாய் விளங்கியதை அறியலாம். கொற்கை போன்ற துறைமுகங்களில் முத்துகுளிப்பதற்கும் சிறிதும் பெரிதுமான கலங்கள் பயன்படுத்தப்பட்டதையும்

[22] 'செழும்புரவிப் பல்லவனைக் குழம்பூருட்டேசழிய எண்ணிறந்த மால்களிறு மிவுளிகளும் பல கவர்ந்தும்' - வேள்விக்குடிச் செப்பேடு.

[23] K. V. Raman, Some aspects - p. 49.

[24] Ep Ind. XVIII - .p. 13. Minakshi, Administration and Social Life under the Pallavas, p. 162:3.

மார்க்கபோலோ குறித்துள்ளார். 'மாபாரிலிருந்து' (பாண்டிய நாட்டிலிருந்து) சரக்குகளை ஏற்றி எட்டுப் பெரிய கலங்கள் ஏமனுக்குப் போவதற்காகத் துறைமுகத்தில் நின்றுகொண்டிருந்த போது ஈழக்கடற்படை அவற்றைப்பிடிக்க முயன்று ஆனால் தக்க பாதுகாப்பு இருந்ததால் அவற்றைப் பிடிக்கமுடியவில்லை என்பதை இபன்பதூதா நேரில் பார்த்ததாகக் குறித்துள்ளார். அக் காலத்தில் வணிகக் கலங்களுக்கும் போர்க்கலங்களுக்கும் அதிக வேறுபாடுகள் இல்லை என்று தோன்றுகிறது.

## நிலைப்படை

நாட்டின் மூலப்படைப் பகுதிகள் தலைநகரிலும் பிற முக்கிய நகரங்களிலும் நிறுத்தப்பட்டிருந்தன. புதிதாய் வெல்லப்பட்ட பகைவர் நாட்டிலும் இப்படைப் பிரிவுகள் நிறுத்தப்பட்டன. பாண்டிய நாடு சோழராட்சிக்கு உட்பட்டிருந்தபோது கோட்டாறு போன்ற இடங்களில் சோழர்களது நிலைப்படை நிறுத்தப்பட்டிருந்தது. பாண்டியர்களும் ஆய்மன்னர் போன்ற குறுநில மன்னரை வென்றபிறகு ஆங்காங்கே தங்களது நிலைப்படையை நிறுவினர். கலகங்களையும் எதிர்ப்புகளையும் அடக்கவும் நாட்டில் அமைதி காக்கவும் இப்படை உதவியது. தவிர, நாட்டு அரசு நிர்வாகத்தில் பணியாற்றிய அலுவலர்கள் அவர்களது பணியைச் செவ்வனே செய்வதற்கும் இப் படைத் தலைவர்கள் துணை செய்தனர். ஊர்ப் பொதுப் பணிகளிலும் இந் நிலைப்படைத்தலைவர்கள் உதவியதைப் பல கல்வெட்டுகள் நமக்கு உணர்த்துகின்றன. திருநெல் வேலி மாவட்டத்திலுள்ள உக்கிரன்கோட்டை ஒரு முக்கியப் படைத்தளமாக இருந்தது. நெடுஞ்சடையப் பராந்தகன் காலத்தில் கோட்டை கொத்தளங்கள் இங்குக் கட்டப்பட்டன. மதுரைக்கருகிலுள்ள ஆனையூரில் ஒரு நிலைப்படை நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. அவ்வூர்க் கோவில் நிர்வாகத்தையும் சில காலம் 'படைத் தலைவர்கள்' நடத்தி வந்ததாகத் தெரிவிக்கின்றது. அவ்வாறே சில சந்தர்ப்பங்களில் திருவிடையபுத்தூர், கோட்டாறு, சுசீந்திரம், கோவில்பட்டி போன்ற கோவில்களில் நிர்வாகப் பொறுப்புகளைப் படைத்தலைவர்கள் ஏற்று நடத்தியதைக் கல்வெட்டுகள் குறிக்கின்றன.[26] இம்முறை எவ்வாறு இயங்கியது என்பது தெளிவாக விளங்கவில்லை. ஆனால், அமைதி

[25] நீலகண்ட சாஸ்திரி: தென்னிந்தியாவைப் பற்றி வெளிநாட்டினர் குறிப்புகள். ப. 450-451.

[26] K. V. Raman, **Some aspects** - p. 46-47, கழுகுமலையிலுள்ள கோவிலுக்குஅளிக்கப்பட்ட தானங்கள் திருமலை வீரர், பராந்தக வீரர் என்னும் படையினரிடம் ஒப்படைக்கப்பட்டன என்று 9ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டு அறிவிக்கின்றது. (SII. XIV. 42)

குன்றிக் குழப்பங்கள் தோன்றிய காலங்களில் அரசனே நிலைப் படைத் தலைவர்களிடம் ஊர்களையும் கோவில்களையும் அவர்கள் பொறுப்பில் விட்டிருக்கலாம். சில ஊர்கள் படைத்தலைவருக்கு மானியமாக (fief) அளிக்கப்பட்டு அவ்வூர்களின் பொறுப்பில் விடப்பட்டன. அவ்வூர்களில் வரிப்பணத்தை அவர்களே வசூலித்து அவர்களது குறிப்பிட்ட செலவுபோக மிகுதியை அரசிடம் செலுத்தினர். மாறவர்மன் குலசேகரன் குறிப்பிட்ட சில வரிப்பணத்தைத் திருவாதவூர் கோவிலுக்குத் தானமாக வழங்கிய கட்டளையை அவ்வூர்ப் படைக்கரணவருக்கு அனுப்பினான். நிலைப்படைக் கணக்குகளை வைத்திருக்கும் பொறுப்பை ஏற்றவர்களே படைக்கரணவர் என்பவர். அந்நிலைப் படைக்குத் திருவாதவூர் ஒரு 'மானிய கிராமமாக' இருந்திருக்க வேண்டும். இதன் காரணம் கொண்டே வரிவசூலிக்கும் பொறுப்பை அது ஏற்றது போலும்.[27]

## பெரும்படையர்

பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகளில் 'முற்பேர் படையர்', 'வளவன் உள்ளிட்ட பெரும்படையர்', 'வலங்கை மாசேனையர்' என்ற பலவகைப் படைப் பெயர்களைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. முன்னே குறிப்பிட்டுள்ளதுபடி இவர்களுக்கென ஆங்காங்கே சில ஊர்கள் மானியமாக அளிக்கப்பட்டன. ஊர்ச்சபைகள் போன்று, இவையும் வரிவசூலிப்பது, அறக் கட்டளைக் காத்தல் போன்ற பொறுப்புகளை ஏற்றிருந்ததை அக் கல்வெட்டுகள் குறிக்கின்றன. அவர்களுக்குள் 'சேனாபதி', 'படைக்கணக்கு' போன்ற அலுவலர்கள் பணியாற்றினர். இந்த 'முற்பேர் படை' அல்லது 'மூன்று கை மகாசேனையர்' என்பது கன்னட நாட்டில் வழங்கப்பட்ட 'மும்முடி தண்டம்' என்பதற்கு ஒப்பாகுமெனக் கருதப்படுகிறது.[28] பாண்டிய நாட்டில் இயங்கிய ஒரு பெரும் படையில் 8 சிறிய படைகள் இருந்ததாகக் குறிப்புக் காணப்படுகிறது. அவை முறையே முதலாம் படை, இரண்டாம் படை, மூன்றும் படை போன்ற பெயரிலேயே வழங்கப்பட்டன. பெரும்படையை இக்கால ரெஜிமெண்டிற்கும் (Regiment) சிறிய படையைப் பட்டாலியனுக்கும் (Battalion) ஒப்பிடலாம். இப் படைகளைப் பற்றிய மேலும் விவரங்கள் ஆராயப்பட வேண்டும். திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த அம்பாசமுத்திரத்தை அடுத்துள்ள திருவாலீச்சுரத்திலிருக்கும் அரியதொரு கல்வெட்டு

[27] ARE. 1962-63 p. 82; SII. V-451-54

[28] ARE. 1932 33. ப. 69. சோழ நாட்டிலும் வலங்கை மாசேனையார் இயங்கியது. Sastri Cholas - p. 538.

அங்குள்ள மூன்றுகை மகாசேனை (மூன்று அங்கங்களைக் கொண்ட பெரும் சேனை)யைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளைத் தருகிறது. அது சோழராட்சியின் போது அங்கு வைக்கப்பட்ட சேனை. அம் மகாசேனையைப் பற்றிப் பின்வரும் குறிப்புகள் காணப்படுகின்றன. இவர்கள் விஷ்ணுவையும் சிவபெருமானையும் வழிபட்டனர். கன்னரதேவனைத் (ராஷ்டிரகூட மன்னன் மூன்றாம் கிருஷ்ணனை) தோற்கடித்தனர். கடற்கரையிலுள்ள விழிஞத்தை அழித்தனர்; கடல் கடந்து கிழக்கே சென்று மாதோட்டத்தை அழித்தனர்; மலைநாட்டைக் கைப்பற்றினர். சாளுக்கியரைப் புறங்காட்டி ஓடச் செய்தனர்; வனவாசி நகரைக் கைப்பற்றினர்; வடுகர்களை முறியடித்தனர்; இம் மகா சேனையினர் பாண்டிய நாட்டில் தங்கியிருந்தனர் என்றும் அஞ்சாநெஞ்சம் படைத்த வீரர்கள் என்றும் குறிக்கப்படுகின்றனர். மேலே கூறப்பட்ட வெற்றிகள் இராசராசன் - இராசேந்திரன் காலத்தில் நடைபெற்றவை. பாண்டிய நாட்டை அடக்கி ஆளச் சோழர் இப் பண்பட்ட படையைப் பாண்டிய நாட்டில் பல பகுதிகளில் நிறுத்தினர் போலும். மூன்று கைமகாசேனை போன்ற படைக் குழாங்கள் நல்ல தேர்ச்சி பெற்ற வீரமரபுகளில் தோய்ந்தவர்கள் என நாம் அறியலாம். மேலும், இப்படை 'மௌல' என்று அர்த்தசாஸ்திரத்தில் கூறப்படும் பரம்பரைப் படைவகையைச் சார்ந்ததெனக் கருதலாம்.[29] இப்படையினர் அன்றாடச் சமூகப் பணிகளிலும் ஈடுபட்டனர். அறக்கட்டளைகளைப் பராமரிக்க ஊர்ச்சபையோருடன் இணைந்து பணியாற்றினர் எனத் தெரிகிறது.

### படைத்தலைவர்களும் உயர் அதிகாரிகளும்

படைத்தலைவர்க்குச் சேனாபதி, சாமந்தன், தண்டநாயகன் என்றும், உயர்தலைவர்களுக்கு மகாசாமந்தன், மகாதண்டநாயகன் என்னும் பெயர்களும் வழங்கின. மகாசாமந்தனாகத் தேர்ந்தெடுக்கப்படுபவர் போரில் வல்லவர்கள் மட்டுமன்றிச் சிறந்த அறிவாளிகளாகவும் திகழ்ந்தனர். நெடுஞ்சடையப் பராந்தகன் காலத்தில் மகா சாமந்தனாய் கணபதியையும் அவனது தம்பி ஏனாதி எட்டிச் சாத்தனையும் எடுத்துக்காட்டுகளாய்க் கொள்ளலாம். படைத்தலைவனாகவும் பெருவீரனாகவும் விளங்கிய சாத்தன் தமிழ்ப் புலமையுடையவனாகவும் இருந்தான். வேள்விக்குடிச் செப்பேடுகளின் தமிழ்ப் பகுதியில் பாண்டிவேந்தர் பலருடைய வரலாறுகளை அழகிய தமிழில் வரைந்துள்ளான். 'ஏனாதி' என்ற பட்டமும் பெற்றவன். இவ்வரசன் ஆட்சியின் பிற்பகுதியில் மகா சாமந்தனாய் விளங்கியவன் தீரதரன் மூர்த்தி என்பவன்.

[29] K. A. N. Sastri, Cholas, p. 457.

அந்தணர் குலத்திலிருந்தும் பலர் மகாசாமந்தர்களாகவும் தண்டநாயகர்களாகவும் பணியாற்றினர். மேலே குறிப்பிட்ட மகாசாமந்தன் கணபதியும் அவனது தம்பியுமான ஏனுதிச் சாத்தன் களக்குடியில் (கரவந்தபுரம் அல்லது இப்போதைய உக்கிரன்கோட்டை) வைதிககுலத்தைச் சார்ந்தவர்களெனக் கல்வெட்டு குறிக்கிறது. அவர்களுக்குப் 'பிரம்மரையன்' என்ற பட்டம் வழங்கப்பட்டது. மாறவர்மன் குலசேகரன் காலத்தில் ஈழத்தின் மீது படையெடுத்துப் பாண்டியப்படைக்குத் தலைமை தாங்கி வெற்றிவாகை சூடிய ஆரியச் சக்கரவர்த்தி என்பவன் சிறந்த 'மகாதண்டநாயகன்' என்றும், 'தனிநின்றுவென்ற பெருமாள்' என்றும் போற்றப்பட்டான்.

பொதுவாக, சிறந்த படைத்தலைவர்களுக்கும் அமைச்சர்களுக்கும் மூவேந்த மங்கலப் பேரரையன், பாண்டி மங்கலப் பேரரையன், பாண்டி மார்த்தாண்டப் பேரரையன், வீரமங்கலப் பேரரையன், பாண்டி இளங்கோ மங்கலப் பேரரையன் போன்ற பல சிறப்புப் பெயர்கள் வழங்கப்பட்டன. அரசருக்கு மெய்க்காப்பாளர் படை அணுக்கப்படை என்று வழங்கப்பட்டது. அதன் தலைவன் தென்னவன் அணுக்கப்பேரரையன் என்று வழங்கினான்.[29a]

**போர் வீரர்கள்**

சில குடும்பத்தினர் பல தலைமுறைகளாகப் பாண்டியர்களிடம் படைத்தலைவர்களாகப் பணியாற்றியுள்ளார்கள். திண்டுக்கல் அருகில் பெரும்புள்ளி என்னுமிடத்தில் கிடைத்த கல்வெட்டொன்று பாண்டியனிடம் பணியாற்றிய வீரர் குடும்பத்தின் வரலாற்றைக் குறிக்கின்றது.[30] அதன்படி பராந்தகப்பள்ளி வேளான் என்பான் நெடுஞ்சடையப் பராந்தகனுக்காக இடவைப் போரில்கலந்து கொண்டான். அவனது மகன் புள்ளன் நக்கன் என்பவன் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபனுக்காக விழிஞம், திருக்குடமுக்குப் போன்ற போர்களில் போர் சண்டையிட்டு வெற்றி தேடித் தந்த பெரு வீரனுவான். அவனது மகன் நக்கன் புள்ளன் இரண்டாம் வரகுணனிடம் பணியாற்றியவன். ஆக, ஒரு குடும்பமே பாண்டிய நாட்டைக் காக்கும் பணியில் ஈடுபட்டது என்பதை அறியலாம். பாண்டியரிடம் பணியாற்றிய மகாசாமந்தரும் படைத்தலைவர்களும் நாட்டுப்பற்றும் அரசப்பற்றும் மிகுந்த பண்பாளர்களாகவே திகழ்ந்தனர். பிற்காலத்தில் விசயநகர ஆட்சியிலும், மகமதியர் ஆட்சியிலும் நடந்தது போன்று படைவீரர்கள் அரச

[29a]. S. I. I. & XIV, No. 64; 71.
[30] E. I. XXXII - p. 268.

னுக்கே துரோகம் செய்து நாட்டைக் கைப்பற்றியதான நிகழ்ச்சி யேதும் பாண்டிய வரலாற்றில் நிகழவில்லை. வாழையடி வாழை யாக வந்த பாண்டிய மன்னர்களுக்குப் படைத்தலைவர்கள் நன்றி விசுவாசத்துடன் பணியாற்றினர். படைத்தலைவர்கள் மட்டு மன்றிக் கீழ்மட்டப் படைவீரர்களும் தாங்கள் பட்ட செஞ்சோற் றுப்பெருங்கடனுக்காகப் போரிட்டு உயிர்த்தியாகம் செய்தார்கள். அவ்வாறு உயிர்நீத்த இருவீரர்களின் தியாக வரலாற்றை விழிஞத் தில் கிடைத்துள்ள இரு வீரக்கற்கள் எடுத்துரைக்கின்றன.[31]

## ஊராட்சி முறை

பல்லவ நாட்டிலும் சோழ நாட்டிலும் இயங்கியது போலவே பாண்டிய நாட்டிலும் ஊராட்சிமுறை இயங்கியது. அக்கால ஆட்சி அமைதியுடன் நடைபெற்றதற்கு முக்கியகாரணம் ஊர் தோறும் நிலை பெற்றிருந்த ஊராட்சி மன்றங்களின் சிறப்புப் பணியே ஆகும். ஊர்ச்சபைகள் பொறுப்புணர்ச்சியுடனும் நடுவு நிலைமை குன்றாமலும் ஒழுங்காகத் தமது கடமைகளைச் செய்து வந்தமையால் பொதுமக்கள் அவற்றின்மீது நம்பிக்கையும் நன் மதிப்பும் வைத்து அவற்றின் முடிவுகளை ஏற்றுக்கொண்டனர். 'நன்மக்கள் தீயோரால் நலிவுறாமல் நல்வாழ் வெய்தவும் நீதி பெறவும், அறநிலையங்கள் தமக்குரிய கடமைகளை ஆற்றிவரவும், அறப்புறங்கள் நன்கு பரிபாலிக்கப்படவும், ஊர்க்காரியங்கள் ஒழுங்காக நடந்து பொதுமக்கள் வாழ்வு வளம்பெற்றுத் திகழவும் கிராம சபைகள் செய்துவந்த அரும்பெருந் தொண்டுகள் அளவின டங்கா என்பதை ஆங்காங்குக் காணப்படும் கல்வெட்டுகள் அறி விக்கின்றன.'[32] பொதுவாக, ஊராட்சி நடத்திவந்த சபைகளை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். அவை பிராமணர்களுக்கு அளிக்கப்பட்ட பிரமதேயக்கிராமங்களில் இயங்கிய சபை; பிரம தேயமல்லாத ஊர்களில் செயலாற்றிய ஊர்ச்சபை; வணிகர்கள் வசித்த நகரங்களில் இருந்த 'நகரம்' என்னும் சபை. அவற்றை முறையே 'கிராமசபை' அல்லது 'மகாசபை', 'ஊர்ச்சபை', 'நகரசபை' என்றும் கூறலாம். சங்க காலத்திலேயே சிறிது அள வில் இயங்கிய அறங்கூறவைகள் பிற்காலத்தில் பல்லவராட்சி யிலும் முதற்பாண்டியர் ஆட்சியிலும் முழுக்கிராம சபைகளாய் விரிந்து பல்வேறு பணிகளை நிறைவேற்றும் அவைகளாக இயங்கின. ஊர்கள் பெருகி அவற்றின் தேவைகளும் அலுவல்களும் பெரு கியதன் காரணமாய் ஊர்ச்சபைகளின் கடமைகளும் அதிகரித்தன.

[31] K. V. Raman, Some Hero Stones from the Pandyan Country, **Semi nar on Hero-Stones**; ARE - 1958-59. p. 16.

[32] டி. வி. சதாசிவப் பண்டாரத்தார் பிற்காலச் சோழர் சரித்திரம். பக். 19.

அவற்றை கவனிக்கப் பல உட்கழகங்கள் அல்லது வாரியங்களையும் அமைக்க வேண்டியதாயிற்று. மேலும், பல்லவ, பாண்டிய, சோழ அரசர்கள் மறையவர் பொருட்டுப் பிரம்மதேயம் அல்லது சதுர்வேதி மங்கலம் என்னும் கிராமங்களைப் புதிதாக உண்டாக்கினர். அவற்றிலெல்லாம் சபைகள் உருவாகிச் சிறப்பாக இயங்கத் தொடங்கின. அவை இயங்கிய முறைகள் சோழ நாட்டிலுள்ள உத்தரமேரூர் என்னும் ஊரிலும் பாண்டிய நாட்டிலுள்ள மானூர் என்னும் ஊரிலும் கிடைத்த கல்வெட்டுகளின் மூலம் நன்கு விளங்குகின்றன. அவ்வாறு உருவாகிய பல ஊர்ச்சபைகள் தமிழகத்தில் வெகுகாலம் நல்ல முறையில் இயங்கி வந்துள்ளன. சோழராட்சியில் அவற்றின் வளர்ச்சி உச்சநிலை அடைந்தது எனலாம். பிற்காலங்களிலும் அவை நிலைத்து நின்றன. விசய நகர ஆட்சியிலும் மகாசபைகள் இயங்கின. 18-19ஆம் நூற்றாண்டுகளில் இந்நாட்டு ஆளுகையைக் கைப்பற்றிய ஐரோப்பிய அதிகாரிகள் கூட அச்சபைகளைப் பெரிதும் புகழ்ந்து பாராட்டியுள்ளனர். மத்திய ஆட்சி பல இன்னல்களுக்கும் அரசியல் புயல்களுக்கும் உள்ளாகிய போதும் கூடக் கிராமசபைகள் தொடர்ந்து அவற்றின் கடமைகளைச் சிறப்புடன் ஆற்றி அமைதி குலையாமல் பாதுகாத்தன. கிராம மக்களுக்குச் சபைகளே ஆட்சியின் ஸ்திரத் தன்மையைக் காக்கும் நிலையங்களாய் விளங்கின. நாட்டின் அமைதிக்கும் கிராம நல்லாட்சிக்கும் ஊர்ச்சபைகளே அச்சாணி போன்று அமைந்தன.

### மானூர் மகாசபை

பாண்டிய நாட்டில் மகாசபைகள் இயங்கி வந்ததற்கு அங்குள்ள பல கல்வெட்டுகளும் செப்பேடுகளும் சான்று பகர்கின்றன. தளவாய்புரச் செப்பேட்டில் திருமங்கலம், சோமாசிச்குறிச்சி ஆகிய இரண்டு ஊர்களையும் ஒன்றாக்கிப் பிராமணருக்குத் தானம் செய்தான் பராந்தக நாராயணன். அவ்வூர் மகாசபையாருக்கு அத்தானம் அளிக்கப்பட்டதைச் செப்பேடு குறிக்கிறது. பாண்டிய நாட்டில் சுமார் கி.பி. 800-ல் முழுத் துடிப்புடன் இயங்கிய கிராமத் தன்னாட்சி முறையைத் திருநெல்வேலி மாவட்டம் மானூரில் கிடைத்த கல்வெட்டொன்று விவரித்துள்ளது. இது சோழர் ஊராட்சிமுறையை விவரிக்கும் உத்தரமேரூர்க் கல்வெட்டை விடக் காலத்தால் முந்தியதாகையால் அதற்கு முன்னோடியாகக் கருதலாம். ஊர் மகாசபையில் உறுப்பினராதற்கு உரியவர்களின் மிகக்குறைந்த தகுதிகள் யாவை என்பதை விளக்குகிறது. அவையாவன:

(1) ஊர்ப்பங்காளர் மக்களில் மந்திரப் பிராமணமும் தர்மமும் கற்ற ஒருவனே ஊர்ச்சபையில் தன் தந்தையின் பங்குக்குரிய உறுப்பினனாக இருக்கலாம். அதே தகுதியுள்ளவனே, விற்கப்பட்ட அல்லது விலைக்கு வாங்கப்பட்ட அல்லது ஸ்ரீதனமாகப் பெறப்பட்ட பங்குக்குரிய ஆளாகச் சபையில் இருக்கலாம்.

(2) இங்ஙனம் மூன்று வகையில் அடையப்பெற்ற பங்கு ஒருவனை முழுவுறுப்பாண்மைக்கன்றி, கால், அரை, முக்கால் உறுப்பாண்மைக்கு உரியவனாக்காது.

(3) பங்கை விலைக்கு வாங்குவோர், ஒரு வேத முழுவதையும் அதன் பரிச்சிட்டங்களோடு நன்றாக ஓதுகின்றவனையே தம் பங்குக்குரிய உறுப்பினனாகத் தேரவேண்டும்.

(4) முழுவுறுப்பாண்மையில்லாதார், ஊர்க்காரியங்களை நிறைவேற்ற எந்த வாரியத்திலும் இருக்கமுடியாது.

(5) இந்தத் தகுதியெல்லாமுடையோர், ஊர்ச்சபை நடவடிக்கைகளில் ஒவ்வொரு முன்னீட்டையும் (Proposal) கட்டுப்பாடாக எதிர்க்கவுந் தடுக்கவும் கூடாது.

(6) இங்ஙனம் தடங்கல் செய்தோர் தாமும் தம் சார்பாளருமாகத்தம்மால் செய்யப்பட்ட ஒவ்வொரு தடங்கலுக்கு (குத்துக்கால்) ஐயஞ்சுகாசுகள் தண்டம் செலுத்த வேண்டும்.

உத்தரமேரூர் போன்று இங்கும் சபை அங்கத்தினராவதற்கு ஊர்ப்பங்கும் கல்வியும் முக்கியத்தகுதிகளாக விதிக்கப்பட்டன. ஆனால் உத்தரமேரூரிலுள்ளதைப் போல் வாரிய அங்கத்தினர்கள் குடவோலை முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டனரா என்பது தெளிவாகத் தெரியவில்லை. நிலமும் வீட்டுமனையும் உடையார் மட்டும் அங்கத்தினர் ஆகலாம் என்பதற்குக் காரணம் அவ்வூர் விவகாரங்களில் அவர்கள் அக்கறையுடனும் பொறுப்புடனும் இயங்குவர் என்பதே. அவர்கள் கல்வியறிவுடையவராகவும் அறநெறி வழுவாது நடப்பவர்களாயும் இருக்கவேண்டும். சபையின் நடவடிக்கைகள் ஒழுங்காய் நடத்தவிடாமல் பிரேரணைகளை நிறைவேற்ற முடியாமல் தடுத்து நிறுத்தித் தடங்கல் (குத்துக்கால்) செய்பவர்கள் இருந்தனர். அவ்வாறு அவர்கள் செய்யாதவாறு தடுக்க ஒவ்வொரு தடங்கலுக்கும் 'ஐயஞ்சுகாசு' தண்டம் கொடுக்க வேண்டுமென மானூர்ச் சபையினர் விதிமுறை செய்தனர்.[33]

[33] 'முழுச்சிராவனை (சொத்து) இல்லாதாரை எவ்வகைப்பட்ட வாரியமும் ஏற்றப் பொறுதார் ஆகவும் அன்றென்று குத்துக்கால் செய்யப்பெறுதார் ஆகவும் குத்துக்கால் செய்வாரையும் குத்துக்கால் செய்வாருக்கு உறவாயுடனிருப்பாரையும் வெவ்வேற்று வகை ஐய்யஞ்சு காசு தண்டம் கொண்டு...

மேலும், இவ்விதிகளால் ஊர் மன்ற உறுப்பாண்மையைப் பிற வுடைமைகள் போல் மற்றவர்க்கு விற்கவும் வாங்கவும் வசதி செய் யப்பட்டது. ஆனுல், அப்படி வாங்குவோர் சொத்துரிமையும் கல்வித் தகுதியும் உடையோராக இருக்கவேண்டுமெனவும் விதிக்கப்பட்டது. இம் மகாசபை வாரியங்கள் பல அமைத்து தனது பணிகளைச் செய்ததையும் இக் கல்வெட்டுக் குறிக்கின்றது. ஆனுல், குடவோலைத் தேர்தல் முறையைப் பற்றியும் வாரியங்கள் அமைக்கப்பட்ட முறையைப்பற்றியும் அது விளக்கங்கள் கொடுக்க வில்லை. எட்டு அல்லது ஒன்பதாம் நூற்ருண்டுகளில் பாண்டிய நாட்டில் மானூரர்ச்சபை போன்று பல ஊர்களில் சபை இயங்கி வந்ததை அறிகிறோம். இரண்டாம் வரகுணன் காலத்தில் திருச் செந்தூரிலும், அம்பாசமுத்திரத்திலும் சபைகள் அறக்கட்டளை களை அரசனிடம் பெற்று அவ்வூர்க் கோவில்களில் பல கட்டளை களைப் பராமரித்து வந்தன.[34] அரசன் 290 பொற்காசுகளை அம்பாசமுத்திரத்தின் ஊர்ச்சபையாரிடம் ஒப்படைத்து அதில் வரக்கூடிய 580 கலம் நெல் வட்டியைக் கொண்டு நான்குகாலப் பூஜையும் படைப்புகளும் கோவிலுக்கு அளிக்குமாறு பணித்தான். இதற்குக் கோவில் பணியாள்களும் வாரியமக்களும் பொறுப்பேற் றனர். 'படாரர் பணிமக்களும் இளங்கோ குடிச்சவை வாரி யரும் உடனின்று......நான்கு காலமும் திருவமுது செலுத்தும்படி' என்பது கல்வெட்டு வாசகம்.[35]

பதின்மூன்றும் நூற்றுண்டுத் தொடக்கத்தில் சுசீந்திரத்தில் இயங்கிய மகாசபையைப் பற்றிய சுவையான சில விவரங்களை அங்குள்ள கல்வெட்டொன்று உரைக்கின்றது.[36] கொல்லம் ஆண்டு 403, (கி.பி. 1228-29)-ல் பொறிக்கப்பட்ட இக் கல் வெட்டு அவ்வூர்ச் சபையில் கீழக்கரையைச் சேர்ந்த மலையாளப் பிராமணர்களும் அவர்களுடைய சார்பினரும் அங்கம் வகித்ததை குறிக்கின்றது. அவர்கள் எட்டு 'அடைவுகளாய்'ப் பிரிக்கப்பட்டு ஒவ்வோர் அடைவுக்கும் ஒவ்வோர் அங்கத்தினர் தேர்ந்தெடுக்கப் பட்டனர். அவர்கள் ஒன்றுய்க் கூடிக் கோவில் மற்றும் ஊர்ப் பொதுக்காரியங்களைப்பற்றி முடிவெடுக்க மகாசபை அவர்களுக்கு அனுமதியளித்தது. கோவில் நிலங்களை யாவரும் சொந்த நல னுக்குப் பயன்படுத்துவதற்கான முயற்சிகள் எதையும் அவர்கள் செய்யக்கூடாது எனவும் தடைவிதிக்கப்பட்டது. யாரேனும் தவறு செய்தால் அவருக்கு 12 கழஞ்சுப்பொன் அபராதம் விதிக்

[34] இரண்டாம் வரகுணன் காலத்தில் திருச்செந்தூரில் இயங்கிய மகா சபையைப் பற்றிக் கல்வெட்டு அறிவிக்கிறது. E. I. XXXI, பக் 101.

[35] E. I. IX - p. 92-93.

[36] ARE - 1958-59. p. 18.

கப்படும் என்றும் அவர்களுடைய சொத்துகளும் சபையால் பறி முதல் செய்யப்படும் என்றும் விதிக்கப்பட்டது. மகாசபை சில முக்கியப் பணிகளுக்குக் குறிப்பிட்ட அங்கத்தினர் அடங்கிய வாரியம் போன்ற குழுக்களைப் பொறுப்பேற்றுச் செயலாற்றச் செய்ததை இக் கல்வெட்டு குறிக்கும். மேலும், சுயநலக்காரர் களுக்குத் தக்க தண்டனை கொடுத்தது மூலம் பொது வாழ்க்கை யில் தூய்மை கடைப்பிடிக்கப்பட்டதை இது உணர்த்தும்.

### ஊர்ச்சபை

பிரம தேயமல்லாத, ஊர்களில் 'ஊர்' என்னும் அவை பணி யாற்றியது. ஆனால், இது இயங்கிய முறையைப் பற்றிய விவ ரங்கள் நமக்குக் கிடைத்தில. 10ஆம் நூற்றுண்டில் வெளியிடப் பட்ட சிவகாசிச் செப்பேட்டில் ஒரு கிராமத்து எல்லையை வரை யறுக்கும் பணி மேல்வேம்பநாடு நாட்டாரும், நளப்புரம் ஊரா ரின் முன்னிலையில் செய்யப்பட்டதைக் குறிக்கின்றது. அதுபோல் திருப்பத்தூர்ப் பகுதியிலுள்ள வேளங்குடியில் ஊர் அவை இயங் கியதைக் கி.பி. 1333ஆம் ஆண்டுக் கல்வெட்டில் குறிக்கப்பட் டுள்ளது.

### நகரசபை

வணிகர் வசித்த நகரங்களில் 'நகரம்' என்ற சபை இயங் கியது. உக்கிரன்கோட்டை (திருநெல்வேலி மாவட்டம்) எருக் கங்குடி (இராமநாதபுரம் மாவட்டம்), சிவபுரி, கொடும்பாளூர், உறையூர் போன்ற ஊர்களில் நகரத்தார் குழுக்கள் பல பொது நலக் காரியங்களைச் செய்துவந்ததை அறிகிறோம். நகரம் வணிகர்களுக்கென்றே ஏற்பட்ட சபை ஆகும். வணிகர்கள் ஏராளமாய் இருந்த வியாபாரத்தலங்களில் நகரமே ஊர்ச்சபை யாகவும் அமைந்தது.

### நாட்டுச் சபை

பல கிராமங்களைக் கொண்ட ஒவ்வொரு நாட்டிலும் நாடு என்ற ஒரு பேரவை அந்நாட்டின் பொதுக் காரியங்களைக் கவனித்து வந்தது. நாட்டு மக்களே 'நாடு' என்ற சபையாகக் கூடினர் என்பதை 'நாடாயிசைந்த நாட்டோம்' என்ற கல்வெட்டுக் குறிப்புகளிலிருந்து அறிகிறோம். நாட்டின் அங்கத் தினர் நாட்டார் ஆவர். நாட்டிலுள்ள ஊர்ச்சபைகள் நகர சபைகள் இவற்றின் அங்கத்தினரோ பிரதிநிதிகளோ இந்நாட்டுச் சபையில் அங்கம் வகித்தனர் போலும். நாட்டுச் சபைக் கூட்டத் திற்குப் பிரதிநிதிகளைத் தவிர ஒவ்வொருவரின் கணக்கரும் சென்

றனர். நிலங்களுக்குத் தரம் வகுத்தல், வரி வகுத்தல், தீர்வையை அவ்வப்போது பரிசீலனை செய்தல் போன்ற அதிகாரமும் நாட்டாருக்கே இருந்தது. இவ் விஷயங்களில் நாட்டாரின் பரிந்துரைகளையே அதிகாரிகளும் அரசனும் ஏற்றுக் கொண்டனர். இதைப்பற்றிய அரசு ஆணைகளும் நாட்டாருக்கு அனுப்பப்பட்டன. ஊர்ச்சபைகளும் நாட்டுச் சபைகளும் நெருங்கிய தொடர்பு கொண்டு பல பணிகளில் இணைந்தும் செய லாற்றின. இவ்வாறு அரசன் பிரமதேயதானம் அளித்த நிலத்தின் எல்லையை வரையறுக்கும்போது 'ஆசிநாட்டு நாட் டாரும்', 'நெச்சுர நாட்டாரும்'' 'கணக்கரும்' உடன் இருந்த தைத் தளவாய்புரச் செப்பேடு கூறுகிறது. ஒரு சமயம் வரிப் பணம் கட்டவில்லை என்பதற்காகச் சிலருடைய நிலங்கள் உள்ளூர்க் கோவிலுக்கு அளிக்கப்பட்டன. ஆனால், இது தவறு என்று மேல் அதிகாரியிடம் முறையிடப்பட்டபோது அவ்வதிகாரி ஊர்ச் சபையாரிடம் கலந்தபின் ஏற்கெனவே வரிவசூலிக்கப் பட்டிருப்பதை உணர்ந்து நிலங்களை மீண்டும் அவர்களிடமே ஒப்படைக்கும்படி ஆணையிட்டான். இதிலிருந்து அதிகாரிகள் ஊர்ச்சபையாரை மதித்தும் அவர்களைக் கலந்தும் தங்களது அதிகாரங்களைச் செலுத்தினர் என்பது விளங்கும்.

ஆக, பாண்டிய நாட்டில் 8-9ஆம் நூற்றாண்டுகளிலேயே கிராம சபைகளும் நாட்டுச் சபைகளும் சிறப்புடன் இயங்கி ஊர் ஆட்சிக்கு அடித்தளங்களாய் விளங்கி வந்தன என்பது விளங்கும். சோழர் ஆட்சிக்கு முன்னமே பல்லவ நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் ஊர்ச் சபைகள் இயங்கியதற்குத் தக்க சான்றுகள் உள்ளன. இச்சபைகள், கணங்கள், வாரியங்கள் போன்ற பல உட்கழகங்களைக் கொண்டு பொதுநலக் காரியங்களை அரசியல் விருப்பு வெறுப்பின்றி, பொதுவாக மத்திய அரசுடன் இணைந்து, நன்கு நடத்திச் சென்றன. பிற்காலத்திலும் அவை தொடர்ந்து இயங்கின என்றாலும் விசயநகர ஆட்சிக்குப் பிறகு மத்திய அரசின் செல்வாக்கு அதிகரித்தபோது அவற்றின் செல்வாக்கு சற்றுக் குறைந்திருக்கும் என்பதில் ஐயமில்லை. ஆனால் முன்னே கூறியது போல, ஆங்கிலேயர்கள் ஆட்சியில்கூடக் கிராம சபைகளின் ஆட்சிமுறை போற்றப்பட்டது. இக்காலத்தில் 'பஞ்சாயத்து ராஜ்' என்று சொல்லப்படுவதும் கிராம ஆட்சிமுறையின் சிறப்பினை அடிப்படையாக கொண்டெழுந்த கருத்தேயாகும்.

பாண்டியநாட்டு ஆட்சிமுறையின் சில முக்கிய இயல்புகள், கிடைத்த சான்றுகளைக் கொண்டு மேலே தொகுத்துக் கொடுக்கப் பட்டுள்ளன. நமக்குத் தெரியாத பல உண்மைகள் இன்னும் சில

கல்வெட்டுகளில் புதைந்து கிடக்கின்றன. அவை மேலும் ஆராயப்பட வேண்டும். ஆனால், கிடைத்துள்ள சான்றுகளின் அடிப்படையில் நோக்கும்போது பாண்டிய நாட்டில் மத்திய ஆட்சியும் ஊர் ஆட்சிமுறையும் நல்ல பண்பட்ட நோக்குடனே நிலவி இருந்தமை விளங்கும். முடியாட்சியாக இருப்பினும், அரசன் தர்மத்திற்குக் கட்டுப்பட்டு நடந்தான். நீதி வழுவாமலும் குடிநலன்களைப் புறக்கணிக்காதவாறும் செங்கோலோச்சுவதைத் தனது உயர்ந்த சில இலட்சியங்களாய்க் கொண்டு அரசாண்டு வந்தான். சிறந்த அறிஞர்களை அமைச்சர்களாக கொண்டு நாட்டு நலனை அறிந்து ஆட்சிபுரிந்தான். அவ்வாறே படைத்தலைவர்களும் வெறும் போரிடும் முரடர்களல்லர்; நன்கு கற்றறிந்த பண்பாளர். ஆகையால் அரசன் சுயேச்சையாக மனம் போனபடி ஆண்டுவந்தான் என்று சொல்வதற்கு ஆதாரம் இல்லை. மக்களுடைய தேவைகளை ஊர்ச்சபைகளின் மூலமும், நாட்டார் மூலமும், தனது அமைச்சர்களையும் அதிகாரிகளையும் கொண்டு, நன்கு தெரிந்து அரசு கட்டளைகளைப் பிறப்பித்தான். பாண்டிய வரலாற்றில் கொடுங்கோல் மன்னன் என்று சொல்லக் கூடிய அரசன் யாரும் இருந்ததாகச் சான்றுகள் இல்லை. பதவி ஆசையினால் உள்நாட்டுக் கலகங்களும் சில சமயங்களில் நாட்டின் அமைதியைக் குலைத்தன என்பது உண்மை; ஆனால், அவர்களது நீண்ட வரலாற்றில் அத்தகைய நிகழ்ச்சிகள் மிகக் குறைவே. பல்லவர், சோழர், சேரர் போன்றோர் தம்முள் அடிக்கடி சண்டையிட்டதை மற்றொரு குறைபாடாகச் சொல்லலாம். ஆனால், அக்காலச் சூழ்நிலையில் இது தவிர்க்க முடியாததொன்று. மேலும், தங்களது நாட்டைச் சோழப் பேரரசர்களின் ஆக்கிரமிப்பினின்று காப்பதற்கு அவர்களுடன் பாண்டியர் அடிக்கடி போர் செய்ய வேண்டியதாயிற்று. அது எவ்வாறாயினும் இப்போர்களால் மக்களுக்கு ஓயாத துன்பங்கள் ஏற்பட்டிருக்கும் என்பதை மறுக்க முடியாது. ஆனால், அக்காலப் போர்கள் பொதுவாக நாட்டின் அன்றாட வாழ்க்கையில் குறுக்கிடாமல் போர் வீரர்களுக்கிடையே மட்டும் நடைபெற்றன என்பதையும் நினைவில் கொள்ளவேண்டும். போர்க்களத்தில் வீரத்தைக் காட்டிய அரசன் நாட்டில் ஈகை, கல்வி, கலை இவற்றைப் போற்றிக் காப்பதில் பின்வாங்கவில்லை. வெற்றிகளில் கிடைத்த செல்வங்களைக் கொண்டு இரண்டாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனும், முதலாம் மாறவர்மன் குலசேகரனும் செய்த பல திருப்பணிகளை ஏற்கெனவே சுட்டினோம். மடங்களுக்கு 'மடப்புறம்', சமணப் பள்ளிகளுக்கு பள்ளிச்சந்தம், கோவில்களுக்குத் தேவதானம், திருவிடையாட்டம்; கோவில் திருப்பணிகளுக்குத் திருப்பணிப்புறம் போன்ற நிலதானங்கள் அளித்து அவற்றைப் பாண்டிய

அரசர்கள் பாதுகாத்தனர். கலைஞர்களுக்குக் 'கூத்துக்காணி', கவிஞர்களுக்குப் 'புலமை விருத்தி', வேதம் ஓதும் அந்தணர்களுக்குப் பட்டவிருத்தி, பிரமதேயம் போன்ற நிலதானங்கள் அளித்துக் கலைஞர்களையும் சான்றோரையும் போற்றினர். கிராமப் பொது நலன்களுக்காகச் சிறப்புப் பணியாற்றிய கிராம சபைகளின் இயக்கத்தில் தலையிடாமல் அவற்றை மதித்தும் வந்தனர். பாண்டியர் ஆட்சிமுறை முடியாட்சி முறையாய் இருப்பினும் குடிமக்களுடன் நெருங்கிய தொடர்புகொண்டு இயங்கிய ஊர்ச்சபைகளை அடித்தளமாகக் கொண்டு இயங்கிய காரணத்தால் பெரும் புரட்சிகளோ இடர்ப்பாடுகளோ இல்லாமல் நீண்டகாலம் இயங்கியது எனலாம்.[37]

[37] **K. V. Raman, Some Aspects, p. 55-56.**

# 12. பொருளாதார நிலை

நாட்டின் பொருளாதாரத்திற்கு நிலவளம்தான் அடிப்படையாக விளங்கியது. அரசாங்க வருவாயிலும் நிலவரியே முதன்மை பெற்றது. தவிர, சுங்கவரி, தொழில் வரிகள் மற்றும் காடுகள், கனிப்பொருள்கள், உப்பளங்கள் போன்ற இயற்கை வளங்களைப் பயன்படுத்துவோர் செலுத்தும் வரிகள், அரசாங்க வருவாய்களாக அமைந்தன. சிற்றரசர்களிடமிருந்தும், தோற்ற அரசர்களிடமிருந்தும் பாண்டியருக்கு ஏராளமான திறைப்பொருள்கள் அவ்வப்போது கிடைத்தன. ஆய்மன்னர், பல்லவர், சேரர், சோழர், காடவர் போன்றோரிடம் திறை கொண்டதை பாண்டியர் அவர்களது சாசனங்களில் குறித்துள்ளனர். இவர்களும் அவர்களுக்குத் திறை செலுத்தியதுண்டு. காடவன் கோப்பெருஞ்சிங்கனிடம் பெற்ற விலையுயர்ந்த நவரத்தினங்களைக் கொண்டு ஸ்ரீரங்கம் கோவிலுக்குச் சுந்தரபாண்டியன் பல திருப்பணிகளைச் செய்ததை அவனது ஸ்ரீரங்கம் கல்வெட்டுக் குறிக்கின்றது. ஆக, திறைப்பணமும் நாட்டின் முக்கிய வருவாயாய் அமைந்தது.

## நில அளவு

நாட்டின் வருவாய்க்குள் நிலவரி முக்கியமானதாகும். நிலவரி விதிப்பதற்கு வசதியாக நாட்டிலுள்ள விளைநிலங்கள் சீராக அளக்கப்பட்டு அவைகளின் உரிமையாளரின் விவரங்களெல்லாம் மிக கவனத்துடன் அரசாங்கப் புத்தகங்களில் குறிக்கப்பட்டன. தானம் அளிக்கப்பட்ட நிலங்களின் எல்லைகளும் உரிமையாளர்கள் விவரங்களும் மகாசபைக் குறிப்பேட்டில் எழுதப்பட்டதைத் தளவாய்புரச் செப்பேடு குறிக்கின்றது.[1] சமஸ்கிருதப் பகுதியில் இக் குறிப்பேடு 'சுத்த புஸ்தகம்' என்று குறிப்பிடப்படுகின்றது; நிலங்களை அளந்து கல்லும் கள்ளியும் நட்டு எல்லை வகுத்ததைச் செப்பேடுகள் குறிக்கின்றன. எடுத்துக்காட்டாக தென்கல வழி நாட்டு வேலங்குடியை ஸ்ரீவரமங்கலமென்ப் பெயரிட்டுக் காராண்மை மீயாட்சியும் உள்ளடங்கப் பிரமதேயமாக ஆக்கிய

[1] ''மகாச்சபைக் குறிப்பேடு கொடுத்து'' என்றும் ''புரவெழுதி'' என்றும் சாசனத்தில் குறிக்கப்பெறுகின்றன.

போது அதன் எல்லைகள் வரையறுக்கப்பட்டதைச் செப்பேடு பின் வருமாறு குறிக்கின்றது.

'கீழெல்லை நிலை காணிமங்கலத் தெல் லைக்கும்
இளந்தியன்குடி எல் லைக்கும் மேற்கும் தென்னெ
ல்லை பெருமகற்றூ ரெல்லைக்குங் களிக்குடி
எல்லைக்கும் வடக்கு மன்னிய சீர்ம்மேலெல்லைக்
கடம்பங்குடி எல்லைக்கும் குரங்குடி எல்லைக்குங்
கிழக்கும் வடவெல்லை காரள வயலெல்லைக்குந்
தெற்கும் மிவ்விசைத்த பெருநான்கெல்லை
அகத்துக் கல் லுங் கள்ளியும் நாட்டி'

கிராமங்களும் அவற்றிலுள்ள நிலங்களின் எல்லைகளும் அவ் வப்போது நன்கு வரையறுக்கப்பட்டுக் குழப்பம் இல்லாதவாறு எல்லைக்கற்கள் நடப்பட்டிருந்ததை மேலே கொடுக்கப்பட்ட செப் பேட்டுக் குறிப்பு உணர்த்தும். இவ்வாறு வரையறுக்கும்போது மகா சபையார் நாட்டார், கணக்கர் மற்றும் அரசாங்க அதிகாரி யும் உடன் இருந்தனர். பெண் யானையினுல் எல்லையைச் சூழ்ந்து வரச்செய்தலும் நீரோட்டிக் கொடுத்தலும் பழக்கத்தில் இருந்தன. மேலே சொன்ன சீவரமங்கலம் செப்பேட்டில் யானைப்படைத் தலை வனும் பாண்டி இளங்கோ மங்கலப் பேரரசனும் ஆகிய சிரீதரன் என்பவன் ஆனையைச் சூழவரச் செய்தான் என்று குறிக்கப்பட் டுள்ளது.

## நில அளவைகள்

நிலங்களை அளப்பதற்குப் பலவிதமான நிலஅளவைகள் பயன் படுத்தப்பட்டுள்ளன. இவற்றின் பெயர்கள் பல கல்வெட்டுகளில் கிடைக்கின்றன. புறநாஞ்சில் கோலால் மூன்று வேலி நிலங்கள் என்ற குறிப்பு சிவகாசிச் செப்பேட்டில் காணப்படுகிறது. 24-அடிக்கோல், 18-அடிக்கோல் போன்ற அளவுகோல்கள் பொது வாக உபயோகப்படுத்தப்பட்டன. முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் காலத்தில் 'குடிதாங்கி' என்ற ஒரு புதிய அளவுகோல் பயன்படுத்தப்பட்டது. அது 24 அடி நீளமுடையதாய் இருந்தது. ஓர் அடி என்பது சராசரி மனிதனின் அல்லது அக்கால அரசனின் பாத அளவாகும். இக்கோலைக் கொண்டு நிலங்கள் அளக்கப் பட்டு வரி விதிப்பும் மறுபரிசீலனை செய்யப்பட்டது. நாட்டார் களையும் கலந்து களவயில் நாடாள்வான் என்பவன் இவற்றைச் செய்து முடித்தான் என்று ஒரு கல்வெட்டு அறிவிக்கிறது.[3]

[3] ARE, 1936-37, p. 74.

அவ்வரசனுக்குப்பின் வந்த முதலாம் சடையவர்மன் குலசேகரன் காலத்தில் குடிதாங்கி என்னும் அளவுகோலின் நீளம் கால் பங்கு அதிகரிக்கப்பட்டது.[3] மாறவர்மன் குலசேகரன் காலத்தில் அளவுகோல் 'அருள் நீதி' என்று வழங்கப்பட்டது. புதியஇது அளவுகோலா, அல்லது பழைய கோலுக்கு வைக்கப்பட்ட புதிய பெயரா என்பது விளங்கவில்லை. அவ்வாறே 24 அடிக்கோல் சுந்தரபாண்டியன் கோல் எனவும், 18-அடிக்கோல் வீரபாண்டியன் கோல் எனவும் வழங்கப்பட்டன.[4] 18 அடிக்கோலும் 24 அடிக்கோலுமே பெரும்பாலும் வழக்கில் இருந்தன என்று தெரிகிறது. அவற்றுக்கு வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு அரசர்களின் பெயரிடப்பட்டன போலும். அளவிலும் சிறிதளவு அவ்வப்போது மாற்றம் செய்யப்பட்டன. வட்டார அளவுமுறைகள் பல வழக்கில் இருந்துள்ளன. 'ஊர்க்கோல்' என்ற அளக்கும் கோல் பலவும் கல்வெட்டுகளில் குறிப்பிடப்படுகின்றன. இவ் வட்டார அளவு முறைகளுடன் நாட்டின் பொது அளவு முறைகளை ஒப்பு நோக்குவதற்கான ஆதாரங்கள் போதிய அளவு கிடைக்கவில்லை.[5]

## தீர்வை

இவ்வாறு அளக்கப்பட்ட நிலங்கள் அரசியல் அதிகாரிகளால் தரம் காணப்பட்டன. நிலத்தின் வளத்தையும் அவற்றின் நீர் வளத்தையும் அடிப்படையாகக் கொண்டுதான் தரங்கள் வகுக்கப்பட்டன. நிலவிளைச்சலுக்கு ஏற்ப அதிகாரிகள் அக்காலத்தில் நிலவரி விதித்தனர். இவ்வாறு வரி விதிக்கும்போது ஊரில் சில இடங்களுக்கு வரிவிலக்கு அளிக்கப்பட்டது. கோயில், குளம், ஊருணி, நந்தவனம், ஓடை, சுடுகாடு, போகும் வழிகள், ஊர்ப் பொதுநிலம் போன்ற இடங்கள்மீது வரி விதிக்கப்படவில்லை என்று தெரிகிறது. சோழ நாட்டைப்போன்று இங்கும் விளைநிலங்களுக்கு மட்டுமே வரிவிதிக்கப்பட்டன என்று கருதலாம். கோவிலுக்குத் தானம் அளிக்கப்பட்ட நிலங்களுக்கும் வரிவிதிப்பிலிருந்து விலக்களிக்கப்பட்டன. அவை இறையிலி அல்லது இறை நீக்கம் பெற்ற நிலங்களாகக் கருதப்பட்டன.

நிலவரி 'கடமை' என்வும் 'காணிக்கடன்' என்வும் வழங்கப்பட்டது. அரசாங்கத்திற்குச் செலுத்த வேண்டிய நிலவரி விகிதம்

[3] 329 1959-60.

[4] 521 of 1962-63; 715/1962-63.

[5] சோழராட்சியிலும் 16-அடி, 18 அடி, 24-அடிக் கோல்கள் வழக்கில் இருந்தன. இராசேந்திரன் காலத்தில் தென்ஆர்க்காடு மாவட்டத்தில் 1 'மா'நிலம் = 16 அடிக்கோலால் 256 குழிகள். இது 10 ஆண்டுகளுக்குப் பிறகு 1 மா = 16 அடிக்கோலால் 200 குழிகள் என்று குறிக்கப்படுகின்றது.

எவ்வளவு என்பது சரியாகத் தெரியவில்லை. ஆனால், ஆறில் ஒரு பங்கே அரசாங்கத்திற்குரிய விகிதமெனத் தெரிகிறது. இதுவே தொன்றுதொட்டு நம் நாட்டில் பல பகுதிகளில் வழங்கிவந்த வரி விகிதமாகும். 13 ஆம் நூற்றாண்டில் வீரபாண்டியன் காலத்தில் மா ஒன்றுக்கு நான்கு கல நெல்லும் $\frac{1}{4}$ காசும் வரியாகச் செலுத்தப் பட்டது. (ஒரு வேலிக்கு 80 கலம் நெல்லும் 5 காசும்). வரிச் சுமை தாங்கமுடியவில்லை என்றால் மக்கள் வேறு ஊர்களுக்குச் சென்றுவிடுவர். அதன் மூலமாகத் தமது எதிர்ப்பை மக்கள் தெரிவித்தனர். மாறவர்மன் இரண்டாம் சுந்தரன் காலத்தில் சில கிராமத்து மக்கள் வரிச்சுமையைப் பற்றி முறையிட்டபோது வரிவிதிப்பு மறுபரிசீலனை செய்யப்பட்டு விளைச்சல் இல்லாத நிலங்கள் மீது வரி நீக்கப்பட்டது. ஒரு சமயம் வரித்தொகை அதிகரித்ததால் ஊர்ச்சபை அதன் கவலையைத் தெரிவித்து ஊர்க் கோவிலுக்கு வழக்கமாக செலுத்தும் தொகையை அது குறைத்துக் கொண்டது. பெரும்பாலும் வரி விதிக்கும் போதும் அல்லது மறு பரிசீலனை செய்யும் போதும் சபை, ஊர் நாட்டார் இவர்களைக் கலந்தே செய்யப்பட்டது. விளைநிலங்களின் தராதரமும், அவற் றின்மீது விதிக்கப்பட்ட தீர்வையும் விளைச்சல் அடிப்படையைக் கொண்டு அவ்வப்போது பரிசீலிக்கப்பட்டன. மழையின்மையும் பஞ்சமும் நாட்டை வாட்டிய போது வரிக்குறைப்பும் வரி நீக்கமும் செய்யப்பட்டன. ஊர்ச்சபைகளின் பரிந்துரைகளும் வழக்காறு களும் மதிக்கப்பட்டு பெரும்பாலும் அனுசரிக்கப்பட்டன.

நிலவரி நெல்லாகவோ பொன்னும் காசுமாகவோ வசூலிக்கப் பட்டது. இதனை ஊர்தோறும் இயங்கி வந்த மகாசபையார் பஞ்சவார வாரியர் குடிமக்களிடமிருந்து வசூல் செய்து அர சாங்கப் பொருள் நிலையங்களுக்கு அனுப்பி வந்தனர்.

**பிற வரிகள்**

நிலவரியைத் தவிர வேறு பல இறைகளும் அரசுக்கு வருவாய் அளித்தன. செக்கிறை, மனை இறை, அங்காடிப்பாட்டம், தட் டாரப்பாட்டம் போன்ற பல்வகை வரிகளும் இருந்தன. இவ்வரி களெல்லாம் பொதுவாகச் சில்லிறை, சில்வரி, சிற்றாயம் எனவும் குறிக்கப்பட்டனவையுள் அடங்கும். இவை பெரும்பாலும் பல் வேறு தொழில் புரிந்தோரிடம் அரசாங்கம் வாங்கிவந்த வரிகளா கும். தறியிறை என்பது நெசவுத்தொழில் செய்தவர்களிடமும், 'செக்கிறை' என்பது எண்ணெய் வாணிபம் செய்தோரிடமும் வசூலிக்கப்பட்டன.

குடநாட்டு நாட்டாரிடம் 'சலாபத்தேவை' என்னும் வரி வசூலிக்கப்பட்டது. இது முத்துக்குளித்தலில் ஈடுபட்டோரிடம்

வசூலிக்கப்பட்ட வரியாகக் கருதப்படுகின்றது.[6] பாண்டிய நாட்டின் சிறந்த இயற்கைச் செல்வங்களில் முத்துப் பெயர் போனது. முத்து பாண்டிய நாட்டிற்கு நல்ல வருவாய் அளித்தது என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. 'முத்தும் முத்தமிழும்' பாண்டிய நாட்டில் சிறப்புற்றிருந்தன என்று பெருமையாகச் சொல்லப்படுகின்றது. முத்துத் தொழிலில் பாண்டியர்கள் ஏக போக உரிமை பெற்றிருந்தார்கள். சோழர்களும் ஈழத்தவர்களும் பாண்டிய நாட்டின்மீது படையெடுத்ததற்குப் பல காரணங்களுள் இவ்வுரிமையைக் கைப்பற்றும் நோக்கமும் ஒன்றாகும்.[7] 13ஆம் நூற்றாண்டில் மார்க்கபோலோ பாண்டிய நாட்டில் நடந்த முத்துத்தொழிலை நேரில் கண்டு பல நுண்ணிய கருத்துகளை எழுதி யுள்ளார். 'இங்கே ஏராளமான முத்துகள் கிடைக்கின்றன. இங்கிருந்தே அவை உலகின் பல பகுதிகளுக்கும் போகின்றன. அந்த இராஜ்யத்தின் அரசனுக்கு முத்துச்சலாபத்தால் கிடைக் கின்ற வருவாயும் மிகப்பெரியது' என்று மார்க்கபோலோ குறித் துள்ளார்.[8] கடலிலிருந்து எடுக்கப்பட்ட முத்துகளில் கணிச மான பங்கு அரசாங்கத்திற்குச் சாரும். அரசாங்க அதிகாரிகளே முத்துக்குளியலை கண்காணித்து வந்தனர். கிட்டத்தட்ட அரைப் பங்கு அரசாங்கத்தை சார்ந்தது எனத் தோன்றுகிறது. ஆனால், இதை அறுதியிடுவதற்கான ஆதாரமில்லை. 'அரைக்கியா (1/6 அவுன்ஸ்) எடைக்கு மேற்பட்ட முத்தை யாரும் அந்த இராஜ்யத் திற்கு வெளியே எடுத்துச்செல்லக்கூடாது என்று தடை விதிக்கப் பட்டது. பெருமுத்துகள் அனைத்தையும் தானே வைத்துக் கொள்ள வேண்டும் என அரசன் விரும்பினான். எனவே, அவ னிடம் உள்ள முத்துகளின் தொகையும் மதிப்பும் நம்புதற் கரியவை. தன்னுடைய இராஜ்யத்தில் யாரிடமேனும் பெரிய முத்தோ மணியோ இருந்தால் அதனை அதற்குரிய விலையைப் போல இருமடங்கு விலைகொடுத்து அதனைத் தானே வாங்கிக் கொள்கிறான். அதனால் முத்தோ மணியோ வைத்திருப்பவர் அனைவரும் மகிழ்ச்சியாக அரசனிடம் அவற்றைக் கொண்டு செல் கின்றனர். அரசனுடைய மணிமுத்துக் குவியலும் வளர்ந்து கொண்டே செல்கிறது.' 10ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பொதுவாக இந்திய அரசர்களைப்பற்றி அபுசயித் கூறியுள்ளவை பாண்டிய நாட்டிற்கு பொருந்தும். இந்திய மன்னர்கள் விலை

[6] 432 of 1929-30.

[7] பாண்டிய மன்னனின் முத்துகளை முதலாம் இராசேந்திரன் கைப்பற்றிய தாகத் திருவாலங்காட்டுச் செப்பேடுகள் குறிக்கின்றன.

[8] நீலகண்ட சாஸ்திரி, தென்னிந்தியாவைப்பற்றி வெளிநாட்டினர் குறிப் புகள். பக். 268.

[9] மேற்படி, பக்கம் 269-70.

யுயர்ந்த நகைகளை அணிவதைக் கூறிவிட்டுக் குறிப்பாக முத்தைப் பற்றிப் பின்வருமாறு குறித்துள்ளார். ''எல்லாவற்றிலும் முத்துகள்தாம் மிகவும் மதிக்கப்பட்டு அணியப்பட்டன. உண்மையில் முத்துகள்தாம் அரசர்களின் முக்கியச் செல்வமாகக் கருதப்பட்டு அரசாங்கக் கருவூலத்தில் பாதுகாக்கப்பட்டு வந்தன''[10] ஆக நாட்டில் நடைபெற்று வந்த எல்லாத் தொழில்களுக்கும் வரிகள் வசூலிக்கப்பட்டிருந்தமை விளங்கும்.

அரசாங்க வரிகளைத் தவிர ஊர்ச்சபை பல பொதுக்காரியங்களுக்காக அவ்வப்போது சில தீர்வைகளை விதித்தன. உள்ளூர் ஏரியைத் துலக்க, மடை கட்ட, வாய்க்கால் வெட்ட ஊர்க்காவல் அல்லது சபையின் செலவிற்கானச் சில விசேஷ கட்டணங்களைப் பங்குதாரர்களிடம் வசூலித்தன. அதுபோல விசேஷ காலங்களில் சில வரிகள் வசூலிக்கப்பட்டன. எடுத்துக்காட்டாக 'துலாபார வரி' வசூலிக்கப்பட்டதை ஒரு கல்வெட்டுக் குறிக்கின்றது,[11] பல சமயங்களில் அரசன் சில வரித்தொகையை ஊராருக்கோ உள்ளூர்க் கோவில்களுக்கோ தனது காணிக்கையாக தானம் அளிப்பது வழக்கில் இருந்தது. வறட்சிக் காலங்களில் வரிகள் வெகுவாகக் குறைக்கப்பட்டன. வரி செலுத்தாதவர்களுக்கு அபராதம் விதிக்கப்பட்டது. தொடர்ந்து கொடுக்காமல் இருந்தால் அவர்களது சொத்து பெருவிலைக்கு (ஏலம்) விடப்பட்டுச் சேர வேண்டிய தொகை எடுத்துக் கொள்ளப்பட்டது. சில சமயங்களில் அவர்களது சொத்துகள் உள்ளூர்ச் சபைக்கோ கோவிலுக்கோ மாற்றப்பட்டன. அரசாங்கம் மற்றும் ஊர்ச் சபைகள் அதிகாரிகள் முதலியவை விதித்த இறைகளையும் கட்டணங்களையும் பார்க்கும் போதும், அவற்றிலிருந்து அவ்வப்போது அளிக்கப்பட்ட நீக்கங்கள், வரிவிலக்குகள் ஆகியவற்றைப் பார்க்கும் போதும் அக்கால வரிச்சுமையை எளிதில் கணக்கிட இயலவில்லை. பொதுப்படையான வரிகள் மத்திய அரசாங்கத்தாரால் விதிக்கப்பட்டுப் பேரரசு முழுவதும் அரசிறையாக வசூலிக்கப்பட்டிருந்த போதிலும் ஊர்ச்சபைகளும் ஏனைய ஸ்தாபனங்களும் விதித்த வரிகள் வேறுபட்டிருக்கலாம். அதிகாரிகளும் வரி வசூலிப்பதில் ஒரு சீரான முறையைக் கையாண்டதாகச் சொல்வதற்கில்லை. அவர்கள் கொடுமை விளைவித்தால் அரசாங்கத்திடம் முறையிடுவது அல்லது ஊரைவிட்டு வெளியேறுவது என்ற இரண்டு வழிகளே மக்களுக்கு இருந்தன. சோழராட்சியுடன் ஒப்புநோக்கும் போது அங்கு நிலவிய மத்திய அரசின் வலிமையும் செல்வாக்கும் பாண்டிய அரசுக்கு இல்லை என்றே தோன்றுகிறது.

[10] Ferrand Voyage - p. 136.

[11] Raman, K. V. Some aspects p. 50; ARE 1929-30 p. 75-76.

மத்திய அரசு வலுவிழந்த காலங்களில் சிற்றரசர்களும் அதிகாரி களும் வரிகளை அதிகரித்தனர். ஆனால் ஊர்ச்சபைகள், நகர சபைகள், நாட்டுச்சபைகள் இவற்றின் பரிந்துரைகளும் நாட்டில் தொன்றுதொட்டு நிலவிய சில வழக்காறுகளும் மரபுகளும் அரசாங்க அதிகாரத்தை வரம்பு மீறாமல் ஒரு கட்டுக்குள் வைத் திருந்தன என்பதில் ஐயமில்லை.

அரசாங்கச் செலவுக் கணக்கில் நிர்வாகச் செலவு, அலுவலர் களின் ஊதியம் நாட்டின் படைச் செலவு, அரண்மனைச் செலவு, பொதுப்பணிச் செலவு போன்றவை அடங்கியிருந்தன. அரசாங்க வருவாயில் அதிகப் பங்கு பொன் ஆபரணங்களாகவும், விலை யுயர்ந்த நவமணிகளாகவும் வைக்கப்பட்டிருந்தன. பாண்டியர் கருவூலத்தில் பல தலைமுறைகளாகச் சேர்க்கப்பட்டிருந்த ஏராள மான முத்தையும் பொன்னையும் பற்றி மார்க்கபோலோ குறிப்பிட் டுள்ளதை ஏற்கெனவே சுட்டியுள்ளோம்.

## நில உரிமை

மக்களுள் மிகப் பெரும்பாலோர் கிராமங்களில் வாழ்ந் தார்கள். உழவுதான் அவர்களுடைய முக்கியத் தொழில். கிராமம், நிலக்கிழார்களும் உழவர்களும் வாழ்ந்த குடியிருப்பாக இருந்தது. பெரியவர்களும் சிறியவர்களும் ஆகிய நிலக்கிழார் களைத் தவிர நிலமில்லாத குடியானவர்களும் இருந்தார்கள். அவர்கள் விளைநிலங்களை உழுது விளைவில் ஒரு பகுதியைக் கூலி யாகப் பெற்றனர். கிராமத்தின் பொது நிலங்களில் கிராமத் தொழிலாளர்களுக்குப் பங்கிருந்தது. அவ்வாறு பங்கு தருவதன் மூலம் அவர்கள் அந்தக் கிராமத்தைவிட்டுப் போகாமல் இருந் தார்கள். அவர்கள் அவ்வூரின் தேவைகளைப் பூர்த்தி செய்து வந்தனர்.

## வெள்ளான் வகை

நில உரிமையை அடிப்படையாகக் கொண்டு நிலங்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம். உழவுத் தொழிலையே பல தலைமுறை களாக மேற்கொண்டு நிலங்களை உழுதுவந்த குடிமக்களுக்கே உரிமையுள்ள வெள்ளான் வகை முறை ஒன்றாகும். இவர்கள் தாங்கள் நேரிலோ பிறகுடிகளைக் கொண்டோ தம் நிலங்களை உழுதனர். இவர்கள் பெருங்குடியினர் என்று அழைக்கப்பட்டனர். மற்றொருவகை நிலங்கள் சில கிராமத்தொழில் செய்வோருக்குக் கொடுக்கப்பட்டவை ஆகும். அவை சீவிதம், போகம், காயா விருத்தி போன்ற பெயர்களால் குறிக்கப்படுகின்றன. மூன்றாவது

வகை பிரம்மதேயம், தேவதானம், சாலாபோகம் போன்ற நிலங்களாகும். மிராசு உரிமையுடன் நிலத்தை அனுபவித்து அரசுடன் நேரிடையாகத் தொடர்புகொண்டு இறை செலுத்திவரும் கிராமங்களே வெள்ளான் வகை எனப்பட்டன. இவற்றில் நிலங்களின்மீது தனித்தனியாகவோ கிராம நிலங்கள் அனைத்துக்கும் பொதுவாகவோ நிலவரி விதிக்கப்பட்டன. சுந்தர சோழ பாண்டியனின் 16ஆம் ஆட்சி ஆண்டில் திருவாலீச்சுவரத்தில் 5 வேலி நிலம் வெள்ளான் வகையாக மாற்றப்பட்டது. அதற்கு ஆண்டு தோறும் 642 கலம், 6 குறுணி, 2 நாழி, 3 உழக்கு, 2½ செவிடு நெல்லும், 40 கழஞ்சு, 3 காணிப்பொன்னும் அரசுக்குக் கட்ட வேண்டும் என்று விதிக்கப்பட்டது. ஆகையால், இக் கல்வெட்டிலிருந்து வெள்ளான்வகைக் கிராமங்கள் ஆண்டுதோறும் விதிக்கப்பட்ட தொகையை அரசுக்கு நேரிடையாகச் செலுத்தி வந்தன என்று விளங்கும். சில சமயங்களில் குறிப்பிட்ட தொகையில் ஒரு குறிப்பிட்ட பங்கு உள்ளூர்க் கோவிலுக்குச் செலுத்தும்படியாகவும் பணிக்கப்பட்டது.

## ஊழிய மானியம்

கிராமத்தில் பல்வேறு தொழில் செய்தவர்களுக்கு நில மானியங்கள் விடுவது என்பது வழக்கில் இருந்தது. அவை ஊழிய மானியங்களாக வகைப்படுத்தப்பட்டன (Service Tenure). பொற்கொல்லர், கிராம மருத்துவர், தச்சர், கல்தச்சர், குயவர், சலவைத் தொழிலாளர் போன்ருேருக்கு நிலமானியங்கள் ஊர்ச் சபையோரால் அரசு வழக்கப்படி நிலமானியங்கள் விடப்பட்டன. அவை போகம், சீவிதம், காணி என்று வழங்கப்பட்டன. தட்டாரக்காணி, தச்சமானியம் போன்ற பெயர்கள் வழக்கில் இருந்தன. கோவிலில் பணிபுரிந்த பட்டர்களுக்கு விடப்பட்ட நிலம் 'பட்ட விருத்தி' எனவும் கோவில்களுக்கு விடப்பட்ட நிலம் 'கோவில் மானியம்' எனவும் மடங்களுக்கு விட்ட நிலம் 'மடப்புரம்' எனவும், வீரர்களுக்குக் கொடுக்கப்பட்ட மானியம் 'வீரபோகம்' எனவும் வழங்கப்பட்டன. இறந்த ஒரு வீரனின் மக்களுக்கு 1000 குழிநிலம் உதிரப்பட்டியாக வழங்கப்பட்டதை ஒரு பாண்டியக் கல்வெட்டுக் குறிக்கின்றது. கிராமத்துக்கு வேண்டிய முக்கியப் பணிகளைச் செய்தோருக்கு நிலமானியங்கள் அளிக்கப்பட்டதால் அவர்கள் அவ்வூரிலேயே தங்கி அவ்வூர்ப் பொருளாதாரத் தேவைகளைப் பகிர்ந்து கொண்டனர். கிராமப் பொதுநலக் காரியங்களில் ஒவ்வொரு துறையிலிருந்த பணியாளர்கள் தங்களது பங்கை ஏற்று நடத்தினர். அந்த ஊழியத்திற்காக அவர்கள் நிலங்களை அனுபவித்தனர்.

## தேவதான பிரமதேய நிலங்கள்

நில உரிமை வகைகளில் மூன்றாவது வகை கோவில்களுக்கும் மறையோருக்கும் அளிக்கப்பட்ட நிலங்கள் ஆகும். அவை, தேவ தானம், பிரமதேயம், சாலாபோகம் என்று வழங்கப்பட்டன. கோவில்களுக்கு அளிக்கப்பட்ட நிலங்கள் பொதுவாகத் தேவ தானம் என வழங்கப்பட்டது. திருவிடையாட்டம், திருநாமத் துக்காணி என வழங்கப்பட்ட நிலங்கள் சிவன், விஷ்ணு கோவில் களுக்குத் தானமாக அளிக்கப்பட்டநிலங்களைக் குறிக்கும். யாருக் கும் சொந்தமில்லாத நிலங்கள் ஊர்ப்பொது நிலங்களாகக் கருதப்பட்டுச் சபையோராலோ, அரசன் விருப்பப்படியோ, கோவில்களுக்குத் தானமாக அளிக்கப்பட்டன. தனியாரிட மிருந்து நிலங்களை விலைக்கு வாங்கி அவற்றைச் சில நெறிமுறைகள் படி தேவதானமாகவும் வழங்கினர். அவ்வாறு வழங்கப்படும் போது அந் நிலங்களைப் பயிரிட்டுவரும் குடியானவர்களைப் (குடி) பற்றியும், அவர்களுக்குச் சேரவேண்டிய பங்கு (காராண்மை), நிலச்சொந்தக்காரர்களுக்கு சேரவேண்டிய பங்கு (மீயாட்சி) இவைபற்றிய பிரச்சினைகளும் முறைப்படி கவனிக்கப்பட்டன. இம் முறை மறையோருக்கு அளிக்கப்பட்ட நிலங்களுக்கும் பின் பற்றப்பட்டது என்பதைப் 'பெருநான்கெல்லையிற் பட்ட பூமி காராண்மை மீயாட்சியுள்ளடங்க' என்ற வேள்விக் குடிச் செப்பேட்டின் வாசகத்தால் அறியலாம். ஸ்ரீவரமங்கலமெனப் பெயரிட்டுப் பிரம்மதேயமாகக் காராண்மையும் மீயாட்சியும் உள்ளடங்கச் சர்வபரிகாரமாக நீரோட்டிக் கொடுக்கப்பட்டது, என்று சீவரமங்கலச் செப்பேடும் குறிக்கின்றது.

இவ்வாறு தானம் கொடுக்கப்பட்ட விவரங்கள், எல்லை களெல்லாம் செப்பேடுகளில் பொறிக்கப்பட்டு அவை தானம் வாங்கியவர்களிடம் உரிமைச் சாசனமாகக் கொடுக்கப்பட்டது; மகாசபையின் குறிப்பேடுகளிலும் எழுதப்பட்டன. நில உரிமைப் பிரச்சனையோ எல்லைத் தகராறுகளோ எழுந்தபோது அரசன் வழங்கிய சாசனங்களும் கிராமக் கணக்குப் புத்தகங்களும் ஆதார மாகக் காட்டப்பட்டன. உடன் இருந்த நாட்டார், கணக்கர் போன்றோர்கள் சான்றுகளும் துணை செய்திருக்கும். மறக்கேடில் பழைய செப்பேடு இழந்து போயின; அதற்காகப் பாண்டிய அரசன் பராந்தக வீரநாரயணன் காலத்தில் புதிய சாசனம் வழங்கி னான் என்ற செய்தியைத் தளவாய்புரச் செப்பேடு குறித்துள்ளது.

கோயில்களுக்கு அளிக்கப்பட்ட தேவதான நிலங்களுக்கு அவற்றின் சமயக் குறிப்புகளுடன் கூடிய எல்லைக் கற்கள் நடப் பட்டன. விஷ்ணு கோவில் நிலங்களுக்குத் திருவாழிக்கல்லும்,

சிவன் கோவில் நிலங்களுக்குத் திருசூலக்கல்லும், சமணப்பள்ளிகளுக்கு அளிக்கப்பட்ட பள்ளிச் சந்த நிலங்களுக்கு முக்குடை பொறித்த கல்லும் எல்லைக்கற்களாக நடப்பட்டன. தேவதான நிலங்களைக் கோயில்களே பராமரித்தன. ஆனால் சபையும் அரசும் மேற்பார்வை வகித்தன. கோயில் கணக்குகளை அரசாங்கம் அவ்வப்போது தணிக்கை செய்துவந்தது. கோயிலில் பணி புரிந்தோருக்குச் 'சீவிதம்', 'காலி' போன்ற உரிமைகளைக் கோயில் அதிகாரிகள் அளித்தனர்.

## ஏகபோக பிரமதேயம்

அந்தணர்களுக்கு விடப்பட்ட கிராமம் பிரமதேயம் என்று வழங்கப்பட்டது. சில சமயங்களில் அரசனின் பெருமதிப்புக்குப் பாத்திரமான தனி ஒருவனைக் கௌரவப்படுத்தும் வகையில் கிராமம் ஏகபோக பிரம்மதேயமாக வழங்கப்பெற்றது. பிரமதேயத்திலுள்ள நிலங்கள் ஒருவருக்கே அன்பளிப்பாகத் தரப்பட்டதைக் குறிக்கும். பராந்தகன் பாஸ்கரானந்தன் என்பவனுக்குப் பராந்தக வீரநாராயணன் திசைச்சுடர் மங்கலம் என்னும் ஊரை ஏகபோக பிரமதேயமாக அளித்தான். மேற்கூறிய பாஸ்கரனின் மகன் பராந்தகன் என்பவனுக்கு 'அருள் புரியும் திருவுள்ளமுடையவனாய் இராசசிம்ம பாண்டியன் அழகிய குளிர்ந்த நீரையுடைய அழல் நாட்டில் உள்ள நற்செய்கைப் புத்தூர்க்கு தன் பெயரால் மந்தரகௌரவ மங்கலம் எனப் பெயரிட்டுக் காராண்மை மீயாட்சி உள்ளடங்க ஏகபோக பிரமதேயமாகக் கொடுத்தருளினன்' என்று சின்னமனூர்ப் பெரிய சாசனம் பகர்கின்றது. சில ஊர்களின் ஒரு பகுதி பிரமதேயமாகவும் மற்றொரு பகுதி குடிநிலமாகவும் இருந்திருக்கின்றன. குடிநிலக் கிராமங்கள் இறையிலிப் பிரமதேயமாக மாற்றப்பட்டதை தளவாய்புரச் சாசனம் உணர்த்துகின்றது.

## நீர்ப்பாசனம்

வேளாண்மையை முக்கியத் தொழிலாகக் கொண்ட நாட்டின் வளம் பெரும்பாலும் நீர்ப்பாசன வசதிகளையே பொறுத்திருந்தது. ஏரிகளும் வாய்க்கால்களும் வெட்டுவது, மதகுகள் அமைத்து நீர்ப் பாசனத்தில் ஒழுங்குமுறையை ஏற்படுத்துவது, குளங்கள் கிணறுகள் தோண்டுதல் போன்ற நீர்ப்பாசன வசதிகள் செய்து கொடுப்பதில் ஏனைய தென் இந்திய அரசர் போன்று பாண்டிய அரசர்களும் செய்துகொடுத்தனர். வைகையும் தாமிரபரணியும் பாண்டிய நாட்டிலுள்ள முக்கிய ஆறுகள். இந் நதிக் கரையோரப் பகுதிகளில் அக் காலக் குடியிருப்புகள் அதிகம் மையம் கொண்டிருந்தன. பழம்பெரும் கிராமங்கள், சதுர்வேதி

மங்கலங்களெல்லாம் இவ்விரு ஆற்றோரங்களில் இருப்பதைக் காணலாம். இதற்கு முக்கியக் காரணம் அவை அளித்த நீர் வசதியேயாகும். அதுபோல வெள்ளாறு, குண்டாறு, போன்ற சிறு ஆறுகளும் ஆங்காங்கே சிறிய அளவில் நீர்ப்பாசனத்திற்குப் பயன்பட்டன. வைகையாற்றில் சேந்தன் மாறன் மதகு கட்டிய விவரத்தை அவனது வைகைக் கல்வெட்டுக் குறிக்கின்றது. பாண்டிய அரசர்கள் புதிய சில நீர்ப்பாசன வாய்க்கால்களையும் தோற்றுவித்தனர். பராந்தக வீரநாராயணன் 'ஆறுபல தலை கண்டும் அமராலயம் பல செய்தும்' என்று அவனது தளவாய் புரச் செப்பேடில் கூறிக்கொள்கிறான்.

நிலக்கோட்டை வட்டத்திலுள்ள குருவித்துறைப்பகுதியில் பராக்கிரம பாண்டியன் பேராறு, வீரபாண்டியன் கால், ஸ்ரீவல்லபப் பேராறு போன்று ஆறுகள் இருந்தமை குறிப்பிடப்படுகின்றன. இவை வைகையாற்றிலிருந்து வெட்டப்பட்ட கால்வாய்களாகத் தோன்றுகின்றன. அங்கு வைக்கப்பட்ட மதகு 'குருவிக்கல்லுடைப்பு' என்று வழங்கப்பட்டது. பராக்கிரம பாண்டியன் பேராற்றில் இருந்த கல்லணையும் பராக்கிரம பாண்டிய கல்லணை என்றே வழங்கப்பட்டது. இப்போதுள்ள கல்லணை, இக்கல்லணையின் விரிவாகவே தோன்றுகிறது.[12] ஸ்ரீவல்லப பாண்டியன் காலத்தில் வாசுதேவன் என்பான் ஒரு வாய்க்கால் வெட்டினான். அதன் பெயர் 'வாசுதேவப் பேராறு' என்று குறிக்கப்படுகிறது.

விக்கிரமபாண்டியன் காலத்தில் அவனது அதிகாரி ஒருவன் பெண்ணை ஆற்றிலிருந்து ஒரு வாய்க்கால் மூலம் திருவண்ணாமலையிலுள்ள நிலங்களுக்கு நீர்ப்பாசன வசதி செய்து கொடுத்தான். குலசேகர பாண்டியன் காலத்தில் (கி.பி. 1212) வைகையாற்றிலிருந்து மதுரையை அடுத்துள்ள சிலைமான் என்னும் ஊருக்கு ஒரு வாய்க்கால் வெட்டப்பட்டது. அதற்குத் 'தியாகன் சிறிய பேராறு' என்று பெயர். அதைக் கப்பலூர் மாணாபரணன் மூவேந்த வேளார் என்னும் அதிகாரி செய்வித்தார்.

ஆற்றுப்பாசனம் இல்லாத இடங்களில் ஏரிகளையும் குளங்களையும் அமைத்து நீர்ப்பாசன வசதி செய்திருக்கின்றார்கள். முக்கியமாக இராமநாதபுரம் போன்ற வறட்சிப் பகுதிகளில் அவை மிகவும் தேவைப்பட்டன. அவற்றுள் பெரும்பாலானவை, அரசனாலோ, அதிகாரிகளாலோ, செல்வந்தர்களாலோ ஊர்ச்சபையாலோ அல்லது ஊர்க்கோவில்களாலோ நிர்மாணிக்கப்பட்டவை. இராமநாதபுரம் மாவட்டத்தில் சாத்தூர்த் தாலுக்காவில் உள்ள

[12] K. V. Subrahmanya Aiyer. Historical Sketches of Ancient Dekhan (1917) p. 366. S. I. I. XIV No. 223.

எருக்கங்குடியிலிருந்து கிடைத்துள்ள சடையமாறனுடைய கல்வெட்டு, சுவையான செய்திகளைத் தருகின்றது. அவனது படைத் தலைவனான எட்டிச் சாத்தன் என்ற இருப்பைக்குடி கிழவன் பல ஏரிகளைச் செய்வித்தும் புதுப்பித்தும் உள்ளான். 'திருமால் ஏரி' என்றும் 'மாறன் ஏரி' என்றும் அவை அழைக்கப்பட்டன. அவனது பெயர் கொண்டே கிழவனேரி என்று ஒரு நீர்நிலையும் வழங்கப்பட்டது. அவன் செய்த பணிகளைக் கல்வெட்டுப் பின் வரும் செய்யுள் மூலம் விளக்குகிறது.

ஆலங்குடிப் பெருங்குளத்து மடை
வைத்துப் அதன் குளவாய்
நிலப் பெருங்கற் பிளந்து சாயப்
புனல்வரக் கண்டும் அம்பலத்தொரு
கிழவ னேரியும். (S.I.I. XIV - No. 44.)

இதுபோன்று திண்டுக்கல் வட்டத்திலுள்ள இராமநாதபுரம் என்ற ஊரிலிருந்து கிடைத்துள்ள கல்வெட்டொன்று மாறஞ்சடையன் என்னும் பாண்டிய அரசனுடைய அதிகாரி நக்கன் புள்ளன் என்பான் தன் பெயரால் புள்ளனேரி என்ற நீர்நிலையை அங்கே ஏற்படுத்தியதைக் குறிக்கின்றது. மதுரையை அடுத்து ஆனை மலைப் பக்கத்திலுள்ள நரசிங்க மங்கலத்தில் கலியனேரி என்னும் ஏரியை அருள்நீதிகலியன் என்ற அதிகாரி அமைத்து, அதிலிருந்து நிலங்களுக்கு நீர் பாய்த்து வளமாக்கிய செய்தியை அவ்வூர்க் கல் வெட்டுக் கூறுகிறது.

குளங்களையும் ஏரிகளையும் அவ்வப்போது பழுதுபார்த்தல், தூர் எடுத்தல், கரைகளை உயர்த்தி உறுதிப்படுத்துதல் போன்ற பராமரிப்பு வேலைகளை ஊர்ச்சபைகள் கவனித்து வந்தன. ஒவ்வொரு சபையும் ஏரி வாரியம் என்ற தனிக்குழு ஒன்றை இப் பணிக்காகவே அமைத்தது. தோட்டங்களுக்கும் கழனிகளுக்கும் நீர்ப்பாசன வசதிக்குக் கிணறுகளும் பரவலாகப் பயன்படுத்தப் பட்டன. அவ்வாறு ஓடைகளும் கிணறுகளுமுடைய நிலங்களின் சில காட்சிகளைத் தளவாய்புரச் செப்பேட்டில் காண்கிறோம். நிலங்களின் எல்லைகளைக் குறிக்கும்போது பின்வரும் இக் குறிப்பு களைக் காண்கிறோம்.

1. செழும்புனல் பாயும் பருத்தி வயல்களையும் இவ்வயல் களின் கிணறு இரண்டையும் அக்கிணற்று நீரால் விளை கின்ற நிலத்தையும்.........

2. கூற்றன்குழி மேல்குழியே போயின குளத்திற்கு நீர் பாயும் வாய்க்காலுக்கும், அழகிய மரங்கள் நிறைந்த

> தணமாணிக் குளத்தின் கரைப் பெருப்புக்கும், நாடறி நங்கையார் குழிக்கு மேல்குழியேயுள்ள காடனேரிக்குப் போயின வழிக்கும்,......... அழகு பொருந்திய நேச்சுற நாட்டு ஓலைக்குளத் தெல்லைக்கும் கிழக்கு.........

ஆக, ஆற்றுப்பாய்ச்சல், ஏரிப்பாய்ச்சல், கிணற்றுப் பாய்ச்சல் உடைய நிலங்கள் இருந்ததை அறியலாம்.

## நில மீட்பு

காடுகளும் கரம்பு நிலங்களும் அவ்வப்போது மீட்கப்பட்டு விளைநிலங்களாக ஆக்கப்பட்டன. இப்பணியில் ஊர்ச்சபைகள், கோவில்கள், தனியார் ஆகியோர் ஈடுபட்டனர். இவர்களுக்கு அரசு பெருமளவில் உதவிபுரிந்தது. திருமங்கலம் என்ற கிராமம் மேடிட்டுக்காடாகக் கிடந்ததைத் திருத்திச் சீராக்கி, பாண்டியன் கடுங்கோன் அந்தணர்களுக்குப் பிரமதேயமாகக் கொடுத்ததைத் தளவாய்புரச் செப்பேடு கூறுகிறது. இவ்வாறு நிலமீட்புப் பணியை அரசர்களும் அதிகாரிகளும் செய்துள்ளனர். நிலங்களை விளைநிலமாக்கும் பணியில் கோவில்கள் முக்கியப் பங்கேற்றன. கோவில்களுக்குத் தானமாக வழங்கப்பட்ட நிலங்களில் விளை நிலங் களும் புன்செய்க் காடுகளும் அடங்கியிருந்தன. பொருள் வசதி யும் ஆள் வசதியும் படைத்த கோவில்கள் நேரிடையாகவோ கோவில்களுக்கு உதவி செய்யக் காத்திருந்த தனி நபர்கள் மூல மாகவோ கரம்பு நிலங்களை விளைநிலங்களாக்கிக் கோவில் வரு வாயைப் பெருக்கிக் கொண்டன. ஊர்ச்சபைகளும் இப் பணி களில் அக்கறை காட்டி ஊக்குவித்தன.

## கைத்தொழில்கள்

பெரும்பாலான மக்கள் விவசாயத்தில் ஈடுபட்டிருந்தனர் என்றாலும் சமுதாயத்தில் பலர் பல்வேறு தொழில்களையும் செய்து வந்தனர். அவற்றில் முத்துக்குளித்தல், சங்கறுத்து வளையல் செய்தல், உப்பு விளைவித்தல், மீன் பிடித்தல், நூல் நூற்றல், ஆடை நெய்தல் போன்றவை குறிப்பிடத்தக்கவை.

## முத்துக்குளிப்பு

பாண்டிய நாட்டில் கொற்கைக்கருகில் கடலில் முத்துக்களும் சங்குகளும் மிகுதியாகக் கிடைத்தன. இவற்றை

> விண்ணவில் யானை விறற்போர்ப் பாண்டியன்
> புகழ்மலி சிறப்பிற் கொற்கை முன்றுறை
> யவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து

என்ற அகநானூற்றுப் பாடலால் நன்கறியலாம்.[13] பாண்டிய நாட்டு முத்து இந்தியாவில் பல பகுதிகளுக்கும், மேலைநாட்டிற்கும் அனுப்பப்பட்டது. இதனால் பாண்டிய நாட்டிற்குப் பெரும் பொருள் கிடைத்தது எனலாம்.

முத்துக்குளித்தலைப்பற்றி மார்க்கபோலோ மிக விரிவான, வேறெங்கும் கிடைக்காத, அரிய செய்திகளையும் தந்துள்ளார். 'முத்துக்குளிப்பவர்கள் சிறியவையும் பெரியவையும் ஆன தங்களது கலங்களை வளைகுடாவிற்கு ஓட்டிச் செல்கிறார்கள். ஏப்ரல் மாதத்தொடக்கத்திலிருந்து மே மாதம் சுமார் பதினைந்தாம் தேதி வரையிலும் அவர்கள் அங்கேயே இருக்கிறார்கள்..........முத்துச் சலாபத்திற்கு போகும் வணிகர்களின் தொகை பெரியதாய் இருக்கிறது. அங்குப் போன பிறகு அவர்கள் பல குழுக்களாய்ப் பிரிந்து முத்தெடுக்கும் பணியைத் தொடங்குகிறார்கள். ஒவ்வொரு குழுவும் தனித்தனியே கூலியாள்களைக் கொண்டது. கிடைக்கின்ற முத்தில் பத்தில் ஒரு பகுதியை அரசனுக்குக் கொடுத்துவிட வேண்டும். நீரில் மூழ்கி முத்துச் சிப்பிகளைத் தேடியெடுக்கின்ற ஆள்களைப் பெரு மீன்கள் கடிக்காதவாறு தங்களுடைய மந்திரசக்தியால் அவற்றைக் கட்டுப்படுத்துகின்ற மந்திரவாதிகளுக்கு இருபதில் ஒரு பகுதியைக் கொடுத்துவிட வேண்டும். படகுகளிலிருந்து குதித்து நீரில் மூழ்கிக் கடலின் அடித்தளத்தை அடைகிறார்கள். ஆழம் 4 முதல் 12 ஆள் உயரம் இருக்கும். முத்துச் சிப்பிகளைத் தேடியெடுத்துத் தங்கள் இடுப்பில் கட்டியுள்ள வலைப்பையில் போட்டுக் கொண்டு மேலே வருகிறார்கள். சிப்பிகளைப் படகில் போட்டுவிட்டு அவர்கள் மீண்டும் முத்துக்குளிக்கிறார்கள். அவ்வாறு கிடைக்கின்ற முத்துகள் பலவகைப் பட்டவை. சில சிறியவையாயும் சில பெரியவையாயும் இருக்கின்றன. இங்கு ஏராளமான முத்துகள் கிடைக்கின்றன. இங்கிருந்தே அவை பல பகுதிகளுக்கும் போகின்றன. அந்த இராஜ்யத்தின் அரசனுக்கு முத்துச் சலாபத்தால் கிடைக்கின்ற வருவாயும் மிகப் பெரியது.'[14]

### மீன் பிடித்தலும் சங்கறுத்தலும்

நீண்ட கடலோரப் பகுதியை உடைய பாண்டிய நாட்டில் ஆங்காங்கே மீன் பிடித்தல் தொழிலும் பரவலாக மேற்கொள்ளப் பட்டது. தென்பாண்டிய நாட்டில் மீன்பிடிக்கும் தொழிலில்

[13] அகம் 27, 201; டி.வி. சதாசிவப் பண்டாரத்தார் பாண்டியர் வரலாறு பக் 184

[14] நீலகண்ட சாஸ்திரி, தென்னிந்தியாவைப் பற்றி வெளிநாட்டினர் குறிப்புகள், பக் 2-6-68.

வெகுகாலமாகப் பரதவர் என்னும் வகுப்பினர் ஈடுபட்டிருந்தனர். இவர்கள் சில சமயங்களில் பாண்டியரை எதிர்த்தும் போர் புரிந் துள்ளனர். அரிகேசரி மாறவர்மன் (7ஆம் நூற்றாண்டு) இவர் களுடன் சண்டை செய்து அடக்கினதாகக் கூறப்படுகின்றது.[15] கொற்கை போன்ற பகுதிகளில் கடலிலிருந்து சங்குகள் எடுக்கப் பட்டன. அவற்றிலிருந்து சங்கு வளையல்கள் செய்யப்பட்டன. சங்கு வளையல்கள் அணிவது பண்டைய காலத்தில் அதிகமாக வழக்கில் இருந்துள்ளது. கொற்கையில் செய்யப்பட்ட அகழ் வாராய்ச்சியில் அறுக்கப்பட்ட சங்குகளும் சங்கு வளையல்களும் கிடைத்தன. கோவில்களிலும் அபிடேகத்திற்குச் சங்குகள் உப யோகப்படுத்தப்பட்டன. வலம்புரிச் சங்குகள் விலையுயர்ந் தனவாகக் கருதப்பட்டன.

## நெசவுத் தொழில்

நெசவுத் தொழிலும் ஒரு முக்கியத் தொழிலாக இருந்தது. மதுரை நகரில் நுண்ணிய பருத்தி நூலினாலும் பட்டு நூலினாலும் ஆடைகள் செய்யப்பட்டு வந்தன என்பது சிலப்பதிகாரத்தில் குறிக்கப்பட்டுள்ளது. பிற்காலக் கல்வெட்டுகளில் நெசவாள ரிடம் 'தறி இறை' 'பஞ்சுபீலி' போன்ற வரிகள் வசூலிக்கப்பட்ட விவரம் குறிக்கப்பட்டுள்ளது. இத்தொழிலில் கைக்கோளர் என்னும் வகுப்பினர் அதிகமாக ஈடுபட்டிருந்தனர். ஆடைகள் உள்நாட்டில் பல பகுதிகளுக்கும் வெளிநாடுகளுக்கும் அனுப்பப் பட்டன.

மேலே கூறியவையைத் தவிர உலோகத்தொழில், மட் பாண்டம் செய்தல், அணிகலன்கள் செய்தல், பாய்முடைதல் போன்ற சிறு கைத்தொழில்களிலும் மக்கள் ஈடுபட்டனர். கட்டடக் கலைஞர்கள், சிற்பிகள், ஓவியர்கள், தச்சர் போன் றோரும் நல்ல கைத்திறனுடன் பணியாற்றினர் என்பது அக்காலக் கோவில்களையும் அவற்றிலுள்ள கோபுரங்கள், மண்டபங்கள், சிற்பங்கள், செப்புப் படிமங்கள், மரத்தேர்கள், வாகனங்கள், அணிகலன்கள் போன்றவற்றையும் பார்த்தாலே விளங்கும். பெரும்பாலும் இவை பரம்பரை பரம்பரையாக வந்த கைவினை ஞர்கள், கலைஞர்கள் ஆகியோரால் செய்யப்பட்டன. கிராமத்தி லும் இவ்வகைத் தொழிலாளர்கள் இருந்தனர். இவர்கள் கிராமத்தைச் சார்ந்த ஊழியர்களாகக் கருதப்பட்டு ஊழிய மானியம் ஊர்ச் சபையோரால் அளிக்கப்பட்டனர்.

[15] 'விரவிவந்து அடையாத பரதவரைப் பாழ்படுத்தும்' வேள்விக்குடிச் சாசனம்.

**வாணிகம்**

மதுரையைச் சுற்றியுள்ள பகுதிகளில் கிடைக்கும் பிராமிக் கல்வெட்டுகளிலிருந்து வணிகர் பெருமக்களின் குழுக்கள் அங்குஇயங்கி வந்ததை அறியலாம். உப்பு வாணிகன், பணித வாணிகன், பொன் வாணிகன், அறுவை வாணிகன், மணி வாணிகன் போன்ரோர் சமணத்துறவிகள் நோன்பை மேற்கொள்ள வசதி செய்து கொடுத்த விவரங்களை இக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. மதுரைக்கருகிலுள்ள வெள்ளறைக் கிராமத்தில் ஒரு வணிகர் குழுவும் தானம் அளித்துள்ளது. அக்குழுவின் அங்கத்தினர் 'நிகமத்தோர்' என்று அழைக்கப்பெற்றனர். மதுரை மாநகரிலுள்ள கடைவீதிகளைப் பற்றியும் அங்குப் பல்வேறு பொருள்களை விற்கும் கடைகளைப் பற்றியும், துரிதமாக இயங்கிய வியாபாரத்தினைப் பற்றியும் இலக்கியங்கள் மூலமாக அறிகிறோம். பிற்காலக் கல்வெட்டுகளிலும் பாண்டிய நாட்டு வணிகர் பல ஊர்களுக்குச் சென்று வியாபாரம் செய்த விவரங்கள் குறிக்கப்படுகின்றன. வணிக நோக்குடன் செல்லுமிடங்களில் இவ்வணிகர்கள் கோவில்களுக்குத் தானங்களும் அளித்துள்ளனர். செங்கல்பட்டு மாவட்டம் சிறுதாவூர் விஷ்ணு கோவிலுக்குப் பாண்டி மண்டலத்தைச் சார்ந்த வணிகர் ஒருவர் தானம் அளித்த செய்தியை 10ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டு அறிவிக்கின்றது. பதினைன்காம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டும் பாண்டி மண்டல வியாபாரிகள் தொண்டை மண்டலத்தில் தங்கிப் பல திருப்பணிகளைச் செய்ததைக் குறிக்கின்றது.[15a] வியாபாரத்திற்காக மயிலாப்பூர், மாமல்லபுரம் போன்ற கடற்கரைப் பட்டினங்களிலும் தொடர்பு கொண்டிருந்தனர்.

**வணிகச் சங்கங்கள்**

தென் இந்தியாவில் பல பாகங்களில் வாணிகச் சங்கங்களும் கூட்டு நிறுவனங்களும் மிகவும் வலிமை பெற்று விளங்கின. அவற்றின் உறுப்பினர் ஒரு நாட்டை மட்டும் சேர்ந்தவர்களல்லர். அவர்கள் பல்வேறு இராஜ்யங்களைச் சார்ந்தவர்களாகவும் இருந்தனர். பழங்காலத்திலிருந்தே புகழ்பெற்ற வாணிகச் சங்கங்களுள் மணிக்கிராமம், நானாதேசிகள், திசையாயிரத்து ஐந்நூற்றுவர், நகரத்தார், அஞ்சுவண்ணத்தார் ஆகியவை முக்கியமானவை. இவர்கள் தென் இந்தியா முழுவதிலும் மட்டுமன்றிக் கடல்கடந்து கிழக்கே மலேயா, சுமத்திரா, இலங்கை முதலிய நாடுகளிலும் வியாபாரம் செய்துவந்தனர். இவர்களது கல்வெட்டுகள் அங்கெல்லாம் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.

[15a] Raman, K. V. Some aspects p. 59-60.

நானுதேசியர் என்றாலே பல தேசத்தவர்கள் அல்லது பல தேசத்துடன் தொடர்பு கொண்டவர்கள் என்று பொருள்படும். இக் குழுவிற்கு நீண்ட வரலாறும் அனுபவமும் உண்டு. சோழர் காலத்திற்கு முன்பே பாண்டிய நாட்டில் இது இயங்கியது எனலாம். திருமெய்யம் வட்டத்திலுள்ள முனிச்சந்தையில் இக் குழு இயங்கியதை அங்குள்ள 9ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகள் அறிவிக்கின்றன. அதன் பெயரால் ஒரு குளம் வெட்டப்பட்டது; அதைப் பராமரிக்க மூலதனம் வைத்துக் கட்டளை ஏற்படுத்தப் பட்டது.[16] கி.பி. 1033இல் இக்குழு அம்பாசமுத்திரத்திலுள்ள சிவன் கோயிலுக்கு நிலங்கள் அளித்துள்ளது.[17]

### நகரத்தாரும்-நானுதேசிகளும்

வாணிபத்துறையில் தலைசிறந்து விளங்கியவர்கள் நகரத்தார் என்னும் வகுப்பினர் ஆவர். சிறிய ஊர்களிலும் பெரிய நகரங் களிலும் இருந்துகொண்டு வாணிபத்தை நடத்திவந்தனர். இவர்கள் தம் வாணிகத் தொழிலைத் திறம்பட நடத்திக் கொண்டு, ஈட்டிய பொருளில் கோவில் திருப்பணிகள் போன்ற பொதுநலக் காரியங்கள் செய்வதில் சிறந்த தொண்டு புரிந்தனர். உக்கிரன்கோட்டையில் இராசசிங்கப் பேரங்காடி என்னு மிடத்தில் நகரத்தார்கள் பலர் வியாபாரம் செய்ததை ஒரு பழைய கல்வெட்டு தெரிவிக்கின்றது. அவ்வூரிலுள்ள வட வாயில் அமர்ந்தாள் கோவிலுக்கு ஐந்நூற்றுவர் குழுவைச் சேர்ந்த நகரத்தார் ஒருவர் கட்டிய திருச்சுற்றாலைக்கு 'நகரத்தார் திருச்சுற்றாலை' என்று பெயரிடப்பட்டதை 9ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டு தெரிவிக்கிறது.[18] இராமநாதபுரம் மாவட்டம் பிள்ளையார் பட்டியில் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் (13ஆம் நூற்றாண்டு) கல்வெட்டொன்று பாண்டியநாட்டில் பல ஊர்களில் குடியேறியுள்ள நகரத்தாரைப்பற்றிக் கூறுகிறது.[19] எறுக்கன் குடியில் நகரத்தார் வசித்தவீதி ஐந்நூற்றுப் பெருந்தெரு என்று வழங்கப்பட்டது. பிள்ளையார் பட்டியில் இவர்களது திசையாயி ரத்தைந்நூற்றுவர் என்ற குழு இயங்கியது.[20] சிவபுரியிலிலுள்ள கோயிலுக்கு ஆயிரத்தைந்நூற்றுவ ஈச்சரமுடையார் என்று பெயர் வழங்கப்பட்டது. அதற்கருகிலுள்ள அருவியூர் என்னும் ஊர் நானுதேசி உய்யவந்தான் பட்டணம் என்று வழங்கப் பட்டது. வாணிபக் குழுக்கள் பல கோவில்களைப் பராமரித்து

[16] Sastri, K.A.N. Cholas - p. 596.
[17] 82 of 1907.
[18] 199 of 1935-36.
[19] ARE 1935-36-p. 23.
[20] ARE 1960-61. p. 23.

வந்தன. அவர்களுக்குச் சில விசேஷ இறை அல்லது கட்டணங்கள் வசூலிக்க அதிகாரம் இருந்தது. மாறவர்மன் முதலாம் குல சேகரன் காலத்தில் (14ஆம் நூற்றுண்டு) திசை ஆயிரத்தைந் நூற்றுவர் போன்ற பல வணிகக் குழுக்களின் பிரதிநிதிகள் ஒன்று கூடிக் கோவில் திருப்பணிகளுக்காக அவரவர் வியாபாரம் செய்த சரக்குகளின் தொகைக்கேற்பக் கட்டவேண்டிய தொகையை நிர்ணயித்தது. பல ஊர்களில் தங்கியிருந்த நகரத் தார்களின் பிரதிநிதிகள் கீரமங்கலத்தில் ஒன்றுகூடி சில பொது நலக்காரியங்களுக்காக ஒவ்வொருவரும் அவர்களது வியாபாரத் திற்கேற்ப ஒரு கட்டணம் செலுத்த வேண்டியதை நிர்ணயித்துக் கொண்டனர். இச் செய்தியை 13ஆம் நூற்றுண்டுக் கல்வெட் டொன்று குறிக்கிறது. இதுபோன்று மற்றொரு சமயம் இராம நாதபுரம் பகுதியிலுள்ள வணிகர் ஒன்றுகூடி அங்குள்ள ஒரு கோவிலைப் புதுப்பிக்கப் பல ஏற்பாடுகளைச் செய்தனர்.[20a] அவர் களில் 'பதினெண் விஷயத்தார்' (பதினெட்டு நாட்டினர்), தென் இலங்கையைச் சார்ந்த வளஞ்சியர், அஞ்சுவண்ணத்தார், மணிக் கிராமத்தார் என்ற வணிகர் குழுவினர்கள் அடங்கியிருந்தனர் என்று குறிக்கப்பட்டுள்ளது. வேலங்குடி, கொடும்பாளூர் போன்ற ஊர்களிலும் மணிக்கிராமத்தார் இயங்கியதை அறிகிறோம்.

மேலே குறித்துள்ள கல்வெட்டுச் செய்திகளிலிருந்து எப்படிப் பாண்டிய நாட்டில் நகரத்தார் போன்ற வணிகப் பெருமக்களும் அவர்களது சங்கங்களும் பரவலாகவும் திறம்படவும் இயங்கி வந்தன என்பது விளங்கும். உள்நாட்டிலும் கடல்கடந்த நாடு களுடனும் அவர்கள் வாணிபம் செய்தனர்.

### வெளிநாட்டு வாணிகர்கள்

இலங்கை வளஞ்சியர் போன்றோரும் தமிழ்நாட்டில் பல ஊர்களில் தங்கி வாணிகம் நடத்தி வந்தனர். அவர்களும் இங்குள்ள சிவன் கோவில்களுக்கும் விஷ்ணு கோவில்களுக்கும் பல நற்பணிகளைச் செய்தனர். இராமநாதபுரம் மாவட்டம் அருப்புக் கோட்டையிலுள்ள சுந்தரேசுவரர் கோயிலில் நாச்சியாரையும் வேறு சில கடவுளர்களையும் தென் இலங்கை வளஞ்சியர் குழுவைச் சார்ந்த ஒருவர் எழுந்தருளுவித்த செய்தியை அக்கோவிலிலுள்ள கல்வெட்டுகள் குறித்துள்ளன.[21] அக்காலத்து வெளிநாட்டு வாணி பத்தில் நானுதேசிகள் பெரும்பங்கு கொண்டிருந்தனர். சுமத்

[20a] Raman K. V. Some aspects ப. 61.
[21] 466 and 407 of 1914.

திராவில் லோபோ கோவாவிலுள்ள தமிழ்க் கல்வெட்டு இந்தக் குழுவைக் குறிப்பிடுகிறது. அதன் காலம் சகஆண்டு 1010 (கி.பி. 1088) ஆகும். மைசூர்ப் பகுதியிலுள்ள சில கல்வெட்டுகளில் இக் குழுவின் அமைப்பு, உரிமைகள் போன்ற விவரங்கள் தரப்பட்டுள்ளன. அவர்கள் சேர, சோழ, பாண்டிய, மலேயா, மகத, கோசல, சௌராஷ்டிர, குறும்ப, கம்போஜ லாட, நேபாளம் போன்ற நாடுகளுக்குச் சென்று வியாபாரம் செய்தனர் என்று கூறப்பட்டுள்ளது. நிலவழியாயும் நீர்வழியாயும் உலகெங்கும் சென்றனர். நன்கு பழக்கப்பட்ட யானைகள், உயர்சாதிக் குதிரைகள், எல்லாவிதமான நவமணிகள், பவழங்கள், இரத்தினங்கள், நறுமணப் பொருள்கள், மிளகு, கிராம்பு இலவங்கப் பட்டை, ஏலம் போன்ற பொருள்கள், மருந்துகள் ஆகியவற்றையும் வியாபாரம் செய்தனர். இவர்களுக்குப் பல அரசர்கள் உரிமைச் சாசனங்கள் வழங்கியுள்ளனர். அவர்களது பொருள்களைத் தடையின்றி வாணிகம் செய்ய, அவர்களுக்குப் பாதுகாப்புப் படைகள் வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டது. அரசியல் எல்லைகளைக் கடந்து அவர்கள் வாணிகம் செய்தனர். சென்ற நாடுகளில் அவர்களுக்கு மதிப்பும் மரியாதையும் இருந்தன. ஈட்டிய பொருளைப் பல நற்பணிகளுக்குச் செலவிட்டனர்.

**அஞ்சுவண்ணத்தார்**

தமிழகத்தில் வாணிகம் செய்த குழுவினருள் அஞ்சுவண்ணத்தார் என்ற ஒரு வகையினரும் இருந்தனர். இவர்கள் முஸ்லிம் வகுப்பைச் சேர்ந்தவர் எனக் கருதப்படுகின்றனர். கீழ்க்கடற் கரையில் பாண்டிய நாட்டிலுள்ள தீத்தாண்ட தானபுரத்திலும் சோழநாட்டில் நாகப்பட்டினத்திலும் அவர்கள் தங்கியிருந்தனர். இக்குழுவினர் நானாதேசிகன் போன்றோருடன் ஒற்றுமையாக இணைந்து பணியாற்றினர். இவர்கள் அரபுநாடுகளுடன் வாணிபத் தொடர்பு கொண்டிருந்தனர். பாண்டிய நாட்டில் தொண்டி, காயல்பட்டினம் போன்ற கடற்கரைப் பட்டினங்களில் தங்கிச் சரக்குகளை ஏற்றுமதி இறக்குமதி செய்துவந்தனர். அரபு நாடுகளிலிருந்து குதிரைகள் இறக்குமதியிலும் இங்கிருந்து வாசனைத் திரவியங்கள், மிளகு போன்ற பொருள்களை ஏற்றுமதி செய்வதிலும் அவர்கள் பங்கு கொண்டனர் போலும்.

**குதிரை வாணிகம்**

தென்இந்தியா அரபு நாடுகளிலிருந்து வெகு காலமாகவே குதிரைகளை இறக்குமதி செய்து வந்திருக்கிறது. 'நீரின் வந்த நிமிர் பரிப் புரவியும்' என்று பட்டினப்பாலையில் குறிக்கப்பட்

டிருப்பது நோக்கத்தக்கது. பல்லவர்களும் பாண்டியர்களும் குதிரைப்படை வைத்திருந்தனர் என்பதை முன்பே குறிப்பிட்டுள்ளோம். அதற்காகவே நல்ல குதிரைகள் வெளிநாடுகளிலிருந்து வரவழைக்கப்பட்டன. இவ்வாணிகத்தில் குதிரைச் செட்டிகள் என்ளெரு வகுப்பினர் ஈடுபட்டிருந்ததைப் பல பிற்காலக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. இவர்கள் அரபு நாடுகளிலிருந்து குதிரைகளை வரவழைத்து அரசர்களுக்கும் செல்வந்தர்களுக்கும் விற்பதையே தொழிலாகக் கொண்டிருந்தனர்.

*13-14*ஆம் நூற்றுண்டுகளில் பாண்டிய நாட்டில் குதிரை வியாபாரம் மிக விரிவாக இருந்ததாக மார்க்கபோலோவும், வாசாபும் குறிப்பிட்டுள்ளனர். அரசன் இதற்காக ஒரு பெரும்பகுதியைச் செலவு செய்ததைக் குறிக்கின்றனர். மார்க்கபோலோ கூறியுள்ளதைப் பார்ப்போம்: 'கிஸ், ஹர்மாஸ், டோபர், சோவர், ஏடன் ஆகிய ஊர்களைச் சார்ந்த வணிகர்கள் போர்க் குதிரைகளையும் பிற குதிரைகளையும் ஏராளமாய்த் திரட்டி அவற்றை அரசனுக்கும் அவனது நான்கு சகோதரர்களுக்கும் விற்கிருர்கள். இங்கு ஒரு குதிரையின் விலை 500 சக்கிப்பொன் - அதாவது 100 வெள்ளி மார்க்குகளைக் காட்டிலும் அதிகம். விலை இவ்வளவு அதிகமாய் இருந்தும் ஆண்டு தோறும் ஏராளமான குதிரைகள் இங்கு விற்பனையாகின்றன. இந்த அரசன் மட்டும் ஆண்டு தோறும் இரண்டாயிரத்திற்கும் அதிகமான குதிரைகளை வாங்க விரும்புகிறுன். அவனைப் போலவே அவனுடன் பிறந்தார் நால்வரும் வாங்க விரும்புகின்றனர்.'[22] மேலும் குதிரைகள் முறைப்படி பேணிப் பழக்கப்படாததால் அவை விரைவிலேயே இறந்துவிடுகின்றன என்றும் மார்க்கபோலோ கூறுகிருர். 'குதிரை வணிகர்கள் இலாடக்காரர்களை அழைத்துக் கொண்டு வருவதில்லை. இலாடக்காரர் யாரேனும் வர முயன்ருலும் அவர்களை வணிகர்கள் தடுத்துவிடுகின்ருர்கள். அப்படிச் செய்யா விட்டால் குதிரை வாணிகம் குறைந்து போகுமென்று அவர்கள் அஞ்சினுர்கள். அந்த வாணிகத்தில் அவர்களுக்கு ஆண்டு தோறும் பெரும் பொருள் கிடைக்கிறது.' குதிரை வாணிகத்தைப் பற்றி வாசாபும் ஏறக்குறைய இதே கருத்தைத் தெரிவித்துள்ளார். குதிரை வளர்ப்பில் தென் இந்தியர் செய்த முயற்சிகள் பயனளிக்க வில்லை என்பதைக் குறிப்பிட்டுவிட்டுப் பின்வருமாறு கூறியுள்ளார்: 'சாட்டையடி வாங்காமலே மிக வேகமாக ஓடக்கூடிய வலிமை மிக்க குதிரைகள் இந்நாட்டுத் தட்பவெப்ப நிலையைத்

[22] நீலகண்ட சாஸ்திரி, 'தென்னிந்தியாவைப் பற்றி வெளிநாட்டினர் குறிப்புகள்' பக். 271-73.

தாங்கமாட்டாமல் வலிவிழந்து வாடிப்போகின்றன. அதனால் ஆண்டுதோறும் புதிய குதிரைகளை வாங்குவது இன்றியமையாததாகிவிடுகின்றது. எனவே, ஆண்டுதோறும் முஸ்லிம் நாடுகளைச் சேர்ந்த வணிகர்கள் மாபாருக்குக் குதிரைகளைக் கொண்டு வருகிறார்கள்.'[23]

## பாண்டிய நாட்டில் சீனத் தூதர்கள்

கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டுக்குள் தென் ஆசிய நாடுகளில் கடல் வாணிகம் பெருகத் தொடங்கியது. இந்த வாணிபப் பெருக்கத்தினால் இந்தியா மட்டுமன்றி வேறு பல நாடுகளும் பெரும் பயனடைந்தன. அவற்றுள் சீனாவும் சைலேந்திர வம்சத்தினர் ஆட்சியில் இருந்த ஸ்ரீவிஜயமும், அபாசித் கலீபாக்களின் ஆட்சியிலிருந்த பாக்தாதும் முக்கியமானவை. சோழ நாட்டிலிருந்து பல வணிகர் குழுக்கள் சீனாவிற்குச் சென்றன. அவர்கள் எடுத்துச் சென்ற பொருள்களில் முத்து, பருத்தி ஆடைகள், யானைத்தந்தம் போன்றவையும் இருந்தன. சோழ மண்டலக் கரைக்கும் தென் கிழக்கு ஆசிய நாடுகளுக்கும் சீரான வாணிகத் தொடர்பு நிலவியிருந்தது. பதின்மூன்றாம் நூற்றாண்டு இறுதியில் குப்ளாய்கான் சீனப் பேரரசனாய் இருந்தபோது தன்னுடைய அதிகாரத்தைப் பெருக்க எண்ணினான். அந்த நேரத்தில் பாண்டிய நாட்டில் ஏற்பட்ட அரசியல் குழப்பமும் சீனாவுக்கும் தென் இந்திய ராஜ்யங்களுக்கும் இடையில் அடிக்கடி தூதர் பரிமாற்றம் நிகழ்வதற்குக் காரணமாய் இருந்தது. இந்தச் சுறுசுறுப்பான தொடர்புகள் கி.பி. 1279-க்கும் 1292-ஆம் ஆண்டுகளுக்கிடையிலும் நடைபெற்றன.[24] சீனர்கள் இலங்கையுடனும் மேற்குக்கடற்கரைத் துறைமுகங்களோடும்தான் நெருங்கிய வாணிகத் தொடர்பு வைத்திருந்தனர். இலங்கையிலிருந்து புத்தருடைய புனிதச் சின்னங்களைக் காண வேண்டும் என்ற விருப்பமும் தூதுக்குழுவினரிடையே இருந்திருக்கும். அவ்வாறு வந்த தூதுக்குழுவைச் சேர்ந்த ஒருவன் மூலமாக கி.பி. 1281ஆம் ஆண்டில் குப்ளாய்கானுக்கு பாண்டிய மன்னன் (குலசேகரன்) இரகசியச் செய்தி அனுப்பினான். மாபார் நாட்டை (பாண்டிய நாட்டை) ஆள்வதற்கு அவனே சட்டப்படி உரிமை பெற்ற அரசன் என்றும் அவனுடைய சகோதரர்கள் ஐவர் ஒன்று சேர்ந்து அவனைக் கொல்ல முயல்கின்றனர் என்றும் சொல்லி அனுப்பினான். மேலும், அவன் சீனப் பேரரசருடைய மேலாண்மையை ஏற்றுக்கொள்வதற்கு விரும்புவதாகவும்

[23] மேற்படி.

[24] மேற்படி-பக். 47.

சொல்லி அனுப்பினான். தனது நாட்டுச் செல்வத்தைப் பற்றிய உண்மைகளைத் தூதுவன் மூலம் பின்வருமாறு சொல்லி அனுப்பினான். 'சீனப் பேரரசரின் தூதர்கள் இங்கு வந்திருப்பதையும் நான் (உங்கள்) பேரரசரின் மேலாண்மையை ஏற்றுக்கொள்வதற்கு அவர்கள் துணைபுரிவதையும் கேள்விப்பட்டு இந்தநாடு வலிமையற்ற நாடு என்று அவர்கள் (குலசேகரனின் சகோதரர்கள்) கூறிக் கொண்டிருக்கின்றனர். அவர்கள் பொய் சொல்கிறார்கள். முஸ்லிம் நாடுகளிலுள்ள பொன், முத்து முதலிய மதிப்பு மிக்க பொருள்கள் எல்லாமே இந்த நாட்டிலிருந்து சென்றவை. இந்த நாட்டிற்குத்தான் முஸ்லிம் வணிகர் அனைவரும் வருகின்றனர். மாபார் பேரரசருடைய மேலாண்மையை ஏற்றுக்கொண்டது என்ற செய்தி தெரிந்தால் (தென்னிந்தியாவிலுள்ள) இராஜ்யங்கள் எல்லாமே பேரரசருக்குப் பணிந்துவிடும். இந்தச் செய்திகள் அனைத்தையும் மிகவும் பணிவாய் எடுத்துரைக்கின்ற ஒரு கடிதத்தை என்னுடைய தூதன் (ஜமாலுதீன்) முன்னரே தங்களிடம் தந்திருக்கிறான்'.[25] பாண்டிய நாட்டிலுள்ள அரசியல் பூசல்கள் எவ்வளவு தூரம் பாண்டிய அரசனைச் சீன அரசனின் துணையை நாடிச் செல்லத் தூண்டின என்பது இதன் மூலம் விளங்குகிறது. அதே சமயத்தில், பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி குறிப்பிட்டுள்ளபடி, பிறநாடுகள் எவ்வளவு தொலைவில் இருந்தாலும் அவற்றைப் பற்றிய செய்திகளை அறிந்துகொள்ள வேண்டும் என்ற துடிப்பும் ஆர்வமும் சீனப் பேரரசன் குப்ளாய்கானுக்கு இருந்ததும் தெரிகின்றது.[26] இவ்வாறு நிலவிய கடல் தொடர்புகளைப் பயன்படுத்தித்தான் மார்க்கபோலோ சீனா சென்று மீண்டும் பாரசீகம் வழியாகத் தமது நாடான வெனிஸ் நாட்டிற்கு திரும்பினார். குப்ளாய்கான் ஆட்சியின்போதுதான் அவர் சீனா சென்றார். அங்கே பதினேழு ஆண்டுகள் தங்கியிருந்தார். அவ்வரசன் அவர் மீது பெருமதிப்பு வைத்திருந்தான். குப்ளாய்கானுடைய பரந்த பேரரசின் பல்வேறு பகுதிகளுக்குச் சென்று பார்த்தார். கி.பி. 1292ஆம் ஆண்டில் சீனாவிலிருந்து கிளம்பி 1296ஆம் ஆண்டில் வெனிஸ் நகரை அடைந்தார். போகும் வழியில் தென்னிந்தியாவிற்கு வந்து தங்கினார். பாண்டிய நாட்டைப் பற்றிப் பல அரிய செய்திகளை விட்டுச் சென்றுள்ளார். சீன அரசனின் தொடர்பு இருந்ததாலேயே இங்குள்ள அரசியல் விவகாரங்கள் அவர் நன்கு புரிந்து வைத்திருக்க அவருக்கு வாய்ப்பு இருந்தது என்று கருதலாம். அவரது பயணச் செய்திகள் சுவையாகவும் உண்மையாகவும் இருக்கின்றன.

[25] நீலகண்ட சாஸ்திரி : மேற்படி

[26] மேற்படி - பக். 48 - 50.

## காயல் துறைமுகம்

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள காயல்பட்டினம் அக்காலத்தில் கடல் வாணிகத்திற்கு ஒரு முக்கிய மையமாக விளங்கிற்று. அது ஒரு புகழ்பெற்ற துறைமுகமாய் இருந்தது என்றும் அங்கே கடல் பயணம் பற்றி எழுதிய நூலாசிரியர் பலர் வாழ்ந்தனர் என்றும் சுலேமான் அல் மஹரி (14ஆம் நூற்றுண்டு முற்பாதியில்) என்பவர் எழுதிவைத்துள்ளார். இத் துறைமுகத்தைப் பற்றி மார்க்கபோலோவும் விவரமான குறிப்புகளை விட்டுச் சென்றுள்ளார். அவர் கூறுகிறுர் 'கெயில் (காயல்) என்பது ஒரு வீறுர்ந்த பெரிய நகரம். அது உடன்பிறந்த அரசர் ஐவருள் மூத்தவனுக்குச் சொந்தமானது. அந்த அரசன் பெயர் ஆஷர் (மாறவர்மன் குலசேகரன்) என்பதாகும். ஹார்மஸ், கிஸ், ஏடன் முதலிய அரபிய நாடுகள் அனைத்திலுமிருந்து குதிரை முதலிய பல்வேறு வாணிகப் பண்டங்களையும் ஏற்றிக்கொண்டு வருகின்ற கலங்கள் எல்லாமே இந்தத் துறைமுகத்திற்கு வருகின்றன. அதனுல் அந்த நகரைச் சுற்றிலுமுள்ள ஊர்களிலிருந்து எண்ணற்ற மக்கள் அங்குவந்து கூடுகிறுர்கள். எனவே, அந்நகரில் பெரு வாணிகம் நடைபெறுகிறது. அரசனுடைய கருவூலத்தில் கணக்கற்ற செல்வங்கள் குவிந்து கிடக்கின்றன. வணிகர்களையும் வெளிநாட்டினரையும் வரவேற்று அவர்களுக்குத் தேவையான உதவிகளெல்லாம் செய்கிறுன். அதனுல் அந்த நகரத்திற்கு வருவதை அவர்கள் பெரிதும் விரும்புகிறுர்கள்.'[27] இவ்வாறு பாண்டிய இராஜ்யத்தின் துறைமுகப்பட்டினங்களில் ஏற்றுமதி இறக்குமதிகள் செய்யப்பட்ட பொருள்களினுல் அரசுக்குச் சுங்க வருவாயாக ஆண்டுதோறும் பெரும்பொருள் கிடைத்திருக்கும் என்பதில் ஐயமில்லை. ஆனுல், மேற்குறிப்பிட்ட மார்க்கபோலோவின் குறிப்பின்படி பார்த்தால் சுங்கவரி வணிகர்களுக்கு அதிகச் சுமையாக இல்லாத அளவே இருந்திருக்க வேண்டும்.

## நாணயங்கள்

உள்நாட்டிலுள் நடைபெற்ற வாணிகத்தின் பெரும்பகுதி பண்டமாற்று முறையில் நிகழ்ந்தது என்று தெரிகிறது. குறிப்பாக, கிராமங்களில் அன்றுடத் தேவைப் பொருள்கள் பண்டமாற்று முறையிலேயே நடந்திருக்கும். சமீபகாலம் வரைகூடப் பாண்டியநாட்டுக் கிராமங்களில் அரிசி, பருத்தி போன்ற பொருள்களைக் கொடுத்து உப்பு, தானியவகைகள் போன்ற பொருள்களைப் பெற்றுவந்தனர். ஆனுல், அதே சமயம்

[27] மேற்படி - பக். 294-295.

நாணயங்களும் வழக்கில் இருந்து வந்தன. பாண்டிய நாட்டில் கிடைத்துள்ள நாணயங்களும் கல்வெட்டுக் குறிப்புகளும் இதற்குச் சான்று பகர்கின்றன. சங்க காலத்திலேயே காணம், காசு போன்ற நாணயங்கள் சிறிய அளவில் வழக்கில் இருந்தன. சங்ககாலத்துப் பாண்டியரது நாணயங்கள் என்று சொல்லக் கூடிய செப்பு நாணயங்கள் வைகைக்கரையில் கிடைத் துள்ளன.[28] இவை பெரிய அளவில் நீண்டசதுர வடிவிலும் சதுரவடிவிலும் இருக்கின்றன. ஒருபுறம் கயல்கள் பொறிக்கப் பட்டுள்ளன. மறுபக்கம் மத்தியில் யானை நிற்க அதைச் சுற்றி சூரியன், சந்திரன், குத்துவிளக்கு, செங்கோல், சாமரம் போன்ற மங்களக் குறிகள் பொறிக்கப்பட்டுள்ளன. இவை அக்காலத்தில் வழங்கிய சோழரின் சதுர நாணயங்களைப் போன்றே இருக் கின்றன. ஆனைஅச்சு என்று பிற்காலக் குறிப்புகளில் வரும் காசு இவ்வகை நாணயங்களைக் குறிப்பதாக இருக்கலாம். ஆனால், இவற்றில் எழுத்துகள் பொறிக்கப்படாததனால் இவற்றை வெளியிட்ட பாண்டிய அரசர்கள் யார் என்ற விவரங்கள் தெரியவில்லை. எழுத்துகளுடன் கூடிய சங்ககாலத்து நாணயங்கள் கிடைத்தால் வரலாற்றுக்கு மிக்க பயனுள்ளவை யாக இருக்கும்.

முதல் பாண்டியப் பேரரசு காலத்தில் வழங்கப்பட்ட நாணயங்களைப் பற்றி அவர்கள் செப்பேடுகளிலும் கல்வெட்டு களிலும் குறிப்புகள் காணப்படுகின்றன. ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் அவனிபசேகரன் என்னும் அவனது விருதைக் கொண்டு அவனிப சேகரன் கோளகை என்ற நாணயத்தை வெளியிட்டான்.[29] இரண்டாம் வரகுணன் (9ஆம் நூற்றாண்டு) வெளியிட்ட தங்க நாணயமொன்று கிடைத்துள்ளது.[30] அதில் ஒரு பக்கம் இரு கயல் களும் மற்றொரு பக்கம் 'ஸ்ரீவரகுண' என்று கிரந்த எழுத்திலும் பொறிக்கப்பட்டுள்ளது. திருச்செந்தூர்க் கோவிலுக்கும் அம்பா சமுத்திரத்திலுள்ள கோவிலுக்கும் முறையே 1400ஆம் 290 பொற் காசுகளும் முதலீடாகத் தானம் வழங்கிய செய்தி அவனது கல்வெட்டுகள் மூலம் தெரிகின்றது.[31] இவனது காலத்தில் 'காசு' 'பழங்காசு' என்ற நாணயங்கள் வழக்கில் இருந்தன. 'காசு' 'காணம்' 'பொன்' என்று வழக்கில் இருந்த நாணயங்களும், அள வைகளையும் பற்றித் தேவாரப் திவ்வியப்பிரபந்தப் பாடல்களில்

[28] Raman, K. V, Some Aspects - p. 51-53.
[29] Desikachari, South Indian Coins P. III, 65.
[30] Vanaja. R. A Gold Coin of Varaguna J. N. S. I. XXXII-Pt. I.
[31] ARE 1928-29. p. 66.

குறிப்புகள் காணப்படுகின்றன.[32] தக்காணத்திலும், தென் இந்தியாவில் பண்டைக்காலத்தில் பொதுவாகக் 'கத்யாணு' என்னும் பொற்காசு 58 நெல்மணி (Grains) நிறையுடையதாக இருந்தது. தமிழகத்திலும் இதுவே பெரும்பாலும் வழக்கில் இருந்தது.[33] இதுவே ''கழஞ்சு'' என வழங்கப்பட்டது. ஒரு பொற்காசு ஒரு கழஞ்சு நிறையுடைய பொன் என்று பாண்டியர் கல்வெட்டொன்று குறிக்கின்றது. சோழர் கல்வெட்டுகள் போலவே இங்கும் காசும் கழஞ்சும் ஒன்றாகவே குறிக்கப்படு கின்றன. கழஞ்சு எடையுள்ள தங்க நாணயத்திற்குப் 'பொன்' என்ற பெயரும் மாடை என்ற பெயரும் சோழ நாட்டில் வழங்கு கின்றன. ''ஆனால், பல பெயர்களில் வழங்கிய பல்வேறு எடைகளுடைய மாடையும் காசும் குறிப்பிடப்படுகின்றன. எனவே, தரநிர்ணயம் செய்வதற்காக அவ்வப்போது மேற் கொள்ளப்பட்ட முயற்சிகள் குறிப்பிடத்தக்க பலனைத் தந்த தாகச் சொல்ல இயலாது.[34] ஒரு காசு என்பது ஒரு கழஞ் சுக்கும் 10 பொன்னுக்கும் சமம் என்று வரகுணனின் கல்வெட்டுக் குறிக்கின்றது.[35] பழங்காசு என்பது காசைவிட அதிக மதிப் புடையதாய் இருந்தது என்பது மற்றொரு கல்வெட்டு மூலம் தெரி கின்றது. ஒரு 'காணம்' என்பது ஒரு பொன்னுக்குச் சமமாகக் குறிக்கப்படுகின்றது.[36]

தென் இந்தியாவில் மற்றச் சில பகுதிகளைப் போலப் பாண் டிய நாட்டிலும் 'திரமம்' என்ற ஒரு நாணயம் அல்லது ஒரு நாணய அளவை வழக்கில் இருந்தது. இது ஒன்பதாம் நூற்றாண் டுக் கல்வெட்டுகளிலேயே காணப்படுகின்றது.[37] திரமம் என்பது கிரேக்க அல்லது இந்தோபாக்டிரிய வெள்ளி நாணயமான ட்ரக் மாவை (Drahma) அடிப்படையாகக் கொண்ட நாணயமோ நாணய அளவையாகவோ இருத்தல் வேண்டும். அது ஒரு வெள்ளி நாணயமாகக் கருதப்படுகின்றது.[38] $1\frac{1}{2}$ திரமம் என்பது ஒரு பழங்காசுக்குச் சமமாக ஒரு பாண்டியக் கல்வெட்டுக் குறிக்கின் றது.[39] காஞ்சிப்பகுதியில் 11ஆம் நூற்றாண்டில் 1 காசு பணத்திற்கு 6 திரமம் சமமாகவும் அதற்கு 40 ஆண்டுகளுக்குப் பிறகு இராம

[32] கையிலொன்றும் காணமில்லை கழலடி தொழுதுய்யினல்லால் (சுந்த ரர்) 'காசின்வாய்க் கரம் விற்பினும்' (பெரியாழ்வார்)

[33] நீலகண்ட சாஸ்திரி, தென்னிந்திய வரலாறு, பக். 43,

[34] மேற்படி

[35] Ep. Ind. XXI No. 17.

[36] Raman, K. V. Some aspects - p. 52 53.

[37] S. I. I. XIV No 243.

[38] நீலகண்ட சாஸ்திரி, மேற்படி பக். 43

[39] S. I. I. XIV. 243.

நாதப்புரப் பகுதியில் 1 காசுக்கு 7 திரமம் சமமாகவும் இருந்தது.[40] பிற்காலத்தில் காசு என்ற சொல் செப்புக்காசுக்கும் பயன்படுத்தப் பட்டது. சோழராட்சியின் போது பாண்டிய நாட்டிலும் அவர் களது காசு நிலவியது. சோழரது வட்டவடிவச் செப்புக் காசுகள் போல் பாண்டியரும் வெளியிட்டனர். ஒரு பக்கத்தில் நிற்கும் அரசனும் மறுபக்கத்தில் வீற்றிருக்கும் பூமகளும் பொறிக்கப்பட்ட காசுகள் இங்கும் வழக்கில் இருந்தன. இவற்றைத் தவிர வேறு பல நாணயங்களின் பெயர்கள் நமக்குக் கிடைத்துள்ளன. சடைய வர்மன் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் 55 'பழமுதல் ஆனை அச்சு' என்னும் பணத்திற்கு 22 வேலி 6 மா நிலம் வாங்க முடிந்தது.[41] சடையவர்மன் காலத்தில் 'புதுக்குளிகை பணம்' என்னும் 'அன்றுாட நற்புதுக்காசு', 'தனபாலன் குளிகை' போன்ற நாணயங்கள் குறிக்கப்படுகின்றன. தனபாலன் குளிகை திருநெல் வேலியிலுள்ள கல்வெட்டில் காணப்படுகின்றது. 'பழம் சோழியக் காசு' என்ற நாணயமும் வழக்கில் இருந்தது. 1 பணமும் 100 சோழியக் காசுகளும் ஒரே மதிப்புடையனவாக இருந்தன என்று மாவட்டத்திலுள்ள பாண்டியக் கல்வெட்டொன்று குறிக்கின் றது.[43] சடையவர்மன் சுந்தரபாண்டியன் என்னும் பேரரசன் பல மாநிலங்களைத் தனது ஆட்சிக்கு உட்படுத்திய பிறகு வெளியிட்ட நாணயத்தில் 'எல்லாந்தலையான' என்ற அவனது விருது பொறிக் கப்பட்டுள்ளது. அவன் காலத்தில் வேறு சில நாணயங்களில் 'கலியுகராமன்' என்றும் 'கச்சி வழங்கும் பெருமாள்' என்றும் விருது கள் பொறிக்கப்பட்டன. பிற்காலப் பாண்டிய நாணயங்களில் 'சமரகோலாகலன்', 'புவனேகவீரன்' என்று பொறிப்புகள் காணப்படுகின்றன. பின்னால் சொல்லப்பட்ட நாணயம் முத லாம் மாறவர்மன் குலசேகரனால் வெளியிடப்பட்ட நாணயமாகத் தெரிகின்றது.[44] 'கோதண்டராமன்' என்ற பொறிப்புடைய நாணயம் மூன்றும் சடையவர்மன் சுந்தரனுடையதாகக் கருதப் படுகின்றது. கொல்லம் 599-ல் (கி.பி. 1413) திருநெல்வேலிப் பெருமாள் வீரபாண்டியன் வெளியிட்ட நாணயத்தில் 'நென் மேனி கலியுகராமன்' என்று பொறிக்கப்பட்டுள்ளது.[45]

ஈழக்காசு என்ற ஒருவகைக் பொற்காசு பாண்டிய நாட்டிலும் சோழ நாட்டிலும் வழங்கப்பட்டது. இக்காசு ½ மாடை அல்லது ½ கழஞ்சுப் பொன் நிறையுடையதாய் 8ஆம் நூற்றாண்டிலேயே

[40] Sastri, K. A. N. Cholas p. 620
[41] 312 of 1949-50.
[42] 273 of 1941-42 and 54 of 1944-45.
[43] 439 of 1913.
[44] Raman, K. V. Some aspects - p. 53-54.
[45] 725 of 1962-63.

வழக்கில் இருந்தது.[46] நெடுங்காலம் தொட்டே ஈழத்திற்கும் பாண்டிய நாட்டிற்குமிடையே நெருங்கிய தொடர்பின் காரண மாய் இக்காசு இங்கு வழக்கில் வந்திருக்க வேண்டும். பராந்தக சோழன் பாண்டிய நாட்டையும் ஈழத்தையும் கைப்பற்றிய பிறகு ஈழக்காசு சோழ நாட்டிலும் வழக்கில் வந்திருக்க வேண்டும் என்று பேராசிரியர் சாஸ்திரி கருதுவார். ஈழக்காசில் ஒருபக்கம் அரசன் நிற்பது போலவும் மறுபக்கம் அமர்ந்துள்ள உருவமும் காணப் படுகின்றன. இதைப் போன்றே இராசராச சோழனும் செப்பு நாணயங்கள் வெளியிட்டான். ஈழக்காசு $7\frac{1}{2}$ புது அக்கங்களுக்குச் சமம் என்று மதுரையில் கிடைத்த முதலாம் பராந்தகனின் கல் வெட்டுக் குறிக்கின்றது.[47] அக்கம் எவ்வித நாணயம் என்று தெரியவில்லை. 10ஆம் நூற்றாண்டில் அக்கம் ஒரு காசின் 1/12 பாகம் என்றும் கழஞ்சின் 1/24 பாகம் மதிப்புடையதாக இருந் தது என்றும் கருதப்படுகிறது.[48] அக்கம் என்ற சொல் பொது வாகப் பல்வேறு நாணயங்களுக்கு இடப்பட்ட சொல்லாகவே தெரிகின்றது. கொற்கையில் 'அக்கசாலை' ஒன்று இருந்ததாகக் கல்வெட்டுக் குறிப்பு உள்ளது. இது நாணயங்கள் செய்வதற்காக அரசாங்கம் ஏற்படுத்திய சாலையாக இருந்திருக்கவேண்டும்.

இலங்கை மன்னன் பராக்கிரமபாகு மதுரையைக் கைப்பற்றிச் சிறிதுகாலம் அவனது நண்பன் குலசேகரனிடம் ஆட்சி ஒப்புவித்த போது 'கஹ பணம்' என்னும் இலங்கை நாணயத்தை இங்கு வழக்கில் வரும்படி செய்தான். 14ஆம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டிலும் 'தினரா' என்னும் நாணயம் வழக்கில் இருந்ததை வாசாப் குறித்துள்ளார். மதுரைச் சுல்தான்களது ஆட்சியின் போது அவர்களது நாணயங்கள் பாண்டிய நாட்டில் வழக்கில் வந்தன. அவற்றில் அவ்வப்போது ஆண்டு வந்த சுல்தானின் பெயர் பொறிக்கப்பட்டிருக்கும். ஆனால், அவர்களது ஆட்சி சிறிதுகாலமே நீடித்ததனால் அவர்களது நாணயங்கள் மக்கள் மத்தியில் நிலைபெறவில்லை. 14ஆம் நூற்றாண்டின் கடைப்பகுதி யில் பாண்டிய நாடு விசயநகர ஆட்சிக்கு உட்பட்ட பிறகு விசய நகர அரசர்களது நாணயங்களும் அவர்கள் ஆட்சிக்கு உட்பட்டு இயங்கிய மதுரைநாயக்க மன்னர்களின் நாணயங்களும் பாண்டிய நாட்டில் நிலைபெற்றன. தென்காசிப் பகுதியில் பிற்காலப் பாண்டி யரின் நாணயங்கள் சிறிதுகாலம் நீடித்து வழக்கில் இருந்ததாகத் தெரிகிறது. ஆக, அவ்வப்போது ஏற்பட்ட அரசியல் மாறுதல்களை நாணயங்களின் வகைகளிலும் நம்மால் காணமுடிகின்றது.

[46] Sastri, K. A. N. Cholas - p. 613-623.
[47] S.I.I. II, 7.
[48] Sastri, K.A.N. P.K. p. 192.

# 13. சமூக வாழ்க்கை

சங்க காலத்தில் பாண்டிய நாட்டில் நிலவியிருந்த எளிய பண்பட்ட சமூக வாழ்க்கையைப்பற்றி முன்னர்க்கண்டோம். அக்காலத்திற்குப் பின்னர் முதல், இரண்டாம் பேரரசு காலங்களில் பாண்டியர் சமுதாயத்தில் பல மாறுதல்களும் வளர்ச்சிகளும் ஏற்பட்டன எனலாம். சங்ககாலத்தைவிடப் பிற்காலத்தில் மக்கள் தொகை பெருகியதால் அதிக மக்கள் குடியிருப்புகளைக் காண்கிறோம். இதனால் சமூக வாழ்க்கையில் மாறுதல்களும், தொடர்ந்து பிற இயல்புகளில் மாறுதல்களும் ஏற்பட்டன என்பதில் சந்தேகமில்லை. முன்பு சிறிய அரசாக, குறுகிய எல்லைக்குள் இருந்த பாண்டிய அரசு பேரரசாக விரிந்த காலம் அது. மக்கள் குடியிருப்புகள் வளர்ந்ததால் கிராமங்கள் எண்ணிக்கையிலும், அளவிலும் பெருகின. பல புதிய ஊர்களும் நகரங்களும் தோற்றுவிக்கப்பட்டன. அரசர்களும் ஊர்ச்சபையோரும் அளித்த ஊக்குவிப்பினால் புஞ்சைக் காடுகளும் தரிசு நிலங்களும் மேலும் மேலும் விளைநிலங்களாக்கப்பட்டன. ஆங்காங்கே கிராம சபைகள் மிகத் துடிப்புடன் செயலாற்றின. மன்றங்களும் கோவில்களும், விவசாயம், சிறு தொழில்கள், கலைப்பணிகள் பெருகுவதற்கு ஊக்கம் அளித்தன. வெளிநாட்டு வாணிபமும் அதிகரித்து அதன் மூலம் பாண்டிய நாட்டிற்கு நல்ல வருவாய் கிடைத்தது. வணிகர்கள், நானுதேசிகள், மணிக்கிராமத்தார், இலங்கை வளஞ்சியர் போன்றோர் இங்குத் தங்கி வாணிகம் செய்தனர். அதுபோலப் பாண்டியநாட்டு வணிகர்கள் வேறு நாடுகளுக்குச் சென்று அங்குத்தங்கி வாணிகமும் சமூகப் பணிகளும் செய்துள்ளனர். கடல் கடந்து சென்றும் வெளிநாடுகளுடன் வாணிக, கலாச்சாரத் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டனர். உள்நாட்டு வெளிநாட்டுத் தொடர்புகளால் கைத்தொழில் வகைகளும் அவற்றின் திறனும் வளர்ச்சி பெற்றன. இவைகளேயன்றிப் பாண்டியர் கண்ட பல வெற்றிகளாலும், அவர்களது சிற்றரசர்கள் செலுத்திய திறைப் பொருள்களாலும் செல்வம் சேர்ந்தது.

சமூக, சமயத் துறைகளில் தென் இந்தியக் கோயில்கள் முக்கியப் பங்கேற்றன. அவை வழிபாட்டுக் கூடங்களாக மட்டுமன்

றிக் கிராமத்தின் சமூக பொருளாதாரத் துறைகளில் மைய ஸ்தானம் பெறலாயின. இவ்வளர்ச்சியைத் தமிழ்நாட்டில் மட்டு மன்றித் தென் இந்தியாவின் இதர மாநிலங்களிலும் காண்கிறோம். கிராமந்தோறும் அழகிய கற்றளிகள் தோற்றுவிக்கப்பட்டன. இக் கோவில்களை மையமாகக் கொண்டு விளங்கிய கல்வி நிறுவ னங்கள், மடங்கள், தொழிற்கூடங்கள், விவசாயப்பண்ணைகள், கலைத் தொழில்கள் இவையனைத்தும் பெருகிச் சமூக வாழ்வை வளம்பெறச் செய்தன. தென் இந்தியாவின் சிறப்பான கலா சாரக் கூறுகள் எனக் கருதப்படும் பல இயல்புகள் இக் காலத்தில் நிலைபெற்றுத் திகழ்ந்ததோடல்லாமல் தென் இந்தியப் பிரதேசங் களுக்குள் கலாசார ஒருமைப்பாட்டினையும் உருவாக்கின.

## குடியிருப்புகள்

ஆற்றங்கரைகள், ஏரிகள் போன்ற நீர் நிலைகள் இருக்குமிடங் களில்தான் மக்கள் குடியிருப்புகள் பொதுவாக உருவாகும். சோழ நாட்டில் காவிரி பாயும் சமவெளிகளில்தாம் நூற்றுக்கணக் கான கிராமங்களும் ஊர்களும் தோன்றியுள்ளன. அது போலவே வைகையும் தாமிரவருணியும் பாயும் சமவெளிகளில் மக்கள் குடி யிருப்புகள் பெருகிய அளவு பாண்டிய நாட்டின் மற்றைய பகுதி களில் பெருகவில்லை. குறிப்பாக, மங்கலங்கள் அல்லது பிரம தேயங்கள் என்னும் கிராமங்களே அச் சமவெளிகளில் நிலைத்து வளர்ச்சியுற்றன. குளங்களின் அருகே ஊர்கள் அமைக்கப்பட் டிருந்ததைப் பல ஊர்களின் பெயர்களில் காணலாம். மதுரை மாநகர் 'மாடக்குளக்கீழ் மதுரை' என்றும், மற்றொரு ஊர் 'பாண் டியன் இராசசிம்மக்குளகீழ்' என்றும் வழங்கப்பட்டன.

புதிய குடியேற்றங்களை அமைப்பதில் மன்னர் அதிக ஊக்கம் காட்டினர். காடுகளை அழித்துக் குடியிருப்புகளாகவும் விளைநிலங் களாகவும் மாற்றியுள்ளனர். சேந்தன் மாறன் மங்கலபுரம் என் னும் புதிய ஊரைத் தோற்றுவித்தான். மேலும், இராமநாதபுரம் போன்ற வறட்சியான சில பிரதேசங்களிலும் மக்கள் குடியேற அரசர்கள் பல சலுகைகளை வழங்கினர். ஆற்றுப் பாய்ச்சல் இல் லாத இடங்களில் வாய்க்கால்கள் மூலம் நீர்ப்பாசன வசதியைப் பெருக்குதல், பெரிய ஏரிகளையும் குளங்களையும் வெட்டுதல், இறை யிலி நிலங்கள் வழங்குதல் போன்ற பல சலுகைகளை அரசு செய்து கொடுத்தது. 'எண்ணிறந்த பிரமதேயங்களையும், எண்ணிறந்த தேவதானங்களையும், எண்ணிறந்த தடாகங்களையும்' செய்த தாகப் பாண்டிய அரசர்கள் பெருமையுடன் கூறிக்கொள்கிறார்கள். குளங்களையும் ஏரிகளையும் வெட்டுவித்து அங்கு மக்கள் குடியேற வசதி செய்து தந்தனர்.

**ஊர்கள் அமைப்பு**

அக்காலக் குடியிருப்புகள் அமைப்புப் பற்றி அதிகம் தெரிந்திலது. கிடைக்கின்ற சான்றுகளைக் கொண்டு, ஊர்கள் நீர் நிலைகளின் அருகே அமைந்திருந்தன என்வும், அருகே எழிலார்ந்த வயல்கள் இருந்தன எனவும் குறிப்பிடலாம். இவற்றின் எழில் மிக்க காட்சியைச் செப்பேடுகள் நம் கண் முன்னுல் நிறுத்துகின்றன. திருநெல்வேலி மாவட்டம் ஸ்ரீவைகுண்டத்தைச் சுற்றியுள்ள பகுதியைப்பற்றிச் 'சோலைகளுடைய புல்லூரில் விளங்குகிறவன் வயல்களிலும் குளங்களிலும் நீர் பாய்கின்றதும் செங்கழுநீர்ப் பூக்களை உடையதுமான மருத நிலத்தையுடைய வைகுந்த வளநாடு' என்று செப்பேடு குறிக்கின்றது. வேண்பு நாட்டைப் பற்றி 'மலர்ந்த பூக்கள் மகரந்தப் பொடிகளையுடைய சோலைகளைத் தழுவிய வயல்களில் நெல் விளையும் நீர் வளத்தால் மேம்பாடுள்ள புகழுடைய வேண்பு நாடு' என்றும் 'பொன் வளம் பொருந்திய நேச்சுர நாடு' என்றும் குறிப்புகள் காணப்படுகின்றன. தொலைவிலி மங்கலத்தைப் பற்றி நம்மாழ்வார் பின் வருமாறு வருணிக்கிறுர். 'நோக்கும் பக்கமெல்லாங் கரும்பொடு செந்நெல் ஓங்கு செந்தாமரை வாய்க்குந் தண்பொருநல் வடகரை வண்தொலைவில்லி மங்கலம்'. பெரியாழ்வார் திருக்கோட்டியூரைச் 'செந்நெலார் வயல்சூழ் திருக்கோட்டியூர்' என்று வேருேரிடத்தில் குறிப்பிடுகிறுர். நிலத்தின் எல்லைகளைக் குறிக்கும் போதுகூட ஊர்களின் அருகே ஓடும் ஆறுகள் கால்வாய்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றனர். உதாரணமாக 'வெள்ளாற்றிற்கும், பெருநல்லூர் ஏரிக்கும் மேற்கு நடையாட்டிக் குளத்தில் மிகுதியான நீர் பாயும் குளத்தின் தென்கோடியில் எதிர்ப்பக்கத்திலும் பயனை அளிக்கும் குடிநடை ஏரி ஓங்கிய குளத்துக்கருகில்......' எனவும் இன்னும் இவை போன்ற பிற குறிப்புகளும் செப்பேடுகளிலும் கல்வெட்டுகளிலும் காணப்படுகின்றன. இவற்றிலிருந்து வாய்க்கால்கள், ஏரிகள், குளங்கள் சூழக் குடியிருப்புகள் அமைக்கப்பட்டிருந்தன என்பது நன்கு விளங்கும்.

**சமூக அமைப்பு**

இந்தியாவின் மற்றப் பகுதிகளைப் போன்று பாண்டிய நாட்டிலும் சாதி அடிப்படையிலான சமுதாயம் இயங்கியது. அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற பிரிவினருடன் வேறு பல பாகுபாடுகளையும் சமூகம் ஏற்றிருந்தது. இவ் வகுப்பினரிடையே ஏற்றத்தாழ்வுகள் நிலவிவந்தன. சாதிப் பிரிவுகளையும் அவற்ருேடு பின்னிப் பிணைந்திருந்த பிற சமுதாய நிலைகளையும் மக்கள் ஏற்றுக் கொண்டார்கள். இதனுல் குலவேறுபாடு கருதி

முரண்பட்டுப் போகாமல் சாதிக் கட்டுப்பாட்டுடன் அவர்கள் செயலாற்றினர். சாதிச் சண்டையும் பூசலும் சிறிய அளவில் இருந்தன. அவரவர்கள் தங்களது பரம்பரைத் தொழிலைச் செய்து அதற்குத் தக்க உரிமைகளையும் ஊதியத்தையும் பெற்றனர். ஊர்ப் பொதுக் காரியங்களில் வேற்றுமை பாராட்டாமல் ஒன்றுகூடி ஒத்துழைத்தனர். அவ்வொத்துழைப்பு இல்லையென்றால் ஊராட்சி மன்றங்கள் அமைதியாகவும் திறமையாகவும் பணியாற்றியிருக்க முடியாது. மார்க்கபோலோ போன்ற வெளிநாட்டுப்பயணிகள் கூட அரசியல் பூசல்களைப் பற்றித்தான் எழுதியுள்ளனரே தவிர, சமூகப் பூசல்களைப் பற்றிக் குறிப்பிடவில்லை என்பது கவனிக்கத்தக்கது. சாதி அடிப்படையில் வேறுபட்டவர்கூட மத அடிப்படையில் ஒன்றுபட்டனர். சைவம், வைணவம் போன்ற சமயங்களையே பெருவாரியான மக்கள் பின்பற்றியதால் சமயம் அவர்களுக்குள் ஓர் ஒற்றுமையை உருவாக்கியது. வேதம், புராணம், இராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாசங்களை மக்கள் எல்லோருமே வித்தியாசமின்றி மதித்தனர். அவை சமய ஒருமைப்பாட்டை உருவாக்கின. கிராமங்களில்கூட இதிகாசக் கதைகள், கூத்துகள் மக்களிடையே நல்ல செல்வாக்கைப் பெற்றிருந்தன. கற்பு, வீரம், ஈகை, வாய்மை போன்ற உயர் இலட்சியங்களுக்கு அர்ச்சுனன், கர்ணன், இராமன், அரிச்சந்திரன், போன்ற இதிகாச புருஷர்கள் எடுத்துக்காட்டுகளாக மக்களிடையே மதிக்கப்பட்டனர். இவ்வாறான இதிகாச புருஷர்கள் சைவ வைணவ மற்றும் சாதி வேறுபாடுகளனின்றி மக்களிடையே நன்மதிப்பைப் பெற்றிருந்ததால் ஒருவிதப் பண்பாட்டு இணைப்பை நம்மால் காணமுடிகிறது. சைவ நாயன்மார்களும், வைணவ ஆழ்வார்களும் வைதிக மார்கத்தையும், இந்துமதக் கோட்பாடுகளையும் எளிய தமிழில் பரப்பிய காரணத்தால் பாமர மக்களும் இவற்றை ஏற்றுப் போற்றலாயினர். ஆக, சாதி அடிப்படையில் வேறுபட்டாலும் மத அடிப்படையில் மக்கள் ஒன்றுபட்டனர். பூசல்கள் வராத காரணத்திற்குப் பொதுவாக எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட சில பண்பாட்டு இலட்சியங்களும் மதப் பிணைப்பும் காரணங்களாய் இருந்தன எனலாம்.

இந்து மதத்திற்குள் நிலைத்திருந்த அமைதி, புறச்சமயங்களுடன் நிலைத்தது என்று சொல்வதற்கில்லை. சங்க காலத்தில் நிலவிய அமைதி களப்பிரரின் ஊடுருவல்களால் சீர்குலைக்கப்பட்டது. வைதிக மதத்தின்பால் அவர்கள் கொண்டிருந்த வெறுப்பால் வேள்விச் சாலைகள் அழிக்கப்பட்டன; அவற்றிற்காகக் கொடுக்கப்பட்ட நிலங்கள் அபகரிக்கப்பட்டன. கிட்டத்தட்ட 300 ஆண்டுகள் வைதிக (இந்து) மதத்தினர் பல கொடுமைகளுக்கு

உள்ளாயினர். மீண்டும் ஆறும் நூற்றுண்டில் அவர்கள் புத்துணர்ச்சி பெற்றபோது புறச்சமயங்களை எதிர்க்க முற்பட்டனர். சம்பந்தர் காலத்தில் மதுரையில் சமணர்கள் கழுவேற்றப்பட்டதும், மாணிக்கவாசகர் காலத்தில் சமணர்களும் பௌத்தர்களும் தோற்கடிக்கப்பட்டனர் என்று சொல்லப்படும் கதைகளும் இப்போக்கினைப் பற்றி ஓரளவு உணர்த்துகின்றன. ஆனல், புறச் சமயங்களின் மீது தொடுக்கப்பட்ட எதிர்ப்பு இயக்கம் சிறிது காலம்தான் வலிவு பெற்றிருந்தது. 8-9ஆம் நூற்றுண்டுகளில் பாண்டிய அரசர்களே சமணர்களையும் வெறுப்பின்றிப் போற்றத் தலைப்பட்டனர். அவர்களுக்குப் பள்ளிச் சந்தங்களை அளித்துப் போற்றினர். பாண்டிய அரசன் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் காலத்தில் சித்தன்னவாசல் சமணப்பள்ளி விரிவாகத் தோற்றுவிக்கப்பட்டது. இரண்டாம் வரகுணன் காலத்தில் அதிகாரியாய்ப் பணியாற்றிய இருப்பைக்குடிக் கிழவன் சமணப் பள்ளியைத் தோற்றுவித்தான். ஆக, மதப்பூசல்களும், காழ்ப்புணர்ச்சியும் சிறிதுகாலமே இருந்தன. மீண்டும் மதங்கள் ஒன்றையொன்று மதித்து அமைதியாக இயங்க ஆரம்பித்தன. முன்னரே கூறியது போல் பாண்டிய அரசர்கள் எல்லா மதத்தினரையும் சமமாக நடத்தினர். 'எத்தவச் சமயமு மினிதுடன் விளங்க' என்று மாறவர்மன் குலசேகரனின் மெய்க்கீர்த்தி குறிக்கின்றது. இந்து மதத்திற்குள்ளே சைவம், வைணவம் என்ற இரு பிரிவுகளையும் நடுநிலையுடன் போற்றினர். இரு மதத்தினரையும் மதித்து அவர்களது கோயில்களுக்குத் தானங்கள் வாரி வழங்கினர். பரந்த மனப்பான்மைக்கும் சகிப்புத்தன்மைக்கும் அரசர்களே சிறந்த எடுத்துகாட்டுகளாகத் திகழ்ந்ததனல் மக்களிடையேயும் அவ்வியல்புகள் குடிகொண்டிருந்ததில் வியப்பில்லை.

### க்ஷத்திரியர்

தென் இந்தியாவில் க்ஷத்திரியர் என்ற தனி வகுப்பினர் இருந்ததைப் பற்றிக் குறிப்புகள் அதிகம் காணப்படவில்லை. ஆனல், பாண்டிய அரசர்கள் க்ஷத்திரிய வகுப்புடன் தொடர்புபடுத்திக் கொண்டனர் என்று சொல்வதற்கான ஒரு சில குறிப்புகள் காணப்படுகின்றன. பாண்டிய அரசன் வீரநாராயணனின் நம்பிக்கைக்குரிய செயலாளனைப் பற்றிக் கூறும்போது க்ஷத்திரியக் கொள்கைகளையுணர்ந்து அதன்படி நடப்பவன் என்று தளவாய்ப்புரச் செப்பேடு கூறுகிறது. இதிலிருந்து க்ஷத்திரிய மரபுடன் அவர்கள் தொடர்புபடுத்திக் கொண்டிருக்கக்கூடும் என்று எண்ணத்தோன்றுகிறது. ஆனல், இதை அறுதியிட்டுக்கூறப் போதிய சான்றுகள் இல்லை.

**அந்தணர்கள்**

சங்ககாலம் தொட்டே அந்தணர்கள் சமூகத்தில் உயர்ந்த நிலையைப் பெற்றிருந்தனர். எளிய வாழ்க்கையை மேற்கொண்டு சமயத்துறையிலும் கல்வித்துறையிலும் பெரும்பாலும் ஈடுபட்டிருந்தனர். இதனால் மற்ற வகுப்பினரின் நன்மதிப்பையும் பெற்றிருந்தனர். அரசர்களும் வணிகர்களும் பிரபுக்களும் இவர்களை ஆதரித்துப் போற்றுவதில் காட்டிய ஆர்வத்தை நூற்றுக் கணக்கான கல்வெட்டுகளில் காண்கிறோம். பாண்டிய அரசர்கள் அந்தணர்களுக்காக நாட்டில் பல குடியிருப்புகளை ஏற்படுத்திக் கொடுத்தனர். அவை அக்கிரகாரம், சதுர்வேதிமங்கலம், பிரமதேயம் போன்ற பெயர்களுடன் வழங்கப்பட்டன. சேந்தன் மாறன் 'மறங்கெடுத் தறம்பெருக்கி அக்ரஹாரம் பலசெய்து' என்று அவனது வைகைக் கல்வெட்டில் குறித்துள்ளான். 'அந்தணர்க்கும் அசக்தர்க்கும் வந்தணைக என்றீத்தளித்த' என்று அவ்வரசனை வேள்விக்குடிச் செப்பேடும் புகழ்கிறது. பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி மறையோருக்கு ஈந்த கிராமத்தைக் களப்பிரர் கவர்ந்துவிடப் பாண்டியன் கடுங்கோன் ஆட்சிக் காலத்தில் மீண்டும் அவ்வூர் அந்தணர்களுக்கே பிரமதேயமாக அளிக்கப் பட்டதை வேள்விக்குடிச் செப்பேடு பகர்கிறது. அவ்வரசன் மற்றொரு கிராமத்தை ஸ்ரீவரமங்கலம் எனப்பெயரிட்டுப் பிரமதேயமாக வழங்கியதை ஸ்ரீவரமங்கலச் செப்பேடு குறிக்கின்றது. அதைப்பெற்ற அந்தணன் ஸுஜ்ஜதபட்டன் என்பவன் 'வித்யா தேவதையால் விரும்பப்பட்டவனும் யஞ்ஞவித்தையோடு எஞ்சாத சாஸ்திரங்களைக் கரைகண்டவன்' என்றும் புகழப்படுகிறான். பராந்தக வீரநாராயணன் திருமங்கலம், சோமாசிக் குறிச்சி என்னும் இரு ஊர்களை ஒன்றுசேர்த்து பிரமதேயமாகத் தானம் அளித்த விவரத்தைத் தளவாய்புரச் செப்பேடு குறிக்கின்றது. இதுபோன்று அடுத்தடுத்து வந்த பாண்டிய அரசர் ஒவ்வொருவரும் பிரமதேயக் கிராமங்களை உருவாக்குவதைப் பெருமையாகக் கருதினர். முதலாம் மாறவர்மன் குலசேகரன் காலத்தில் பல அக்கிரகாரங்களும் கோவில்களும் ஏற்படுத்தப்பட்டன. ஆய்க் குடியில் 128 பிராமணர்களைக் குடியேறச் செய்து அதற்கு 'அவனி வேந்த சதுர்வேதி மங்கலம்' எனப் பெயரிட்டனர்.[1] முதலாம் சுந்தர பாண்டியன் காலத்தில் (கி.பி. 1261) சில கிராமங்கள் இணைக்கப்பட்டுக் 'சுந்தரபாண்டிய சதுர்வேதிமங்கலம்' எனப் பெயரிடப்பட்டது. அதிலுள்ள 121 வேதம் ஓதும் பிராமணர்களுக்கு 200 வேலி நிலங்கள் சொந்தமாக்கப்பட்டன. அங்கு மருத்துவர், கணக்கர், தச்சர், கருமார், உவச்சர், நாவிதர்

[1] ARE 1955-56. II

போன்ரேரும் இருந்தனர்.[2] மேய்ச்சலுக்கும், சுடுகாட்டிற்கும் பொது இடங்கள் ஒதுக்கப்பட்டன. விக்கிரம பாண்டியன் காலத்தில் திருச்செந்தூர் வட்டத்திலுள்ள கட்டாரிமங்கலம் விக்கிரம பாண்டிய சதுர்வேதிமங்கலமெனப் பெயரிடப்பட்டு, 64 வேத சாஸ்திரம் படிக்கும் அந்தணர்களுக்குப் பிரமதேயமாக அளிக்கப் பட்டது. இதுபோலக் கோதண்டராம சதுர்வேதிமங்கலம், அவனிமுழுதுடையாள் சதுர்வேதிமங்கலம் என்ற பெயர்களெல்லாம் குறிப்பிடப்படுகின்றன.[3] பின்னுல் குறிப்பிட்ட இரண்டு மங்கலங்களும் பாண்டிய அரசிகள் வழங்கிய பிரமதேயங்களாகத் தோன்றுகின்றன.

பின்வரும் சில சதுர்வேதிமங்கலங்கள் கல்வெட்டுகளில் குறிப்பிடப்படுகின்றன.

| | |
|---|---|
| சேரமாதேவி | — நிகிரிலிச் சோழ சதுர்வேதி மங்கலம் |
| பாண்டவர் மங்கலம் (கோவில்பட்டி அருகில்) | — பஞ்சபாண்டவ சதுர்வேதி மங்கலம் |
| மன்னுர்கோவில் | — இராசராச சதுர்வேதி மங்கலம் |
| கருங்குளம் (தென்காசி அருகில்) | — தெலிங்ககுலகால சதுர்வேதி மங்கலம் |
| நற்செய்கை புத்தூர் | — மந்தரகௌரவ மங்கலம் (மூன்ரும் இராசசிம்மன் காலத்தில்) |
| ஆற்றூர்-சேந்தமங்கலம் (திருச்செந்தூர் வட்டம்) | — அவனிபசேகர சதுர்வேதி மங்கலம் |
| கட்டாரி மங்கலம் | — விக்கிரம பாண்டிய சதுர் வேதி மங்கலம் |

### அந்தணர்களது கல்விச்சிறப்பு

அந்தணர்களது வேதக் கல்வியும் வேள்வி இயற்றும் உரிமையும் மன்னர்களிடம் அவர்களுக்குச் செல்வாக்கைத் தேடித் தந்தன. சமயக்கருத்துகளைப் பரப்பவும், கோயில் வழிபாடுகளைப் பாதுகாக்கவும் மறையவர்கள் தேவைப்பட்டனர். மறையவர்கள் வாழூர்களில் வேதமுழக்கமும் விழாமுழக்கமும் ஒலித்தன. இதனை

[2] ARE 1958-59 • p. 18.
[3] 377 of 1935-36, K. V. Raman, Some aspects, p. 57-59.

'வேதவொலியும் விழாவொலியும் பிள்ளை குழாவிளை
யாட்டொலியும் அருத்திருப்பேரை'[4]

என்றும்,

'ஓதக்கடலொலி போல் எங்கும் எழுந்த
நல்வேதத் தொலி நின்று ஓங்கு
தென் திருப்பேரை'[5]

என்றும் நம்மாழ்வார் குறிப்பிடுகிறார்.

தானம் அளிக்கப்பட்ட அந்தணர் பன்னிருவரைப் பற்றித் தளவாய்ப்புரச் செப்பேடு 'வாய்மை உரைப்பவன், அந்தித் தொழுகைகள் இரண்டும் ஓம்புவான் (சந்தியாவந்தனம்), முத்தீ (காருகா பத்தியம், ஆகவனீயம், தாக்ஷிணுக்கியம்) வளர்ப்பவன்; நான்கு வேதங்களைக் காத்தவன்; ஐந்து வேள்விகளைச் செய்தவன்; ஆறு தொழில்களில் மேம்பட்டவன் (ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்) எனக் குறிப்பிடுகிறது.[6] சிவகாசிச் செப்பேடு அறுவகை வேத உறுப்புகளில்-அதாவது (1) சிட்சை, (2) கற்பம், (3) வியாகரணம், (4) சந்தசு, (5) நிருக்தம், (6) சோதிடம்-என்பனவற்றில் வல்லவரான அந்தணரைக் கௌரவித்து நிலங்கள் அளித்ததைப் பற்றிக் கூறுகிறது. இவற்றிலிருந்து வேதவித்தகர்களாகவும் சமயக்காவலராகவும் அந்தணர்கள் இருந்தனர் என்றும், அரசனாலும் மக்களாலும் போற்றப்பட்டனர் என்றும் குறிப்பிடலாம்.

7-8ஆம் நூற்றாண்டுகளில் அந்தணர்கள் பல அரசு பதவிகளையும் ஏற்றனர், படைத்தலைவர்களாகவும் படைவீரர்களாகவும் செயலாற்றினர். பல்லவநாட்டிலும் பாண்டிய நாட்டிலும் அமைச்சர்களில் பலர் அந்தண குலத்தைச் சேர்ந்தவர்கள் இருந்தனர். அவர்களுள் சிறந்த தலைவர்களுக்குப் 'பிரம்மரையன்' அல்லது 'பிரம்மாதிராஜன்' என்ற விருது கொடுக்கப்பட்டது. அரிகேசரி மாறவர்மனிடமும் அவனது மகனான நெடுஞ்சடையப் பராந்தகன் காலத்திலும் உத்தரமந்திரியாகப் பணியாற்றிய மாறன்காரி என்ற மதுரகவியைப்பற்றியும் அவனது தம்பியான மாறன் எயினனைப்பற்றியும் முன்னரே குறிப்பிட்டுள்ளோம். இருவரும் கரவந்தபுரத்தில் அந்தணகுலத்தில் தோன்றியவர்கள். மாறன்காரி என்பவன் பெரும்படையுடன் சாளுக்கியரை எதிர்த்துப் போரிட்டு வெற்றி பெற்றான் என்று வேள்விக்

[4] திருவாய்மொழி 7:3:1.
[5] திருவாய்மொழி 7:3:4.
[6] பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக். 135.

குடிச் சாசனம் கூறுகிறது. நெடுஞ்சடையப் பராந்தகனுக்குப் படைத்தலைவனாக இருந்த மகாசாமந்தன் சாத்தன் கணபதியும் ஓர் அந்தணன். அவனது சகோதரனான சாத்தஞ்சாத்தனும் படைத்தலைவன் மட்டுமன்றிச் சிறந்த தமிழ்க் கவிஞனுமாவான். இவனுக்கு 'ஏனாதி' 'வீரமங்கலப் பேரரையன்' என்ற பட்டங்களும் இருந்தன. இரண்டாம் வரகுணன் காலத்தில் மாணிக்கவாசகர் அமைச்சராகப் பணியாற்றினார். வரகுணனின் தம்பியான பராந்தக வீரநாராயணனிடம் இளையானக்கன் என்னும் புகழ்பெற்ற அந்தணன் பணியாற்றியதாகத் தளவாய் புரச் செப்பேடு குறிக்கின்றது. சோழன் தலைகொண்ட வீர பாண்டியனிடம் சோழாந்தகப் பிரம்மரையன் என்பவன் படைத் தலைவனாகப் பணியாற்றினான். முதலாம் குலசேகரனின் காலத்தில் நடந்த ஈழப்படையெடுப்புக்குத் தலைமை தாங்கியவன் ஆரியன் சக்கரவர்த்தி என்ற சிறந்த படைத்தலைவனாவான்.

## வேளாளர்

பெரும்பாலான மக்கள் கிராமங்களில் வாழ்ந்தார்கள். உழவு முக்கியத் தொழிலாக இருந்ததனால் பெரிதும் மதிக்கப்பட்டது. இக்கிராமங்கள், நிலக்கிழார்களும் உழவர்களும் நிறைந்த குடியிருப்புகளாய் அமைந்திருந்தன. வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டு உழுதும் உழுவித்தும் வாழ்ந்தவர் வேளாளர்களே. இவர்கள் கல்வெட்டுகளில் 'பூமிபுத்திரர்' என்றும் 'நாட்டு மக்கள்' என்றும் குறிக்கப்படுகின்றனர். விவசாயத் தொழிலில் பெரும் பங்கு கொண்டு வேளாளர்கள் செயலாற்றினர். வேளாளர்களிடத்தில் 'சித்திரமேழி நாட்டார்' என்னும் அமைப்பு இருந்தது. மேழியையே (ஏர்) தெய்வமாகக் கொண்டவர்கள். இவர்கள் 79 நாடுகளில் வாழ்ந்தனர் என்று திருக்கோவலூர்க் கல்வெட்டுக் கூறும். இவர்களில் சிலர் பசும்பையையே தெய்வமாகக் கொண்ட வேளாளர் வகுப்பினரும் இருந்தனர். இன்னும் சிலர் செங்கோலையே முதன்மையாகக் கொண்டனர். இவர்கள் அரசாங்க அதிகாரிகளாகப் பணியாற்றினர் போலும்.

இவர்கள் வேளாண்மையில் நீண்டகால அனுபவம் பெற்றவர்கள் மட்டுமன்றி ஆட்சியிலும் பெரும்பங்கு கொண்டிருந்தனர். இவ் வகுப்பினரில் சிலர் அமைச்சர்களாயும் அதிகாரிகளாகவும் பணியாற்றினர். பாண்டிய அரசன் சடையன் மாறன் கீழ், பராந்தகப் பள்ளிவேளான் நக்கன் புள்ளன் என்பவன் முக்கிய அதிகாரியாய் இருந்தான். இராசசிம்ம பாண்டியனுக்குப் பெருசு காகூர்கோன் வேளான் கணக்கனாக இருந்தான். 'மூவேந்த வேளார்' என்னும் பட்டம் பெற்ற உயர் அதிகாரிகள் அனைவரும்

வேளாளர் வகுப்பைச் சேர்ந்தவர்கள். வேளாளர் படைத்தலை வர்களாகவும் சேனுதிபதிகளாகவும் பணியாற்றினர். பெரும் புள்ளிக் கல்வெட்டில் வரும் பள்ளிவேளாண் குடும்பத்தினர் இம் மரபைச் சேர்ந்தவர்கள்; பாண்டிய அரசர்களுக்குப் பல தலை முறைகளாய்ப் போர்களில் படையைச் செலுத்தியவர்கள்.

ஒவ்வொரு கிராமத்திலும் நிலக்கிழார்கள் தவிர நிலமில்லாத குடியானவர்களும் இருந்தார்கள். இவர்கள் பிறர்க்கு உரிமை யான நிலங்களில் உழுது பயிரிட்டு விளைச்சலில் ஒரு பகுதியைக் கூலியாகப் பெற்ருர்கள். 'குடிமை' என்று வரும் சொல் விவசா யம் செய்த குடியானவர்களும் அல்லது பண்ணையாள்களும் செய்ய வேண்டிய கடமைகளைக் குறிக்கும். இக் குடியானவர்களில் சிலர் ஏறக்குறைய அடிமை நிலையில் இருந்தனர் போலும். அடிமை முறையைப்பற்றி நேரிடையான தகவல்கள் ஏதும் கிடைக்கவில்லை யாயினும் பெரியாழ்வார் பாசுரத்தின் அடிப்படையில் ஒருவாறு யூகிக்கலாம். பெரியாழ்வார் தம்மைக் கடவுளின் அடிமை யாகப் பாவித்து 'அடியேனைக் குடிமை செய்வதற்கு ஐயுற வேண்டா, கூறை சோறு இவை வேண்டுவதில்லை'[7] என்று குறிப் பிடுகிருர். இதிலிருந்து அக்காலத்தில் அடிமை முறையின் கருத் துகள் நிலவியிருக்கலாம் என்றும் அவ்வடிமைக்கு உணவும், உடை யும் கொடுப்பது அடிமையை உடையோரின் கடமை என்பதும் புலப்படுகிறது. உணவும் உடையும் பெற்றுக்கொண்டு ஊழியம் செய்யும் அடிமைப் பணியாள்கள் பலரும் இருந்தனர் என்பதாகக் குறிக்கலாம்.[8] நிலங்கள் தானமாக அளிக்கப்பட்டபோதோ, விற்கப்பட்டபோதோ, 'குடிமை மீயாட்சி' முன்னிட்டும், சில சமயங்களில் நீங்கலாகவும் செய்யப்பட்டதைச் செப்பேடுகள் உணர்த்தும்.

## ஆயர்கள்

ஆயர் என்னும் எளிய மக்களின் வாழ்க்கையைப் பற்றிய சில செய்திகள் கிடைக்கின்றன. இவர்கள் கோன், கோனர், மன்ருடி என்று அழைக்கப்பட்டனர். சிலப்பதிகாரத்திலுள்ள ஆய்ச்சியர் குரவைப் பகுதியில் இவர்களைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. ஆழ் வார் பாடல்களில் ஆங்காங்கு இவர்களைப் பற்றிய குறிப்புகள் சில காணப்படுகின்றன. இவ்வெளிய மக்கள் ஆடு மாடுகளை வைத்து வளர்த்தனர். இடைச்சிறுவர்கள் பசுக்களை மேய்க்க அதிகாலை யிலேயே செல்வர்; காட்டிலேயே உண்பர். இக் காட்சியினைக்

[7] பெரியாழ்வார் திருமொழி 5:1:4

[8] மேற்படி 1:10,

'கறவைகள் பின்சென்று கானம் சேர்ந்து உண்போம்' என்று குறித்துள்ளார் ஆண்டாள். ஆயர்கள் துவராடை உடுத்தியிருப்பதையும், பால் கறப்பதற்காகக் 'கடையா' என்ற மூங்கில் குழாயை வைத்திருப்பதையும், கையில் கோல் ஏந்தியிருப்பதையும், பசுக்கள் மணியோசை கேட்டுத் தம்மை நோக்கி ஓடி வருவதற்காகத் தங்கள் இடுப்பில் மணியைக் கட்டியிருப்பதையும் நம்மாழ்வார் குறிப்பிட்டுள்ளார்.[9]

இடையர் ஊர்ப்புறங்களுக்குச் சென்று தயிர், பால், வெண்ணெய், நெய் போன்ற பொருள்களை விற்று வாழ்க்கையை நடத்தினர். இதனைத் 'தாய்மார் மோர் விற்கப் போவர். தகப்பன்மார் கற்றுநிரைப் பின்பு போவார்' எனப் பெரியாழ்வார் குறிப்பர். கிராமத்திலுள்ள கோயில்களுக்குத் தானம் அளிக்கப்பட்ட ஆடுமாடுகளையும் இவர்களே பராமரித்து வந்தனர். ஒரு குறிப்பிட்டஅளவு தயிர், பால், நெய் இவற்றைத் தவறுமல் கோவிலுக்கு வழங்கவேண்டியது இவர்களுடைய கடமையாகும். இவர்கள் ஆநிரை மேய்த்த கண்ணபிரானையும் அவன் மூத்தோனை பலராமனையும் வழிபட்டு வந்தனர். இதனால் இவர்கள் விஷ்ணு கோவில்களை, அதுவும் கிருஷ்ணன் தெய்வ வணக்கத்தைக் கொண்டிருந்தனர். காலப்போக்கில் இவர்கள் சமுதாயத்தில் பல உரிமைகளைப் பெற்று வேறு பல துறைகளிலும் ஈடுபட்டனர். பொதியமலைப் பகுதியில் இவர்கள் அதிகமாக இருந்ததால் அதற்கு ஆய் நாடென்றே பெயர் வழங்கிற்று. ஆய்குலத்தவரே அப்பகுதிக்குத் தலைவர்களாகவும் மன்னராகவும் வெகுகாலம் ஆண்டு வந்தனர். ஆய்குல மன்னன் கருநந்தடக்கன் பார்த்திவ சேகரபுரம் என்ற ஊரை நிறுவி அதில் விஷ்ணுவுக்கு ஒரு கோயில் அமைத்ததை அவனது பார்த்திவ சேகரபுரச் சாசனம் கூறுகிறது. இவன் யாதவகுலத்தைச் சார்ந்தவன் என்றும், அக்குலத்தில் பிறந்த கிருஷ்ணன் போன்று இவனும் இக்குலத்தை விளங்கச் செய்தான் என்றும் இச் சாசனம் கூறுகிறது.[10]

ஆயர்கள் அதிகமாகத் தங்கிய குடியிருப்புகளுக்கு 'ஆய்ப்பாடி' 'ஆயர்பாடி', 'ஆய்க்குடி' என்ற பெயர்கள் வழங்கப்பட்டன. 'துவராபதி' என்ற பெயரும் சில ஊர்களுக்கு வழங்கப்பட்டது. துவராபதி என்பது கிருஷ்ணன் இருந்த ஊரான துவாரகையைக் குறிக்கும். இப்பெயருடைய ஊர்கள் பாண்டிய நாட்டில் பல இருக்கின்றன; பாண்டிய நாட்டு வடபகுதியிலுள்ள

[9] 'துவர் உடுக்கை கடையாவின் கழிகோல் கைசறையினர்'.
[10] பாண்டியர் செப்பேடுகள் பத்து, ப. அ, 8,

கோனாட்டுப்பகுதியிலும் இவர்கள் நல்ல அரசியல் செல்வாக்குடன் இருந்தனர் என்று தெரிகிறது.

### வணிகர் வகுப்பினர்

வணிகர்கள் வைசிய குலத்தவர் என்று குறிக்கப்படுகிறார்கள். பாண்டிய நாட்டில் இத்துறையில் சிறப்புடன் பணியாற்றியவர்கள் நகரத்தார் என்றும் செட்டியார் என்றும் குறிக்கப்படுகின்றனர். பொருளாதாரத் துறையில் இவர்களது பங்கைப் பற்றி முன் அதிகாரத்தில் சில செய்திகளைக் கண்டோம். இவ் வகுப்பினரைப் பற்றி இங்கு மேலும் நாம் ஆராய்வோம். இவர்கள் அனுபவமும் திறமையும் கொண்ட வணிகர்களாதலால் நாட்டிலுள்ள பல பகுதிகளுக்குப் பண்டங்களை அனுப்பவும், பல பொருள்களை இறக்குமதி செய்யவும் வேறுபகுதிகளின் தேவைக்கு ஏற்பப் பண்டங்களை அப்பகுதிகளுக்கு அனுப்பவும் இவர்களது சேவை தேவைப்பட்டது. இவர்களுக்கும் இவர்கள் மூலமாக நாட்டிற்கும் நல்ல வருவாய் கிடைத்தது. இவர்களில் அநேகர் செல்வந்தர்களாகவும் வசதி படைத்தவராகவும் இருந்தனர். சமூகப்பணிகளும் பல செய்து மக்களின் நன்மதிப்பைப் பெற்றிருந்தனர். பாண்டிய நாட்டில் ஒவ்வோர் ஊரிலும் அவர்கள் தங்கி வியாபாரம் நடத்தினர். சில ஊர்களில் அவர்கள் இருந்த வீதிகள் 'நானாதேசிப் பெருந்தெரு' அல்லது 'ஐநூற்றுவர் பெருந்தெரு' என்று வழங்கப்பட்டன.

இராமநாதபுர மாவட்டம் பிள்ளையார்பாடியிலுள்ள 13 ஆம் நூற்றாண்டு கல்வெட்டொன்று நகரத்தாரைப்பற்றிச் சில புதிய செய்திகளைத் தருகின்றது.[11] நகரத்தாரில் ராஜ நாராயண புரக் கிளைப் பிரிவினரைப்பற்றிக் குறிக்கின்றது. எறுக்கங் குடியிலுள்ள ஐநூற்றுப் பெரும் தெருவில் அவர்கள் குடியிருந்தனர். மருதங்குடியில் புதிய நிலங்களை வாங்கி அவற்றில் அவர்களது சமூகத்தினரைக் குடியேற்றினர். அக் குடியிருப்புக்கு ராஜ நாராயணபுரம் என்று பெயர் வைக்கப்பட்டது. நாட்டுக் கோட்டைச் செட்டியார் வகுப்பினர் பாண்டிய நாட்டில் முதலில் குடியேறியிருந்த ஒன்பது ஊர்களில் இதுவும் ஒன்று என்று சொல்லப்படுகிறது. இவர்களுக்கு 64 தாவளங்கள் இருந்த தாகவும் அதில் பிள்ளையார்ப்பட்டியும் ஒன்று என்று ஒரு கல் வெட்டு மூலம் அறிகின்றோம்.[12] 'திசையாயிரத்து ஐந்நூற்றுவர்' என்ற குழுவின் அங்கங்களாக இவை திகழ்ந்தன. இவர்கள் பல

[11] ARE 1935-36 p 23
[12] ARE 1960-61.

கோவில்களைப் பராமரித்து வந்தனர். கோவில் திருப்பணிகளிலும் திருவிழாக்கள் செய்வதிலும் மிக்க ஈடுபாடு கொண்டு திகழ்ந்தனர். அதற்காக அவர்களுக்குள் சில கட்டணங்களை வசூலித்தனர். கீரமங்கலத்திலுள்ள 'நானாதேசம்' என்ற திருக்குளத்தைச் செப்பனிடுவதற்குக் கட்டணம் வசூலித்த செய்தியைக் கி.பி. 13ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுக் கூறுகிறது.[13] உக்கிரன் கோட்டையிலுள்ள சொக்கநாயகி அம்மன் கோயிலில் (பழைய வடவாயில் அமர்ந்தாள் கோயில்) ஐந்நூற்றுவர் வணிகக்குழுவைச் சேர்ந்த இன்பன் தேவன் செட்டி என்பவர் திருச்சுற்றாலையைக் கட்டினதாக அங்குள்ள ஒன்பதாம் நூற்றாண்டுக் கல்வெட்டு அறிவிக்கின்றது. அதற்கு 'நகரத்தார் திருச்சுற்றாலை' என்றே பெயர் வழங்கிற்று.[14]

நகரத்தார்களின் மரபுகளைப்பற்றியும் உரிமைகளைப்பற்றியும் 1318ஆம் ஆண்டு பாண்டியக் கல்வெட்டு ஒன்று சில செய்திகளைத் தருகின்றது.[15] அதில் காவிரியின் இருகரையிலும் இருந்த பதினெண்பூமி வணிக நகரத்தார்களின் பிரசஸ்தி அல்லது மெய்க்கீர்த்தி கொடுக்கப்பட்டுள்ளது. அதில் அவர்களைப் பற்றிய புராணக் கதைகளும் தொடர்புகளும் தரப்பட்டுள்ளன. அவர்களது குலக்கொடி கருடத்துவஜம் என்றும், அவர்களது குலநதி, பாபாநதி என்றும், அவர்களது யானை, ஐயவர்மன் என்றும் கூறப்படுகின்றன. இப்பதினெண் பூமி வணிக நகரத்தார் சோழ நாட்டிலிருந்து பாண்டிய நாட்டிற்கு வந்து குடியேறினர் என்று தெரிகின்றது. கீரமங்கலத்தில் பதினெண் விஷயத்தார் இயங்கி வந்ததை ஒரு கல்வெட்டு அறிவிக்கின்றது.[16] ஒரு மரபுவழிச் செய்திப்படி, கலியாண்டு 3808-ல் பாண்டிய அரசன் சோழ நாட்டிலுள்ள பதினெண்பூமி விஷயத்தாரைத் தனது நாட்டில் வந்து குடியேறும்படியாகச் சோழ அரசன் மூலம் வேண்ட, அவர்களில் பலர் அவ்வாறே பாண்டிய நாட்டிற்கு வந்து வைகையாற்றின் வடகரையிலும், பிரான்மலைக்குக் கிழக்கிலும் வெள்ளாற்றுக்குத் தெற்கிலும் குடியேறினர்.[17] இக் கல்வெட்டுக் கணிப்புப்படி கி.பி. 8ஆம் நூற்றாண்டுத் (கி.பி. 707) தொடக்கத்திலேயே அவர்கள் பாண்டிய நாட்டில் குடியேறினர் என்று தோன்றும். 8-9ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளிலேயும் அவர்கள் குறிப்பிட்டுள்ளனர் என்பதை மேலே பார்த்தோம். இவர்கள் எல்லோரும்

[13] ARE 1935-36 p 81
[14] ARE 199 of 1935-36.
[15] ARE 1960-61 p.23.
[16] ARE 1935-36 p.81.
[17] Castes and Tribes of Southern India (Thurston)

ஒரே சமயத்தில் இங்குக் குடியேறியவர்களாகக் கொள்ளக் கூடாது. பாண்டிய நாட்டிற்கு வெகுகாலம் தொட்டே அடுத் தடுத்து அவர்கள் வந்திருக்கின்றனர்.

பிரான்மலையில் உள்ள ஒரு கல்வெட்டு, நகரத்தாரும் மற்ற வகுப்பினரும் உள்ளிட்ட சித்ரமேழி குழுவினரின் தன்மையைக் குறிக்கும் முக்கியக் கல்வெட்டாகும்.[18] இதில் கையொப்பமிட்ட வர்களில் சிலர் வேளார், செட்டி, கோனார், பிள்ளை முதலிய பிரிவினரும் உள்ளனர். இக் கல்வெட்டு 'திருபுவனச்ரய பஞ்சசத வீரசாஸனம்' என்று கூறப்படுகிறது. அதாவது மூவுலகமும் பரவியுள்ள ஐந்நூற்றுவர் வீரசாசனம் எனலாம். இவர்கள் ஸ்ரீவாசுதேவ சகாயகன் தேவி மூலபத்ரலோப ஸ்ரீஐம்பொழில் பரமேசுவரிக்கும் பூமிதேவிக்கும் மக்கள் என்று அழைக்கப்படு கின்றனர். இவர்கள் பதினெட்டுப் பட்டினத்திலும், முப்பத் திரண்டு வளர்புரத்தும், அறுபத்துநான்கு கடிகைத் தாவளத்தும் இருந்தனர் என்று கூறிக்கொள்கின்றனர். பதினெண்பட்டினம் என்பது கடற்கரைத் துறைமுகப் பட்டினங்களாக இருக்கக் கூடும். இவர்களைத் 'தாவளத்திலிருந்து தன்மம் வளர்க்கும் செட்டியும் செட்டி சுரப்புத்தனும், தவறென்றில்லாத தன்மை ஒழுக்கத்து கவறை தன்னேடு காச்யபன் விடுத்த சாமுண்டேசு வரையும் உருத்திரன் விடுத்த ஓலைவாரியனும்...' என்ற இவர் களது பல புராணக் கதைகளையும் இக் கல்வெட்டுக் குறிக்கின்றது. இவர்கள் பல நாடுகளில் பரவி வாணிகம் செய்தாலும் தாங்கள் ஒரே இனத்தவர் என்ற உணர்வுடன் செயல்பட்டனர். இவர்கள் வாழ்ந்த வீதிகளில் முத்தமிழ்ப் பாடலோடு வேள்வியும் விளங்கின. இவர்கள் 'அறம் வளர்க்க கலிமலிய பகைபணிய திசையனைத் துஞ் செவிடுபட செங்கோலே முன்னுகவும் செம்பொற்பசும்பையே தெய்வமாகவும் சமணதன்மம் இனிது நடாத்துபவர்கள்' எனக் குறிக்கப்பட்டனர். இவர்கள் அனைவரும் திசையாயிரத்து ஐந் நூற்றுவர் என்று குறிக்கப்படுகின்றனர். பல்வேறு ஊர்களில் தங்கியிருந்ததை ஊர்ப்பெயர்களைக் கொண்டே இவர்கள் அழைக் கப்பட்டனர் என்று இக் கல்வெட்டுக் குறிக்கின்றது. அவற்றில் நான்கு திசை சமஸ்தலோக பதினெண்விஷயத்தோர், திசை விளங்கு திசையாயிரத்து ஐந்நூற்றுவர், கேரளசிங்க வளநாட்டு குலசேகர பட்டினத்து நகரத்தார், துவராபதிநாட்டு நகரத்தார், கொடும்பாளூர் மணிக்கிராமத்தார், திருக்கோட்டியூர் மணியம் பலத்து நகரத்தார், ஐம்பொழில் வளநாட்டுச் சுந்தரபாண்டிய புரத்து நகரத்தார், களவழிநாட்டு அளகை மாநகரமான ஜயங்

18 இரா. நாகசாமி, 'யாவரும் கேளிர்' - பக். 188 - 195.

கொண்ட சோழப் பெருந்தெரு நகரத்தார் போன்றோர் கூடி இத்தானம் அளித்தனர் என்று இக் கல்வெட்டுக் குறிக்கின்றது. இவ் வணிகர்கள் வாணிகம் புரிந்த பொருள்களின் பட்டியலும் கொடுக்கப்பட்டுள்ளது. பல பகுதிகளிலும் தங்கியிருந்தவர்களும் அவ்வப்போது ஒன்றுகூடிப் பொதுப்பணிகளைச் செய்ய ஆர்வம் கொண்டு சமுதாய அமைப்பு ஏற்படுத்திக் கொண்டனர் போலும்.

## வலங்கை இடங்கை வகுப்பினர்

சமூகப் பிரிவுகளில் வலங்கை இடங்கை என்று அழைக்கப் பட்ட பிரிவினர் பாண்டியநாட்டில் ஓரளவு குறிப்பிடத்தக்கவ ராவார். கி. பி. பதினொன்றும் நூற்றாண்டிலிருந்து இவர்களைப் பற்றித் தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்து வரும் கல்வட்டுகளில் அதிகமான குறிப்புகள் காணப்படுகின்றன. பல சாதியினரும் தொழில் வகையினரும் இவ்விரு வகுப்புகளாக வகைப்படுத்தப் பட்டனர் என்று கருதப்படுகின்றது. பதினெட்டுவகைத் தொழில் செய்த ரதகாரரும் இப் பிரிவில் அடங்கியிருந்தனர். இவ்விரு வகுப்பினுள் ஒவ்வொரு வகுப்பும் 98 கிளைப்பிரிவுகளைக் கொண்ட தாகச் சொல்லப்படுகிறது.[19] ஒவ்வொரு வகுப்பினருக்கும் அடை யாளம் கண்டு கொள்ளச் சின்னங்களும் வாத்தியங்களும் வைத்துக் கொண்டனர்.

இவ் வகுப்புகள் எப்போது தோற்றமெடுத்தன என்பது பற்றிப் பல கருத்துகள் தெரிவிக்கப்பட்டுள்ளன. சோழர் ஆட்சியில் அரசவையில் மன்னனுக்கு இடப்புறம் அமர்ந்தோர் இடங்கையர் என்றும், வலப்பக்கம் அமர்ந்தோர் வலங்கையர் எனவும் அழைக்கப்பட்டதாக ஒரு சாரார் கருதுகின்றனர். மற்றொரு சாரார் படையில் இடக்கரத்தைப் பயன்படுத்தியோர் இடங்கையர் எனவும், வலக்கரத்தைப் பயன்படுத்தியோர் வலங்கையர் எனவும் அழைக்கப்பட்டதாகக் கருதுவர். இடங் கையர் காசிபமுனிவரது வேள்வியைக் காக்கத் தீக்குழியிலிருந்து படைக்கப்பட்டனர் என்பதாக வேறொரு மரபுவழிச் செய்தி கூறுகிறது. இக் கர்ணபரம்பரைச் செய்திகளைக் கொண்டு எவ்வித முடிவையும் மேற்கொள்ள முடியாது. பெரியகுளம் வட்டம் தென்கரையிலுள்ள சடையவர்மன் ஸ்ரீவல்லப பாண்டிய னது கல்வெட்டில் (கி.பி. 1120-1146) வலங்கை, இடங்கை என்னும் இருவகுப்பினர் பின்பற்றப்படவேண்டிய சில விதிமுறை

[19] T. V Mahalingam, Adm. and Social Life under the Vijayangar- p. 25-27.

களைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.[20] அவ்வூர்க் கோவிலில் ஸ்ரீகாரியம் செய்துவந்த இவ் வகுப்பினரில் அய்யப்பொழில் என்ற வணிகர்க்குழு அங்கத்தினரும் இருந்தனர். கல்வெட்டு சிதைந்துவிட்டதால் முழுவிவரங்கள் அறியமுடியவில்லை. சோழ நாட்டில் அவ்வப்போது இருபிரிவினரிடையே சண்டைகள் மூண்டு சோழ அரசர்களிடம் தீர்ப்புக்குச் சென்றன. விசயநகர காலத்தி லும் அதற்குப் பிறகும்கூட இவர்களது உரிமைச் சண்டைகள் ஓய வில்லை. இப்பூசல்களுக்கு அடிப்படைக்காரணம் அவ்விரு பிரிவின ரிடையே எழுந்த உரிமைப் போராட்டமேயாகும். அவர்களது புராண மரபுகளைப் பற்றியும் தங்களுக்குள் ஒற்றுமை காக்க வேண்டும் என்ற தீர்மானங்களும் கல்வெட்டுகளில் பொறிக்கப் பட்டுள்ளன.[21] விசயநகர காலத்தில் அவர்கள்மீது விதிக்கப் பட்ட சில வரிகளைக் குறைக்க வாதாடினர். சில சமயங்களில் வரி செலுத்த மறுத்தும் உள்ளனர். இவ் வகுப்பினர்களின் பூசல் களைப் பற்றிப் பாண்டிய நாட்டுக் கல்வெட்டுகளில் அதிகமாகச் சான்றுகள் கிடைக்கவில்லை. ஆனால், அவ்வகுப்பினர் இங்கும் இயங்கினர் என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. இடைக் காலத்தில் பல சாதிக் கிளைகள் பெருகி ஒவ்வொரு சாதியினரும் தங்களுக்குள் உரிமைகளுக்காகவும் பெருமைக்காகவும் போராடிய தைச் சில கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. பாஞ்சாலர் என்று சொல்லப்படும் கைவினைஞர்களிடையே பூசல்கள் தோன்றி யுள்ளன. கருமார், பொற்கொல்லர், செப்புப் பாத்திரவேலை செய்வோர், தச்சர், விஸ்வகர்மா வகுப்பினர் என்ற ஐந்து தொழில்களில் ஈடுபட்டவர்கள் தென் இந்தியாவில் பல பகுதி களிலும் 'பாஞ்சாலர்கள்' என்று வகைப்படுத்தப்பட்டனர்.[22] பாண்டிய நாட்டிலும் அவ்வாறே அழைக்கப்பட்டனர். ஒரு சமயம் இராமநாதபுர மாவட்டத்திலுள்ள ஆத்தூரில் அவ்வகுப் பினரிடையே மூண்ட சச்சரவு தீர்க்கப்பட்டதை 16ஆம் நூற் றாண்டுக் கல்வெட்டு ஒன்று கூறுகிறது.[23] திருநெல்வேலி மாவட்டம் கல்லிடைக்குறிச்சியில் பாஞ்சாலர்களுக்குள் சண்டை மூண்டு மதுரை நாயக்க அரசனாகிய வீரப்பநாயக்கனிடம் தீர்ப்புக்குச் சென்றது.[24] மைசூர்ப் பகுதிகளில் பாஞ்சாலர் களுக்குள் இம்மாதிரிச் சண்டைகள் நடந்தன. சில சமயங்களில் பாஞ்சாலர்களுக்கும் விவசாயக்குடி மக்களுக்கும் சண்டைகள்

[20] S. I. I. XIV

[21] Sastri, K. A. N. Cholas.

[22] Mahalingam, T. V., **Op. cit** p. 20

[23] 44 of 1916

[24] **ARE** 1917, para 55,

நடந்துள்ளன.[25] மேலே குறிப்பிட்ட வகுப்பினரைத் தவிர வேறு பல சமூகத்தினரும் இருந்தனர். பாண்டிய நாட்டின் நீண்ட கடலோரப் பகுதியில் பரதவர்கள் அல்லது மீனவர்கள் வாழ்ந்து வந்தனர். மீன்பிடித்தல், முத்துக்குளித்தல் போன்ற கடினமான தொழில்களை அவர்கள் செய்துவந்தனர். முத்துக்குளிப்பைப் பற்றிய மார்க்கபோலோ அளித்துள்ள சில விவரங்களைப்பற்றி முன் அதிகாரத்தில் சுட்டப்பட்டது.

## சமூகப் பழக்கவழக்கங்களைப் பற்றி மார்க்கபோலோவின் குறிப்புகள்

### அன்றாட வாழ்க்கை

சாதாரணமான மக்களுடைய வாழ்க்கை நிலையைப்பற்றி மார்க்கபோலோ கூறியுள்ள பல செய்திகள் சுவைமிக்கதாய் உள்ளன. அவர் நேரில் கண்டதையும் கேட்டதையும் சுவைபடக் கூறியுள்ளார். அவற்றில் சிலவற்றை நோக்குவோம்: 'இங்கு வாழும் மக்கள் உருவவழிபாடு செய்பவர்கள். மாட்டை மிகவும் உயர்ந்த விலங்கு என்று அவர்கள் கருதுகிறார்கள். அவர்கள் எந்தக் காரணத்தைக் கொண்டும் மாட்டிறைச்சியை உண்ண மாட்டார்கள். ஆனால் 'கோவி' என்னும் ஒரு வகுப்பினர் மட்டும் அதை உண்கிறார்கள். ஆனால், அவர்களும் மாட்டைக் கொல்வதில்லை. கொல்வதற்கு மற்றவர்கள் விடமாட்டார்கள். அது இறந்துபோன பிறகுதான் அதன் இறைச்சியை அவர்கள் உண்கிறார்கள்.'[26]

### வீடும் உடையும்

மக்கள் வாழும் வீடுகளைப்பற்றி அவர் பின்வருமாறு குறித்துள்ளார்: 'இந் நாட்டு மக்கள் தங்களுடைய வீடு முழுவதிலும் சாணத்தைப் பூசுகிறார்கள். மேலும் அவர்கள் எல்லோருமே பெரியவர், சிறியவர், அரசன், பிரபு ஆகிய அனைவருமே தரையில் தான் அமர்கிறார்கள். அவ்வாறு அமர்வதுதான் மிகவும் நல்லது என்று சொல்கிறார்கள். மக்கள் அனைவரும் நிலத்திலிருந்து தோன்றுகின்றனர்; நிலத்திற்கே திரும்புகின்றனர். ஆகவே, பூமியை இழிவாகக் கருதக்கூடாது என்று சொல்கிறார்கள்.[27] இதிலிருந்து மக்கள் எளிய வாழ்க்கை வாழ்ந்தாலும் உயர்ந்த கருத்துகளைக் கொண்டிருந்தனர் என்று நன்கு விளங்கும். அவர்

[25] Mahalingam, T. V. Op. cit. p. 20.

[26] நீலகண்ட சாஸ்திரி, தென்னிந்தியாவைப்பற்றி வெளிநாட்டவர் குறிப்புகள் ப. 274-75.

[27] மேற்படி ப. 275.

களுடைய ஆடையும் எளிய முறையில் இருந்ததை மார்க்க போலோ குறிப்பிட்டுள்ளார். 'மாபார் மாகாணம் முழுவதும் தேடினாலும் தையல்காரன் ஒருவரையும் காணஇயலாது.[28] அங்கேயுள்ள மக்கள், மரியாதைக்காக ஒரு சிறு துணியைக் கட்டிக்கொள்கிறார்கள் அவ்வளவுதான். ஆடவர், மகளிர், ஏழை, பணக்காரன் ஆகிய அனைவருமே அப்படித்தான். அரசனே இவ்வாறுதான் இருக்கிறான். ஆனால் அவன் விஷயத்தில் ஒரு சிறு வேறுபாடுதான்; இடையில் அவன் உடுத்திருக்கும் துணி நேர்த்தியானது. கழுத்தில் அவன் ஒரு மாலையைப் போட்டுக் கொண்டிருக்கிறான். அந்த மாலை முழுவதுமே மாணிக்கம், நீலம், மரகதம் முதலிய அருங்கற்களால் ஆனது...... முத்தைச் செறிவாய்ப் பதித்த தங்கக் கடகங்கள், காலில் கழல்கள் அணிந்திருக்கிறான். இவ்வாறு அணிந்துள்ள முத்தும் மணியும் செறிந்த தங்க நகைகளின் மதிப்பு ஒரு நகரத்தின் விலையைக் காட்டிலும் அதிகமாயிருக்கும்.'

## உடல் தூய்மை

அன்றாட வாழ்க்கையைப் பற்றிக் குறிக்கும்போது மக்கள் எவ்வாறு உடல் தூய்மையைக் காத்தனர் என்பதையும் குறித்துள்ளார்: 'இந்த நாட்டில் வாழும் ஆண், பெண் அனைவரும் தம்முடைய உடலை ஒவ்வொரு நாளும் இரண்டு முறை கழுவுகின்றனர். அவ்வாறு செய்யாதவர்களை இழிவாகக் கருதுகிறார்கள். உண்ணும்போது அவர்கள் தங்களுடைய வலக் கையைப் பயன்படுத்துகிறார்கள். எக்காரணத்தைக் கொண்டும் இடக்கையைப் பயன்படுத்துவதில்லை. சுத்தமான வேலைகளுக்கும் தகுதியுடைய செயல்களுக்கும் அவர்கள் தங்கள் வலக் கையைப் பயன்படுத்துகிறார்கள். அருவெறுப்பூட்டும் செயல் களுக்கு மட்டும் அவர்கள் இடக்கையை உபயோகிக்கிறார்கள். அதுபோல நீர்பருகப் பயன்படுத்தும் பாத்திரங்களை மற்றவர் பயன்படுத்த விடுவதில்லை. ஒவ்வொருவரும் தனித்தனி பாத்திரத்திலேயே நீர் பருகுகின்றனர். மேலும், அவர்கள் பாத்திரத்தில் உதட்டை வைத்துக் குடிப்பதில்லை. நீருள்ள குவளையை மேலே தூக்கிச் சாய்த்து அதிலிருந்து தாரையாய் விழுகின்ற நீரை வாயில் பிடித்துக்கொள்கிறார்கள். புதியவர் யாரேனும் வந்தால் அவர்களுக்குத் தங்கள் பாத்திரங்களைத் தரமாட்டார்கள். அப்படி வருகிறவர்களிடம் நீர் பருகும் பாத்திரம் இல்லாவிடில் அவர்கள் கையில் நீரை ஊற்றிக் குடிக்கச் சொல்வார்கள். அவர்களது கையே நம்முடைய கோப்பையைப்

[28] பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்த சோழக் கல்வெட்டொன்று தையல்காரர்கள் இருந்த செய்தியைக் குறிப்பிடுகின்றது. மேற்படி பக். 268.

போன்று பயன்படுகிறது.'[29] இரவில் பலர் தொங்கவிடப் பட்ட பிரம்புக் கட்டில்களில் தூங்குகிறார்கள் என்றும் மற்றும் பலர் வெளியே தெருவில் படுத்து உறங்குகின்றனர் என்றும் மார்க்கபோலோ குறிப்பிட்டுள்ளார்.[30] மேலும், 'குற்றவாளி களைத் தண்டிப்பதில் அவர்கள் மிகவும் கண்டிப்பாய் இருக்கி றார்கள். அதுபோல, மது அருந்துவதில்லை என்னும் விதியையும் கண்டிப்பாகவே கடைப்பிடிக்கிறார்கள். மதுபானஞ் செய்பவர் களையும் மாலுமிகளையும் அவர்கள் பிணையாட்களாக ஏற்றுக் கொள்வதில்லை...' என்று குறிப்பிடுகிறார்.

## பலி கொடுத்தல்

'குற்றத்திற்காக மரணதண்டனை விதிக்கப்பட்டவன் யாதேனும் ஒரு தெய்வத்திற்குத் தன்னைப் பலிகொடுக்க முன் வரலாம். அவ்வாறு செய்வதற்கு அதிகாரிகள் இசைவு தந்தனர். இசைவு பெற்றபின் 12 கத்திகளுடன் முறைப்படி ஊர்வலமாக அழைத்துச் செல்லப்படுவான்.' பிறகு அவன் தன்னைத்தானே பலியிட்டுக் கொள்வதை போலோ குறித்துள்ளார். 'இறந்தபின் அவனுடைய சுற்றத்தார்கள் அவன் உடலை எடுத்துக்கொண்டு போய் மகிழ்ச்சி கொண்டாட்டங்களுடன் கொளுத்துகிறார்கள்.'

## சோதிடமும் சகுனங்களும்

'சாமுத்திரிகா லட்சணம் என்னும் சாத்திரத்தில் வல்லுநர் பலர் இந்நாட்டில் இருக்கின்றனர். அவர்கள் ஒரு மனிதனுடைய உடலமைப்பைப் பார்த்து அவனுடைய குணத்தைக் கூறு கிறார்கள். வெளியே போகும்போது குறிப்பிட்ட விலங்கையோ பறவையையோ பார்க்க நேர்ந்தால் அதனால் நேரக்கூடிய விளைவுகள் என்ன என்று சொல்லும் ஆற்றல் இவர்களுக்கு இருக் கிறது'. உலகின் பல பகுதிகளையும் சுற்றிய மார்க்கபோலோ 'இத்தகைய சகுனங்களில் இவர்களுக்குள்ள நம்பிக்கை உலகில் வேறு எந்நாட்டினர்க்கும் இல்லை' என்கிறார். ஒவ்வொருவரும் ஜாதகம் குறித்து வைத்துக் கொள்ளுதல் எந்தக் காரியத்தைத் தொடங்கும்முன் சோதிடம் பார்த்தல் போன்ற இயல்புகளையும் கொண்டிருந்தனர் என்று மார்க்கபோலோ குறிக்கிறார்.

## பெண்டிர்

சமூகத்தில் பெண்கள் மதிப்புடன் போற்றப்பட்டனர். பொதுப் பணிகளிலும் அரசாங்கக் காரியங்களிலும் அவர்கள்

[29] மேற்படி ப. 277
[30] மேற்படி ப 282

அவ்வளவாக அதிகமாக ஈடுபடவில்லை எனலாம். இல்லற வாழ்க்கையில் கணவனுக்கு நல்ல துணைவியாக இருத்தலே பெண்களின் முக்கியப் பொறுப்பாகவும் நடைமுறை மரபாகவும் மேற்கொள்ளப்பட்டது. சமுதாயப் பொறுப்புகளைக் கணவனுடன் சேர்ந்து பகிர்ந்து கொள்வதும் முக்கியப் பணியாகக் கருதப்பட்டது.

பெண்கள் பல்வேறு தொழில்களைச் செய்தனர். ஏழை எளிய குடும்பத்துப் பெண் மக்கள் பொதுவாகக் கூலிவேலை செய்தனர். பாய்முடைதல், நெசவுத் தொழில் போன்ற தொழில்கள் செய்தனர். ஆயர்குலப் பெண்கள் தயிர், மோர், வெண்ணெய் இவற்றைத் தயாரித்து விற்றுப் பிழைத்தனர். உழவர்களின் மனைவியர் நாற்று நடுதல் போன்ற துணைச் செயல்களைச் செய்தனர். மீனவர் கொண்டு வரும் மீன்களை அவர்களது பெண்டிர் சந்தைக்கு எடுத்துச் சென்று விற்றுவந்தனர். பொதுவாக அவரவர்களின் குடும்பத் தொழிலில் பெண்கள் ஆண்களுக்கு உதவிபுரிந்தனர். மேல் மட்டத்துப் பெண்கள் பொதுப்பணிகளில் அதிகமாக ஈடுபடவில்லை. கோவில்களில் சிலர் தொண்டு புரிந்தனர். இசை, நடனம் போன்ற துறைகளில் பெண்கள் பெரும் பங்குகொண்டு விளங்கினர். சித்தன்னவாசல் ஓவியங்களிலும் கோவில் சிற்பங்களிலும் ஆடல் நங்கையரது உருவங்கள் சித்திரிக்கப்பட்டுள்ளதிலிருந்து நாம் அதை உணரலாம்.

பெண்கள் திருமணம் செய்துகொள்வது இன்றியமையாத சமூகக் கடமையாக கருதப்பட்டது. சமூகத்தின் வளர்ச்சிக்கு ஏற்ப, திருமண முறைகளும் சடங்குகளும் மாறுபட்டன. பின்தங்கிய வகுப்பினரிடையே திருமண முறைகள் எளிய முறையில் இருந்தன. ஆனால், முன்னேற்றம் அடைந்த வகுப்பினர் அதிகச் சடங்குகளுடன் மணம் செய்தனர். பெரியோர்கள் மணமகளை முறைப்படி மணம் பேசி மந்திரக்கோடி கொடுத்தலும், திருமணநாள் மங்கல நிமித்தங்களுக்கேற்பக் குறித்தலும், மணமகனை ஊர்வலம் அழைத்து வருதலும், பாளை, கமுகு முதலியவற்றால் மணப்பந்தலை அலங்கரிப்பதும், பார்ப்பனச் சிட்டர்கள் முன்னிலையில் காப்புநாண் கட்டுவதும், கதிரொளி தீபம் கலசமுடன் ஏந்திப் பெண்கள் மணமகனை எதிர்கொள்வதும், மணமகளைக் கைபிடித்துத் தீவலம் செய்தலும், அம்மி மிதித்தலும், ஊர்வலம் போதலும் போன்ற திருமணச் சடங்குகளைப் பற்றி ஆண்டாள் தம் பாசுரங்களில் விவரித்துள்ளார்.[31] மணமகள்

[31] நாச்சியார் திருமொழி.

வீட்டாரே திருமணச் செலவை ஏற்றனர். பெற்றோரின் விருப்பப்படியே திருமணங்கள் செய்விக்கப்பட்டன.[32] பெண்கள் நல்ல கணவனைப் பெறவேண்டும் என்பதற்காகக் காமன் நோன்பு நோற்றனர். தெருவினை வெண்மணல் கொண்டு அலங்கரித்துக் கோலம் இட்டுச் சுவரில் காமன் ஓவியத்தை எழுதி மலரிட்டு அமுது படைத்துத் தொழுதனர். ஆண்டாள் கண்டகனவு அக்காலப் பெண்ணின் மனநிலையைப் படம்பிடித்துக் காட்டுகிறது.[33]

பெண்கள் கல்வி கற்கத் தடையிருந்ததாகத் தெரியவில்லை. அவர்களில் பலர் சமயத்தொண்டும் இலக்கியத்தொண்டும் செய்துள்ளனர். மங்கையர்க்கரசி பாண்டிமாதேவி சைவத்திற்குச் செய்த தொண்டினை ஏற்கெனவே சுட்டியுள்ளோம். ஆண்டாளின் 'திருப்பாவையும்' 'நாச்சியார் திருமொழிப்' பாடல்களும் தித்திக்கும் தீந்தமிழ்ச் சுவை சொட்டுபவை. ஆனால் பெண் மக்களிடையே கல்வி பரவலாக இருந்தது என்று சொல்ல முடியாது.

பெண்கள் பெற்றிருந்த உரிமைகளைப்பற்றி விரிவாக அறிய இயலவில்லை. பெண்கள் பலர் கோவில்களுக்கு நிலதானங்களை வழங்கியுள்ளனர். விலையுயர்ந்த நகைகளையும் சில பெண்கள் கடவுளர்க்கு வழங்கியுள்ளனர். இதனால் பெண்களுக்குச் சொத்துரிமை இருந்தது என்பது தெரிகின்றது. ஆயினும் தந்தையின் சொத்து பெண் மக்களுக்கும் சேர வாய்ப்பிருந்ததாக நாம் உறுதியாகச் சொல்ல முடியாது. பெண்களுக்குத் திருமணத்தின்போது பொருள் (ஸ்ரீதனம்) அல்லது நிலம் வழங்கும் முறை இருந்ததாக மட்டும் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

### உடன்கட்டை ஏறல்

கணவனையே தெய்வமாகப் போற்றும் மரபு தொன்றுதொட்டு இந்நாட்டில் இருந்துவந்துள்ளது. கணவனை இழந்த மகளிர் வாழ்க்கை துன்பகரமானதாகக் கருதப்பட்டது. இதனால் கணவன் இறந்தபின் உயிர் வாழக் கருதாமல் கணவனுடனே தீப்பாயும் வழக்கம் அக்காலச் சமூகத்தில் நிலவியுள்ளது. பிரிவாற்றாமையாலும் அவ்வாறு செய்தல் பெரும் புண்ணியம் என்று கருதியும் சிலர் உடன்கட்டை ஏறி உயிர்துறந்தனர். சங்க காலத்தில் பெருங்கோப்பெண்டு என்னும் பாண்டிய அரசி உடன்கட்டை

[32] தந்தையும் தாயும் உற்றாரும் நிற்கத் தன்வழி பேசியினுள் என்னும் சொல் வந்தபின் பழிகாப்பரிது (பெரியாழ்வார் திருமொழி)

[33] ஆ. பாண்டுரங்கன் "ஆழ்வார்கள் காலச் சமுதாயம்" ஆராய்ச்சி 14 பக். 166-168.

ஏறிய செய்தி புறநானூற்றில் கூறப்பட்டுள்ளது. அதற்குப் பிறகு பாண்டிய நாட்டில் உடன்கட்டை ஏறிய நிகழ்ச்சிபற்றி அதிகமாகக் கூறமுடியாது. பாண்டியன் நெடுஞ்செழியனின் மனைவி கணவன் உயிர்துறந்த மறுகணமே தன்னுடைய உயிரை யும் மாய்த்துக் கொண்ட செய்தியை இளங்கோ அடிகள் குறிக் கிறார். சோழநாட்டில் இரண்டாம் பராந்தக சுந்தரசோழனின் மனைவி வானவன் மாதேவியும் உடன்கட்டை ஏறினாள். சாதா ரண மக்களும் இவ் வழக்கத்தைக் கைக்கொண்டுள்ளனர். ஒரு வன் உடன்கட்டை ஏறிய தனது மகளின் சந்ததிக்காகக் கோவி லுக்குச் சில தானங்கள் அளித்த செய்தியை திருநெல்வேலி மாவட் டத்திலுள்ள ஒரு கல்வெட்டு அறிவிக்கின்றது.[34] மார்க்கபோலோ இவ்வழக்கத்தைப் பற்றிப் பின்வருமாறு குறித்துள்ளார். 'பெண் களுள் பலர் தம் கணவன்மார் இறந்தபின் அவர்களுடைய உடலைச் சிதையில் வைத்து எரிக்கும்போது அந்தத் தீயில் தாமும் விழுந்து எரிந்து போகின்றனர். அவ்வாறு செய்கின்ற பெண் களைச் சமுதாயம் மிகவும் போற்றுகிறது'.

16ஆம் நூற்றாண்டில் தென் இந்தியாவிற்கு வந்த பார் போசா, நூனி, சீசர் பிரடரிக், பரடாஸ் போன்ற ஆசிரியர்களும் அங்கு அவர்கள் கண்ட 'சதி' முறையைப் பற்றி விவரமான செய்தி களைத் தந்துள்ளனர். அவர்கள் காலத்திலும் தென் இந்தியாவில் இக் கொடிய பழக்கம் பரவலாக இருந்திருக்கிறது என்பது விளங்கு கிறது. ஆனால், மற்றைய பகுதிகளைப் போல தமிழகத்தில் இப் பழக்கம் அதிகமாக வழக்கில் இருந்ததாகக் கருதுவதற்குச் சான் றுகள் இல்லை. தாமாக விரும்பி மேற்கொண்டவர்களிடம் மட் டும் இப் பழக்கம் இங்குச் சிறிய அளவில் இருந்திருக்கவேண்டு மெனக் கருதலாம்.

### தேவரடியார்

பாண்டியர் சமூகத்தில் தேவரடியார் என்னும் வகுப்பினர் பலர் கோவில்களில் பணியாற்றி வந்தனர். இவர்களில் பலர் நடனத்திலும் இசையிலும் வல்லவர்களாக இருந்தனர். இறை வனுக்கு (தேவர்க்கு) அடிமை பூண்டொழுகியதால் தேவரடியார் என்று பெயர் பெற்றனர். இவர்களில் பலர் நல்ல வசதி படைத்த குடும்பத்தினராயிருந்தும் இறைவன்பால் உள்ள அன்பால், சமயத்தொண்டிற்குத் தங்களது வாழ்க்கையை அர்ப் பணித்துக் கொண்டவர்கள். இவர்கள் சமுதாயத்தில் மதிப்பான இடத்தைப் பெற்றிருந்தனர் என்பது அவர்களுக்கு மக்களும்

[34] ARE 363 of 1959-60.

மன்னரும் அளித்த பல தானங்களைப் பார்த்தாலே விளங்கும். சிலர் கோவில்களுக்கு அடிமைகளாக விற்கப்பட்டனர். இன்னும் சிலர் மணமானவர்களாக இருந்தனர். இவர்கள் கோவில் களுக்குத் தொண்டு செய்வதைத் தவிரப் பரதம், இசை போன்ற கலைகளில் நல்ல தேர்ச்சி பெற்று அவற்றின் மரபு மாறுமல் பேணிக்காத்தனர். இவர்களுக்காகக் கோயிலார் தானங்கள் வழங்கியுள்ளனர். இரண்டாம் வரகுணனின் இரண்டாம் ஆட்சி யாண்டில் (கி.பி. 864) திருநெல்வேலியிலுள்ள பிரம்மபுரிக் கோயில் தேவரடியாரான சாத்தன்தேயம் என்பவளுக்காக ஒரு நந்தா விளக்கு ஏற்பட்டதை ஒரு கல்வெட்டுத் தெரிவிக்கிறது.[35] 11ஆம் நூற்ருண்டில் மன்னர்கோவிலிலுள்ள கோபாலஸ்வாமி கோயிலில் பணிபுரிந்த 'தேவரடியார்கள் பெண்டுகளுக்கு' நிலங்களும் வீடுகளும் அவ்வூர்ச் சபையோர் வழங்கியதை அறிவிக் கின்றது.[36] தேவரடியாராக ஆண்களும் பணிபுரிந்தனர். அவர் களிலும் சிலர் தாமாகவே அடிமை பூண்டவர்கள். சிலர் சில செல்வந்தர்களால் கோவிலுக்குத் தானமாக அளிக்கப்பட்டவர் களும் விலைக்கு விற்கப்பட்டவர்களும் இருந்தனர். திருநெல்வேலி மாவட்டம் நாங்குநேரி அருகிலுள்ள கருங்குளம் கோயிலுக்குப் பறை கொட்டும் ஓர் உவச்ச அடிமையை அரசியல் அதிகாரி ஒருவன் கி. பி. 1105-ல் தானமாகத் தந்த செய்தி அவ்வூர்க் கல்வெட்டில் காணப்படுகிறது.[37]

சில மடங்களுக்குப் பொட்டுக் கட்டிவிடப்பட்ட பெண் அடியாரைப்பற்றி மார்க்கபோலோ சில சுவையான செய்திகளைக் குறித்துள்ளார். 'இந்த நாட்டில் இருக்கும் (மடம்) கோயில்கள் சிலவற்றுக்கு இளம் பெண்களைப் பொட்டுக் கட்டிவிடும் வழக்கம் இருக்கிறது. அந்தப் பெற்ருேர்களுக்கு எந்தத் தெய்வத்தின்மீது மிகுந்த பக்தி இருக்கிறதோ அந்தத் தெய்வத்திற்குத் தங்களுடைய பெண்களை ஒப்படைத்துவிடுகிருர்கள். மடத்தில் வாழும் துறவி கள் தங்கள் தெய்வங்களுக்கு விருந்து வைத்து விழா எடுக்க விரும் பிஞல் அவர்கள் அந்தப் பெண்களை வரவழைத்து மகிழ்ச்சியாக ஆடவும் பாடவும் செய்கிருர்கள். மேலும் தெய்வங்களுக்கு ஊட்டுவதற்காகப் பலவகை உணவுப் பண்டங்களையும் கொண்டு வருகிருர்கள். தெய்வச் சிலைகளின் முன்னிலையில் வைத்துவிட்டு ஆடவும் பாடவும் செய்கின்றனர். ஒரு பெரிய பிரபு விருந்துண்ணு

[35] S. I. I. XIV No. 18.

[36] மேற்படி எ்ண். 132.

[37] 230 - 1927-28; இம்மாதிரிக் கோயில்களுக்கு விற்கப்பட்ட அடிமை களைப்பற்றிச் சோழர் கல்வெட்டுகளில் நிறைய குறிப்புகள் காணப்படு கின்றன.

வதற்கு எவ்வளவு நேரம் பிடிக்குமோ அவ்வளவு நேரம் அந்த உணவு அங்கேயே இருக்கிறது. பின்னர் அவர்கள் அந்த உணவை எடுத்து மிகவும் மகிழ்ச்சியுடன் உண்கிறார்கள். இத்தகைய நிகழ்ச்சிகள் ஒவ்வோராண்டிலும் பலமுறை நிகழ்கின்றன. அந்தப் பெண்கள், திருமணமாகும் வரையிலும் அத்தகைய நிகழ்ச்சிகளில் கலந்து கொள்கிறார்கள்.'[38] இந் நிகழ்ச்சி சாதாரண இந்துக் கோவில்களில் நடந்த நிகழ்ச்சியாகக் கருதமுடியாது. காளமுகர் போன்ற சில குறிப்பிட்ட சமய வகுப்பினர்களின் மடங்களில் நடந்த நிகழ்ச்சியாகவே இது தோன்றுகிறது.

## இசையும் நடனமும்

தேவரடியார்களில் பலர் நடனக் கலைகளில் நல்ல தேர்ச்சி பெற்றவர்களாக இருந்தனர் என்பதை முன்னர்க் குறிப்பிட்டோம். இசையைப் பற்றிச் சங்க இலக்கியங்களிலும், பிற்காலத் தேவார திவ்வியப் பிரபந்தப் பாடல்களிலும் நிறையக் குறிப்புகள் காணப்படுகின்றன. கோவில்களில் இப் பாடல்கள் இசையாகவும் பாடப்பட்டன. மதுரகவி ஆழ்வார், நம்மாழ்வார் பாடல்களை இசையுடன் பாடினதாக வைணவ மரபு கூறும். 'நின்னிசை பாடித்திரிவனே' என்று அவர் தமது பாடலிலும் குறிக்கின்றார். 'பல்லாண்டிசைப்பாரே', என்று ஆண்டாளும் குறிப்பிடுகின்றார். 'மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத' என்ற ஆண்டாளின் பாடலில் திருமணக் காலங்களில் இசைக் கருவிகள் முழங்கியதை நாம் அறிகிறோம். கண்ணனின் குழலோசையில் பசுக்களும், மான்களும், வண்டினங்களும் எப்படிக் கட்டுண்டன என்பதைப் பற்றிப் பெரியாழ்வார் பல பாடல்கள் பாடியுள்ளார். மான்கள் 'மேய்கை மறந்து மேய்ந்த புல்லும் கடைவழிவாய்சோர எழுதிய சித்திரங்கள் போல நின்றனவே' என்கிறார். தேவார திவ்வியப் பிரபந்தப் பாடல்களில் அக்காலப் பண்கள் அல்லது ராகங்களின் வகையைப் பற்றியும் குறிப்புகள் காணப்படுகின்றன. பாண்டிய அரசர்கள் இசையை நன்கு போற்றினர். 'எழுவகைப் பாடலு மியலுடன் பரப்புவது' அவர்களுடைய குறிக்கோளாக இருந்ததை அவர்களது மெய்க்கீர்த்தி குறிப்பிடுகிறது. பாண்டிய அரசன் நெடுஞ்சடையப் பராந்தகனுக்குக் 'கீதகின்னரன்' என்ற விருது இருந்தது சங்கீதத்தில் அவனுக்கு இருந்த ஈடுபாட்டினைக் காட்டுகின்றது. முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் மதுரை மீனாட்சி அம்மன் கோவிலில் பணியாற்றிய ஓர் இசைக் கலைஞருக்குச் சீவிதமாக நிலங்கள் கொடுக்கப்பட்ட செய்தியை அங்குள்ள ஒரு கல்வெட்டுக் குறிக்கின்றது. அவருக்குப்

[38] நீலகண்ட சாஸ்திரி 'வெளிநாட்டினர் குறிப்புகள்' பக். 281.

''பாண்டிய வாத்யமாராயர்'' என்ற பட்டமும் இருந்தது. மற்றொரு சமயம் அக்கோவிலில் பணியாற்றிய பதினொரு இசைக் கலைஞர்களுக்குத் தானங்கள் அளிக்கப்பட்டன. அவர்கள் வீர மத்தளம், மத்தளம், திமிலை, சேமக்கலம், திருச்சின்னம் போன்ற இசைக்கருவிகளைக் கோவிலில் வாசித்தார்கள்.[39] அக்கால இசைக்கருவிகளைக் காட்டும் சிற்பங்களும் மதுரை மீனாட்சியம்மன் கோவில், கழுகுமலை வெட்டுவான் கோயில், திருமெய்யம் போன்ற கோவில்களில் உள்ளன. அரசர்களும் கோவில்களும் எப்படி இசைக்கலையை வளர்த்தன என்பதனை இவற்றிலிருந்து அறியலாம். இவ்வகைக் கலை பெரும்பாலும் கடவுளுக்கே அர்ப்பணிக்கப்பட்டதாகத் தெரிகிறது.

நடனக்கலை நன்கு வளர்க்கப்பட்டது. அக்காலத்து நடனக் கலை நுட்பங்களை நாம் அறியும் வகையில் சித்தன்னவாசல் ஓவியங்களும் மற்றப் பாண்டியச் சிற்பங்களும் திகழ்கின்றன. பல அழகிய ஆடை அணிகலன்களுடன் ஆடும் நாட்டியக் கணிகையர் நடனமாடும் எழில் சித்திரங்கள் சித்தன்னவாசலில் உள்ளன. அவற்றுள் ஒரு பெண் இடக் கையைக் கஜஹஸ்தம் (யானையின் தும்பிக்கையைப் போன்று) மார்பின் குறுக்கே தவழவிட்டுச் சுழன்று ஆடுகிறாள். மற்றொருத்தி தனது இடக்கையை 'லதா விரிச்சிகம்' (கொடி போல) என்னும் பாணியில் நீட்டி நடனம் ஆடுகிறாள். இந்நடன மாதர்களின் முழு உருவமும் சித்திரிக்கப் படாமல் இடையளவுதான் சித்திரிக்கப்பட்டுள்ளது.[40] இது போன்று திருப்பரங்குன்றத்தில் நடராசப் பெருமானின் சதுர தாண்டவத் திருக்கோலம் அழகிய சிற்பமாகத் தீட்டப்பட்டுள்ளது. அவருடன் பல சிவகணங்களும் கந்தர்வ புருஷர்களும் நடனம் புரிகின்றனர். அக்கால நடனக்கலைக்கு இவை சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.

நாடகக்கலை பற்றியும் சில செய்திகள் நமக்குக் கிடைக்கின்றன. இலக்கியங்களில் ஆங்காங்கே பல கூத்து வகைகளைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. ஆயர்பாடியில் ஆயர்கள் கூடி ஆடிப்பாடுவதைப் பற்றிப் பெரியாழ்வாரின் பாடல்களிலிருந்து அறிகிறோம். ஆழ்வார் பாடல்களில் சில கூத்து வகைகளைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. 'குடக்கூத்து' என்பது ஒருவகை. தலைமீது பானைகளை ஒன்றன்மேல் ஒன்று வைத்துக் கொண்டு ஆடுவர். இதிலுள்ள மற்றொருவகை 'குடத்தாடல்' என்பது. இது மிகவும் கடினமான கூத்தாகும். இதைக் குறிப்

[39] ARE 1939-40-p. 249.
[40] C. Minakshi, Adm. and Social Life under the Pallavas.

பாக ஆயர்கள் ஆடினர். இதில் குடங்களைத் தலைமீதும் தோள் மீதும் வைத்துக்கொண்டு ஒன்றன்பின் ஒன்றாய் மேலே போட்டுப் பிடிப்பது. இதைப் பெரியாழ்வார் 'குடங்களெடுத் தேறவிட்டுக் கூத்தாடவல்ல எங்கோவே' என்று குறிப்பிடுகிறார். ஆண்டாளும் கண்ணனைக் 'குடமாடு கூத்தன் கோவிந்தன்' என்று பாடுகிறாள். 'மரக்கால் கூத்து' அல்லது 'கழாய்க் கூத்து' என்ற வகையில் இரு உயரமான மூங்கில் கழிகள்மீது நின்று கூத்தாடுவர். ஸ்ரீவில்லி புத்தூர் ஆண்டாள் கோயிலில் இவ்வகையைச் சித்திரிக்கும் சிற்பம் உள்ளது.[41] இதுபோலத் துடி, பாவை போன்ற நடனவகை களைப்பற்றியும் இலக்கியக் குறிப்புகள் உள்ளன.

பாண்டியநாட்டுக் கோவில்களில் நடனமும் நாடகமும் போற்றப்பட்டதற்குப் பல கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. திருநெல்வேலி அருகிலுள்ள ஆத்தூரிலுள்ள கோயிலில் ஆவணித் திருநாளன்று நாடகங்கள் நடைபெற்றன. நாடக அரங்கிற்கு 'அழகிய பாண்டியன் கூடம்' என்று பெயர். அங்கு நடைபெற்ற நாடகங்கள் 'திருநாடகம்' என்று குறிக்கப்படுவதால் அவை இறைவனைப்பற்றிய புராண நாடகங்களாக இருந்திருத்தல் வேண்டுமெனப் புலப்படும். அவற்றில் பங்குகொண்டவர் களுக்கு அளிக்கப்பட்ட நிலங்கள் 'கூத்துக்காணி' என்று வழங்கப் பட்டன.[42] மதுரை அரண்மனையிலும் ஒரு 'நாடகசாலை' இருந்தது.[43] ஆத்தூர்க் கோவிலில் 'சாந்திக்கூத்து' ஆடியவனின் பெயர் சாந்திக்கூத்தன் என்று குறிக்கப்படுகின்றது. கூத்தாடிய நங்கையின் பெயர் திருமேனி பிரியாதாள். சாந்திக்கூத்து, விநோதக்கூத்து என்ற இருவகைக் கூத்துகள் அக்காலத்தில் இருந் தன. சாந்திக்கூத்தில் நான்குவிதக் கூத்துகள் இருந்தன. அவை சொக்கம் (சுத்த நடனம்), மெய்க்கூத்து (உணர்ச்சிகளை காட்டும் சுகமார்க்க நடனம்), அவினயம் (சைகைகளின் மூலம் செய்யும் நடனம்), நாடகம் (கதையைத் தழுவி வரும் கூத்து). இவை அகக் கூத்துவகையைச் சாரும். பெரும்பாலும் இது கோவில்களில் இறைவன் முன்னே ஆடப்பட்டது. விநோதக்கூத்து என்பது பாமரமக்களும் கண்டுகளிக்கும் வகையில் அமைந்த கூத்து வகை யாகும். திருச்செந்தூர்க் கோவிலில் மகாபூசையின் போதும் அந்திக்காப்பு வேளையிலும் தேவரடியார் நடனம் ஆடக்கட்டளை ஏற்படுத்தப்பட்டதைக் கி.பி. 1425ஆம் ஆண்டுக் கல்வெட் டொன்று குறிக்கின்றது.[44] ஆடல் மகளிர் சமுதாயத்தில் மதிப்

[41] 444, 445 of 1929-30.
[42] 444, 445 of 1929-30.
[43] S.I.I. XIV - No. 254.
[44] 365 of 1949-50.

புடன் வாழ்ந்தனர். அவர்களில் சிறந்தவர்களுக்கு நிலமானியமும் பட்டங்களும் அளிக்கப்பட்டன. 'தலைக்கோல்' என்னும் பட்டம் அரசர்களால் இவர்களுக்கு அளிக்கப்பட்டது. சிறந்த நடன மகளிர் அரண்மனைப் பரிவாரத்திலும் சேர்க்கப்பட்டனர்.

## மொழியும் கல்வியும்

**தமிழ் :** சங்ககாலப் பாண்டிய அரசர்கள் எவ்வாறு தமிழ்ப் புலவர்களைச் சிறப்பாக ஆதரித்தனர் என்று முன்னரே கண்டோம். தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் அரசவையில் மாங்குடி மருதனார் தலைமையில் சிறந்த புலவர் குழு இருந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. பன்னாடு தந்த பாண்டியன் மாறன், கடலுண்மாய்ந்த இளம்பெருவழுதி ஆகிய பாண்டிய மன்னர்களே பெரும் புலவர்களாகத் திகழ்ந்தனர். அவர்கள் இயற்றிய பெரும் பாடல்கள் புறநானூறு, நற்றிணை போன்ற இலக்கியங்களில் உள்ளன. பிற்காலப் பாண்டியர்களும் தமிழ் மொழியைச் சிறப்பாகப் போற்றினர். அகத்தியனுடன் தமிழ் ஆராய்ந்தது, மதுரையில் சங்கம் வைத்தது போன்ற செயல்களை அவர்களது செப்பேடுகள் பெருமையாகக் குறிக்கின்றன. பாண்டிய மன்னர் 'தென்மதுராபுரஞ்செய்தும் அங்கதனில் அருந்தமிழ் நற்சங்கம் இரீஇத் தமிழ் வளர்த்தும்' என்று தளவாய்புரச் செப்பேடு குறிக்கின்றது. அச் செப்பேட்டை வழங்கிய மன்னன் பராந்தக வீரநாராயணன் 'செந்தமிழ்க் கோன்' என்று அழைக்கப்படுகிறான். 'உளமிக்க மதியதனாலொண்டமிழும் வடமொழியும் பழுதறத்தா னராய்ந்து' என்றும், 'தென் தமிழின் கரைகண்டும்' என்றும் சின்னமனூர்ப் பெரிய சாசனம் குறிக்கின்றது. மதுரையைத் தமிழ்க்கூடல் என்று சிவகாசிச் செப்பேடு அழைப்பது மதுரைக்குத் (கூடல்) தமிழ் மொழியோடுள்ள சிறந்த தொடர்பை விளக்குவதாக அமையும். ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் என்னும் பாண்டிய மன்னன் மதுரையிலுள்ள சங்கப்பலகையில் வீற்றிருந்த புலவர் ஒருவர் வழியில் தோன்றிய எட்டிச் சாத்தன் என்பவனுக்கு இருப்பைக்குடி கிழவன் என்ற பட்டம் வழங்கிச் சிறப்பித்தான்,[45] என்று அவனது கல்வெட்டு குறிக்கின்றது. இதனால் 9ஆம் நூற்றாண்டில் கூடச் சங்க காலப் புலவர்களின் வழித்தோன்றல்கள் மக்கள் மனத்தில் நிலைத்திருந்தனர் என்பது விளங்கும்.

பாண்டிய நாட்டில் தமிழ் வளர்ந்த வரலாற்றை நோக்கும் போது நம்மாழ்வார், மதுரகவி, பெரியாழ்வார், ஆண்டாள், மாணிக்கவாசகர் போன்ற பாண்டியநாட்டுச் சான்றோரை மறந்துவிடமுடியாது. அவர்களது சமயப்பணியைப் போன்று

[45] ARE 334 of 1929-30.

அவர்களது இலக்கியப்பணியும் தமிழ்மொழியை வளம்பெறச் செய்தது. எளிய இனிய தமிழில் பாடப்பட்ட தீந்தமிழ்ப் பாடல்கள் தமிழ் மக்கள் மனத்தில் நன்கு வேரூன்றி இன்றும் நிலைத்து நிற்கின்றன; கோவில்களில் அன்றாடம் பாடப்பட்டும் வந்துள்ளன. அவற்றைப் பாடுவதற்கு அரசர்களும் பொது மக்களும் நில தானங்கள் அளித்துள்ளனர் என்பது 'சமயம்' என்ற தலைப்பின்கீழ் விளக்கப்பட்டுள்ளது.

நம்மாழ்வாரின் திருவாய்மொழி 'தமிழ்மறை' என்றும் 'திராவிடவேதசாகரம்' என்றும் வைணவர்களால் போற்றப் படுகின்றது. 'பண்தரு மாறன் பசுந்தமிழ்' என்றும் 'ஆரப் பொழில் தென்குருகைப்பிரான் (நம்மாழ்வார்) அமுதத்திருவாய் ஈரத்தமிழின் இசையுணர்ந்தோர்கட்கு' என்றும் வைணவர்கள் தொன்றுதொட்டுப் புகழ்ந்து போற்றியுள்ளனர். 'பெரியாழ்வார் திருமொழி' என்று வழங்கும் பெரியாழ்வாரின் பாடல்களும் இனிய செந்தமிழ்ப்பாடல்களைக் கொண்டு விளங்குகின்றன. அவர் தம்மை யசோதைப் பிராட்டியாக நினைத்துப்பாடிய கண்ண னின் பாலலீலைகளைக் கொஞ்சும் பிள்ளைத்தமிழ்ப் பாடல்கள் தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒப்பற்ற அழகுடன் மிளிர்கின்றன. கண்ணனின் அவதாரம், தாலாட்டுப்பருவம், தளர்நடைப்பருவம் அணைத்துக்கொள்ள அழைத்தல், பூச்சி காட்டி விளையாடுதல், முலையுண்ண அழைத்தல், காதுகுத்தல், நீராட அழைத்தல், பூச் சூட அழைத்தல், திருவந்திக்காப்பிட அழைத்தல், வெண்ணெய் களவாடுதல், ஆநிரை மேய்த்தல், ஆயர் மங்கையர் யசோதை யிடம் முறையிடுதல், ஆயர் பெண்கள் கண்ணனைக் கண்டு காமுறுதல், கண்ணன் அவதாரச் சிறப்புகள் போன்ற பல தலைப்புகளில் அமைந்த அவருடைய பாடல்கள் 'பிள்ளைத்தமிழ்' என்னும் இலக்கிய மரபிற்கு இலக்கணம் வகுத்துள்ளன. இவற் றைத் தவிர ஸ்ரீரங்கம், திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை, திருக்கோட்டியூர் போன்ற வைணவத் தலங்களையும் மனமுருகிப் பாடியுள்ளார். குறிப்பாக இவரது முதல் பாடலான 'திருப்பல் லாண்டு' எல்லா வைணவக் கோவில்களிலும் தினமும் பாடப்பட்டு வருகின்றது. பெரியாழ்வார் கண்ணனைத் தாலாட்டும் அழகை அவர் பாடிய பத்துப்பாடல்களிலும் காணலாம். அதில் ஒரு பாடலை இங்குக் காண்போம்:

> மாணிக்கங் கட்டி வயிரம் இடைகட்டி
> ஆணிப்பொன் ஞற்செய்த வண்ணச் சிறுதொட்டில்
> பேணி உனக்குப் பிரமன் விடுதந்தான்
> மாணிக் குறளனே தாலேலோ
> வைய மளந்தானே தாலேலோ.

பெரியாழ்வாரின் மகளான ஆண்டாள் பாடியருளிய பாமாலை களான திருப்பாவை, நாச்சியார் திருமொழிப் பாடல்களும் தீந்தமிழ்ச் சுவை சொட்டும் பாடல்களாகத் திகழ்கின்றன. திருப் பாவை முப்பது பாடல்களை 'சங்கத் தமிழ்மாலை முப்பதும்' என்று ஆண்டாளே குறிப்பிடுகின்றார். ஆண்டாளின் திருப்பாவையும் மாணிக்கவாசகரின் திருவெம்பாவையும் தமிழ் இலக்கியத்திலுள்ள இரு ஒப்பற்ற பாவைப் பாடல்களாகும். மாணிக்கவாசகரின் திருவாசகம், திருக்கோவை போன்ற பாடல்கள் தமிழர் உள்ளத் தில் சிறப்பிடம் பெற்றிருக்கின்றன. உயர்ந்த வேதாந்த தத்து வங்களை எளிய இனிய தமிழில் கூறும் வகையில் அப் பாடல்கள் அமைந்துள்ளன. பிறநாட்டாரும் அவற்றைப் படித்து இன்புற்று அவர்களது மொழியில் மொழி பெயர்த்துள்ளனர். ஆழ்வார்கள் நாயன்மார்களின் மூலமாகத் தமிழ்மொழி பாமரமக்களிடை யேயும் பரவி நின்றது.

பாண்டியர் செப்பேடுகளிலுள்ள தமிழ்ப் பகுதிகளைப் படிப் போர்க்கு அக்காலத்தில் தமிழ்மொழியின் வளமும் வனப்பும் நன்கு புலப்படும். தளவாய்புரச் செப்பேட்டின் தமிழ்ப்பகுதி 'ஓங்குதிரை வியன்பரப்பில்' என்னும் மதுரைக் காஞ்சியின் பாடல் வரிகளைக் கொண்டு தொடங்குகிறது. அச்செப்பேட்டின் தமிழ்ப்பகுதியை இயற்றியவர் பாண்டி திரமிளாபரணன் என்ற கவி. வேள்விக்குடிச் செப்பேட்டின் தமிழ்ப்பகுதியைத் தொகுத் தவன் ஏனாதி சாத்தஞ்சாத்தன் என்னும் அந்தணப் படைத் தலைவன் ஆவான். பிற்காலத்திய பாண்டிய அரசர்களது மெய்க் கீர்த்திகளும் இலக்கியச் சுவையுடன் கூடிய அழகிய தமிழ் நடை யில் எழுதப் பெற்றவை. பாண்டிய அரசர்கள் வரிசையில் கடைப்பகுதியில் வந்த திருநெல்வேலிப் பாண்டியர்களுடைய செப்பேடுகளும் கல்வெட்டுகளும் உயர்ந்த தமிழ்ப் புலமையில் தோய்ந்தவர்களால் இயற்றப்பட்டவை. அவற்றிற்கு அரிகேசரி பராக்கிரம பாண்டியனின் தென்காசிக் கல்வெட்டை எடுத்துக் காட்டாகச் சொல்லலாம். இவ்வரசர்களுள் பலர் தமிழ்ப்புலமை வாய்ந்தவர்கள். அதிவீரராம பாண்டியனும் வரதுங்கராம பாண்டியனும் (16ஆம் நூற்றாண்டுக் கடைப்பகுதி) இயற்றிய பல தமிழ் நூல்களைப் பற்றி முன்னரே கண்டோம். ஆக, பாண்டிய அரசர்கள் சங்க காலம் முதற்கொண்டு தொடர்ந்து தமிழ்மொழியையும் தமிழ்ப் புலவர்களையும் ஆதரித்து மேன்மை யுறச் செய்தனர் என்பது விளங்கும்.

## வடமொழி

இந்தியப் பெருநாட்டில் மற்றப்பகுதிகளில் போற்றப்பட்டது போல் பாண்டிய நாட்டிலும் சமஸ்கிருத மொழி நன்கு போற்றப்

பட்டது. சங்ககாலந் தொட்டே வடமொழி தென்னுட்டில் வளர்ந்தது. அதன் செல்வாக்குப் பிற்காலத்தில் மேலும் வளர்ந்தது. பல்லவர்கள், சாளுக்கியர்கள், கங்கர் போன்ற அரச மரபினரும் அவர்களது இராஜ்யங்களில் சமஸ்கிருத மொழிக்குச் சிறப்பிடம் கொடுத்தனர். அவர்களது செப்பேடுகளிலும் கல்வெட்டுகளிலும் அம்மொழியை தாரளமாகத் உபயோகித்தனர். இந்திய நாடுகளுக்கிடையே அரசியல் வேறுபாடுகள் இருந்தபோதிலும் அக்காலத்தில் ஒரு கலாசர ஒருமைப்பாட்டை உருவாக்கச் சமஸ்கிருதமொழி முக்கியக் கருவியாக அமைந்தது. தொடக்க காலங்களில் பௌத்தமும் சமணமும் தென்னுட்டில் பரவியபோது அவர்கள் பிராகிருத மொழியை இங்குப் பரப்பினர். வைதிக மதம் இங்கு வேரூன்றியதற்குச் சமஸ்கிருத மொழி முக்கியக் காரணமாய் இருந்தது. பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி போன்ற சங்ககாலப் பாண்டிய அரசர்கள் வேதத்தையும் வைதிக யாகங்களையும் போற்றினர். வேதம் ஓதும் மறையோரை ஆதரித்து அவர்கள் வசிப்பதற்குக் கிராமங்களைத் தானமாக அளித்தனர் என்பதை முன்னரே கண்டோம். கி. பி. 8 முதல் 10ஆம் நூற்றுண்டுகளில் பாண்டிய அரசர்கள் வெளியிட்ட சாசனங்களில் ஒரு பகுதி சமஸ்கிருதத்திலும் ஒரு பகுதி நல்ல தமிழிலும் இயற்றப்பட்டன. இவ்விரு மொழிகளையும் இரு கண்களெனப் போற்றினர் என்பது அவர்களது செப்பேடுகளையும் கல்வெட்டுகளையும் படிப்போருக்கு நன்கு விளங்கும். 'உள்மிக்க மதியதனு லொண்டமிழும் வடமொழியும் பழுதறத் தாஞராய்ந்து' என்றும் 'மகாபாரதம் தமிழ்படுத்து மதுராபுரிச் சங்கம் வைத்தும்' என்றும் சின்னமனூர்ப் பெரிய சாசனம் கூறுவதிலிருந்து நன்கு அறியலாம். சுந்தரபாண்டியன் (13ஆம் நூற்றுண்டு) மெய்க்கீர்த்தி 'மூவகைத் தமிழ் முறைமையின் வளர, நால்வகை வேதமும் நவின்றுடன் வளர' என்று குறிக்கின்றது. பிற்காலப் பாண்டியர்களின் மெய்க்கீர்த்திகளிலும் இப் பரந்த மனப்பான்மை தெரிவிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். வேதப் படிப்புக்கு முக்கியத்துவம் தரப்பட்டது என்பதை

''நால்வகை வேதமும் நவின்றுடன் வளர''

என்னும் முதலாம் மாறவர்மன் சுந்தரனின் மெய்க்கீர்த்தியாலும்

''சுருதியுந் தமிழுந் தொல்வளங் குலவ''

என்னும் இரண்டாம் மாறவர்மன் சுந்தரனின் மெய்க்கீர்த்தியாலும்

''அருந்தமிழும் ஆரியமு மறுசமயத் தறநெறியுந்
திருந்துகின்ற மனுநெறியுந் திறம்பாது தழைத்தோங்க

முத்தமிழும் மனுநூலும் நான்மறை முழுவதும்
எத்தவச் சமயமு மினிதுடன் விளங்கவும்''

என்னும் மாறவர்மன் குலசேகர பாண்டியனின் 13ஆம் நூற்றூண்டின் மெய்க்கீர்த்தியாலும்

''முந்தையோர் தவத்து முளையென வளர்ந்து
தென்கலை வடகலை தெளிவுறத் தெரிந்து''

எனவரும் அரிகேசரி பராக்கிரம பாண்டியனின் 15ஆம் நூற்றூண்டு மெய்க்கீர்த்தியாலும் நன்கறியலாம். பாண்டிய மன்னர்கள் தம் விருதுகளை இருமொழிகளிலும் ஏற்றுக்கொண்டனர். பராந்தக வீரநாராயணன் 'கோச்சடையன், கூடற்கோன், குருசரிதன், செந்தமிழ்க்கோன், ஸ்ரீநிகேதனன் என்று தமிழிலும் வடமொழியிலும் விருதுகளை ஏற்றூன். மூன்றூம் இராசசிம்மன் 'விகடபாலன்' சிரீகாந்தன், மீநாங்கித சைலேந்திரன், ராஜசிகாமணி, தென்னன்...'போன்று இரு மொழிகளிலும் விருதுகளை ஏற்றுக்கொண்டான். சமஸ்கிருதப் பகுதியையும், தமிழ்ப் பகுதியையும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது சில அழகிய தமிழ்ச் சொற்களையும் வடமொழிச் சொற்களையும் காணலாம். சான்றூக, சடையவர்மன் சுந்தரபாண்டியனுக்குப் 'பொன் வேய்ந்த பெருமாள்' என்று தமிழிலும் 'ஹேமசந்தன ராஜா' என்று வடமொழியிலும் வழங்கப்பட்டுள்ளது. அதுபோலச் 'சோழன் தலை கொண்ட' என்னும் தமிழ் சொற்றொடர் 'சோழாந்தக' என்றும் 'எம்மண்டலமும் கொண்டருளிய' என்றது 'சகலபுவன சக்ரவர்த்தி' என்றும் 'திரமிள மகாராஜ்' என்பது 'தமிழ்ப் பேரரையன்' என்றும் குறிக்கப்படுகின்றன. சில அரசாங்க அலுவலர்களின் பெயர்கள் செப்பேடுகளின் வடமொழிப் பகுதியில் வடமொழியிலும் அதற்கு இணையான தமிழ்ப் பதம் தமிழ்ப் பகுதியிலும் குறிக்கப்படுவதைப் பார்க்கிறோம். உதாரணமாக :

ராஷ்டரம் — நாடு
மத்யஸ்தர் — நடுநிலைநாயகம்
கஜாத்யக்ஷன் — ஆனையொழுக்கு
தர்மாத்யக்ஷன் — நடுவு நிலை நன்கு நாயகன்
ஆஞாப்தி — ஆணத்தி
விஞாப்தி — விண்ணப்பம் செய்வான்

செப்பேடுகளின் தமிழ்ப் பகுதியையும் வடமொழிப் பகுதியையும் இயற்றிய கவிஞர்கள் நிலங்களும் சிறப்புப் பட்டங்களும் அளிக்கப்பட்டுக் கௌரவிக்கப்பட்டனர். தளவாய்புரச் செப்

பேட்டின் தமிழ்ப் பகுதியை இயற்றியவன் 'செந்தமிழ்ப் பாடிஞேன் பாண்டித் தமிழாபரணன்' என்னும் சிறப்புப் பெயர் எய்திய சிரீவல்லவனுவான். அச் செப்பேட்டின் வடமொழிப் பகுதியை இயற்றிய மாதவ கவியென்பான் 'வேத வேதாந்திகளும் விவித சாஸ்திரமும் தன்ளுேடு பிறரோதிக்கேட்டுணர் வெய்த உரைக்கும் ஆசாரியப் பெருந்தகை' என்று புகழப்படுகிருன்.

## கல்விச் சாலைகள்

அக்காலக் கல்வி பெரும்பாலும் குருகுல முறையிலேயே நடை பெற்றது. அவரவர்கள் குடும்ப வழக்கப்படி கல்வி கற்பிக்கப் பட்டது. புரோகிதம், ஜோதிட சாஸ்திரம், மருத்துவம்போன்ற துறைகளில் பல தலைமுறைகளாக ஈடுபட்டிருந்த குடும்பத்தினரே அவற்றைக் கற்றனர். அதுபோன்று, தொழிற்கல்வியும் குடும்பக் கல்வியாக அன்ருட நடைமுறை அனுபவத்தின் அடிப்படையில் கற்பிக்கப்பட்டது. கட்டடம் கட்டுதல், தச்சுவேலை, நெசவு, இரும்பு வேலை, நகைகள் செய்தல், சிற்பம், ஓவியம் போன்ற தொழில் நுணுக்கங்களெல்லாம் பரம்பரையாகக் குடும்பத் தொழிலாகக் கற்கப்பட்டுச் செய்யப்பட்டு வந்தன. ஒவ்வொரு வகுப்பினர் ஒவ்வொரு தொழிலில் ஈடுபட்டு அதற்குரிய நுட்பங் களை நன்கு கற்றுத் தேர்ந்தனர். எடுத்துக்காட்டாக ஸ்தபதி என்று வழங்கும் கோவில் கட்டட வல்லுநர்கள் ஆகம, வாஸ்து சாஸ்திரங்களை நன்கு கற்றறிந்தவராய் இருந்தனர். வைத்தியர் அல்லது மருத்துவர் ஆயுர்வேதம், சித்த வைத்தியம்போன்ற துறைகளில் நல்ல அனுபவம் மிக்கோராய்த் திகழ்ந்தனர். நடன ஆசிரியர்கள் நாட்டிய சாஸ்திரங்கள் கற்றறிந்தார்கள்; அதற்குரிய நூல்களை வைத்துப் போற்றி வந்தனர். எல்லோரும் எல்லாக் கல்வியும் கற்கலாம் என்ற இக்காலக் கருத்து அக்காலத்தில் நிலவி யதாகக் கருதமுடியாது. பரம்பரைத் தொழிலாகவே எல்லாம் நடைபெற்று வந்ததனுல் பொதுப் பள்ளிகள் வைத்துத் தொழில் படிப்பைக் கற்றுக்கொடுக்க வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. அறுபத்து நான்கு கலைகள், பதினென்ரு அறிவுத்துறைகளைப் பற்றிக் குறிப்புகள் கிடைப்பதைக் கொண்டு அக்கால மக்கள் பல்வேறு துறைகளில் சிறந்து விளங்கினர் என்பது விளங்கும். அரசாங்கப் பணிகளை விரும்பியவர்கள் அதற்குத் தக்க கல்வி கற்றிருக்க வேண்டியது அவசியமாயிற்று. தளவாய்புரச் செப்பேடு வழங்கும்போது உடனிருந்த கணக்கர் கணக்கு நூல்களைப் பயின்றவர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

அந்தணர்கள் தோற்றுவித்த கல்விச்சாலைகளைப் பற்றிப் பல குறிப்புகள் கிடைத்துள்ளன. அவர்கள் நடத்திய வடமொழிக்

கல்லூரிகள் 'கடிகை', 'வித்யாஸ்தானம்' அல்லது 'சாலை' என்று வழங்கப்பட்டன. இவ்வகைக் கல்லூரிகள் பல்லவர் காலத்தில் காஞ்சி, பாகூர் போன்ற ஊர்களில் இயங்கி வந்தன. சோழர் காலத்தில் திருபுவனை, எண்ணாயிரம், திருமுக்கூடல் போன்ற ஊர்களில் இயங்கிய கல்லூரிகளைப் பற்றியும் அவற்றில் கற்பிக்கப் பட்ட பாடங்களைப்பற்றியும் அறிகிறோம்.[46] இவற்றில் கல்வி கற்ற மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் உண்ண உணவும் உடுக்க உடையும் அளிக்கப்பட்டன. ஆசிரியர்களுக்குப் 'பட்டவிருத்தி' என்றும் பாடசாலைகளுக்குச் 'சாலா போகம்' என்றும் நிலங்களை தானமாக அரசர்களும் செல்வந்தர்களும் ஈந்தனர். இதுபோன்ற கல்விச்சாலைகள் பாண்டிய நாட்டிலும் இருந்தன. அவற்றைப் பற்றிய குறிப்புகளை இங்குக் காண்போம். கன்னியா குமரியில் ஸ்ரீவல்லப் பெருஞ்சாலையும், ஆய்நாட்டிலுள்ள பார்த்திபசேகரபுரத்தில் ஒரு சாலையும், திருவனந்தபுரத்தின் காந்தளூர்ச் சாலையும் இயங்கியதைப் பற்றிக் குறிப்புகள் கிடைத் துள்ளன. இவற்றுள் 'காந்தளூர்ச்சாலை' வரலாற்றுச் சிறப்புப் பெற்றது. இராசராசசோழன் ஆய்நாட்டைக் கைப்பற்றிய பிறகு இச் சாலையையும் அங்குள்ள மறையவர்க்குச் சாலாபோக மாக நிலதானம் அளித்தான். 'காந்தளூர்ச்சாலை கலமறுத் தருளிய' என்ற சொற்றொடரை விருதுவாக ஏற்றான்.[47] இக் கல்லூரியில் மறையவர் ஆயிரத்தெண்மர் தங்கிக் கல்வி கற்றனர். இக் கல்லூரியில் இயங்கிய கல்வி முறையையும் சட்டதிட்டங் களையும் பின்பற்றியே பார்த்திவசேகரபுரத்தில் ஒரு சாலையை ஆய்மன்னன் கருநந்தடக்கன் கி. பி. 866-ல் தொடங்கினான் என்று அவனது பார்த்திபசேகரபுரச் சாசனம் கூறுகின்றது.[48] அவ்வரசன் முன்சிறை என்ற ஊர்ச்சபையோரிடம் நிலங்களை விலைக்கு வாங்கி அங்கு விஷ்ணு கோயில் ஒன்று அமைத்து அக்குடி யிருப்புக்குப் பார்த்திவசேகரபுரம் என்று பெயரிட்டான். மேலும் அங்கு ஒரு கலாசாலையை நிறுவினான். அதில் 95 சட்டர்களுக்கு உணவு அளிக்க ஏற்பாடும் செய்து நிலங்களைச் சாலா போகமாக அளித்தான். சாத்திரங்களை நன்கு கற்றறிந்தோர் சாத்திரர் அல்லது சட்டர் எனப்பட்டனர் போலும். சட்டர் அவரவர் களுக்கு உரிய வேதத்தில் மட்டுமல்லாமல் மீமாம்சை, வியா கரணம், புரோகிதம் ஆகிய பிரிவுகளிலும் புலமை பெற்றிருந் தனர். இத்துறைகளில் சிறப்புக் கல்விபெற இச்சாலையில்

[46] Sastri, K.A.N. Cholas-p.628-634

[47] 'கன்னிப் போர் செய்தருளிக் காந்தளூர்ச் சாலைக் கலமறுத்து மன்னுபுகழ் மறையவர் தம் மணியம்பலத்துள் இனிதிருந்து ஆயிரத்தெண்மர்'

[48] பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக் அ, 1. 10.

சேர்த்துக் கொள்ளப்பட்டனர். இங்கு வேதசாஸ்திரங்களில் உயர்படிப்பைத் தவிர இராஜ்ய நிர்வாகப் பயிற்சியும் இராணுவப் பயிற்சியும் அளிக்கப்பட்டன. இச்சாலை இயங்கிய முறைகளைப் பற்றிப் பல அரிய செய்திகளைச் சுருக்கமாகக் கீழே காண்போம். சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூன்று மன்னர்களின் இராஜ்யங் களது (த்ரைராஜ்ய விவகாரத்துக்கு) நிர்வாக அமைப்பிற்கு வேண்டிய பயிற்சி தரப்பட்டது. இதைத் தவிரப் படைக்கலம் பிடிக்கவும் அவர்களுக்குப் பயிற்சியளிக்கப்பட்டது. நாட்டின் நிர்வாகம், போர்முறை ஆகிய இரண்டையும் நூல்வாயிலாகவும் நடைமுறை வழியாகவும் கற்பித்து வந்த ஒரு கலாசாலையாக இது இயங்கியதை உணரலாம். இக்காலத்தில் இயங்கிவரும் நிர்வாக அதிகாரிகள் பயிற்சி நிலையங்களும் (Administrative staff training) இராணுவப் பயிற்சிப் பள்ளிகளும் (Military School) செய்துவரும் பணிகளை ஓரளவு அக்காலத்துச் சாலைகளும் செய்துவந்தன என்று சொன்னால் மிகையாகாது. அக்காலத்தில் நாட்டு நிர்வாகத் தலைவர்களுக்கு இராணுவ விஷயமான அறிவும் அனுபவமும் தேவையெனக் கருதப்பட்டது. இளவரசர்களும், மந்திரிகளும் தண்டநாயகர்களும் இராணுவப் பயிற்சி பெற்றிருந்தனர்.

### சாலை ஒழுக்கம்

சாலைகளில் கல்வி பயின்றோர் ஒழுக்கசீலர்களாகவும் இருத்தல் வேண்டும் என்று பணிக்கப்பட்டது. அதற்கெனப் பல ஒழுக்கச் சட்ட திட்டங்கள் வரையறுக்கப்பட்டிருந்தன. இவற்றைப் பார்த்திவசேகரபுரச் சாசனம் விரிவாகக் கூறுகின்றது. அவற்றின் படி, கல்விச்சாலையில் சட்டர் ஒருவரை ஒருவர் பழித்துப் பேசக் கூடாது. சண்டையிட்டால் அவர்களுக்கு அபராதம் விதிக்கப் பட்டது; ஒருவரை ஒருவர் படைக்கலத்தால் தாக்கிக்கொண்டால் சாலையிலிருந்து வெளியேற்றப்படுவர்; படைக்கலம் பிடித்துக் கொண்டு வகுப்பிற்குச் செல்லக்கூடாது; சூது ஆடக்கூடாது. வேலைக்காரிகளை அமர்த்திக் கொள்ளக்கூடாது; கோவில் நிலங்கள் அவர்களது நிர்வாகத்தின்கீழ் இருந்தது. உழும் குடிகளைத் தாங்களே நீக்குவதோ, கட்டாயப்படுத்தி அவர்களிடம் பொருள் கொள்வதோ கூடாது; அவ்வாறு கொண்டவர் அவ்வூர் சபை இட்ட பணிகளைச் செய்ய வேண்டும். செய்யத்தவறினால் 54 காணம் தண்டம் கொடுக்க வேண்டும். இவ்விதி முறைகளை நோக்கும்போது நூல் அறிவு, இராணுவப் பயிற்சி, நடைமுறை ஒழுக்கம் இம்மூன்றும் ஒருங்கே போற்றப்பட்டதை அறிகிறோம். அதாவது அறிவு, வீரம், ஒழுக்கம் இம்மூன்று குணங்களும் அக்காலக் கல்வி முறையில் செவ்வனே பேணிக்காக்கப்பட்டதை உணரலாம். பார்த்திவசேகரபுரச் சாலை போன்று அக்காலத்தில்

தென் இந்தியாவில் வேறு பல பகுதிகளிலும் சாலைகள் இயங்கியதை ஆந்திரம், கருநாடகம், கேரளம் போன்ற பகுதிகளில் கிடைத்துள்ள கல்வெட்டுகளின் மூலம் அறிகிறோம்.

**மடங்கள்**

சுமார் பன்னிரண்டாம் நூற்றாண்டிலிருந்து மடங்கள் எண்ணிக்கையில் பெருகி ஆங்காங்கே அறிஞர்களுக்கு ஆதரவு கொடுப்பதன் மூலம் கல்வித்தொண்டு செய்துவந்தன. இதன் மூலம் சமயக்கல்வி, ஆன்மீக ஒழுக்கம் இவை பரவலாயின. கோவில்களைத் தவிர மடங்கள் இப்போது சமயக் கல்வியைப் பரப்புவதில் சிறப்பிடத்தைப் பெற்றன. உண்டியும் உறையுளும் அளித்து மாணவர்க்குக் கல்வி புகட்டும் கூடங்களாகவும் அறிஞர்கள் தங்குமிடங்களாகவும் இம் மடங்கள் அமைந்தன. இவை பெரும்பாலும் சமயக்கல்வியை ஊட்டிவந்தன. பாண்டிய நாட்டில் இயங்கி வந்த சைவ-வைணவ மடங்களைப் பற்றியும் சமணர் பள்ளிகளைப் பற்றியும் 'சமயம்' என்ற அதிகாரத்தில் விரிவாகக் காணலாம். திருப்பத்தூரில் இருந்த பிக்ஷாமடத்தில் சைவசித்தாந்தங்களில் தேர்ச்சிபெற்ற ஆசிரியர்கள் பலர் இருந்தனர்.[49] சாக்கோட்டையிலும் (இராமநாதபுர மாவட்டம்) பவிதாச்சாரியர் நட்சிணாமூர்த்தி என்னும் ஆசிரியர் தலைமையில் ஒரு மடம் இருந்தது. அதற்குப் பாண்டிய அரசன் சடையவர்ம சுந்தரன் சில நிலங்களைத் 'திருமடவிளாகமாக' வழங்கினான்.[50] மதுரைக் கோவிலில் இருந்த புவனைக வீரன் மடத்தில் உத்சவ காலங்களில் தினமும் 100 அடியார்க்கு உணவு அளிக்க வசதி செய்யப்பட்டிருந்தது.[51] இதுபோன்று சேரமாதேவி, திருநெல்வேலி, அருவியூர், குற்றாலம் போன்ற ஊர்களில் சைவ மடங்கள் பல இயங்கிவந்தன. அதுபோன்று அழகர் கோயில், திருக்குறுங்குடி, வானமாமலை போன்ற ஊர்களில் வைணவ மடங்கள் வைணவ நூல்களிலும் வேதம், உபநிடதம், இதிகாச-புராணங்கள், நாலாயிர திவ்வியப் பிரபந்தங்கள் உரைகள் போன்ற நூல்களிலும் மாணவர்களுக்குப் பயிற்சி அளித்தன. இவற்றைக் கற்பதற்கு வேண்டிய வடமொழி, தமிழ் மொழியின் இலக்கண-இலக்கியப் பயிற்சியும் அளிக்கப்பட்டன. எடுத்துக் காட்டாக ஆழ்வார் திருநகரியிலிருந்த அருளாள தாடன் மடத்தில் பல மாணவர்கள் தங்கிக் கல்வி கற்க வசதிசெய்து கொடுக்கப்பட்டிருந்தது. அதைத் திருக்குருகூர் மகாமுனிகள்

[49] 173 of 1929-30
[50] 52 of 1946-47
[51] 278 of 1939 40

என்பவர் தொடங்கினுர் என்று 13ஆம் நூற்றுண்டுக் கல்வெட்டொன்று குறிப்பிடுகின்றது. இம்மாதிரி மடங்கள் பல அறிஞர்களை உருவாக்கியுள்ளன.[52]

**நூலகம்**

சில மடங்களிலும் கோவில்களிலும் நூலகங்கள் இருந்தன. இந் நூலகங்கள் சரஸ்வதி பண்டாரம் என வழங்கப்பட்டன. 13ஆம் நூற்றுண்டில் சிதம்பரத்தில் ஒரு சரஸ்வதி பண்டாரம் இருந்ததாகக் குறிப்புக் காணப்படுகிறது. சுவாமிதேவர் என்னும் அறிஞர் அதைத் தொடங்கி வைத்ததாகச் சொல்லப்படுகிறது. பல்லவதரையன் என்னும் அதிகாரி அதன் நிர்வாகத்தைக் கவனித்துவந்தான். அங்கு ஏராளமான ஓலைச்சுவடிகள் சேகரித்து வைக்கப்பட்டிருந்தன. அவற்றைப் பார்த்து எழுதுவதற்கும் பிழைதிருத்துவதற்கும் 20 அறிஞர்கள் வேலைபார்த்தனர். அவர்கள் பல துறைகளில் தேர்ச்சி பெற்ற அறிஞர்களாகக் குறிப்பிடப்படுகின்றனர். இதுபோன்று சேரமாதேவியிலுள்ள கோவிலிலும் ஒரு சரஸ்வதி பண்டாரம் (நூலகம்) இருந்தது. அங்கு வேதமும் புராணமும் கற்றுக் கொடுக்கப்பட்டன. ஆக, பாண்டிய நாட்டின் கல்விச் செழிப்புக்கும் சமய வளர்ச்சிக்கும் கோவில்களும் மடங்களும் சிறந்த தொண்டாற்றின.

52 523 of 1958-59

# 14. சமய வளர்ச்சி

சங்க காலத்தில் வைதீக இந்து சமய வழிபாடுகளும் மற்றும் பௌத்தம், சமணம்போன்ற வேறு மதங்களும் எவ்வாறு பகைமை யின்றித் தமிழகத்தில் நிலவி வந்தன என்பதை முன்னோர் அதிகாரத்தில் பார்த்தோம். தமிழகத்தில் பல ஊர்களில் பௌத்தப் பள்ளிகளும் சமணர் இருக்கைகளும் இருந்து வந்தன. அவர்களுக்கு அரசர்களும், அதிகாரிகளும், வணிகப் பெருமக்களும் பல தானங்கள் அளித்துப் போற்றிவந்தனர். களப்பிரர் என்னும் கலி அரசர்கள் தமிழகத்தில் ஊடுருவிய காலத்தில் சங்க காலத்தில் இருந்த சமயக் கோட்பாடுகளும் அவை கடைப் பிடித்த அமைதி யும் வெகுவாகப் பாதிக்கப்பட்டன எனலாம். சுமார் கி. பி. 300 முதல் 575 வரை களப்பிரரின் ஆதிக்கம் தென் இந்தியாவில் பரவலாக இருந்தபோது பௌத்தமும் சமணமும் பெற்ற செல் வாக்கை இக்காலத்தில் எழுதப்பட்ட 'அபிதம்மவதாரம்'. 'விநய விநிச்சயம்' போன்ற பௌத்த நூல்களாலும் அறிகின்றோம். அபிதம்மவதாரம் என்னும் நூல் களப்பிர அரசன் அச்சுத விக்ரந்தன் என்பவனின் ஆதரவில் எழுதப்பட்டதாக அதன் ஆசிரியர் புத்தகத்தில் குறிப்பிட்டுள்ளார். பௌத்த மதத்தை விடச் சமண மதமே தமிழகத்திலும் கர்நாடகப் பகுதிகளிலும் அதிகச் செல்வாக்குப் பெற்றிருந்தது. அதிலும் குறிப்பாகத் தொண்டை நாட்டிலும் பாண்டிய நாட்டிலும்தான் சமணர் செல்வாக்கு மிகுந்திருந்தது எனலாம். களப்பிரர் இந்து சமய வழிபாட்டையும் கோட்பாடுகளையும் வெறுத்து ஒதுக்கினர். வேத வேள்விகளை ஒழிக்க அவற்றிற்காகக் கொடுக்கப்பட்ட தானங்களைப் பறித்துக் கொண்டனர். பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியென்னும் பாண்டிய அரசன் வேத மார்க்கத்தைக் கடைப்பிடித்த கொற்கை கிழானுக்கு வழங்கிய வேள்விக்குடி என்னும் கிராமத்தைக் களப்பிரர் கவர்ந்து கொண்டனர். ஆகையால், அவன் வழித்தோன்றிய நரசிங்கன் என்பவனுக்கு மீண்டும் அவ்வூரைப் பாண்டிய அரசன் பராந்தகன் வழங்கினான் என்பதை வேள்விக்குடிச் சாசனம் பின்வருமாறு கூறுகிறது.

...சுருதிமார்கம் பிழையாத
கொற்கைகிழா னற்கொற்றன் கொண்டவேள்வி முற்றுவிக்க

> கேள்வியந்த ணூளர்முன்பு கேட்கவென் றெடுத்துரைத்து
> வேள்விச்சாலை முன்பு நின்று வேள்விக்குடியென் றப்பதியைச்
> சீரோடு திருவளரச் செய்தார்வேந்த னப்பொழுதே...

களப்பிரர் ஆட்சியில் ஏற்பட்ட குழப்பத்திலிருந்து நாட்டை மீட்டுப் பழைய இந்து மதத்தைக் காத்த செய்தியைப் பல்லவர் களும் பாண்டியர்களும் தங்களது சாசனங்களில் பெருமிதத்துடன் கூறிக் கொள்வதை மேலே காட்டிய வேள்விக்குடிச் சாசன வரிகள் உணர்த்தும்; களப்பிரர் காலம் ஓர் இருண்ட காலமென அக்காலத்திலேயே கருதப்பட்டது என்பதை

> களப்பிரரென்னும் கலியரசன்
> கைக் கொண்டதனை பிறக்கிய பின்
> படுகடன் முளைத்து பருதி போற்
> பாண்டியாதி ராசன் வெளிப்பட்டு...

என்னும் சாசன வாசகத்தால் நன்கு அறியலாம். ஆதலால் கிட்டத்தட்ட ஆறும் நூற்றுண்டு இறுதியில் தெற்கே பாண்டி யரும் வடக்கே பல்லவர்களும் தமிழகத்தில் இந்து மதக் காவலர் களாகத் திகழ்ந்தனர். இதற்குக் காரணம் அக்காலத்தில் பரவ லாக எழுந்த இந்துமத மறுமலர்ச்சியின் உத்வேகமாகும். பௌத்த சமணக் கோட்பாடுகளுக்கு எதிரே உருவாகிய இவ்விந்து சமயப் பற்றும் இந்திய நாட்டில் பல பகுதிகளிலும் பரவியிருந்தது. வடக்கே குப்தர்கள் இவ்வியக்கத்திற்குப் பேராதரவு காட்டி ஆங்காங்கே அழகிய கோவில்களைக் கட்டினர். தெற்கே சாளுக் கியர், பல்லவர், பாண்டியர், சேரர் இப் பேரியக்கத்திற்குத் தங்களது முழு ஆதரவையும் அளித்துப் போற்றினர். குறிப்பாகத் தமிழகத்தில்தான் இந்துமதப் பற்று ஒரு பக்தி வெள்ளமாகப் புரண்டு இந்துமதக் கோயில் இயக்கமாக மலர்ந்தது. இது ஏறத்தாழ ஒன்பதாம் நூற்றுண்டு இறுதிவரை நிலைத்திருந்தது. நாட்டில் முக்கியமாகச் சைவர்களும் வைணவர்களும் சமண பௌத்தமாகிய புறச் சமயங்களின் வளர்ச்சியைத் தடுத்து நிறுத்த வேண்டியது தலையாய கடமையெனக் கருதினர். இப் பக்தி இயக்கத்தின் முழுப்பொலிவையும் அதைத் தலைமை தாங்கி இயக்கிய வைணவ ஆழ்வார்கள் சைவ நாயான்மார்களின் தெய்வப் பாடல்களில் காணலாம். புகழ் பெற்ற பக்தர்களின் தலைமையில் அடியார் திருக்கூட்டங்களில் இறைவன் புகழைப் பாடிக் கொண்டும் எதிர்ப்பட்ட சமயங்களோடு வாதிட்டுக் கொண்டும் நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் மீண்டும் மீண்டும் சுற்றுப்பயணம் செய்தனர். இந்தப் பக்தி இயக்கம் ஏழாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் உச்சநிலையை அடைந்தது. ஒன்ப

தாம் நூற்றுண்டின் இடைக்காலத்தில்கூட இவ்வியக்கம் வலிமை யோடுதான் இருந்தது.''[1] இவ்வியக்கத்தின் விளைவாகக் கோவில் இயக்கமும் உருவாகி, தமிழகத்தில் பல அழகிய கற்றளிகள் தோன்றின. பாண்டிய நாட்டில் உருவாகிய கோவில்களைப்பற்றி வேருேர் அதிகாரத்தில் விரிவாக ஆராய்வோம். இங்குச் சமய வளர்ச்சியைப்பற்றி மட்டும் விளக்குவோம்.

பல்லவரைப் போலவே பாண்டியரும் வைதிக இந்துமதக் காவலர்களாய்த் திகழ்ந்தனர். சைவம் வைணவம் என்ற பாகு பாடின்றிப் பொது நோக்குடன் செயலாற்றினர். பல்லவ அரசன் முதன் முறையாக மண்டகப்பட்டில் அமைத்த கற் கோவிலில் பிரம்மா, விஷ்ணு, சிவன் என்னும் மும்மூர்த்திகளையும் அமைத்தான். அதுபோலவே பாண்டிய குகைக் கோவில்களில் சிவன், விஷ்ணு, கொற்றவை, சுப்பிரமணியர், கணேசர், பிரம்மா அல்லது சூரியன் போன்ருேரின் சிற்பங்கள் காணப்படுகின்றன. இந்து மதத்திலிருந்த பல தெய்வ வழிபாட்டுக் கூறுகளையும் ஒன்ருய் இணைத்ததொரு சமய வழிபாட்டைப் பாண்டியர் ஆதரித்தனர். அவர்களது செப்பேடுகளில் ஆரம்பத்தில் திரு மாலையும் முடிவில் சிவபிரானையும் புகழும் பாடல்களைக் காணலாம். பாண்டியர்களது நீண்ட வரலாற்றில் சைவ-வைணவ வேறுபாடின்றி இவர்கள் ஆட்சி புரிந்தது ஒரு தனிச் சிறப்பாகும். பிற்காலச் சோழ அரசர்களில் சிலர் சைவ சமயத்திற்கு விசேஷ சலுகைகள் காட்டினர் என்று குறை சொல்லக்கூடும். அக்குறை யைப் பாண்டியர்களிடம் காணமுடியாது. வடக்கே குப்தர் களையும் தெற்கே பல்லவர்களையும் போலப் பாண்டிய அரசர்களும் பல வேதவேள்விகளைச் செய்வித்தனர். அசுவமேதம், வாஜபேயம் போன்ற யாகங்களையும் இரணியகர்ப்பம், துலாபாரம் போன்ற மகா தானங்களையும் செய்ததாகச் சொல்லிக் கொள்கிருர்கள். பாண்டியன் வைகைக் கல்வெட்டு அவ்வரசன் செய்த மகாதானங் களைப் பின்வருமாறு கூறுகிறது,

> பாண்டிய குலமணிப்ரதீபனுய் பாரதர்பாவஞ் செய்து
> விக்கிரமங்களாயரை அடக்கி, மறங் கெடுத்தறம்
> பெருக்கி அக்கிரஹாரம் பலசெய்த பரிமதமாகிய
> ஹிரண்ய கர்பகோ ஸஹஸ்ர துலாபாரத்து மஹா
> தானங்களாற்...

பல்லவ அரசர்களைப் போலவே பாண்டிய அரசர்கள் சிலர் சைவர் களாகவும் சிலர் வைணவர்களாகவும் இருந்தபோதிலும், பொதுப் படையான வைதிகக் கோட்பாடுகளைக் கடைப்பிடித்தனர்.

[1] K. A. Nilakanta Sastri: 'History of South India', p. 183 (Tamil).

எடுத்துக்காட்டாக, நின்றசீர் நெடுமாறன் சிறந்த சிவபக்தனுக இருந்தான். ஆனுல், நெடுஞ்சடையப் பராந்தகன் என்னும் முதலாம் வரகுணன் தன்னைப் 'பரமவைஷ்ணவன்' என்று கூறிக் கொள்கிருன். கொங்குவாய்ப் பேரூரில் திருமாலுக்குக் 'குன்ற மன்னதோர்க் கோவில்' அமைத்ததாகக் கூறுகிருன். அவனது மகன் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபனும் வைணவன். ஆனுல் ஸ்ரீவல்ல பனின் மகனுன இரண்டாம் வரகுணன் சிறந்த சிவபக்தனுக இருந்தான். அவனது சகோதரன் பராந்தகன் வீரநாராயணன் வைணவனுவான். இவ்வாறு தந்தை சைவனுகவும் மகன் வைணவ னுகவும் இருந்த நிலையைப் பார்க்கும்போது அக்காலத்தில் இப் பாகுபாடு மிகைப்படுத்தப்படவில்லை என்று தெரிகிறது. வைதீக இந்து சமயத்தின் இரு கண்களாக அவை கருதப்பட்டனவேயன்றி வெவ்வேறு கூறுகளாகக் கருதப்படவில்லை. பாண்டிய அரசர்கள் எல்லோருமே ஒரு பொது நோக்குடன் நடுநிலை வகித்துள்ளனர். இரண்டாம் பாண்டியப் பேரரசின் தலைசிறந்த மன்னனுன சடையவர்மன் சுந்தரபாண்டியன் எவ்வாறு சிதம்பரம் கோவி லுக்கும், ஸ்ரீரங்கம் கோவிலுக்கும் வேறுபாடின்றிப் பல அரிய திருப்பணிகள் புரிந்தான் என்பது முன்னேர் அதிகாரத்தில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. மொழி, சமயம் போன்ற துறை களில் பாண்டியர்கள் காட்டிய பரந்த மனப்பான்மைக்கு உன்னத எடுத்துக்காட்டாக முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் மெய்க்கீர்த்தி வாசகம் அமைந்துள்ளது. அவர்களது இலட்சி யங்களை மிக அழகுபடப் பின்வருமாறு கூறுகிறது.

> மூவகைத் தமிழு முறைமையின் விளங்க
> நால்வகை வேதமும் நவின்றுடன் வளர
> ஐவகை வேள்வியுஞ் செய்வினை யியற்ற
> அறுவகைச் சமயமும் அழகுடன் திகழ
> எழுவகைப் பாடலு மியலுடன் பரவ...

முத்தமிழும், நான்கு வேதமும், வேள்வியும், அறுவகைச் சமயமும், இசையும் அவர்கள் தொன்றுதொட்டுப் போற்றிக் காத்த பெருமையை அவர்களது கல்வெட்டுகளில் பெருமையுடன் கூறிக் கொள்கிருர்கள்.[2]

## சைவம்

இச் சமய மறுமலர்ச்சியில் சைவர், வைணவர் ஆகிய இரு பிரிவினருமே ஈடுபட்டனர் என்பதை மேலே கூறினேம். இப் பகுதியில் பாண்டிய நாட்டில் சைவ சமயத்தின் வளர்ச்சியைச்

[2] Raman, K. V. "Religious inheritance of the Pandyas"

சுருக்கமாக நோக்குவோம். தேவாரப்பாடல்களைப் பாடி சைவ சமயப் பற்றை ஆங்காங்குப் பரப்பி வந்த சிவனடியார்களில் முக்கியமானவர் திருஞானசம்பந்தர் ஆவார். ஏழாம் நூற்றாண்டு மத்தியில் வாழ்ந்த இவர் பாண்டிய நாட்டிற்கு வந்து அங்குச் செய்த தொண்டு சைவ சமய வளர்ச்சியில் ஒரு முக்கியப் பணியாகும். அப்பொழுது மதுரையில் பாண்டிய அரசன் மாறவர்மன் அரிகேசரி எனப்படும் நின்றசீர் நெடுமாறன் ஆண்டு வந்தான். அவன் முதலில் சமண மதப் பற்றுடையவனாயிருந்து பிறகு திருஞானசம்பந்தரால் சைவனாக்கப்பட்டான். இவன் முன்னிலையில்தான் சம்பந்தருக்கும் சமணமுனிவர் எண்ணாயிரவர்க்கும் அனல் வாதமும் புனல் வாதமும் நிகழ்ந்தனவென்றும், தோற்கடிக்கப்பட்ட சமணர்கள் கழுவேற்றப்பட்டனரென்றும் சைவ சமய நூல்கள் கூறும். ஞானசம்பந்தரைப் பாண்டிய நாட்டிற்கு வரும்படி அழைத்து அவரது பணிகளுக்கு உறுதுணையாய் நின்றவர் கூன்பாண்டியனின் மனைவி கோப்பெருந்தேவி மங்கையர்க்கரசியாரும், அமைச்சர் குலச்சிறையாரும் ஆவர். இக் காரணம் கொண்டே பாண்டிய அரசன் நெடுமாறன், மங்கையர்க்கரசி, குலச்சிறையார் ஆகிய மூவரும் சிவனடியார் அறுபத்து மூவருள் சேர்க்கப்பட்டுச் சிறப்பிக்கப்பட்டுள்ளனர். திருஞானசம்பந்தர் அவருடைய தேவாரப்பாடலில் 'மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை' என்றும் 'பங்கயச் செல்வி பாண்டிமாதேவி பணிசெய்து' என்றும் பாண்டிய அரசியைப் புகழ்ந்து பாடியுள்ளார். தேவாரப் பாடல்கள் பாடிய மற்றொரு சமயக்குரவரான அப்பர், இராமேஸ்வரம் போன்ற பல பாண்டிய நாட்டுப் பதிகளைப் போற்றிப் பாடி உள்ளார். சுந்தரமூர்த்திநாயனார் சேரமான் பெருமானுடன் பாண்டிய நாட்டிற்கு வந்தார். அப்பொழுது அங்குள்ள பாண்டிய மன்னனாலும், அவனது மகளை மணந்து மதுரையில் தங்கியிருந்த சோழ அரசனாலும் உபசரிக்கப்பட்டுத் திருவாலவாயுடையாரையும் திருப்பரங்குன்றப் பெருமானையும் வழிபட்டனர் என்று பெரிய புராணம் கூறும். அத்தலங்களைப் பற்றி அவர் பாடிய பாடல்களைத் தேவாரத் தொகுதியில் காணலாம். சேர, சோழ பாண்டிய அரசர் மூவரும் சுந்தரருடன், திருப்பூவணம், திருவாப்பனூர், திருவேடகம், திருப்பரங்குன்றம் போன்ற பல சைவத் தலங்களை வழிபட்டனர் என்று பெரியபுராணம் கூறும்.

சுந்தரர் காலத்திற்கு ஏறக்குறைய ஒரு நூற்றாண்டுக்குப் பிறகு வாழ்ந்தவர் மாணிக்கவாசகர். பாண்டிய மன்னன் இரண்டாம் வரகுணபாண்டியனின் (கி.பி. 862-85) அமைச்சராயிருந்தவர். மதுரைக்கருகிலுள்ள ஆதவூரில் அந்தணர் குலத்தில் பிறந்தவர். ஆதவூர் அடிகள் என்றும் அழைக்கப்படுபவர். இவ

ரைப் பற்றிக் கூறப்படும் மரபுவழிக் கதைகளிலிருந்து இவர் இறைவன் பணிக்காக அரசு பணத்தைக் கணிசமாகச் செலவிட்டார் என்று அறியலாம். சிங்களத்திலிருந்து வந்த பௌத்தர்களோடு சிதம்பரத்தில் வாதிட்டு அவர்களைத் தோல்வியுறச் செய்ததாகச் சைவமரபு செய்திகள் தெரிவிக்கின்றன. அவர் பாடிய பாடல்களின் தொகுப்புத் 'திருவாசகம்' என்று வழங்கப் படுகிறது. உள்ளத்தை அள்ளும் அவரது பாடல்கள் கடவுளின் திருவடிகளில் தன்னை முற்றிலும் அர்ப்பணித்து விடவேண்டும் என்ற சைவ சமயக் கொள்கையைத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. திருச்சிற்றம்பலக் கோவையிலும் நடராசப் பெருமானின் சிறப்பை மனமுருகிப் பாடியுள்ளார். இக் கோவையில் பாண்டிய வரகுணனின் சிவபக்தியைப் பற்றிப் பின்வருமாறு பாடியுள்ளார்.

'மன்னவன் தெம்முனை மேற்செல்லுமாயின் மாலரியே
நன்னவன் தேர்புறத் தல்கல்செல் லாது வரகுணனுந்
தென்னவ னேத்துசிற் றம்பலத் தான்மற்றைத்
தேவர்க்கெல்லா
முன்னவன் மூவலன் ஞளுமற் றேர்தெய்வம் முன்னலனே'

அவரது 'கீர்த்தித் திருவகவல்' என்னும் பாடலில் சிவபிரான் பிட்டுக்கு மண்சுமந்தது, நரியைப் பரியாக்கியது போன்ற மதுரைக் கோவிலுடன் பிணைந்திருக்கும் திருவிளையாடல் புராணங்களைப் பற்றிப் பாடியுள்ளார்.

பாண்டிய நாட்டிலுள்ள தேவாரப்பாடல் பெற்ற தலங்கள் சிவபக்தர்களுக்கு முக்கியத் தலங்களாக விளங்கிச் சைவ சமயத்தைத் தழைத்தோங்கச் செய்துள்ளன. மதுரையிலுள்ள மீனாட்சிசுந்தரேச்சுரர் கோவில், திருப்பரங்குன்றம், திருவேடகம், திருக்குற்றாலம், திருநெல்வேலி, இராமேஸ்வரம் போன்ற தலங்கள் சைவர்களால் மிக முக்கியத் தலங்களாகப் போற்றப் படுகின்றன. இவற்றில் இராமேஸ்வரம், மதுரை போன்ற தலங்கள் அகில இந்திய முக்கியத்துவம் வாய்ந்தவை. திருச்செந்தூர், திருப்பரங்குன்றம், பழமுதிர்சோலை, குன்றக்குடி போன்ற தலங்கள் முருக வழிபாட்டிற்குத் தலை சிறந்த தலங்களாகத் திகழ்கின்றன.

நாயன்மார்கள் பாடிய பாடல்கள் மக்களால் வேதத்திற்கு இணையாகக் கருதப்பட்டன. அவர்களது பாடல்கள் திருமுறைகளாகத் தொகுக்கப்பட்டன. நாளடைவில் அப்பாடல்கள் தமிழகக் கோவில்களின் வழிபாட்டில் முக்கிய இடம்பெற்றன. நாள்தோறும் இறைவன் முன் அவை பாடப்பட்டன. நாயன்

மார்கள் தெய்விகத்தன்மை பெற்றவர்கள் என்று மக்கள் உணர்ந்தார்கள். ஆதலால், அவர்களுக்கும் கோவில்களில் விக்கிரகங்கள் அமைத்து வழிபாடு செய்தனர். அவர்கள் பாடிய தேவாரம், திருவாசகம் போன்ற பாடல்கள் சிவன் கோயில்களில் பாடப்பட்டன. முதலாம் மாறவர்மன் சுந்தரன் காலத்திலேயே நான்குநேரி சிவன் கோவிலில் திருவெம்பாவை பாடப்பட்டு வந்ததை அங்குள்ள ஒரு கல்வெட்டு அறிவிக்கின்றது.[3] மதுரை மீனாட்சியம்மன் கோவிலில் மார்கழி மாதந்தோறும் 'சாதாரிப் பண்ணில்' திருவெம்பாவை பாடுவதற்குக் கட்டளை ஏற்படுத்தப் பட்டிருந்ததை ஒரு கல்வெட்டு கூறுகிறது.[4] மற்றொரு சிவன் கோவிலில் 'திருச்சாழல்' ஓதப்பட்டது. சிவனடியார்களின் விக்கிரகங்களைப் பிரதிஷ்டை செய்து அவர்களுக்கு வழிபாடு ஏற்படுத்தினர். முதல் மாறவர்மன் காலத்தில் தென்திருப்பேரூர்ச் சிவன் கோவிலில் சுந்தரமூர்த்தி நாயனாருக்கும் பரவை நாச்சியாருக்கும் விக்கிரகங்கள் நிறுவப்பட்டதை ஒரு கல்வெட்டு மூலம் அறிகிறோம்.[6] திருக்கோடிக்காவலில் திருப்பெருந்துறை ஆளுடையாரின் படிவம் நிறுவப்பட்டதை மற்றொரு கல்வெட்டு அறிவிக்கின்றது.[7]

இவ்வாறு சிவபக்தியையும் கோவில் வழிபாட்டு முறையையும் சைவ நாயன்மார்கள் தங்களது இனிய பாடல்கள் மூலம் நாடெங்கும் பரப்பினர். அவர்களால் விசேஷமாகப் போற்றப் பட்ட திருக்கோவில்களில் மக்களுக்கு அதிகப்பற்றும் ஈடுபாடும் வளர்ந்தன. மன்னர்களும் இக்கோவில்களில் நடக்கும் வழிபாட்டிற்கும் திருவிழாக்களுக்கும் ஏராளமான நிவந்தங்களை வழங்கிப் போற்றினர். எடுத்துக்காட்டாகத் திருச்செந்தூரிலுள்ள முருகன் கோவிலின் மீதுள்ள ஈடுபாட்டினால் வரகுண பாண்டியன் அங்கு ஆண்டு முழுவதும் நாள் வழிபாட்டிற்கு 1400 பொற்காசுகளை நிவந்தமாக வழங்கி அவற்றைப் பன்னிரண்டு ஊர்களுக்குப் பிரித்துக் கொடுத்து அவர்கள் ஆண்டு ஒன்றுக்கு 2 கலம் நெல் வீதம் மொத்தம் 2800 கல நெல் ஆண்டுதோறும் கோவிலுக்கு அளந்து கொடுக்குமாறு ஏற்பாடு செய்தான். இச் செய்தி அக் கோவிலிலுள்ள வரகுணனின் 13ஆவது ஆண்டுக் கல்வெட்டும் கூறுகிறது.[8] இவ்வரசன் காலத்திலேயே அம்பாசமுத்திரக்

[3] ARE 1927-28 p. 56
[4] மேற்படி
[5] ARE 1907-p. 76
[6] 288 of 1940 41
[7] 54 of 1930-31
[8] Ep Ind., XXI. No.7

கோவிலுக்கு 290 பொற்காசு தானம் வழங்கப்பட்டது. அதில் வட்டியாக ஆண்டு ஒன்றுக்கு வரும் 580 கலம் நெல்லைக் கொண்டு நான்கு காலம் திருவமுது படைக்கும்படி ஏற்பாடு செய்யப் பட்டது.[9] இவ்வாறே பிற்காலப் பாண்டியர்களான முதல் சடையவர்மன் சுந்தரபாண்டியன் சிதம்பரத்திற்கு நல்ல பல திருப் பணிகளைச் செய்துள்ளான். பல வெற்றிகளைக் கண்ட அவன் தில்லையம்பலக் கூத்தனை வழிபட்டு பல துலாபார தானங்கள் செய்து திருக்கோயிலைப் பொன் வேய்ந்து சிறப்பித்தான்.[10] அக் கோவிலிலுள்ள மேலைக் கோபுரமும் அவனால் கட்டப்பட்டதாகும். மேலும் அவன் பிறந்த சித்திரைத் திங்கள் மூலநாளில் திருவா னைக்கா திருக் கோவிலில் 'சேரனை வென்றான்' என்னும் திருவிழா வொன்று ஆண்டுதோறும் நடத்த மூன்று ஊர்களை நிவந்தமாக அளித்தான். மதுரை மீனாட்சியம்மன் கோவிலின் கீழைக் கோபுரம் அமைத்தவனும் இவனே. குலசேகர பாண்டியன் (1168-1175) அக்கோவிலின் சுவாமி சன்னதி, அர்த்த மண்டபம் மணிமண்டபம், சன்னிதிக் கோபுரம் ஆகியவைகளைக் கட்டினான். மாறவர்மன் சுந்தரன் (1216-1238) கிழக்குக் கோபுரம், அம்மன் கோவில் மண்டபம், திருமதில் போன்ற திருப்பணிகள் செய்தான், பராக்கிரம பாண்டியன் (1315-1347) மேலைக் கோபுரம் கட் டினான்.[11] இப்படியாகப் பாண்டியர் ஆதரவில் மீனாட்சியம்மன் கோவில் விரிவடைந்தது. இவ்வாறே திருநெல்வேலி நெல்லை யப்பர் கோவில், இராமேஸ்வரம், கன்னியாகுமரி போன்ற பெரிய கோவில்களும் மற்றுமுள்ள பல சிறிய கோவில்களும் மக்க ளிடமும் மன்னரிடமும் பல நிவந்தங்களையும் தானங்களையும் பெற்று வளர்ந்தன. இதன் காரணம் கொண்டு கட்டட அமைப் பிலும் வழிபாடு திருவிழாக்களின் எண்ணிக்கையிலும் அவை விரி வடைந்து சைவ சமய வளர்ச்சிக்குக் கேந்திரஸ்தானங்களாய்த் திகழ்ந்து வந்துள்ளன.

தெய்வ வழிபாட்டிலும் கோவில்களைப் போற்றுவதிலும் பாண்டிய அரசிகள் பின்வாங்கவில்லை. அவர்கள் அவ்வப்போது வழங்கிய நிவந்தங்கள் கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டுள்ளன. திருவண்ணாமலைக் கோவிலுக்கு விக்கிரம பாண்டியனின் (1283) மனைவி தனது பெயரில் 'உலக முழுதுடையாள் சந்தி' என்னும் சந்தியை ஏற்படுத்தினாள். அவ்வாறே வீரபாண்டியனின் மனைவி வடஆர்க்காடு திருவத்திபூரிலுள்ள சிவன் கோவிலுக்குப் பல

[9] Ep. Ind. IX-p. 92-93

[10] SII-IV-pp 620-630.

[11] The Great Temple of Madurai. (Publication by Renovation Committee, 1970), p 70

விலையுயர்ந்த தானங்களும், அங்குள்ள நடராசப் பெருமானுக்குப் பொன் ஆபரணங்களும் அளித்தாள்.[12]

## சைவ மடங்கள்

சைவ சமயத்தில் பல உட்பிரிவுகள் இருந்தன. பாசுபதர், காபாலிகள், காளாமுகர் போன்ற பிரிவுகள் வெகுகாலமாக இந்திய நாட்டின் பல பகுதிகளில் இருந்துவந்தன. அவர்களுடைய கொள்கைகளும் வழிபாட்டு முறைகளும் கோவில் வழிபாட்டு முறையிலிருந்து சற்று வேறுபட்டு இருந்தன. மக்களிடையே வெறுப்பூட்டும் வகையில் அவை அமைந்தனவாகச் சொல்லப்படுகின்றன. காஞ்சி, திருவொற்றியூர் போன்ற சில இடங்களில் இவை செல்வாக்குப் பெற்றிருந்ததாகவும் ஆதிசங்கரரின் முயற்சியால் பெரும்பாலும் இவை அடக்கப்பட்டன என்றும் சொல்லப்படுகிறது. 9, 10, 11ஆம் நூற்றாண்டுகளிலும் சிற்சில இடங்களில் மட்டும் இவை தொடர்ந்து இருந்துவந்தன. புதுக்கோட்டை, கொடும்பாளூர் பகுதியில் பாசுவதர் வகையைச் சார்ந்த சைனர்கள் கணிசமாக இருந்தனர் என்று தெரிகின்றது. கொடும்பாளூரிலுள்ள காளாமுகமடத்திற்கு மதுரையைச் சார்ந்தவரும் சாஸ்திரங்களை நன்கு அறிந்தவருமான மல்லிகார்ஜுனர் என்னும் முனிவர் தலைமை வகித்தார். அங்குள்ள பல சீடர்களுக்கும் காளாமுகத் துறவிகளுக்கும் உணவுக்காக அரசன் பூதிவிக்கிரமகேசரி பதினொரு கிராமங்களைத் தானமாக அளித்தான்.[13]

இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள திருச்சுளிக் கிராமத்திலும் 'மகாவிரதர்கள்' என்று சொல்லப்பட்ட காளாமுகர்களுக்கு ஒரு மடம் இருந்தது.[14] குற்றாலத்திலும் 'பாசுபத மக்கள்' இருந்ததை ஒரு கல்வெட்டுக் குறிக்கின்றது.[15] ஆனால், பொதுவாகப் பாண்டிய நாட்டில் இவ்வகைச் சைவர்களின் செல்வாக்கு மிகக்குறைவாகவேதான் இருந்தது எனலாம்.

பன்னிரண்டு, பதின்மூன்றும் நூற்றாண்டுகளில் சைவ சமயத்தில் சைவ சித்தாந்தம் என்னும் கொள்கை ஒரு சாராரிடமிருந்து செல்வாக்குப் பெற்றது. இது ஆகமங்களை அடிப்படையாகக் கொண்டு உருவான சித்தாந்தமாகும். திருமூலர் இயற்றிய திருமந்திரத்தில் இதன் அடிப்படைக் கொள்கைகள் காணப்படுவ

[12] 252 and 253 of 1939 40
[13] ARE 1915-p. 101
[14] 423 of 1914
[15] SII-XIV-66

தாகக் கருதப்படுகின்றது. அவற்றைக் கோவையாக எடுத்துரைத்தவர் மெய்கண்ட தேவராவார். பதின்மூன்றும் நூற்றுண்டில் தொண்டை நாட்டில் வாழ்ந்த இவர் 'சிவஞானபோதம்' என்ற நூலில் சைவசித்தாந்தக் கொள்கைகளை விவரித்துள்ளார். பாண்டிய நாட்டிலும் சில ஊர்களில் மடங்கள் அமைத்து இக்கொள்கைகள் பரப்பப்பட்டு வந்தன என்று இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டு மூலம் அறியலாம். திருநெல்வேலி நெல்லையப்பர் கோவிலில் 'திருஞானம்' என்ற சைவ சித்தாந்த நூலைத் தினமும் பதினொரு சிஷ்யத் துறவிகள் (தபஸ்விகள்) ஓதுவதற்காகக் கட்டளை வழங்கப்பட்டது.[16] இத்துறவிகள் பின்வரும் மடங்களைச் சேர்ந்த சீடர்கள் எனக் குறிக்கப் பெறுகிருர்கள்.

1. விஷகண்ட தேவசந்தான மடம்
2. பட்ட வீர சந்தானம்
3. திருவாரூர் மடம்
4. பிக்ஷா மடம்
5. மதுரை மடம்
6. அழகிய நாயக சந்தானம் (திருநெல்வேலி)

இவையெல்லாம் சைவ சிந்தாந்தப் பிரிவைச் சேர்ந்த மடங்களெனக் கருதப்படுகின்றன. பிக்ஷாமடம் என்பது திருப்பத்தூர்க் கோவிலின் கிழக்கு வீதியில் இருந்ததாகக் கி.பி. 1281 ஆண்டைச் சார்ந்த மற்றொரு கல்வெட்டு மூலம் அறிகிறோம். சர்வேச்சுரர் என்பவர் அதற்குத் தலைமை வகித்தார். அகோரசிவாச்சாரியர், ஈசான சிவாசாரியார் போன்றோரும் இம் மடத்துடன் கொண்ட தொடர்பை நோக்கும்போது இது சைவ சிந்தாந்தப் பிரிவைச் சார்ந்த மடமாகத்தான் இருந்திருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது.[17] கோலகி தர்மத்தைச் சார்ந்த ஒரு பிக்ஷாமடமும் 16ஆம் நூற்றுண்டுக் கல்வெட்டில் குறிக்கப்படுகின்றது. பாண்டிய நாட்டில் சில கோவில்கள் இவர்களது செல்வாக்கில் இருந்தன.[18] குறிப்பாகத் திருப்பத்தூரில் கோலகி மடத்தின் கிளையொன்று இயங்கி வந்தது.[19] கோலகிமடம் என்பது பாசுபத

[16] 427 & 463 of 1929-30

[17] **ARE** 1929 30 p 82

[18] 178 of 1929 30

[19] 323 of 272 of 1905. T. V. Mahalingam. Administration and Social Lile under Vijayanagar Pt II-p. 234 (1975. பிகஷாமடம் அல்லது லசஷித்யாயிமடம் என்பது கோலகி தர்மத்தைச் சார்ந்ததாகக் கூறப்படுகிறது.

'சுத்தசைவம்' என்று சொல்லக்கூடிய பிரிவைச் சார்ந்தது. ஆந்திரம், கர்நாடகம், போன்ற பகுதிகளிலும், தமிழகத்தில் திருப்பத்தூர், மதுரை போன்ற இடங்களிலும் கோலகி மடத்தின் கிளைகள் இயங்கி வந்தன[20] என்று தெரிகின்றது. வாரணசி (காசி) காஷ்மீர், ஆர்யதேசம் (வடநாடு) போன்ற பகுதிகளி லிருந்து பல சைவர்கள் தமிழகத்தின் சில இடங்களில் வந்து தங்கினர். சேரமாதேவியில் சிலர் அவ்வாறு தங்கியிருந்ததைப் பற்றி ஒரு கல்வெட்டு அறிவிக்கின்றது. சமயத்துறையில் நாட்டின் மற்றப் பகுதிகளுடன் தமிழகம் கொண்டிருந்த தொடர்பை இது உணர்த்தும்.

ஆக, மடங்கள் சமய வளர்ச்சிக்குப் பெருந்துணையாகப் பணி யாற்றின. பல சமய குரவர்களும் சிந்தனையாளர்களும் மடங்கள் மூலமாக சிறந்த பணியாற்றியுள்ளனர். சில சமயங் களில் சமயப் பூசல்களையும் மடங்கள் வளர்த்துவிட்டன என்று லும், பொதுவாக சமயக் கோட்பாடுகளை மக்களுக்கு உணர்த்து வதும், மக்களுக்கு சமயத்தொண்டு செய்வதுமே அவற்றின நோக்கமாக இருந்தன என்பதில் ஐயமில்லை.

**வைணவம் :** திருமால் வழிபாடு தொன்றுதொட்டுத் தமிழ கத்தில் நிலவி வந்ததைத் தொல்காப்பியம், புறநானூறு, பரிபாடல், சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற பழம் பெரும் தமிழ் நூல்களின் வாயிலாக அறியலாம்.

'காதல் கொண்டு கடல்வண்ணன் புராண
மோதினன் நாரணன் காப்பென் றுரைத்தனன்'
(மணி. 27, 98-9)

என்று மணிமேகலை ஆசிரியர் கூறியுள்ளபடி திருமாலைப்பற்றிய புராணங்கள் அக்காலத்திலேயே பெருவழக்குப் பெற்றிருந்த செய்தியை யறியலாம். பரிபாடலில் திருமாலைப்பற்றிச் சிறப் பித்துப் பாடப்பட்டுள்ள பல பாடல்கள் உள்ளன. பாண்டிய அரசன் கடலுண்மாய்ந்த இளம் பெருவழுதி திருமாலிருஞ்சோலை மலையின் (அழகர் மலை) சிறப்பையும் அங்கு எழுந்தருளியிருக்கும் கண்ணபிரான், பலதேவன் ஆகிய இருவரது பெருமைகளையும் நன்கு விளக்கிப் பாடியுள்ளார்.[21] மதுரையிலுள்ள ஆயர்பாடியில் கண்ணபிரான், பலராமன், நப்பின்னை போன்றோரின் வழிபாடு

[20] இதைப்பற்றிய விவரங்களுக்குப் பார்க்க: The Golaki School of Saivism in Tamil Country, by EGL Swamy. JIH Vol.
[21] பரிபாடல்-15

நிலவியிருந்ததைச் சிலப்பதிகார ஆய்ச்சியர் குரவைப் பாடல்கள் உணர்த்தும்.[22] அறிஞர் மு. இராகவய்யங்கார் காட்டியுள்ளபடி சங்ககாலத்தில் வைணவம், சைவம் போன்ற வைதிக மதங்களை அரசர்களும் மக்களும் போற்றிவந்தனர்.[23] சமண, பௌத்த மதங்கள் தென்னாட்டில் சிறிய அளவில் பரவியிருந்னவே தவிரப் பெரும்பாலான மக்கள் வைதிக மதங்களையே பின்பற்றி வந்தனர். ஆனால், 5-6 ஆம் நூற்றாண்டுகளில் புறச் சமயங்களின் செல்வாக்கு மேலோங்கி வைதிக மதங்கள் தளர்வடையத் தொடங்கின. முன்னே கூறியுள்ளபடி புறச்சமயங்களின் வளர்ச்சியைத் தடுக்கவும் பழைய தர்மங்களை மீண்டும் நிலைபெறச் செய்யவுமே சைவ நாயன்மார்களும் வைணவ ஆழ்வார்களும் பக்தி இயக்கத்தைப் பரவச் செய்தனர். இப் பக்தி இயக்கம் வைணவ நெறியிலும் ஒரு புத்துணர்ச்சியைத் தோற்றுவித்தது. வைணவ ஆழ்வார்கள் தங்களது தூய பக்தியாலும் அழகிய பாக்களாலும் மக்களிடையே திருமாலின் பெருமைகளை எடுத்துரைத்தனர். இவர்கள் தமிழ் நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் பல இனப்பிரிவுகளிலும் பிறந்தவர்கள். ஆழ்வார்கள் பன்னிருவருள் நால்வர் பாண்டிய நாட்டில் அவதரித்தவர்கள். ஆழ்வார்களுக்குள் நடுநாயகமாக விளங்குபவரும், ஸ்ரீவைணவ குலத்தின் தலைவர் (பிரபன்ன ஜனகூடஸ்தர்) எனப் போற்றப்படுபவருமான நம்மாழ்வார், அவரது சீடர் மதுரகவி ஆழ்வார், பெரியாழ்வார் அவரது மகள் ஆண்டாள் இந் நால்வரையும் பெற்றெடுத்த பெருமை பாண்டிய நாட்டைச் சாரும். இந்நான்கு வைண அடியார்களின் பெருமைகளைப் பற்றியும் அவர்கள் பக்தி இயக்கத்திற்கு ஆற்றிய தொண்டுகளைப் பற்றியும் இங்குச் சற்று ஆராய்வோம்.

ஆழ்வார்களில் தலைசிறந்தவரெனக் கருதப்படுபவர் நம்மாழ்வார் ஆவார். இவர் ஸ்ரீவைணவ குலத்தின் தலைவரெனப் போற்றப்படுபவர். திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள குருகூர் என்னும் ஊரில் இவர் அவதரித்தார். இவர் பெயரைக் கொண்டே அத்தலம் ஆழ்வார் திருநகரி என்று வழங்கப்பட்டு வருகிறது. இவருக்குக் காரி மாறன், பராங்குசன், சடகோபன் என்ற பெயர்களும் உண்டு. இவர் தமது 35ஆவது வயதில் குருகூரிலுள்ள ஒரு புளிய மரத்தடியில் யோகநிஷ்டையில் அமர்ந்து மெய்ஞானம் பெற்ற நிலையில் பாடிய பாடல்களே 'திருவாய்மொழி' என்னும் அமுதமொழியாகும். அப்புளியமரம் இன்றும் ஆழ்வார் திருநகரியில் 'திருப்புளி ஆழ்வாரென' வைணவர்களால் கொண்டாடப்பட்டு வருகிறது. அவருடைய செந்தமிழ்ப்

22 சிலப்பதிகாரம்-ஆய்ச்சியர் குரவை

23 மு. இராகவய்யங்கார்: 'ஆழ்வார்கள் காலநிலை', ப. 12

பாடல்களில் மிக ஆழ்ந்த இறையனுபவத்தையும் மிக உயர்ந்த தத்துவஞானத்தையும் காண்கிறோம். இவரது திருவாய்மொழி வேதத்திற்கு ஒப்பாகக் கருதப்படுகிறது. 'வேதம் தமிழ் செய்த மாறன் சடகோபன்' என்று போற்றப்படுகிறார்.

''ஆன்ற தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற
முதல்தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த
இதத்தாய் இராமானுசன்'' என்று

நம்மாழ்வாரைப் பற்றியும் இராமானுசரைப் பற்றியும் போற்றிப் புகழ்ந்துள்ளார்கள். அவரது திருவாய்மொழியைப் பாடி அனுபவித்து வியாக்கியானம் எழுதுவதைப் பெரும் பேறாகப் பல வைணவ ஆச்சாரியர்கள் கருதினர். இராமனுச சித்தாந்தத்திற்கு அடிப்படையாய் அமைந்தது நம்மாழ்வாரின் திருவாய்மொழியே யென்பதை வைணவ நூல்கள் கூறும். இராமனுசரை 'மாறன் அடி பணிந்துய்ந்தவன்' என்றும் 'தென்குருகைப்பிரான் பாட்டென்னும் வேதம் பசுந்தமிழ் தன்னைத் தன் பக்தியென்னும் வீட்டின் கண் வைத்த இராமனுசன்' என்றும் இராமானுஜ நூற்றந்தாதி கூறுகிறது. வைணவ ஆச்சாரியரான மணவாள மாமுனிகள் திருவாய்மொழியின் ஏற்றத்தைத் தமது 'திருவாய் மொழி நூற்றந்தாதி' என்னும் நூலில் விவரித்துப் பேசுகிறார். திருவாய்மொழியின் சாரத்தை வடமொழியில் எடுத்துரைத்த வேதாந்த தேசிகர் என்னும் மற்றொரு பெரியார் அதற்குத் 'திராவிடோபநிஷத்சாரம்' என்று பெயரிட்டார். கம்பனும் நம்மாழ்வார் மீது பேரன்பு கொண்டவர். அவர் எழுதிய 'சடகோபர் அந்தாதி' என்னும் நூலில் திருவாய்மொழியின் ஏற்றத்தை நன்கு விளக்கியுள்ளார். வைணவக் கோவில்களில் திருவாய்மொழி பாடப்பட்டு வந்ததைப் பெருமிதத்துடன் கூறுகிறார். இவற்றால் நம்மாழ்வாரும், அவரது திருவாய்மொழியும் ஸ்ரீவைணவர்களது உள்ளத்தில் உன்னத இடத்தை வகித்து வந்திருப்பதை அறியலாம். விஷ்ணு கோவில்களில் நம்மாழ்வாருக்குப் படிமம் வைத்துத் தொழுதலும் திருவிழாக்கள் கொண்டாடுவதும் பிரபலமாயிற்று. பெரியாழ்வார் தமது மகள் ஆண்டாளின் திருமண விஷயம்பற்றி நம்மாழ்வாரைக் கலந்து யோசித்தார் என்று திவ்விய சூரிசரிதம் குறிக்கின்றது. இதனால் பெரியாழ்வாரும் நம்மாழ்வாரும் சம காலத்தவரெனத் தெரிகிறது. நம்மாழ்வாரின் சீடரான மாறன் காரி அல்லது மதுரகவி கி. பி. 770-ல் நெடுஞ்சடையைப் பராந்தகனின் அமைச்சராகப் பணியாற்றியவராதலால் நம்மாழ்வார், பெரியாழ்வார் காலத்துக்கு முன்பே அதாவது பராங்குச மாறவர்மன் காலத்திலேயே வாழ்ந்திருக்க வேண்டும். நம்மாழ்வாருக்கு 'மாறன்', 'பராங்

குசன்' என்ற பெயர்கள் வழங்கியதை நினைவில் வைத்துப் பார்த்தால் இது பொருத்தமுடையதாக உள்ளது. ஆதலால்; நமது கணிப்புப்படி நம்மாழ்வார் அரிகேசரிபராங்குச மாறவர்மன் காலத்தில் பெரும்பாலும் வாழ்ந்தவர். அவனது மகன் நெடுஞ் சடையப் பராந்தகன் அல்லது முதலாம் வரகுணன் காலத்திலும் சிறிது காலம் வாழ்ந்திருக்கக்கூடும்.[24]

நம்மாழ்வாரின் சீடரான மாறன்காரி அல்லது மதுரகவியும் அரிகேசரி பராங்குசமாறவர்மன் காலத்தில் வாழ்ந்தவர். அவனது மகன் நெடுஞ்சடையப் பராந்தகனிடம் மந்திரியாகப் பணியாற்றியவர். அவனது ஆட்சிக் காலத் தொடக்கத்திலேயே அதாவது கி. பி. 773 ஆண்டிலேயே இறந்துவிட்டதாகக் கல்வெட்டுக் குறிப்பு உள்ளது. இவனது காலத்தில் வாழ்ந்த வர்கள் பெரியாழ்வாரும் ஆண்டாளும். இவ்வரசன் தன்னைப் 'பரமவைஷ்ணவனும்தானுகி' என்பதனுல் பெரியாழ்வாரைக் கொண்டாடிய அரசன் இவனே என்று கொள்வது பொருத்த முடையதாக இருக்கும். இவனது மகன் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் காலத்தில் (கி, பி. 815-862) சிறிது காலம் பெரியாழ்வார் தொடர்ந்து வாழ்ந்திருக்கக்கூடும் என்பதில் தடையில்லை.

நம்மாழ்வாரின் சீடர் மதுரகவியாழ்வார் திருநெல்வேலி மாவட்டம் திருக்கோளூர் என்னும் ஊரில் அந்தணர் குலத்தில் பிறந்தவர்; பாண்டியர் அவையில் உத்தர மந்திரியாகப் பணி புரிந்தவர். அவர் நம்மாழ்வாரைப் பற்றிப் பாடியுள்ள பத்துப் பாசுரங்கள் மிக அழகு வாய்ந்தவை. நம்மாழ்வாரையே தெய்வ மாகக் கொண்டாடி அவரது பாடல்களைப் பாடிக்கொண்டிருந்த தாக அவர் கூறியுள்ளார்.

> 'தேவுமற் றறியேன் குருகூர் நம்பி
> பாவி னின்னிசை பாடித் திரிவனே' என்கிருர்,

நம்மாழ்வார்க்கே தாம் அடிமை பூண்டு பெற்ற தெளிவை

> 'வேதத்தி னுட்பொருள்
> நிற்கப் பாடிஎன் நெஞ்சுள் நிறுத்தினுன்
> தக்க சீர்ச்சட கோபன்என் நம்பிக்கு
> ஆள்புக்க காதல் அடிமைப் பயனன்றே',

என்ற பாசுரத்தில் அவர் கூறியுள்ளார். ஆச்சாரியார் மூல மாகவே இறைவனை அடைதல் எளிது என்று ஸ்ரீவைஷ்ணவக்

[24] மணவாள மாமுனி அவரது 'உபதேச ரத்தின மாலை'யில் முதலாழ்வார் கள் திருமழிசை ஆழ்வார் இந் நால்வருக்கு அடுத்து நம்மாழ்வாரை வரிசைப் படுத்திக் கூறுவது இங்கு நோக்கத் தக்கது ஆழ்வார்கள் காலநிலை, ப. 20

கொள்கைக்கு மதுரகவி ஆழ்வார் நல்ல எடுத்துக்காட்டாகப் போற்றப்படுகிறுர்.

ஸ்ரீவில்லிபுத்தூரர் வேயர் குலத்தில் அவதரித்தார் விஷ்ணு சித்தர் என்னும் பெரியாழ்வார். அவ்வூர்க் கோவிலில் திருநந்தவனம் திருமாலைக் கைங்கர்யம் செய்துவந்தார். ஸ்ரீவல்லபன் என்னும் பாண்டிய அரசனுல் சமய விசாரம் செய்ய மதுரைக்கு அழைக்கப்பட்டார் என்றும் அங்கு பலருடன் வாதம் செய்து திருமாலின் பெருமையை நிலைநாட்டி அரண்மனையில் கட்டிய பொற்கிழியைப் பெற்றுர் என்றும் வைணவ மரபுச் செய் திகள் கூறுகின்றன. இறைவனுக்கே 'பல்லாண்டு' பாடியதால் பெரியாழ்வார் என்ற பெயர் இவருக்கு இடப்பட்டது. 'பாண் டியன் கொண்டாடப்பட்டர்பிரான்' என்ற பெருமையும் இவருக்கு வழங்கிற்று. முன்னே காட்டியபடி இவ்வாழ்வார் நெடுஞ்சடையப் பராந்தகன் காலத்திலும் அவனது மகன் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் காலத்திலும் வாழ்ந்தவர். இவர் ஸ்ரீவில்லிபுத்தூரர்க்கே மீண்டும் சென்று கோயில் கைங்கரியம் புரிந்துகொண்டு பரம்பரை பரமபாகவதராய் வாழ்ந்து வந்தார். அவர் காலத்தில் திருக்கோட்டியூர்க் கோவிலில் பெருந்தொண்டு செய்து வந்தவரும், பாண்டிய அரசனுல் போற்றப்பட்டவரு மான செல்வ நம்பி போலவே இவரும் இறைவன் பணியில் ஈடு பட்டதை அவரது பாடலில் அவரே பின்வருமாறு கூறுவதைக் காணலாம்.

'அல்வழக் கொன்றுமில்லா அணிகோட் டியர்கோன்
அபிமான துங்கண்

செல்வனைப்போலத் திருமாலே நானும்
உனக்குப் பழவடியேன்.'

இவரது பாடல்களின் தொகுப்பு 'பெரியாழ்வார் திருமொழி' என்று திவ்வியப் பிரபந்தத்தின் முக்கியப் பகுதியாக விளங்கு கிறது. இவர் தம்மை யசோதைப் பிராட்டியாக நினைத்துக் கண்ணபிரானின் பாவ லீலைகளில் ஈடுபட்டுப் பாடிய பிள்ளைத் தமிழ்ப் பாடல்கள் ஒப்பற்ற அழகு வாய்ந்தவை. தவிர ஸ்ரீவில்லி புத்தூர், திருமாலிருஞ்சோலை, திருக்கோட்டியூர் போன்ற பகுதி களில் உறையும் திருமாலைப்பற்றி அழகிய செந்தமிழ்ப் பாக்களைப் புனைந்துள்ளார்'[24அ] பாண்டிய அரசன் நெடுமாறன் திருமா

[24-அ] அழகர்மலையைப் பற்றி 'அழகனலங்காரன் மலை, குலமலை கோலமலை குளிர்மாமலை கொற்றமலை நிலமலை நீண்டமலை திருமாலிருஞ்சோலைமலை' என்று அழகாகப் பாடியுள்ளார்

லிருஞ்சோலைக்குச் செய்த தொண்டினைப் போற்றிப் பாடியுள்ளார்.

> 'தென்கூடற் கோன் தென்னன் கொண்டாடத்
> தென் றிரு மாலிருஞ் சோலையே'

என்று பெருமையுடன் பாடுகிறார். மேலும் இவர் பாண்டிய அரசர்களின்மீது கொண்டிருந்த பெருமதிப்புப் பின்வரும் பாடலில் காணலாம்.

> 'பருப்பதத்துக் கயல்பொறித்த பாண்டியர் குலபதிபோல்
> திருப்பொலிந்த சேவடியென் சென்னியின்மேற் பொறித்தாய்'

பெரியாழ்வாரின் 'திருப்பல்லாண்டு' போன்ற பாடல்களை வைணவர்கள் கோவில்களிலும் வீடுகளிலும் தினமும் அனுசந்திக்கின்றனர்.

பெரியாழ்வாரின் திருமகளான ஆண்டாள் குழந்தைப் பருவத்திலேயே திருமாலிடம் பேரன்பு பூண்டு ஒழுகியவள். திருவரங்கச் செல்வரான அழகிய மணவாளனையே திருமணஞ் செய்து கொண்டதாய் அவர் அற்புதப் பாடல்களில் எடுத்துரைக்கின்றார். இவருக்குக் 'கோதைநாச்சியார்', 'சூடிக்கொடுத்த சுடர்க்கொடி' என்ற பெயர்கள் சிறப்புப் பெயர்களாக வழங்குகின்றன. இவர் பாடியருளிய தீந்தமிழ்ப் பாடல்களான 'திருப்பாவையும்', 'நாச்சியார் திருமொழியும்' நாலாயிரத்திவ்வியப் பிரபந்தத்துள் சிறப்பு மிக்கப் பகுதிகளாகத் திகழ்பவை. திருப்பாவைப் பாசுரங்கள் முப்பதும் ஆயர்குல மகளிர் மார்கழி நீராட்டத்திற்காகத் தோழியரைத் துயிலெழுப்பி அழைப்பதாகப் பாடப்பட்டவை, இளம் பெண்கள் கண்ணனை நாயகனாக அடையவும், நாடு செழிக்கவும் வேண்டி மார்கழி மாதம் பாவை நோன்பு நோற்றதைப் பின்னணியாகக் கொண்டு பாடப்பட்ட அற்புதப் பாடல் திருப்பாவை. எல்லா வைணவ ஆலயங்களிலும் மார்கழி மாதம் தினமும் காலையில் திருப்பாவைப் பாடல்கள் ஓதப்பட்டு வருகின்றன. இவரது நாச்சியார் திருமொழியில் உள்ள 143 பாசுரங்களிலும் திருமாலையே தனக்குரிய மணாளனாக வரித்துக்கொண்டு இவர்காட்டும் பிரேமை, காதல் பெருவெள்ளமாய் கரைபுரண்டோடும் அழகைப் பார்க்கலாம். இதோ அதில் ஒரு பாடல் :

> 'மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத
> முத்துடைத் தாமம் நிரைதாழ்ந்த பந்தற்கீழ்
> மைத்துனன் நம்பி மதுசூதன் வந்தென்னைக்
> கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழீநான்'

ஆண்டாளின் அழகிய பாடல்கள் வைணவ இல்லங்களிலும் கோவில்களிலும் அன்றாடம் பாடப்படுகின்றன. 'ஆண்டாளின் நாச்சியார் திருமொழி வைணவர்களின் திருமணக் காலங்களில் பாடப்படுகின்றன. திருமாலின் துணைவியாகவே ஆண்டாளைப் போற்றி அவருக்கு எல்லாக் கோவில்களிலும் பெருமாளின் இடப் பக்கத்தில் தனிச்சன்னதி ஏற்படுத்தினர். பங்குனி உத்தரமன்று ஆண்டாளுக்கும் பெருமாளுக்கும் திருக்கலியாண உற்சவம் எல்லா விஷ்ணு ஆலயங்களிலும் கொண்டாடப்படுகின்றது.

மேலே குறிப்பிட்ட நான்கு ஆழ்வார்களும் பாண்டிய நாட்டில் அவதரித்தவர்கள். மற்ற ஆழ்வார்களில் பலரும் பாண்டிய நாட்டிலுள்ள வைணவத் தலங்களை மங்களாசாசனம் செய்து பாமாலை சூடியுள்ளனர். முதலாழ்வார்கள், குலசேகர ஆழ்வார், திருமங்கை மன்னன் போன்றோர் பாண்டிய நாட்டி லுள்ள பல பதிகள் மீது மனமுருகித் தீந்தமிழ்ப் பாக்களைப் புனைந் துள்ளனர். மதுரை நகரிலுள்ள கூடலழகர் கோயிலைக் 'கூடல் கோயில் கொண்ட அழகியவர்' என்று திருமங்கை ஆழ்வார் பாடி யுள்ளார். திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள திருக்குறுங்குடியில் தான் இவ்வாழ்வார் மறைந்ததாகச் சொல்லப்படுகிறது. வயல் நடுவில் ஆழ்வாரின் சன்னதி உள்ளது.

இவ்வாறு பாண்டிய நாட்டில் ஆழ்வார்களின் மங்களா சாசனம் பெற்ற திருப்பதிகள் பதினேழு உள்ளன. இவற்றை வைணவர்கள் 'திவ்விய தேசம்' எனப் போற்றித் தொழுகின் றனர். குறிப்பாக நம்மாழ்வார் பிறந்த ஆழ்வார் திருநகரியும் அதையடுத்துள்ள ஸ்ரீவைகுண்டம், வானமாமலை, திருக்கோளூர் போன்ற ஒன்பது கோவில்கள் (நவதிருப்பதிகள்), திருமாலிருஞ் சோலை (அழகர் மலை), ஸ்ரீவில்லிபுத்தூர், திருக்கோட்டியூர், தர்பசயனம், திருக்குறுங்குடி போன்ற தலங்கள் மிகவும் சிறப் பித்துப் போற்றப்படுகின்றன.

ஆழ்வார்களின் வழியைப் பின்பற்றி, ஸ்ரீவைணவத்தைப் பரவச் செய்யப் பல பெரியோர்கள் தோன்றினர். அவர்களை ஆச்சாரியர் என்று வைணவர் போற்றுவர். அவர்களில் முதலில் தோன்றியவர் ஸ்ரீமந் நாதமுனிகள் என்பவர். ஆழ்வார்கள் பாடிய நாலாயிரப் பாடல்களை முதன்முறையாகச் சேகரித்துத் தொகுத்தவரும் இவரே. நம்மாழ்வாரின் ஒரு பாடலைக் கேட்ட இப்பெரியார், மற்ற ஏனைய பாடல்களையும் கேட்டறிய ஆவல் கொண்டு ஆழ்வார் திருநகரிக்குச் சென்று யோக நிட்டையில் இருந்த நம்மாழ்வாரிடமிருந்து அப் பாடல்களைப் பெற்றார் என்று சொல்லப்படுகிறது. இவர் ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்.

வைணவ ஆச்சாரியர்களுள் தலைசிறந்தவர் இராமானுஜரே. (கி. பி. 1017-1137) ஆழ்வார்கள் காட்டிய பிரபத்தி மார்க்கத்திற்குத் தத்துவ அடிப்படையை நிறுவினார். ஞானமார்க்கத்தை விடப் பக்திமார்க்கமும் சரணாகதி மார்க்கமுமே பரமனைக் காட்ட எளியவழி என்றார். கோவில் வழிபாடு, கோவில்கைங்கரியம் அல்லது தொண்டு, பாகவதத் தன்மையின் ஏற்றம் போன்ற அறிவுரைகளை அவரது போதனைகளில் காணலாம். சங்கரரின் மாயாவாதம், நிற்குணப்பிரம்மம் போன்ற கொள்கைகளை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. இறைவன் எல்லாக் கலியாண குணங்களும் பொருந்தியவன் என்றும், மனிதனுக்கு இரங்கி அருள்புரிந்து ஆட்கொள்ளக் கடவுள் காத்திருக்கிறார் என்ற கொள்கையையும் இராமானுசர் தமது விசிஷ்டாத்வைதக் கொள்கையின் மூலம் விளக்கினார். இவர் தொண்டை நாட்டில் பிறந்து, சோழ நாட்டில் (திருவரங்கத்தில்) நெடுங்காலம் வாழ்ந்த போதிலும் பாண்டிய நாட்டுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர். நம்மாழ்வார் பாடல்களிலே மிக்க ஈடுபாடு கொண்டவர் என்றும் அப்பாடல்களின் வழியைப் பின்பற்றியே வேதம், உபநிடதம் இவற்றிற்கும் விளக்கம் கண்டார் என்றும் கூறப்படுகின்றது. மேலும் வைணவர்களால் சிறப்பாகக் கொண்டாடப்படும் 'திருமந்திரார்த்தம்' என்னும் உயர்ந்த மந்திரத்தை பாண்டிய நாட்டிலுள்ள திருக்கோட்டியூரில் வாழ்ந்து வந்த திருக்கோட்டியூர் நம்பிகளிடம் பல முறை நடந்து கேட்டறிந்தார் எனவும் அவர் கேட்ட உயர்ந்த தத்துவப் பொருளை மக்களெல்லோரும் கேட்டு உய்விக்க வேண்டி திருக்கோட்டியூர் கோவில் விமானத்தின் மீது ஏறி அறிவித்தார் என்றும் சொல்லப்படுகிறது. இந் நிகழ்ச்சியைக் கொண்டே திருக்கோட்டியூர் வைணவர்களுக்கு முக்யத்தலமாகக் கொண்டாடப்படுகிறது.

இராமானுசருக்குப் பின்னே வந்த வைணவப் பெரியார்களில் திருவாய்மொழிப்பிள்ளை என்பவர் 14ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். அவர் நம்மாழ்வார் அவதரித்த ஆழ்வார் திருநகரியில் பிறந்தவர். நம்மாழ்வாரது திருவாய் மொழியின் ஈரச் சொற்களிலே தோய்ந்து படிந்தவராதலால் திருவாய்மொழிப்பிள்ளை என்னும் சிறப்புப் பெயர் பெற்றவர். திருக்குருகூரில் இராமானுசருக்குக் கோயில் எடுப்பித்து, இராமானுச சதுர்வேதிமங்கலம் என்ற ஒரு வீதியும் சமைத்து இராமானுசப் பக்தர்களைக் குடியமர்த்தினார்.

இவரது சீடர்களில் ஒருவரும் வைணவ ஆசாரியர்களுக்குள்ளே கடைசியாக வந்தவருமான மணவாள மாமுனிகளும்

(கி.பி. 1369-1440) பாண்டிய நாட்டவராவார். ஆழ்வார், ஆச்சாரியார் வரலாற்றை 'உபதேசரத்தின மாலை' என்னும் அழகிய தமிழ்ப் பாடல்களாகப் புனைந்துள்ளார். நம்மாழ்வாரின் திருவாய்மொழியின் சிறப்பை நூறு பாடல்களாகப் பாடியுள்ளார். அதற்குத் 'திருவாய்மொழி நூற்றந்தாதி' என்று பெயர். வைண வர்களில் தென்கலை வகுப்பினர் இவரை இராமானுசருக்கு அடுத்த படியாக வைத்துக் கொண்டாடுவர். இராமானுச சித்தாந்தத் தைத் தமிழ் நாட்டிலும் வெளி மாநிலங்களிலும் பாமர மக்க ளிடமும் பரவச் செய்த பெருமை இவருக்கு உண்டு. ஆழ்வாரது உற்சவங்கள், கோவில்களிலே திவ்வியப்பிரபந்தம் அனுசந்தித்தல் போன்ற விஷயங்களில் அதிக ஊக்கம் காட்டினர். இவர்களது சீடர்கள் (அஷ்டதிக்கஜங்கள்) ஆங்காங்கே இவரது போதனை களைப் பிரபலப்படுத்தினர். அவர்களுள் முக்கியமானவர் வான மாமலை ஜீயர் என்பவர்.

### வைணவ மடங்கள்

வைணவ சமயத்தின் வளர்ச்சியில் மடங்களுக்கும் ஜீயர் களுக்கும் முக்கிய பங்கு உண்டு. வைணவ மடங்களுள் குறிப் பிடத்தக்கவை இரண்டு. அவை அகோபில மடம், வானமாமலை மடம் என்பவையாகும். வானமாமலை மடத்திற்குத் தலைமை ஸ்தானம் திருநெல்வேலி மாவட்டம் வானமாமலையிலுள்ளது. இதை ஏற்படுத்தியவர் மணவாளமாமுனிகளின் சீடருள் ஒருவ ரான வானமாமலை ஜீயராகும். இதன் கிளைகள் பல ஊர்களில் உள்ளன. அகோபில மடத்தின் தலைமை ஸ்தானம் ஆந்திரத்தி லுள்ள அகோபிலமாகும். அதன் கிளைகளும் பாண்டிய நாட்டில் ஆங்காங்கே ஏற்படுத்தப்பட்டன.

இராமானுசர் காலம் தொட்டே கோவில் ஜீயர்கள் என்று சொல்லப்படும் திரிதண்டி துறவிகள் இராமானுசர் சித்தாந்தப் படி கோவில் பூசைகளை நடத்துவதற்கும் சமயக் கொள்கைகளைப் பரப்புவதற்கும் ஆங்காங்குச் செயல்பட்டு வந்தனர் என்று தெரி கின்றது. அழகர் கோவிலில் 'திருநாடுடையார் மடம்' ஒன்று இயங்கி வந்ததை ஒரு கல்வெட்டு மூலம் அறிகிறோம்.[25] திரிதண்டி சன்னியாசிகளுக்கும் ஏகாங்கி வைணவர்களுக்கும் அங்கு உணவு அளிக்கப்பட்டது. குலசேகரமடம் என்று மற்றொரு மடமும் அங்கு இயங்கி வந்தது.[26] அவ்வாறே திருநெல்வேலி மாவட்டத் திலுள்ள திருக்குறுங்குடியில் வெகுகாலமாக ஒரு மடம் இயங்கி

[25] 277 of 1929-30.
[26] 279 of 1929-30.

வந்தது. பாண்டியர் காலத்துக் கல்வெட்டொன்று அங்கு இயங்கி வந்த திருமங்கை மடத்தில் திரிதண்டி துறவிகள் தங்கியிருந்ததைக் குறிக்கின்றது.[27] ஆழ்வார் திருநகரியில் அருளாள தாடன் மடம் இயங்கி வந்ததையும் அதை நிறுவியவர் திருக்குருகூர் மாமுனிகள் என்றும் 13 ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த மாறவர்மன் சுந்தர பாண்டியனின் கல்வெட்டுக் கூறுகிறது. இவ்வாறு ஸ்ரீவைணவ மடங்கள் அம்மதக் கொள்கைகளை ஆங்காங்குப் பரப்பி வந்தன. குறிப்பாக ஆழ்வார் பாடல்களையும் இராமானுசர் போன்ற ஆச்சாரியரின் கோட்பாடுகளையும் அவை பிரசாரம் செய்து வந்தன.

### மன்னர் ஆதரவு

சைவமதத்தைப் போற்றியது போலவே வைணவத்தையும் பாண்டிய மன்னர் போற்றினர். கோவில்களுக்கு நிலதானங்கள், திருவிழாக்களுக்கும், விசேஷ பூசைகளுக்கும் நிவந்தங்கள் போன்றவற்றை வழங்கினர். முதலாம் வரகுணன் பேரூரில் திருமாலுக்குக் கோயில் அமைத்ததாகக் கூறுகிறுன். திருவரங்கம் கோயிலுக்குச் சுந்தரபாண்டியன் அளித்த ஏராளமான பொன்னும் பொருளும் பற்றி அக்கோவிலிலுள்ள கல்வெட்டுகள் விவரித்துக் கூறுகின்றன. இவன் 'சேரனை வென்றான்' திருமண்டபமும் கட்டினன். கோவிலார்களும் நன்றி பாராட்டிச் சுந்தரபாண்டியனின் திருப்பணிகளைக் கோயிலொழுகு என்னும் நூலில் விரிவாக குறித்துள்ளார்.[28] அழகர் கோவிலிலும் அவ்வரசன் தன் பெயரிலேயே 'கோயில் பொன் வேய்ந்த பெருமாள் மண்டபம், என்ற மண்டபத்தைக் கட்டினன்.[29] ஸ்ரீவைகுண்டப் பெருமாள் கோவிலிலும் சுந்தரபாண்டியன் கோபுரம் கட்டப்பட்டது.[30] திருப்பதி மலையிலுள்ள வெங்கடேஸ்வரர் ஆலயத்தின் விமானத்திற்குப் பொற்கலசம் அமைத்தான். ஸ்ரீவரமங்கையிலிலுள்ள விஷ்ணு கோவிலுக்கு சடையவர்மன் குலசேகரன் தனது பிறந்த நாளில் விசேஷ சந்தி நடத்துவதற்காகத் தானம் அளித்தான். அதற்குக் 'குலசேகரன் சந்தி' என்று பெயர். திருவேந்திபுரத்திலுள்ள விஷ்ணு கோவிலில் மாறவர்மன் விக்கிரமபாண்டியனின் (கி. பி. 1283) பிறந்த நாளில் 'ராஜாக்கள் நாயன் சந்தி' என்ற சந்தியும் அவன் பட்டத்திற்கு வந்த நாளில் 'விக்கிரமபாண்டியன் சந்தி' என்ற வழிபாட்டையும் அவன் ஏற்பாடு செய்தான்.[31] தென் திருப்பேரையிலுள்ள விஷ்ணு கோவிலில் முதலாம் மாறவர்மன்

[27] 350 of 1959-60.
[28] ARE 1928-29, p. 69-70.
[29] Raman K. V. Some aspects p. 74
[30] 379 of 1959-60

சுந்தரனின் பெயரில் 'ஞானசமுத்திரம்' என்ற மண்டபம் கட்டப் பட்டது; பூமிதேவிக்குப் படிமமும் வைக்கப்பட்டது.[32] மாற வர்மன் குலசேகரன் (13ஆம் நூற்றாண்டு ஸ்ரீவைகுண்டத்தில் எம்பெருமானாருக்குப் (இராமானுசருக்கு) படிமம் பிரதிஷ்டை செய்தான் என்று அங்குள்ள ஒரு கல்வெட்டுக் கூறுகிறது. 'நாலாயிரவன் திருமண்டபத்தில்' ஆண்டாளின் திருப்பாவை சேவிக்கப்பட்டு வந்தது. கேரளத்தைச் சேர்ந்த ஒரு வைணவ தாசர் குலசேகர ஆழ்வாருக்கு அவ்வூரில் தனிச் சன்னதி ஒன்று கட்டினார்.[33] சடையவர்மன் குலசேகரனது அரசி தரணிமுழுது முடையாள் அழகர்மலையிலுள்ள சுனை அருகில் ஒரு நந்தவனம் அமைத்த செய்தியை அழகர்கோயில் கல்வெட்டொன்று கூறுகிறது.[34]

ஆக, ஆழ்வார்களில் நால்வரையும், அதுவும் குறிப்பாக அவர்களுள் தலைசிறந்தவரான நம்மாழ்வாரையும் சூடிக்கொடுத்த நாச்சியாரென்று போற்றப்படும் ஆண்டாளையும் ஈன்றளித்த பெருமை பாண்டிய நாட்டையே சாரும். மேலும், ஆச்சாரி யருக்குள் திருக்கோட்டியூர் நம்பி, திருவாய்மொழிப்பிள்ளை, மணவாளமாமுனி, வானமாமலை ஜீயர் போன்றோரும் அவதரித்த பெருமை பாண்டிய நாட்டிற்குரியது. ஆக, வைணவ நெறி சங்ககாலம் தொட்டு இன்றுவரை பாண்டிய நாட்டில் தொடர்ச்சி யாக வந்துள்ளது என்பது தோற்றம்.

## பௌத்தம்

பொதுவாகத் தமிழகத்தில் சமணமதம் போன்று அவ்வளவு பிரபலமாகப் பௌத்த மதம் இருந்ததாகக் கூறமுடியாது. ஆந்திரம், மகாராஷ்டிரம், இலங்கை போன்ற பகுதிகளில் பௌத்தம் செல்வாக்குப் பெற்ற அளவிற்குத் தமிழகத்திலும் கர்நாடகப் பகுதிகளிலும் செல்வாக்கு அடையவில்லை. இவ்விரு பகுதிகளிலும் சமணமே அதிகமாக மக்களைக் கவர்ந்தது. பாண்டிய நாட்டில் அழகர் கோயில், ஆனைமலை, கீழவளவு போன்ற குகைகளைப் பௌத்தர் இருக்கைகளாகக் கருதுவது ஆதாரமற்றதாகும்.[35] அவையனைத்தும் சமணத் துறவிகளின்

[31] 247 of 1955-56

[32] 284 of 1940 41

[33] 397, 400 & 402 of 1916

[34] 300 of 1929-30

[35] அறிஞர் சீனி, வேங்கடசாமி, 'பௌத்தமும் தமிழும்' என்ற நூலில் பௌத்த மதத்தின் செல்வாக்கைச் சற்று மிகைப்படுத்திக் கூறியுள்ளார். குகைகளையெல்லாம் பௌத்தக் குகைகளாகச் சொல்லும் அவரது வாதத் திற்குத் தக்க சான்றுகள் இல்லை,

இருக்கைகளே என்பதற்கு அகச்சான்றுகளும் புறச்சான்றுகளும் உள்ளன. அசோகன் காலத்திய பிராமி எழுத்துகள் இக் குகைகளில் கிடைப்பதனுலேயே, இவை பௌத்த மதத்தினரது என்று சொல்வது பொருந்தாது. ஏனெனில், பிராமி எழுத்துக்கள் அக்காலத்தில் பொதுவாக எல்லோராலேயும் உபயோகிக்கப் பட்டது. பிராமி பொதுவாக பௌத்தர்களுக்கு மட்டும் தனியாக ஏற்பட்ட எழுத்து அல்ல. மேலும், மலைப்படுக்கைகளிலேயே காலம் கழித்து உண்ணுநோன்பு நோற்று உயிர்துறக்கும் மரபினைச் சமணர்கள் மேற்கொண்டனரேயன்றிப் பௌத்தர்கள் அல்லர். மேலே சொல்லப்பட்ட இடங்களில் தொடர்ந்து பிற்காலத்தில் சமணர்களும் வாழ்ந்தனர் என்பதற்குச் சான்ருக அங்கெல்லாம் பல சமணச் சிற்பங்களும் கல்வெட்டுகளும் கிடைத்துள்ளன. ஆனைமலையில் தங்கியிருந்த சமணர்களைப் பற்றித் திருஞானசம்பந்தர் குறிப்பிட்டுக் கூறியுள்ளதை இங்கு மனத்தில் கொள்ள வேண்டும். அதுபோன்று சித்தன்னவாசல் குகையில் சமணர் இருந்ததற்கு நல்ல ஆதாரங்கள் உள்ளன. பல்லவ, பாண்டிய மரபினைச் சார்ந்த இரு அரசர்களையும் தன்பால் கவரக்கூடிய அளவிற்குச் சமணம் செல்வாக்குப் பெற்றிருந்தது. ஆனல், அந்த அளவிற்குப் பௌத்தம் தமிழகத்தில் வளரவில்லை. ஆங்காங்குச் சில இடங்களில் அது தழைத்திருந்ததே தவிர மிகப் பரவலாக இருந்தது என்பதற்குச் சான்றுகள் இல்லை. தொண்டை நாட்டில் காஞ்சி, சோழ நாட்டில் காவிரிப்பூம்பட்டினம், நாகப் பட்டினம், பூதமங்கலம் சேர நாட்டில் வஞ்சி போன்ற பல இடங் களில் அது சிறப்புற்றிருந்தது. பாண்டிய நாட்டில் அவ்வளவு சிறப்புடன் இல்லாவிடினும் பௌத்தம் சில மக்களிடம் செல் வாக்குப் பெற்றிருந்தது என்பதற்குச் சான்றுகள் உள்ளன.

சிறந்த பௌத்த நூலான மணிமேகலையின் ஆசிரியர் சீத்தலைச் சாத்தனுர் மதுரை நகரில் வசித்தவர் என்று சொல்லப்படுகின்றது. அங்கு அவர் கூலவாணிகஞ் செய்ததால் மதுரைக் கூலவாணிகர் என்ற பெயரும் இவருக்கு வழங்கிற்று. இவர் தமது நூலில் புகார், வஞ்சி, காஞ்சி முதலிய ஊர்களிலுள்ள பௌத்தப் பள்ளி களைப் பற்றி யெல்லாம் பல அரிய செய்திகளை அளித்துள்ளார். தமிழகத்தில் பௌத்த சமயத்தின் நிலையைக் கணிப்பதற்கு மணிமேகலைக் காப்பியமும் முக்கிய ஆதாரமாக விளங்குகிறது.[36]

ஆரும் நூற்ருண்டில் வாழ்ந்த தருமபாலர் என்னும் பௌத்த ஆசிரியர் திருநெல்வேலிப் பகுதியைச் சார்ந்தவர் எனக் கூறப்படு

[36] S. K. Aiyangar: **'Manimekalai in its Historical Settings'** என்ற அரிய நூலில் மணிமேகலையிலுள்ள பௌத்தக் கொள்கைகளைப்பற்றிய விரி வான ஆராய்ச்சியைக் காணலாம்.

கிறது. இவர் காஞ்சிபுரத்திலுள்ள ''படராதித்தவிஹாரை'' என்னும் பௌத்தப் பள்ளியின் தலைவராக இருந்தவர். 'பரமார்த்த மஞ்சுஷா' போன்ற பல பௌத்த நூல்களுக்கு உரை எழுதியுள்ளார். இலங்கையில் அனுராதபுரத்தில் இருந்த 'மகாவிகாரை' என்னும் பௌத்தப் பள்ளியில் சில காலம் தங்கி யிருந்து பாலி நூல்களைக் கற்றறிந்தார்.[37]

வச்சிரபோதி (கி.பி. 661-730) என்னும் மற்றொரு பௌத்த ஆசிரியர் பாண்டிய மண்டலத்திலுள்ள பொதிகைமலைப் பகுதியைச் சேர்ந்தவர். வச்சிரராயணம் என்னும் பௌத்தப் பிரிவைச் சார்ந்தவர். இவரும் காஞ்சி நகருக்குச் சென்றார். பல்லவ அரசன் நரசிம்மவர்மனின் சமகாலத்தவர் எனக் கூறப் படுகிறார். நாளந்தா பல்கலைக் கழகத்தில் கல்வி பயின்றார். பின்னர்க் கபிலவஸ்து போன்ற பௌத்தத் தலங்களுக்கும் இலங்கை, சீனம் போன்ற நாடுகளுக்கும் சென்று பௌத்த சமயத்தைப் பரப்பினார்.[38]

பதின்மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த தர்மகீர்த்தி என்னும் பிரபல பௌத்த ஆசிரியர் பாண்டிய நாட்டைச் சார்ந்தவர். இலங்கை மன்னன் பராக்கிரமபாகு (கி.பி. 1263-1268) இலங்கையில் கூட்டிய ஒரு பௌத்த மகாநாட்டில் இவர் முக்கியப் பங்கேற்றார். இலங்கையின் வரலாற்றின் பிற்பகுதியான 'சூல வம்சம்' என்னும் நூலை இவர் இயற்றியதாகக் கருதப்படுகிறது.[39]

மேலே கூறப்பட்ட குறிப்புகளிலிருந்து அக்காலத்தில் காஞ்சி நகர்தான் தமிழகத்தில் பௌத்த மதத்தின் மிக முக்கிய உறை விடமாகக் கருதப்பட்டது என்று தெரிகின்றது. அங்குதான் பல பௌத்தப் பள்ளிகள் இருந்தன. பாண்டிய நாட்டில் பிறந்தவ ராயினும் காஞ்சி, நாளந்தா, இலங்கை போன்ற ஊர்களுக்குச் சென்றுதான் பௌத்தநூல் ஆராய்ச்சிகள் செய்ய வேண்டி யிருந்தது என்பது விளங்குகிறது. பாண்டிய நாட்டில் அப்படிக் குறிப்பிடத்தக்க பௌத்தக் கல்வி நிலையமோ, பள்ளியோ இருந்த தாகக் குறிப்புகள் இல்லை. மேலும், காஞ்சி, பூம்புகார், நாகப் பட்டினம் போன்ற இடங்களிலிருந்து பௌத்த விகாரங்களும் விக்கிரகங்களும் கிடைத்துள்ளன. ஆனால் பாண்டிய நாட்டில் அவ்வாறு ஏதும் கிடைக்கவில்லை. ஏதோ ஓரிரண்டு பௌத்தச் சிலைகள்தாம் பாண்டிய நாட்டில் கிடைத்துள்ளன. இராமநாத

[37] Ayyappan, P. R. Srinivasan: 'Story of Buddhism' p. 31.
[38] மேற்படி, மயிலை சீனி. வேங்கடசாமி, Op. cit.
[39] மேற்படி

புரம் மாவட்டம் மணிகண்டி என்னும் ஊரில் கிடைத்த புத்தர் கற்சிலை சென்னை அரும்பொருட்காட்சிச் சாலையில் வைக்கப் பட்டுள்ளது. பத்மாசனத்தில் வீற்றிருக்கும் இச்சிற்பம் 14 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது எனக் கணக்கிடப்பட்டுள்ளது.[40] ஆக பௌத்த மதம் சங்க காலத்திலேயே பாண்டிய நாட்டில் இருந் தாலும் அதன் செல்வாக்குக் கணிசமாக வளரவில்லை. பாண்டிய அரசர்களுள் ஒருவர்கூட அம்மதத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. மக்களிடையேயும் சமணம் பெற்ற அளவு பௌத்தமதம் செல் வாக்குப் பெறவில்லை எனலாம்.

## சமணம்

முன்பு கூறியபடி, பாண்டிய நாட்டில் சமணமதம் செல் வாக்குப் பெறலாயிற்று. சங்க காலத்திலேயே சமணம் பாண்டிய நாட்டில் பரவியிருந்தது என்பதற்குச் சங்க இலக்கியம் சான்று பகர்கின்றது. அக் காலத்திய சமணத்துறவிகளின் இருக்கைகள் பாண்டிய நாட்டிலுள்ள பல மலைக்குகைகளில் காணப்படுகின்றன. மதுரை நகரைச் சுற்றி ஆனைமலை, அழகர்மலை, சமணர்மலை, நாக மலை, திருப்பரங்குன்றம், கொங்கர் புளியங்குளம், கரடிப்பட்டி, முத்துப்பட்டி போன்ற ஊர்களிலுள்ள மலைகளில் சமணர்களது குகைகளும் படுக்கைகளும் கல்வெட்டுகளும் கண்டுபிடிக்கப்பட் டுள்ளன. அது போன்று மதுரை மாவட்டம், திருவாதவூர், கீழ வளவு, கருங்காலக்குடி, மாங்குளம், ஆரட்டாப்பட்டி போன்ற ஊர்களிலும், திருநெல்வேலி மாவட்டத்தில் இராமநாதபுர மாவட்டத்திலுள்ள பிள்ளையார்பட்டி, குன்றக்குடி, புதுக்கோட் டைப் பகுதியில் சித்தன்னவாசல் போன்ற ஊர்களில் சமணர் படுக்கைகளும் கல்வெட்டுகளும் கிடைத்துள்ளன. மேலே குறிப் பிட்டுள்ள இடங்களில் சிலவற்றில் 8-9 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சமணக் குகைக் கோயில்களும் சிற்பங்களும்கூடக் காணக் கிடக்கின்றன. இவற்றிலிருந்து எப்படிப் பாண்டிய நாட்டுப் பல பகுதிகளில் சமணம் ஊடுருவியது என்பது நன்கு விளங்கும், இங்கெல்லாம் கண்டுபிடிக்கப்பட்டுள்ள பிராமிக் கல்வெட்டுகளி லிருந்து எப்படி இவையனைத்தும் ஒரு காலத்தில் சமணத்துறவி களின் பாழிகளாக விளங்கின என்ற வரலாற்றை முன்னோர் அதிகாரத்தில் பார்த்தோம்.

களப்பிரர் ஆட்சியின்போது சமணத்தின் செல்வாக்கு நன்கு பரவி உச்சநிலையை அடைந்தது. பல சங்கங்களும் கணங்களும் தோன்றிச் சமண மதத்தை நன்கு பரவச் செய்தன. சமணத்

[40] மேற்படி

துறவிகள் அவர்களது மதத்தைப் பரப்புவதற்குத் தமிழ் மொழியை நன்கு கற்றுத் தேர்ந்தார்கள். இலக்கியத் தொண்டையும் சமணத் தொண்டையும் இணைத்துச் செய்தனர். கி. பி. 470-ல் (விக்கிரம ஆண்டு 526-ல்) வச்சிரநந்தி என்பவர் திரமிள அல்லது 'திராவிட மூலசங்கத்தை' மதுரையில் ஏற்படுத்தியதாகச் சமண நூல்கள் கூறுகின்றன.[41] இச் சங்கத்தைச் சார்ந்த முனிவர்கள் தமிழ் மொழியை நன்கு கற்றுணர்ந்து தங்களது மதக் கொள்கைகளைப் பல தமிழ் நூல்களின் மூலம் பரவச் செய்தனர். சமண சங்கங்களில் நந்திகணம், சேனகணம், சிம்மகணம், தேவகணம் போன்ற பல பிரிவுகளும் இருந்தன. குறிப்பாக, நந்திகணத்தைச் சேர்ந்த பல சமணத்துறவிகள் பாண்டிய நாட்டில் இருந்ததைக் கல்வெட்டுகளிலிருந்து அறிகிறோம். திருஞானசம்பந்தரும் மதுரையைப் பற்றிய தேவாரப் பதிகத்தில் நத்திகணத்தைச் சார்ந்த பல சமண முனிவர்களின் பெயர்களைக் குறிப்பிட்டுள்ளார். அவர்களின் கனகநந்தி, புஷ்பநந்தி, பவளநந்தி, குமண நந்தி போன்றோர்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. அவ்வாறே சேன கணத்தைச் சார்ந்த சந்துசேனன் இந்து சேனன், தருமசேனன் போன்றோரின் பெயர்களையும் குறிப்பிடுகிறார். சீவக சிந்தாமணி இயற்றிய திருத்தக்க தேவரும், சூளாமணியை இயற்றிய தோலாமொழித் தேவரும் தேவ கணத்தைச் சார்ந்தவர்களெனக் கருதப்படுகின்றனர்.[42]

பொதுவாகத் தமிழ்நாட்டிலும், குறிப்பாகப் பாண்டிய நாட்டிலும், சமணமதம் நன்கு செழித்திருந்தது என்பதைப் பெரிய புராணம்

'பூழியர் மதுரை தமிழ்நாட் டுள்ள பொருவில்சீர்ப் பதிகள் எல்லாம்
பாழியும் அருகர் மேவும் பள்ளிகள் பலவும் ஆகி'

என்றும்,

'பறிமயிுர் தலையும் பாயும் பீலியும் தடுக்கும் மேனிச்
செறியும்முக் குடையும் ஆகித்திரிபவர் எங்கும் ஆகி'

என்றும் கூறுகிறது. சம்பந்தர் போன்ற நாயன்மார்கள் வருவதற்கு முன் தமிழகத்தில் சமணம் ஆதிக்கம் கொண்டிருந்த நிலையை தேவாரப் பாடல்கள் நன்கு உணர்த்தும். ஞானசம்பந்தர்

[41] மைசூர் நாட்டுச் சாசனமும் இதைக் குறிக்கின்றது. EC. V; Hassan Tk. p 31; மயிலை சீனி. வேங்கடசாமி, 'சமணமும் தமிழும்', ப. 48.

[42] மயிலை சீனி. வேங்கடசாமி. Op. cit. p. 48-49.

பாண்டிய மன்னனையும் மக்களையும் சைவசமயத்தின்பால் திருப்பினர் என்ற சிறப்பைப் பெரிய புராணம் கூறுகிறது. மேலும் ஞானசம்பந்தருடன் வாதப்போரில் தோல்வியுற்ற சமணர்கள் கழுவில் ஏற்றப்பட்டனர் என்றும் அவர்களது பாழிகளும் பள்ளிகளும் அழிக்கப்பட்டன என்றும் பெரியபுராணம் கூறுகிறது. இது சற்று மிகையாக இருப்பினும், தேவாரக் காலத்திலிருந்து சமணத்தின் செல்வாக்கு வெகுவாகக் குறையத் தொடங்கியதையும் வைதீக இந்துமதம் மீண்டும் மக்களிடையே எழுச்சியடைந்ததையும் இது உணர்த்தும். மலையடிக்குறிச்சி போன்ற சில சமணக் குகைகள் சைவக் கோவில்களாக ஆக்கப்பட்டன என்பது உண்மையே. ஆனால், பல சமணக்குகைகளும் படுக்கைகளும் அழிக்கப்படாமல் இன்றும் நம்மிடையே காணக்கிடக்கின்றன என்பதை நினைவில் கொண்டால் சமணமதம் செல்வாக்குக் குறைந்தாலும் தொடர்ந்து பல பகுதிகளில் சிறிய அளவில் நிலவி வந்தது என்பது விளங்கும். பல பாண்டிய அரசர்கள் சமணப் பள்ளிகளுக்கு 'எண்ணிறந்த பள்ளிச் சந்தங்கள்' அளித்ததாகக் கூறிக்கொள்கிறார்கள். கழுகுமலை, மதுரைக்கு அருகிலுள்ள யானைமலை, அழகர்மலை, சமணர்மலை, அரிட்டாப்பட்டி, கீழவளவு, உத்தமபாளையம் போன்ற இடங்களில் எட்டு பத்தாம் நூற்றாண்டில் கூடச் சமணப் பள்ளிகள் தொடர்ந்து இருந்து வந்ததற்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. அங்கெல்லாம் சமணத் தீர்தங்கரர்களின் உருவங்கள் கல்லில் செதுக்கப்பட்டுக் கீழே வட்டெழுத்துக் கல்வெட்டுகளும் பொறிக்கப்பட்டுள்ளன. அவற்றில் பள்ளிகளின் பெயர்களும் அங்கிருந்த சமணத் துறவிகள், படிமம் செய்வித்தவர்கள் போன்றோரின் குறிப்புகளும் காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, கழுகுமலையிலுள்ள கல்வெட்டுகளில் நூற்றுக்கணக்கான சமண அடியார்களின் பெயர்கள் கிடைக்கின்றன. 'குணசாகரபடாரர் சீடன் சாத்தன் தேவன் செய்வித்த திருமேனி' 'திருக்கோட்டாற்றுப் பாதமூலத்தான் கண்மனி புட்பரந்து செய்வித்த திருமேனி' போன்ற குறிப்புகள் காணப்படுகின்றன. பல பெண்துறவிகள் அல்லது குறத்திகளும் படிமங்கள் செய்வித்தனர் என்று அறிகிறோம். இக் கல்வெட்டுகளிலிருந்து 8 முதல் 10 நூற்றாண்டிலும் கூடக் கழுகுமலை சமணர்களுக்கு ஒரு முக்கிய இருக்கையாக இருந்தது என்று தெரிகிறது.

அது போலவே மதுரைக்கருகிலுள்ள சமணர்மலையில் கிருஸ்து சகாப்தத் தொடக்க காலத்தில் எழுதப்பட்ட பிராமிக் கல்வெட்டுகளிலிருந்து அது சமணர் வாழ்ந்தமலை என்று தெரிகிறது. 9-10 ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளும் அங்குள்ளன. அவற்றி

லிருந்து அங்குத் தொடர்ந்து சமணப்பள்ளிகள் இருந்ததை அறிகிறோம். அதற்குக் குணசேன தேவர் என்பவர் தலைமை வகித்ததாகத் தெரிகிறது. தகைவீரபெரிய அடிகள், வர்த்த மானப்பா பண்டிதர், சந்திரப்பிரர் போன்ற முனிவர்களும் இங்குத் தங்கி படிமம் செய்வித்தனர். அக்காலச் சமணப் பெரியோர்களில் அஜ்ஜநந்தி என்பவர் முக்கியமானவராகத் தோன்றுகிறது. அவர் பெருமதிப்புடன் போற்றப்பட்டார். மதுரை மாவட்டத்தில் ஐவர்மலை, உத்தமபாளையம் கருங் காலக்குடி, திருநெல்வேலி மாவட்டத்தில் எருவாடி, வடஆற் காட்டுப் பகுதியில் வள்ளிமலை போன்ற இடங்களில் உள்ள கல்வெட்டுகளில் அவரது பெயர் காணப்படுகிறது. சமணர் மலையில் அவரது உருவம் சிற்பமாகச் செதுக்கப்பட்டு அதன்கீழ் அவரது பெயரும் வட்டெழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. தமிழ்க் காப்பியம் சீவகசிந்தாமணியில் குறிப்பிடப்படும் அஜ்ஜ நந்தி முனிவர் இவர்தாம் என்று கருத இடமுண்டு. சித்தன்ன வாசலில் உள்ள சமணர் குகைக் கோவிலில் பாண்டிய அரசன் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபனின் காலத்தில் மதுரை ஆசிரியர் கௌதமன் என்பவரால் சிற்பங்களும் ஓவியங்களும் உருவாக்கப்பட்டன என்பதை அங்குள்ள கல்வெட்டொன்று கூறுகிறது. அம்மன்னன் காலத்திலேயே எட்டிச் சாத்தன் என்னும் அதிகாரி இரண்டு சிவன் கோவில்களையும் ஒரு சமணப் பள்ளியையும் தோற்றுவித்தான். அவன் சங்கப்புலவர் ஒருவர்வழித் தோன்றியவன். அவனுக்கு 'இருப்பைக்குடி கிழவன்' என்ற விருது மன்னனால் அளிக்கப் பட்டது. *(334 1929-30)*

பன்னிரண்டாம் நூற்றாண்டிலும் சமணர்மலை முக்கியச் சமணர் இருக்கையாக இருந்தது என்பதை அங்குள்ள அக்காலத்திய கல்வெட்டு மூலம் அறிகிறோம். மைசூர்ப் பகுதியிலுள்ள புகழ் வாய்ந்த சமணர் தலமான சிரவன பெல்கோளாவிலிருந்த மூல சங்கத்தைச் சார்ந்த ஆரிய தேவர், பாலசந்திர தேவர் என்ற துறவிகள் சமணர் மலையில் 'சல்லேகனம்' என்னும் உண்ணா நோன்பு அனுசரித்து உயிர் துறந்தனர் என்று கல்வெட்டுக் கூறுகிறது.[43] அஜிதசேன தேவர், நேமிதேவர், கோவர்த்தன தேவர் போன்ற துறவிகளும் இங்குத் தங்கியிருந்தனர்.[44]

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள திடியூர் மலைக்கு 'ஜினகிரி மலை' என்று பெயர் வழங்குகிறது. அங்கே சமணத் தீர்த்தங்கரர்

[43] 242 of 1950-51.

[44] 244 of 1950-51. R. Champakalakshmi, An Ancient Jain Monastery in Tamilnad, Studies in Indian Epigraphy II

களின் சிற்பங்களும் காணப்படுகின்றன.[45] கொற்கையில் ஊரின் நடுவே ஒரு சமணத் தீர்த்தங்கரரின் சிற்பம் உள்ளது. அது சுமார் **12**ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த சிற்பமாகும்.

இவ்வாருக இலக்கியம், கல்வெட்டு, சிற்பம், ஓவியம் போன்ற ஆதாரங்களைக் கொண்டு பாண்டிய நாட்டின் சமண சமய வரலாற்றை ஒருவாறு நன்கு அறியலாம்.

[45] ARE. 1939-40 pf. III. K. V. Raman, Some Aspects-p. 17

# 15. பாண்டியர் கலை

பல்லவர் கலைச் சின்னங்கள் அறிஞர்களின் கவனத்தை ஈர்த்த அளவு பாண்டியரின் கலைப்படைப்புகள் ஈர்க்கவில்லை. பல்லவர் காலக் கலைச் சின்னங்களின் வளர்ச்சி நிலையைப்பற்றித் தெரிந்து கொள்ள அண்மைக்கால ஆராய்ச்சிகளின் மூலம் நல்லபல ஆதாரங்கள் கிடைத்துள்ளன.[1] ஆனால் அவ்வாறே பாண்டியர் கலை வளர்ச்சியை ஆராய்வதற்கும், திட்டவட்டமாகக் காலவரை கணிப்பதற்கும் போதிய அளவு ஆதாரங்கள் கிடைக்கப்பெறாமை, அறிஞர்களின் கவனத்தை அது ஈர்க்காமைக்கு ஒரு காரணமாகும். உதாரணத்திற்குச் சொல்லவேண்டுமானால், தமிழ்நாட்டுக் கட்டடக்கலை வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயத்தை உருவாக்கிய முதலாம் மகேந்திர வர்மனுடைய மண்டகப்பட்டுக் கல்வெட்டிற்கு இணையாகப் பாண்டியநாட்டில் எந்தக் கல்வெட்டும் நமக்கு கிடைக்கவில்லை. இதுவரை கிடைத்திருக்கின்ற ஆதாரங்களை வைத்துக் கொண்டு பாண்டிய நாட்டுக் குகைக் கோயில்களின் காலத்தைக் கி.பி. 7ஆம் நூற்றாண்டிற்கு முன்னால் கணிக்க முடியாது. மலையடிக் குறிச்சியில் கண்டுபிடிக்கப்பட்ட மாறன் சேந்தனுடைய (கி.பி. 620-642) 17ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டானது பாண்டியநாட்டுப் பாறைக் கட்டடக்கலையும், ஏழாம் நூற்றாண்டில் தொடங்கியதாகக் கணிக்கத் தூண்டுகிறது.[2] நம் கணிப்புப்படி இந்தக் கல்வெட்டின் காலம் சுமார் கி.பி. 637 ஆகும் என்று கருதலாம். இது கூட முதலாம் மகேந்திரவர்மன் உருவாக்கிய முதன்மையான பணியை விடச் சில ஆண்டுகள் பிந்தியதாகத்தான் உள்ளது. இருந்தபோதிலும் பல வழிகளில் பாண்டியர் வரலாற்றில் இது ஒரு முக்கியமான அடிக் கல்லாக விளங்குகிறது. இக் கல்வெட்டை 1957ல் திரு கே. ஆர்.

[1] K. R. Srinivasan: Cave Temples of Pallavas Ancient India No. 14.

[2] பாண்டிய நாட்டின் குகைக் கோவில்களெல்லாம் மகேந்திர பல்லவன் காலத்திற்கு பிற்பட்டவை யென்றும் பல்லவர்களது வழியையே அவர்கள் பின்பற்றினர் என்றும் சி. சிவராமமூர்த்தியும் கருதுகிறார் Kalugumalai and Early Pandiyan Rock-Cut Shrines (1961) p. 17 பிள்ளையார்பட்டி குகைக் கோயிலிலுள்ள வட்டெழுத்துக் கல்வெட்டுகளின் சான்றைக் கொண்டு அது 7ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்று கருதுகிறார். (பக். 38)

சீனிவாசன் அவர்கள் கண்டுபிடித்தார்.[3] இதன் முக்கியத்துவத் தைப்பற்றி அவருடைய ஆராய்ச்சிக் கட்டுரை ஒன்றில் விரிவாக விளக்கியுள்ளார். ஆழ்வார்கள் நாயன்மார்களின் செல்வாக்கினுல் தமிழ்நாட்டில் தோற்றுவிக்கப்பட்ட இந்துமத மறுமலர்ச்சி இயக் கத்தைத் தொடர்ந்து பாண்டி நாட்டில் எழுந்த கற்கோயில் ஊழியின் உன்னத சிறப்பை இக் கல்வெட்டு எடுத்துக் காட்டுவ தாகத் திரு கே. ஆர். சீனிவாசன் கருதுகிருர். இது இந்தக் கல்வெட்டில் உள்ள 'கல் திருக்கோயில்' என்ற வாசகத்தின் மூலமாக வலியுறுத்தப்பட்டுள்ளது. இந்துக் கடவுள்களான மும்மூர்த்திகளுக்கும் முதன் முதலில் கற்கோயில் சமைத்தவன் என்று முதலாம் மகேந்திரவர்மன் பெருமிதத்துடன் கூறிக் கொள்வது நாம் நன்கு அறிந்த ஒன்ருகும். அதனுல் சேந்த னுடைய கல்வெட்டில் கண்டுள்ள 'கல்திருக்கோயில்' என்ற வாசகம் இப் பின்னணியில் பார்க்கும் போது முக்கியத்துவம் வாய்ந்ததாக உள்ளது. இதைப்போல் மதுரகவியின் அல்லது மாறன் காரியின் (கி.பி.770) ஆனைமலைக் குகையில் உள்ள வேருெரு குறிப்பும் அறிஞர்களின் கவனத்தை ஈர்க்க வல்லது. இது இந்தக் கோயிலைச் 'சிலாக்கிரகம்' என்றும் 'கற்றளி' என்றும் குறிப்பிட்டுக் கூறுகிறது. இந்தக் கோயில் கட்டட வளர்ச்சி யானது பக்தி இயக்க வளர்ச்சியுடன் கைகோர்த்துச் சென்றிருக் கிறது. பக்தி இயக்கமானது உருவவழிபாட்டையும் அர்ச்சனை செய்கின்ற முறையையும் பிரசாரம் செய்தது. இவ்வியக்கம் கோவில் இயக்கமாக மலர்ந்தது. இம்மறுமலர்ச்சியின் உன்னத அமைப்புகளாகவே கற்றளிகள் தோற்றுவிக்கப்பட்டன. பக்தி இயக்கத்தின் அசைக்க முடியாத தன்மையை எடுத்துக்காட்டுவது போன்று இக் கற்கோயில்கள் அமைந்தன. இக் கல் கட்டடக் கலையின் முதல் கட்டத்தைச் சேர்ந்த குகைக்கோயில் அமைப்பைக் கொண்ட தொடர்ச்சியான கற்றளிகள் பல பாண்டிய நாட்டில் உள்ளன. அவற்றில் சில உதாரணங்கள்:

### (1) மலையடிக் குறிச்சிக் குகைக்கோயில்: (சுமார் கி.பி. 637)

இது திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ளது. இதைப் பாண்டிய அரசன் மாறன் சேந்தன் அவனது 17ஆம் ஆண்டில் (அதாவது சுமார் 637ல்) தோற்றுவித்தான் என்று இக் கோயிலி லுள்ள கல்வெட்டுக் கூறுகிறது. சேந்தன் 'பணியால் பாண்டிய மங்கல அரையன் கிழான் சாத்தனென்றன் செய்வித்த கற்றிருக் கோயில்' என்பது கல்வெட்டின் வாசகம்.[4] சிறிய மண்டபம்

[3] K. R. Srinivasan Malayadikkuruchi Cave Temple (Pandyan Seminar Papers, Madurai 1971)

[4] மேற்படி

போன்ற எளிய அமைப்புக் கொண்ட இக்கோயிலில் ஒரு கருவறை மட்டும் உள்ளது.

### (2) ஆனைமலை நரசிம்மர் குகைக்கோயில் (கி.பி. 770)

மதுரையை அடுத்துள்ள ஆனைமலை என்னும் மலையின் மேற்குப் பக்க அடிவாரத்தில் இக் குகைக்கோயில் குடையப்பட்டுள்ளது. நெடுஞ்சடையப் பராந்தகனின் உத்தரமந்திரியான மாறன் காரி அல்லது மதுரகவி என்பவரால் தொடங்கப்பட்டு அது முடியுமுன் அவர் இறந்ததால், அவரது தம்பியும் உத்தரமந்திரியுமான மாறன் எயினனால் கலியாண்டு 3871, அதாவது கி.பி. 770ல் முடிக்கப்பட்டது என்று இங்குள்ள கல்வெட்டுக் கூறுகிறது.[5] இக் கோயில் நரசிங்கப் பெருமானுக்கு எழுப்பப்பட்டதாகும். இக் கோயிலைப் பாண்டிய மந்திரி ஏன் ஆனைமலையில் தோற்றுவிக்க வேண்டும்? ஆனைமலை வெகு காலமாகச் சமணர்களின் இருக்கை யிடமாக இருந்தது என்பதை ஞானசம்பந்தரின் பாடல் கூறுகிறது. சமணர் படுக்கைகளும் அவர்களது பிராமிக் கல்வெட்டுகளும் அங்கு இருப்பதை நாம் இன்றும் காணலாம். அவர்களுக்கு எதிராகவும் பக்தி இயக்கத்தின் பேராற்றலைக் காட்டி மக்களின் கவனத்தை அதன்பால் ஈர்க்கவுமே, சமணர் செல்வாக்கு மிக்க இடங்களில் இந்து சமயக் கோயில்கள் தோற்றுவிக்கப்பட்டன போல் தோன்றுகிறது. திருப்பரங்குன்றம், அழகர்கோயில், குன்றக்குடி, திருச்சிராப்பள்ளி போன்ற இடங்களிலும்கூடச் சமணரின் செல்வாக்கு மிகுதியாக இருந்தது என்று அங்குள்ள கல்வெட்டுகள் மூலம் அறியலாம். குறிப்பாக ஆனைமலையில் நரசிம்மப் பெருமானுக்குக் குகை அமைத்ததிலும் ஒரு விசேஷம் உண்டு. விஷ்ணுவின் அவதாரங்களில் மிக உக்கிரமெனக் கருதப் படுவது நரசிம்ம அவதாரம். இந்துமதத்தின் பேரெழுச்சியைக் காட்டும் சின்னங்களாக நரசிம்மாவதாரமும் வராகாவதாரமும் கருதப்பட்டன. இதன் காரணம் கொண்டே எல்லோரா, பாதாமி, மாமல்லபுரம் போன்ற குகைக்கோயில்களில் நரசிம்மரின் அல்லது வராகரின் கம்பீரமான உருவங்கள் செதுக்கப்பட் டுள்ளன. திருப்பரங்குன்றம் சுப்பிரமணியர் குகைக் கோயிலிலும் ஒரு பக்கம் நடராஜப் பெருமானும், மற்றொரு பக்கம் நரசிம்மரும் பூவராகரும் அழகுடன் செதுக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

### (3) திருப்பரங்குன்றம் குகைக்கோயில் (கி.பி. 773)

மதுரையை அடுத்துள்ள திருப்பரங்குன்றத்தில் சுப்பிரமணியர் கோயில் என்று இப்பொழுது வழங்கப்படும் கோயில் பாண்டிய

[5] Ep. Ind. VIII pp 319-20

அரசன் நெடுஞ்சடையப் பராந்தகன் காலத்தில் அவனது சேனுதிபதியான (மகா சாமந்தன்) சாத்தன் கணபதியால் கலியாண்டு 3874-ல் (கி.பி. 773) தோற்றுவிக்கப்பட்ட மிக அழகியதோர் குடைவரைக் கோயிலாகும். 'திருக்கோயிலும் ஸ்ரீதடாகமும் திருத்து வைத்தது' என்பது கல்வெட்டின் வாசகம். அவனது மனைவி நக்கன் கொற்றி, அக்கோவிலிலுள்ள துர்க்காதேவிக்கும் ஜேஷ்டாதேவிக்கும் சன்னதி நிறுவினுள். பாண்டியர் குகைக் கோவில்களுக்குள் சிற்ப அமைப்பிலும் செறிவிலும் இது ஈடு இணையற்றது. பல நிலைகளில் சிற்பங்களையும் சன்னதிகளையும் கொண்ட இக்கோயில் எல்லோராக் குகை போன்று விரிந்த பரப்பளவில் செய்யப்பட்ட அற்புதப் படைப்பாகும். பிற்காலக் கட்டடங்கள் பல இதன் பழைய நிலைகளை மறைத்துவிட்டன என்றாலும் அதன் பழையத் தோற்றத்தைப் பார்க்கும்போது இந்திய நாட்டுச் சிறந்த குகைப் படைப்புகளில் ஒன்ருக விளங்குகிறது. மேல்நிலையில் விஷ்ணு (மால்விடங்கன்), சுப்பிரமணியர், துர்க்கை, கணபதி; சிவபிரான் என்னும் ஐவருக்கும் தனிச் சன்னதிகள் இருக்கின்றன. அதற்குக் கீழ்நிலைகளில் ஜேஷ்டாதேவி (சேட்டை), கஜலக்ஷ்மி, தேவிபுவனேஸ்வரி போன்ற சிற்பங்களைக் காணலாம். இக் குகைக் கோயிலின் தூண்கள் இரு சதுரங்களும், தரங்க போதிகையும் கொண்டு கனத்த அளவில் அமைந்துள்ளன. தூண்கள் 'பல்லவன் மகேந்திரவர்மன் பாணி' என்று வழங்கப்படும் பாணியை ஒத்து இருக்கின்றது.

திருப்பரங்குன்றத்தில் மலைக்கு தென்புறம் மற்ரெரு குகைக் கோயில் சற்றுச் சிதைந்த நிலையில் உள்ளது. இது உமையாண்டார் கோவில் என்று வழங்கப்படுகிறது. இதுவும் 8ஆம் நூற்ருண்டில் குடையப்பட்ட மண்டபக் கோயிலாகும். கோவிலின் எதிர்புறச் சுவரில் தெற்கு நோக்கி நடராசப் பெருமானும் ஒரு பக்கம் சன்னதியில் அர்த்தநாரீஸ்வரரும் செதுக்கப்பட்டுள்ளன,

### திருச்சி மலையடிவாரக் குகைக்கோவில்

திருச்சி மலைக்கோட்டை அடிவாரத்தில் உள்ள அழகிய குகைக்கோவில் பாண்டிய அரசன் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபனின் காலத்தில் செய்யப்பட்டதாகத் தோன்றுகிறது. குகையின் பின்புறச் சுவரில் வரிசையாகக் கணேசர், சுப்பிரமணியர், பிரம்மா, சூரியன், துர்க்கை முதலிய உருவங்கள் செதுக்கப்பட்டு உள்ளன.[5a] குகையின் இருபக்கச் சுவர்களிலுமுள்ள சன்னதிகளில்

[5a] Raman K. V., **Religious Inheritance of the Pandyas**, Madurai Temple Kumbhabisheka Malar

ஒரு பக்கம் திருமாலும் மற்றொரு பக்கம் சிவபிரானும் இருக்கின்றனர். அவர்கள் சன்னதிகளுக்கு முன்னே அழகிய தூண்களுடன் கூட முகமண்டபமும், துவாரகபாலகர்களும் செதுக்கப்பட்டிருக்கின்றன.

இது போன்று வேறு சில குடைவரைக் கோவில்களில் கணேசர், துர்க்கை, சூரியன், கார்த்திகேயன், பிரம்மா, ஜேஷ்டா, லக்ஷ்மீ, சரஸ்வதி போன்ற தெய்வங்களின் சன்னதியமைக்கும் முறையும் காணப்படுகிறது. இம்முறை பாண்டியர் நாட்டில் வெகுவாக ஆதரிக்கப்பட்டது. இந்து மதத்திலுள்ள பல தெய்வ மாறுபாடுகளையும் ஒன்றுசேர்த்து சமரச நிலையை அவர்கள் ஏற்றனர் என்று இது விளக்கும். இவ்வாறு பலதரப்பட்ட பாண்டியரது குடைவரைக் கோவில்கள் கிட்டத்தட்ட ஐம்பதிற்கும் மேலாக இருப்பதாக அவற்றை விரிவாக ஆராய்ந்துள்ள மத்திய தொல்பொருள் துறையைச் சார்ந்த திரு. கே. வி. சவுந்திரராாசன் கணித்துள்ளார். பல்லவர்களுக்குப் பின் சில ஆண்டுகளுக்குப் பின்பு இவர்கள் இத் துறையில் ஈடுபட்ட போதிலும், படைப்பு எண்ணிக்கையில் அவர்களையும் மிஞ்சி விட்டனர் என்று அவர் குறிப்பிடுகிறார்.[6] இவற்றுள் பின்வரும் இடங்களிலுள்ள குகைக் கோவில்கள் குறிப்பிடத்தக்கவை. திருச்செந்தூரிலுள்ள வள்ளிக் குகைக் கோவில், கழுகுமலையில் உள்ள முருகன் குடைவரைக் கோவில், ஆனைமலையிலுள்ள லாடன் கோவில் (என்று வழங்கும் சுப்பிரமணியர் குகைக் கோவில்) திருமெய்யத்திலுள்ள சத்தியகிரீஸ்வரர் கோவில், மேலும் குன்றக்குடி, பிள்ளையார்பட்டி, சீவலப்பேரி, திருமலப்புரம், மூவரைவென்றான், அரிட்டாபட்டி, சேந்தமாரம், திருக்கோலக்குடி, சொக்காம்பட்டி போன்ற இடங்களிலுள்ள குகைக் கோவில்களாகும். சித்தன்னவாசலிலுள்ள சமணர் குடைவரைக் கோவில் பாண்டிய அரசன் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் (815-862) காலத்தில் விரிவாக்கப்பட்டதாக அங்குள்ள கல்வெட்டுத் தெரிவிக்கின்றது. ஐவர் மலையிலுள்ள சமணர் கோவிலும் இரண்டாம் வரகுணவர்மன் காலத்தில் சகவருடம் 792 அதாவது கி.பி. 870-ல் தோற்றுவிக்கப்பட்டதாக அங்குள்ள கல்வெட்டுக் கூறுகிறது. சுருங்கக்கூறின், பக்தி வெள்ளத்தால் ஏற்பட்ட கோவில் இயக்கம் பாண்டிய நாட்டில் நன்கு வேரூன்றி ஆங்காங்குக் கற்கோவில்கள் தோற்றுவிக்கப்பட்டன. இந்துமத மறுமலர்ச்சி பாரத நாடெங்கிலும் பரவிப் பல பகுதிகளில் கோவில் இயக்கத்தை தோற்றுவித்தது. வடக்கே குப்த அரசர்களின் ஆதரவில் பல அழகிய

[6] K. V. Soundararajan. Early Pandya, Muttaraya, Irukkuvel Architecture, Studies in Indian Temple Architecture.

கோவில்கள் எழுப்பப்பட்டன. அதுபோன்று சாளுக்கியரின் ஆதரவில் பாதாமி, பட்டடக்கல், அய்ஹோளி, போன்ற இடங்களிலும், பல்லவர் ஆதரவில் மண்டகப்பட்டு, மாமண்டூர், மாமல்லை போன்ற இடங்களிலும் கற்கோவில்கள் தோற்றுவிக்கப் பட்டன. நாடு முழுவதிலும் எழுந்த இப் பேரியக்கத்தில் தென்னகமும், குறிப்பாகப் பாண்டிய நாடும் உரிய பங்கேற்றது.

பாண்டியர் குகைக் கோவில்கள், பல்லவர்களது போலவே எளிய தோற்றத்துடன் அமைந்தவை. பின்புறச் சுவரில் கருவறைகளும் அவற்றின் முன்புறம் தூண்கள் கொண்ட மண்டபமும் கொண்டவை. சிறிய மண்டபங்களில் ஒரு வரிசைத் தூண்களையும் பெரியவற்றில் பல வரிசைத் தூண்களையும் கொண்ட மண்டபங்கள் இருக்கும். பல்லவர் தூண்கள் போலவே, தூண்களின் மேலும் கீழும் சதுரங்களையும் இடையே எட்டுப் பட்டை கொண்ட பாகங்களையும் உடையவை. போதிகை அதிக வேலைப்பாடின்றி மேல்நோக்கி வளைந்து அமைந்திருக்கும். அலைபோன்ற மடிப்புகளைக் கொண்ட 'தரங்க போதிகையும்' பல இடங்களில் காணப் படுகின்றது. தூணின் சதுரபாகத்தில் தாமரை இதழ் வேலைப் பாட்டையும் காணலாம். ஆனால், நரசிம்மவர்ம பல்லவன் குகைக் கோவில்களில் காணப்படும் அமர்ந்த நிலையிலுள்ள சிங்கங்களைக் கொண்ட தூண்களோ இராசசிம்மன் காலத்திய நிமிர்ந்த நிலையில் நிற்கும் சிங்கங்களைக் கொண்ட தூண்களோ பாண்டியர் குகைக் கோவில்களில் காணப்படவில்லை. அதுபோலவே குகை முகப்பின் மேல்புறத் தோற்றம் வேலைப்பாடு நிறைந்தோ வனப்பு மிகுந்தோ அமையவில்லை. பாண்டியர் குகைக் கோவில்கள் சற்று எளிய பாணியிலேயே அமைந்தவை. மேலும் மாமல்லையிலுள்ள 'கங்காவதரணம்' போன்ற பெரும் சிற்பக்காப்பியம் செய்யப் பாண்டியர் முயலவில்லை. செய்முறை ஆராய்ச்சி நோக்குடன் பார்த்தால் இதை ஒரு குறைபாடாகக் கருத இடமுண்டு. பொதுவாகப் பார்க்கும்போது பல்லவர் குகைக் கோவில்களில் காணப்படும் வகைகள் பாண்டியர் கோவில்களில் காணப்படவில்லை என்றே கூறவேண்டும். குகையின் பக்கச் சுவர்களில் ஒன்று அல்லது இரண்டு சன்னதிகள் செய்விக்கும் முறை பாண்டியர் கோவில் களில் காணப்படும் தனிச் சிறப்பாகும்.

## ஒற்றைக்கல் ரதம்

கோவில் கட்டட வளர்ச்சியில் புதிய பாணியைக் குறிப்ப தாகக் கருதப்படுவது ஒற்றைக் கல் ரதங்கள். மாமல்லபுரத்தில் உள்ள ஐந்து ரதங்கள் போன்ற பல ரதங்கள் உள்ளன. இவற்றை வெட்டிச் செதுக்கப்பட்ட கோவில்கள் (Cut-out temples) என்றும்

சொல்லுவர். இப் பாணியைப் பாண்டியர் கையாளவில்லை. கழுகு மலையிலுள்ள வெட்டுவான் கோவில் ஒன்றுதான் பாண்டியர் செய்த ஒரே ஒரு ஒற்றைக்கல் கோவிலாகும். ஆனால், இதில் கையாளப்பட்டுள்ள செய்முறையானது பல்லவர் ரதங்களின் செய்முறையிலிருந்து சற்று வேறுபட்டதாகும். இங்கே குன்றின் புறப் பகுதிகளெல்லாம் செதுக்கப்பட்டு மையப்பகுதி மட்டும் கோவிலாக உருவாக்கப்பட்டுள்ளது. இது சாளுக்கியரும் இராட்டிரகூடரும் எல்லோராவில் கையாண்டுள்ள முறையை ஒத்து இருக்கிறது என்று திரு. கே. ஆர். சீனிவாசன் விளக்கி யுள்ளார். ஆனால், வெட்டுவான்கோவிலின் எழில்மிக்கத் தோற்ற மும் அதிலுள்ள அழகிய சிற்பங்களும் வேலைப்பாடுகளும் பாண்டி யரின் கலைத்திறனுக்கு ஓர் உன்னத எடுத்துக்காட்டாக அமைந் துள்ளன என்பதில் ஐயமில்லை.

ஒற்றைக்கல் ரதங்கள் செய்வது கடினம் என்ற காரணத் தாலும் கட்டுமானக்கோவில்கள் ஏற்கெனவே வழக்கில் வந்து விட்ட காரணத்தாலும் இத்துறையில் பாண்டியர்கள் அதிகம் அக்கறை காட்டவில்லை என்று கருதத் தோன்றுகிறது. ஆனால், இதன் செய்முறை அவர்களுக்குத் தெரியாமலில்லை என்பதை வெட்டுவான்கோவில் நிரூபிக்கிறது. அதே போல் கழுகுமலைச் சிற்பங்களுக்கும் பல்லவர், சாளுக்கியர் சிற்பங்களுக்குமிடையே யுள்ள நெருங்கிய தொடர்புகளைச் சிற்பக்கலை அறிஞர் சி. சிவ ராமமூர்த்தி சுட்டுகிறார்.[7]

### கட்டுமானக் கோவில்கள்

குகைக்கோவில்கள் அல்லது குடவரைக் கோவில்கள் தோற்று விக்கும் மரபு பல்லவர் நாட்டில் சுமார் 8-ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தோடு வழக்கற்றுப் போயிற்று. கட்டுமானக் கோவில் வழக்கில் வந்தபிறகு குடைவரைக் கோவில்கள் வெகுவாகக் குறையத் தொடங்கிப் பிறகு அடியோடு நின்றுபோயின. ஆனால், பாண்டியர்-முத்தரையர் நாட்டில் 9-ஆம் நூற்றாண்டு வரை கூட குடைவரைக்கோவில் மரபு வழக்கில் தொடர்ந்து இருந்தது.[8] பல்லவர்களுக்கு எளிதாகக் கிடைத்த மென்மையான மணற் கற்கள் பாண்டியர்களுக்குக் கிடைக்காத காரணத்தால் குகைக் கோவில்களே தொடர்ந்து அதிககாலம் பழக்கத்தில் இருந்த தாகவும், கட்டுமானக் கற்கோவில்களைக் கட்டக்கூடிய சாத்தியக்

[7] C. Sivaramamurthi, Kalugumalai and Early Pandyan Rock-cut Shrines (1961)

[8] ஐவர் மலைக் குகைக்கோயிலும், சித்தன்னவாசல் குகைக்கோயிலும் 9-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை.

கூறுகள் இல்லாமையால் சோழநாட்டைப்போலவே செங்கற் கோவில்கள் அதிகமாகப் பழக்கத்தில் இருந்து வந்ததாகவும் கே. வி. சவுந்தரராசன் கருதுகிறார்.[9] ஆனால், 9ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்திலிருந்து கற்கோவில்கள் பரவலாகப் பாண்டிய நாட்டில் தோன்றலாயின. அவற்றில் பின்வரும் கோவில்கள் குறிப்பிடத்தக்கவை :

| | | |
|---|---|---|
| 1. | திருக்குறுங்குடி | — நம்பி கோயில் |
| 2. | உக்கிரன்கோட்டை | — வடவாயில் அமர்ந்தான் கோவிலும் சொக்கலிங்கேஸ்வரர் கோவிலும். |
| 3. | கோவில்பட்டி | — பூவணநாதஸ்வாமி கோவில் |
| 4. | திருப்பத்தூர் | — தளிநாதர் கோவில் |
| 5. | அம்பாசமுத்திரம் | — எரிச்சாவுடையார் கோவில், திருமூல நாதர் கோவில் |
| 6. | ஏனாதி | — சிவன் கோவில் |
| 7. | மன்னார் கோவில் (அம்பாசமுத்திரம் தாலுக்கா) | — கோபாலஸ்வாமி கோவில் |
| 8. | திருவாலீஸ்வரம் | — வாலீஸ்வரர் கோவில் |
| 9. | கோவில் குளம் (அம்பாசமுத்திரம் தாலுக்கா) | — தென்னழகர் கோவில் |
| 10. | விஜயநாராயணன் (நாங்குநேரி தாலுக்கா) | — மனோன்மணீசுவரர் கோவில் |
| 11. | சீவல பேரி (திருநெல் வேலித் தாலுக்கா) | — அழகர் கோவில் (தென் திருமாலிருஞ்சோலை) |
| 12. | உத்தரகோசமங்கை | — உமா மகேஸ்வரர் கோவில் |
| 13. | மதுரை | — கூடல் அழகர் கோவில் |
| 14. | திருக்கோட்டியூர் | — சௌம்யநாராயணப் பெருமாள் கோவில் |
| 15. | திருமாலிருஞ்சோலை | — அழகர் கோவில் |

[9] K. V Soundararajan : Early Pandya, Muttaraya, Irukkuvel Architecture : (Studies in Indian Temple Architecture, Varanasi, 1967) pp. 240.

16. ஸ்ரீவில்லிபுத்தூர் — வடபத்ரசாயி கோவில்

17. கோட்டைக் கருங்குளம் (நாங்குநேரி தாலுக்கா) — இராசசிம்மேசுவரர் கோவில்

18. சின்னமனூர் (பெரிய குளம் தாலுக்கா) — லக்ஷ்மி நாராயணர் கோவில்

19. பெருங்குளம் (ஸ்ரீவை குண்டம் தாலுக்கா) — திருவழுதீசுவரர் கோவில்

20. குற்றாலம் — குற்றாலநாதர் கோவில்

மேலே குறிப்பிட்ட கோவில்கள் சுமார் கி.பி. 800 முதல் 950 வரையுள்ள இடைக்காலத்தில் கட்டப்பட்டவை. அதாவது முதற் பாண்டியப்பேரரசு காலத்தில் இவை எழுந்தன. இவற்றுள் சில ஏற்கெனவே செங்கற்களால் இருந்தவை கற்கோவில்களாக மாற்றப்பட்டன. சில புதிதாக எழுப்பப் பட்டவை. தொண்டை மண்டலத்தில் எப்படிப் பல்லவர்கள் இராசசிம்மன் தொடங்கி நந்திவர்மன் போன்றோர் கற்கோயில்களை ஆங்காங்கே எழுப்பி னரோ அது போன்று பாண்டிய அரசர்கள் இத்துறையில் பெரும் அக்கறை காட்டிப் பக்தி இயக்கத்திற்கும் கோவில் இயக்கத்திற்கும் தங்களுடைய பேராதரவைக் காட்டினர். இம் முற்காலப் பாண்டியக் கட்டுமானக் கோவில்களின் (Early Pandyan Temples) சிறப்பு அம்சங்கள் என்ன, அவர்களுடைய கலைப்பாணியின் ஏற்றம் எது என்பதைப் பின்வருமாறு சுருக்கிக் கூறலாம்.

(1) இவை நடுத்தர அளவில் அமைந்தவை. விமானம் ஒன்று, இரண்டு அல்லது மூன்று தளங்கள் கொண்டிருக்கும். சுமார் 20 அல்லது 30 அடி உயரம் இருக்கும். உயர்ந்த விமானங்கள் வழக்கில் வரவில்லை.

(2) பரப்பளவிலும் நடுத்தரமான விஸ்தாரம் உடையவை. கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் கொண்டவையாக இருக்கும். வெளிக் கோபுரங்களோ பெரிய மண்டபங்களோ கிடையாது.

(3) கல்லாலான விமானத்தில், கூடம், சாலை, பஞ்சரம் போன்ற அங்கங்கள் கொண்ட 'ஹாரா' வரிசையையும் அழகிய சிற்பங்களையும் காணலாம்.

(4) பொதுவாக கிரிவமும், சிகரமும் சதுரவடிவோ (நாகரப் பாணி) எண்கோண (திராவிட) வடிவிலோ அமைந்திருக்கும். பொதுவாக எண்கோண அமைப்புக் கொண்ட சிகரம் தென்




படம் 2. பாண்டிய நாட்டு முக்கிய வரலாற்றுத் [தல]ங்கள்

பாண்டிய நாட்டிலும் சதுரமான வடிவு கொண்ட சிகரம் வட பகுதியிலும் அதிகமாகக் காணப்படுவதாகக் கருதப்படுகிறது.

(5) சில கோவில்களில் அஷ்டபரிவார சன்னதிகளுக்குகந்த தெய்வங்களின் சிற்பங்கள் அவற்றிற்குரிய இடங்களிலோ, சிதைந்த நிலையில் வேறு இடங்களிலோ காணப்படுகின்றன.

(6) பல்லவர் காலத்திலும் சோழர் காலத்திலும் தொண்டை மண்டலத்தில் வழக்கிலிருந்த 'தூங்கானை மாடக் கோவில்கள்' அல்லது 'கஜபிருஷ்ட விமானங்கள்' பாண்டிய நாட்டில் வழக்கில் வரவில்லை.

(7) ஆனால் பல்லவர்களால் கையாளப்பட்ட 'அஷ்டாங்க விமானம்' பாண்டிய நாட்டிலும் ஆதரிக்கப்பட்டது. காஞ்சியில் நந்திவர்மன் எடுப்பித்த வைகுண்டப் பெருமாள் கோவிலும், உத்தரமேரூரில் நந்திவர்மன் எழுப்பிய சுந்தரராசப் பெருமாள் கோவிலும் இவ்வகை விமானத்திற்கு நல்ல எடுத்துக்காட்டு களாகும். பாண்டிய நாட்டில் அஷ்டாங்க விமானம் கொண்ட கோவில்களை மதுரைக் கூடலழகர் கோவில், திருக்கோஷ்டியூரி லுள்ள சௌமிய நாராயணர் கோவில், மற்றும் மன்னார் கோவில், அம்பாசமுத்திரம் போன்ற இடங்களில் காணலாம். 8-9 ஆம் நூற்றாண்டுகளில் கட்டுமானக்கோவில் வளர்ச்சியில் இது ஒரு பெரும் சாதனையாகக் கருதப்பட்டது. இப்பாணி குறிப்பாக விஷ்ணு கோவில்களிலேயே அதிகமாகக் கையாளப்பட்டதாகத் தெரிகின்றது. விஷ்ணுவின் நின்ற, இருந்த, கிடந்த என்ற மூன்று நிலைகளையும் ஒரே கோவிலின் மூன்று தளங்களிலுள்ள சன்னதி களில் வைப்பதற்கு ஏற்ற ஒரு கட்டுமான அமைப்பாக இது இருந்தது. அஷ்டாங்க விமானங்கள் கொண்ட கோவில்களில் திருக்கோட்டியூர்ச் சௌமிய நாராயணர் கோவிலும், மதுரைக் கூடல் அழகர் கோவிலும்[10] கம்பீரமும் அழகும் ஒருங்கே அமைந்து விளங்குகின்றன. இவ்வகை விமானங்களே பிற்காலத்தில் சோழர் கட்டிய தஞ்சைப் பெரிய கோவில், கங்கை கொண்ட சோழபுரக் கோவில்களிலுள்ள பல தளங்களைக் கொண்ட விமானங்களுக்கு முன்னோடியாக அமைந்தன என்று சொல்லலாம்.

பாண்டியர் பல்லவர் இவர்களைப் பின்பற்றிய முத்தரையர், இருக்குவேளிர் போன்றோரும் புதுக்கோட்டைப் பகுதியில் பல அழகிய கற்றளிகளைக் கட்டினர். கொடும்பாளூரிலுள்ள அழகிய மூவர் கோவிலும் ஐவர் கோவிலும் அவர்களது அற்புதப்படைப்பு

[10] இது பிற்காலத்தில் புதுப்பிக்கப்பட்டது என்றாலும் பழைய அமைப் புகள் மாறவில்லை.

களாகும். அவ்வாறே, விரலூர், கீரனூர், கண்ணனூர் (பாலசுப்பிரமணியர் கோவில்) போன்ற இடங்களிலுள்ள மிக அழகிய கற்றளிகள் முத்தரையரது படைப்புகளாகும். நார்த்தா மலையிலுள்ள புகழ்பெற்ற விசயாலயச் சோளீஸ்வரர் கோயில்கூட முத்தரையரின் படைப்பாகவே கருதப்படுகிறது.[11] பல்லவ நாட்டிற்கும் பாண்டிய நாட்டிற்கும் இடையே இருந்த காரணத் தால் இருமரபுகளையும் முத்தரையர் நாட்டில் காணலாம். பல்லவப் பாணியை பாண்டிய நாட்டில் அறிமுகப்படுத்துவதற்கும் இவர்களது கலைப்பணி துணை செய்ததாகவும் கருத இடமுண்டு. ஆக, பல்லவர், பாண்டியர், முத்தரையர், இருக்குவேளிர் இவர் களது பல மரபுகளை அடித்தளமாகக் கொண்டுதான் சோழர் தங்களது உன்னதக் கோவில்களை விரிவாகச் செய்ய முனைந்தனர்.

## பிற்காலப் பாண்டியர் கோவில்கள்

பத்தாம் நூற்றுண்டு தொடங்கிப் பாண்டியநாடு சோழர் ஆதிக்கத்திலிருந்தபோது குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஒன்றும் நடைபெறவில்லை. அவர்கள் தஞ்சை, கங்கைகொண்ட சோழ புரம் போன்ற தங்களது ஊர்களில் கட்டிய பெருங்கோயில்களைப் போன்று பாண்டிய நாட்டில் கட்டவில்லை எனினும் கொற்கையி லுள்ள கற்றளி போன்ற பல நடுத்தரக் கோவில்களைத் தொடர்ந்து கட்டிவந்தனர். சோழன் தலைகொண்ட வீரபாண் டியன் காலத்தில் (946-966) பள்ளிமடம் என்னுமிடத்தில் 'சுந்தர பாண்டீஸ்வரர்' என்னும் ஒரு பள்ளிப்படைக் கோவில் கட்டப் பட்டது. தவிரவும் சில கற்றளிகளும் மண்டபங்களும் இக் காலத்தில் கட்டப்பட்டன. கோவில்களில் அம்மனுக்குத் தனிக் கோவில் ஏற்பட்டதும் இக்காலத்தில்தான். ஆனல் 12-13ஆம் நூற்றுண்டில் பாண்டியர் செல்வாக்கு மீண்டும் சுடர்விட்டுப் பிரகாசிக்கும்போது அவரது கலைப்படைப்புகளும் புதிய பொலிவு பெற்றுத் திகழ்ந்தன. சடையவர்மன் சுந்தரபாண்டியன் தனது பல வெற்றிகளின் மூலம் பெற்ற ஏராளமான பொன்னையும் பொருளையும் கொண்டு பல திருப்பணிகளைச் செய்ததை ஸ்ரீரங்கத் திலுள்ள கல்வெட்டின் மூலம் அறிகிறோம். பொதுவாக, இக் காலத்தில் பல கோவில்களில் வெளிப்புறக் கோபுரங்கள், பிராகாரங்கள், மண்டபங்கள் ஆகியவை கட்டப்பட்டன. பழைய கோவில்களெல்லாம் பெரிய அளவில் விரிவாக்கப்படும் ஒரு புதிய கட்டம் தொடங்கிற்று. சோழர் காலத்தில் கோவில்களில் கருவறையின்மீது எழுப்பப்பட்ட விமானத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. இப்போது திருமதிலிலுள்ள நுழைவாயிலில்

[11] K. R. Srinivasan: Temples of South India. (1971) p. 122

பெரும்கோபுரங்கள் கட்டி அணி செய்யப்பட்டன. ஸ்ரீரங்கம், சிதம்பரம் போன்ற பழம்பெரும் கோவில்களில் உள்ள கருவறையைப் புதுப்பித்துக் கட்டவோ விஸ்தரிக்கவோ பாண்டியர்கள் விரும்பவில்லை. ஆகையால் விமானங்களுக்குப் பொன் வேய்ந்து சிறப்பித்தனர். ஆனால் வெளிப்பிரகாரங்களிலுள்ள துணைக் கோவில்களையும், மண்டபங்களையும், கோபுரங்களையும் கட்டுவதில் அவர்களுடைய கவனத்தைச் செலுத்தினர். மதுரை மீனாட்சியம்மன் கோவில், நெல்லையப்பர் கோவில், திருநெல்வேலி விசுவநாதர் கோவில், தென்காசி அழகர் கோவில் போன்ற கோவில்கள் பிற்காலப் பாண்டியர் காலத்தில்தான் விரிவாக்கப் பட்டன. மதுரை மீனாட்சியம்மன் கோவிலிலுள்ள சுந்தரேஸ்வரர் சன்னதியும், அதன் அர்த்த மண்டபம், மணி மண்டபம், சன்னதி முன்கோபுரம் போன்ற பல கட்டடங்கள் குலசேகரபாண்டியனால் (கி.பி. 1168-1175) கட்டப்பட்டவை என்று கூறப்படுகிறது.[12] மதுரையில் சுந்தரேஸ்வரர் கோவிலின் கிழக்குப் பிரதான கோபுரம் அவனிவேந்தராமன் என்கிற சுந்தரபாண்டியனால் கட்டப்பட்டது.[13] கோவிலின் வெளிப்புறச் சுவர்களை எழுப்பியவனும் இவனே. இது சுந்தரபாண்டியன் திருமதில் என்றே வழங்கப்படுகிறது. மேலக் கோபுரம் சடையவர்மன் பராக்கிரம பாண்டியனால் கி.பி. 1323ல் கட்டப்பட்டது. ஒன்பது நிலைகளைக் கொண்ட இக் கம்பீரமான கோபுரம் நூற்றுக்கு மேலான அழகிய சுதைச் சிற்பங்களால் அணி செய்யப்பட்டுள்ளது. திருநெல்வேலியில் பிரதான கருவறையைச் சுற்றியுள்ள நடைக்கூடத்தை அல்லது திருச்சுற்று மாளிகையை முதலாம் மாறவர்மன் குலசேகரன் கட்டினான். அழகர் கோவிலில் 'கோவில் பொன் வேய்ந்த பெருமாள் திருமண்டபமும்' ஸ்ரீரங்கத்தில் 'சேரனை வென்றான் திருமண்டமும்' சடையவர்மன் சுந்தரபாண்டியனால் கட்டப்பட்டன.[14] ஸ்ரீரங்கத்தில் துலாபார மண்டபமும் யாக சாலையும் அவனால் கட்டப்பட்டன. பாண்டிய மண்டலத்தையும் கடந்து அவர்களது ஆட்சி சோழநாடு, தொண்டைநாடு பரவிய போது அவர்களது கலைத்தொண்டு அங்கும் பரவியது. திருவானைக்காவிலுள்ள ஜம்புகேஸ்வரர் கோயிலின் இரண்டாம் பிராகாரக் கோபுரம் பாண்டியர் காலத்தில் கட்டப்பட்டதே. அதுபோலச் சிதம்பரத்திலுள்ள மேலைக் கோபுரம் பாண்டியர் கோபுரப் பாணிக்கு நல்ல எடுத்துக்காட்டாகும். ஏழுநிலைகளைக்

[12] The Great Temple of Madurai (1970)-p. 66

[13] மேற்படி இவன் முதல் மாறவர்மன் சுந்தரன் (1216-1231) எனக் கருதப் படுகின்றான். இது முதலாம் சடையவர்மன் சுந்தரனாகவும் இருக்கலாம்.

[14] K. V. Raman Some aspects. p. 30

கொண்டு நிற்கும் இக் கோபுரம் சற்று அகன்ற தோற்றமுடைய தாயும் சிற்பங்கள் நிறைந்ததாயும் காட்சியளிக்கின்றது.

அலங்கார வேலைப்பாடுகள் மூலம் கட்டடங்களின் எழிலை அதிகப்படுத்துவதற்குப் பாண்டியநாட்டுக் கலைஞர்கள் முயன் றுர்கள். பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி கூறியுள்ளது போல் 'சோழர் காலக் கட்டடக்கலை அடக்கமான முதிர்ச்சியுடையது. பிற்காலத்தில் வழக்கத்திற்கு வந்த விசயநகரக்கலை மிக நேர்த்தி யாக இருந்தாலும் அளவு கடந்த அலங்காரக் கூறுகளை உடைய தாய் இருந்தது. இவ்விரு கலைப்பாணிகளும் ஒன்று மற்றொன்ருய் மாறுவதற்குத் தேவையான இடைக்காலப் பாணியாய்ப் பாண்டியர் கலை விளங்கியது.[15]' பொதுவாக கோபுரத்தின் அடித்தளம் கருங்கல்லால் கட்டப்பட்டிருக்கும். அதற்குமேல் செங்கல்லும் சாந்தும் சேர்ந்து கட்டிய மேல்கட்டுமானம் நிற்கும். இங்கு எண்ணற்ற சிற்பங்கள் அணி செய்வதற்கேற்ற பிறைகளும் கூடுகளும் இருக்கும். பல பாண்டியர் கோபுர வாசல்களில் அவர்களது சின்னமாகிய இரு கயல்கள் பொறிக்கப்பட்டிருப் பதையும் காணலாம். எடுத்துக்காட்டாக மதுரை சுந்தரேஸ் வரரின் கிழக் கோபுரமாகிய அவனிவேந்தன் கோபுரத்திலும் மேற்குக் கோபுர வாசலிலும் மீன் இலச்சினையைக் காணலாம். மற்றபடி அடித்தளத்திலிருந்து சுற்றியிருக்கும் அரைக்கம்பங் களும் பிறைகளும் சற்று நல்ல வேலைப்பாட்டுடன் காணப்படு கின்றன. கும்பஞ்சரம் அல்லது கோஷ்ட பஞ்சரம் போன்ற அரைக் கம்பங்களும் இருக்கும். பாண்டியர் மண்டபங்களில் உள்ள தூண்களைச் செய்யும் கலையும் வளர்ச்சி பெற்றது. தூணில் உள்ள இதழ் சோழர் காலத் தூண்களிலுள்ள இதழைக் காட் டிலும் முனைப்பாய் இருக்கிறது. போதிகை மேற்கவிந்து தொங்கு கின்ற உறுப்பாய் உருவாக்கப்பட்டது. பலகையும் சற்று அகல மாய் இருக்கும்.

### சிற்பக்கலை திருப்பரங்குன்றம்

கோவில் கட்டடக்கலையை ஒட்டியே சிற்பக்கலையும் நன்கு வளர்க்கப்பட்டது. மேலே குறிப்பிட்டுள்ள பல ஆரம்பகாலக் குகைக்கோவில்களின் கற்றளிகளிலும் பல அற்புதச் சிற்பக் கூறுகளைக் காணலாம். ஆனைமலை நரசிம்மர் குகைக் கோவிலில் கம்பீரமாக வீற்றிருக்கும் நரசிம்மரும் அதன் பக்கத்திலுள்ள லாடன் கோவிலில் சுப்பிரமணியரின் புடைப்புச் சிற்பமும், திருப்பரங்குன்றம் குகைக் கோவிலின் சன்னதிகளில் உள்ள

[15] Sastri. K. A. N. A History of South India, p. 275.

சோமாஸ்கந்தர், வீற்றிருந்த திருமால், சுப்பிரமணியர், துர்க்கை, கணேசர் சிற்பங்களும் கம்பீரமாயும் பெரிய அளவிலும் செய்யப் பட்டவை. குகையின் பக்க முகப்புச் சுவர்களில் ஒரு பக்கம் நரசிம்மரும் வராகப் பெருமானும், மற்றொரு பக்கம் நடராசப் பெருமானும் சிரித்த முகத்துடன் சதுரதாண்டவம் ஆடுவதும், அன்னை சிவகாம சுந்தரி அதைக்கண்டு ரசிப்பது போன்று செய் திருப்பதும் வியக்கத்தக்க அழகுடன் செய்யப்பட்டிருக்கின்றன. நந்தி மத்தளம் கொட்ட சிவ கணங்களெல்லாம் ஆனந்தப் பூரிப் புடன் துள்ளிக் குதிக்கின்றன. 8ஆம் நூற்றாண்டில் பாண்டியரது எழில் மிக்க கலைத்திறனுக்கு இச் சிற்பங்கள் நல்ல உதாரணங் களாகும். இவை பாண்டியர் பல்லவர் சிற்பங்களுடன் மிக நெருங்கிய தொடர்பு கொண்டனவாகவே அமைந்துள்ளன. நல்ல கம்பீரமான தோற்றம் அகன்ற மார்பு, பருத்த தோள், சிறுத்த இடை, மலர்ந்த முகம், உயர்ந்த கிரீடம் போன்ற இயல்புகளை நாம் ஆரம்பகாலப் பாண்டியர் சிற்பங்களில் கண்டு இன்புறலாம்.

### குன்னக்குடி

குன்னக்குடி குகைக்கோவில்களிலுள்ள சிற்பங்களும் அழகு வாய்ந்தவை. அங்குள்ள கருடாந்திக விஷ்ணு மாமலையி லுள்ளது போலவே காட்சியளிக்கிறது. அவர் அணிந்திருக்கும் கடிசூத்திரம், சன்னவீரம், சங்கு சச்கரம் ஏந்தும் பாணி இவை யெல்லாம் பல்லவர்களது பாணியை ஒத்து இருப்பதாகக் கலை வல்லுநர் சிவராமமூர்த்தி குறித்துள்ளார்.[16] அங்குள்ள மற்றொரு குகைக் கோவிலில் எட்டுக் கைகளுடன் நடராசர் அற்புத நடன மாடுவதைப் பார்க்கிறோம். இது 'புஜதருவன' பாணியில் அமைந்தது என்பர். அங்குள்ள துவாரபாலகர்களும் கம்பீர மாகத் தோற்றமளிக்கின்றனர்.

### திருக்கோளக்குடி

திருக்கோளக்குடியிலுள்ள (இராமநாதபுர மாவட்டம்) புலஸ் தியர் என்று அழைக்கப்படும் முனிவரின் சிற்பமும் அதேபோன்று சங்கரநாயனார் கோவில் அருகேயுள்ள சேந்தமாரம் குகைக் கோவிலிலுள்ள மற்றொரு முனிவரின் சிற்பமும் முனிவர்களுக்கே வுரிய அமைதியும் ஆற்றலும் ஒருங்கே கொண்டு மிளிர்கின்றன. பல்லவர் கோவில்களில் காணப்படும் ரிஷிகுமாரர்களைப் போன்று இவையும் உன்னத கலைப்படைப்புகளாகும்.

[16] C Sivaramamurti, Op. Cit-p.27

**திருமலைப்புரம்**

கடயநல்லூர் அருகிலுள்ள திருமலைப்புரம் குகைக்கோவிலில் எழில் மிக்க பல பாண்டிய சிற்பங்கள் காணப்படுகின்றன. இங்குக் கணேசர், விஷ்ணு, நடராசர், பிரம்மா, துவாரபாலகர்கள் போன்ற சிற்பங்கள் பெரிய அளவில் கம்பீரமாய்க் காட்சியளிக்கின்றன. திருமால் தனது மேல் இரு கைகளில் சங்கும், சக்கரமும் ஏந்தியிருக்கிறார். மற்ற இரண்டு கைகளையும் கட்யவலம்பிதம் என்ற பாணியில் இடுப்பில் வைத்துக் கொண்டு 'சமபங்க' பாங்கில் நிற்கின்றார். நடராசர் 'சதுர தாண்டவம்' ஆடுவது போன்று சித்தரிக்கப்பட்டுள்ளார். அவரது பக்கத்தில் இரு கணங்கள் வீணை போன்ற ஓர் இசைக் கருவியை வாசிக்கின்றனர். இச் சிற்பங்களில் பல்லவர்-சாளுக்கியர் இவர்களது பாணிகளில் பல இயல்புகளும் ஒற்றுமைகளும் காணப்படுகின்றன.

**கழுகுமலை**

பாண்டியர் சிற்பங்களுக்கு ஒரு கருவூலமாகத் திகழ்வது கழுகுமலையிலுள்ள வெட்டுவான் கோவிலாகும். விமான கிரீவத்தில் தென் புறத்தில் தக்ஷிணாமூர்த்தி, மேற்கில் நரசிம்மர், வடக்கே பிரம்மா, கிழக்கே உமையுடன் கூடிய சிவபெருமான் போன்றோரது எழில் வாய்ந்த சிற்பங்கள் காட்டப்பட்டுள்ளன. கிரீவத்தின் கீழே அழகிய வேலைப்பாடுகளுடன் கூடிய கொடுங்கை இருக்கின்றது. அதிலுள்ள கூடுகளிலிருந்து அழகிய இனிய உருவங்கள் எட்டிப் பார்ப்பது போன்று அமைக்கப்பட்டுள்ளன. அதற்கும் கீழ்வரிசையில் களிநடனம் புரியும் கணங்கள் அணி செய்கின்றன. மிருதங்கம் வாசிக்கும் தக்ஷிணாமூர்த்தியின் சிற்பம் இங்குக் காணப்படுகிறது. இதை வேறெங்கும் காண்பது அரிது.

கட்டுமானக் கோவில்களிலும் பாண்டியரது சிற்பக்கலையின் சிறப்பைப் பார்க்கின்றோம். பனங்குடிச் சிவன்கோவிலில் வடக்குக் கோஷ்டத்தில் பிரமனும் தெற்கே தக்ஷிணாமூர்த்தியும், கிழக்கே இந்திரனும், மேற்கே விஷ்ணுவும் வீற்றிருக்கிறார்கள். காளியாபட்டிக் கோவிலில் பல அழகிய சிற்பங்கள் காணப்படுகின்றன. அவை கணேசர், கார்த்திகேயர், துர்க்கை சப்தமாத்திரிகள் சண்டேஸ்வரர், ஜேஷ்டாதேவி, சூரியன் போன்றோரது உருவங்களாகும். இவ்வுருவங்கள் ஒரு காலத்தில் தனித்தனி சன்னதிகளில் இருந்திருக்க வேண்டும்.

**உக்கிரன் கோட்டைச் சிற்பங்கள்**

அவ்வாறே உக்கிரன் கோட்டையிலும் அழகிய பாண்டியர் காலத்துச் சிற்பங்கள் உள்ளன. சொக்கலிங்கேஸ்வரர் கோவிலில்

ஜேஷ்டை, தக்ஷிணாமூர்த்தி ஆகியோரின் சிற்பங்கள் எஞ்சியுள்ளன. வடவாயிலமர்ந்தான் கோவிலில் அஷ்டபரிவாரத் தெய்வங்களின் எழில்மிக்க சிற்பங்களை இன்றும் காணலாம்.

**திருவாலீஸ்வரர் கோவில் சிற்பங்கள்** (திருநெல்வேலி மாவட்டம்)

திருவாலீஸ்வரத்திலுள்ள இக் கோவிலில் பாண்டியரது சிற்பங்கள் சிதைவுபடாமல் பாதுகாக்கப்பட்டுள்ளன. பாண்டியரது சிற்பக்கலைத் திறனின் உறைவிடமாக இக் கோவில் அமைந்துள்ளது. விமானகிரீவத்தில் கிழக்கே இந்திரன், மேற்கே யோக நரசிம்மர், தெற்கே தக்ஷிணாமூர்த்தி, வடக்கே பிரம்மா இவர்களின் அழகிய சிற்பங்கள் அணி செய்கின்றன. முதல் தளத்தில் மேற்கே லிங்கோத்பவர், வடக்கே கஜாந்தகர் முதலிய சிற்பங்களைக் காணலாம். தவிர கங்காதரமூர்த்தி, நடராசர், ரிஷபாந்தகர், உமையொருபாகன் (அர்த்த நாரீஸ்வரர்), திருபுராந்தகர், பிட்சாடனர், சண்டேசஅனுக்கிரகமூர்த்தி, நந்தி அனுக்கிரக மூர்த்தி போன்ற சிவபிரானின் பல திருக்கோலங்களை அழகிய சிற்பவடிவிலே காண்கிறோம்.

மதுரைக்கூடல் அழகர் கோவிலில் வீற்றிருந்த கோலத்தில் இருக்கும் எம்பெருமானின் உருவம் மிக அழகு வாய்ந்தது. ,ஆகூயஅஸ்தம்' என்று சொல்லப்படும் 'கூவி அழைத்து அருள் பாவிக்கும்' திருக்கையுடன் இங்கு எழுந்தருளியிருக்கிறார். திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளியிருக்கும் 'கள்ளழகர்' அல்லது 'சுந்தரத்தோளுடையார்' பெயருக்குத் தக்கபடியே அழகும் கம்பீரமும் தோன்ற, நின்ற கோலத்தில் காட்சிளிக்கிறார். இவர் பல ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப் பெற்றவர். 'அழகன் அலங்காரன்' என்று பெரியாழ்வார் அவரைப் புகழ்ந்துள்ளார். மேலும் திருமோகூர், ஸ்ரீவில்லிபுத்தூர், ஆழ்வார் திருநகரி, ஸ்ரீவைகுண்டம், திருத்தங்கால், திருமயம், வானமாமலை, திருக்கோளூர் போன்ற தலங்களில் வைணவ மரபில் வந்த உன்னத சிற்பங்களைக் காணலாம்.

எட்டு, ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த சமணச் சிற்பங்கள் ஆனைமலை, அழகர்மலை, சமணர்மலை, கரடிப்பட்டி, கொங்கர் புளியங்குளம், கீழவளவு, சித்தன்னவாசல், கழுகுமலை, உத்தம பாளையம் போன்ற இடங்களில் காணப்படுகின்றன. அண்மையில் மதுரைக்கருகிலுள்ள அரிட்டாபட்டியிலும் சமணர் குகையும் சிற்பமும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. பொதுவாக, இவற்றில் சமண முனிவர்களான தீர்த்தங்கரர்களின் உருவங்களின் புடைப்புச் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. முக்குடைக்கீழ்

அமர்ந்த பல முனிவர்களையும் நாகப்படையின் கீழ்நிற்கும் பார்சுவநாதர் போன்றோரின் சிற்பங்களையும் இவற்றில் காணலாம். அம்பிகை, யக்ஷர்கள் போன்ற உருவங்களையும் காணலாம்.

**ஓவியக்கலை சித்தன்னவாசல்**

மேலே கூறப்பட்ட சமணச் சிலைகளின்மீது அக்காலத்தில் தீட்டப்பட்ட ஓவியங்களின் சிதைவுகளைக் காணலாம். கற் சிற்பங்கள் மீது மெல்லிய சுண்ணும்புச் சாந்து பூசி அதற்குமேல் வண்ண ஓவியங்கள் தீட்டப்பட்டன. மதுரைக் கருகிலுள்ள ஆனைமலையில் இருக்கும் சமணத் தீர்த்தங்கரரின் சிற்பங்கள் மீது அழகிய ஓவியங்களின் எஞ்சிய சிதைவுகளை இன்றும் காணலாம். சமணர் ஓவியங்கள் அதிக அளவில் காணப்படுவது சித்தன்ன வாசல் குகைக் கோவிலில்தான். வெகுநாள்களுக்கு இக்குகையும் அதைச் சார்ந்த ஓவியங்களும் பல்லவர்கள் செய்வித்ததாகக் கருதப்பட்டு வந்தன. ஆனால், இக்குகைக்குத் திருப்பணி செய் வித்தவர் மதுரையைச் சேர்ந்த இளம் கௌதமர் என்னும் ஆசிரியர் என்று அங்குள்ள கல்வெட்டுக் கூறுகிறது. அவர் சமண மதத்தைச் சார்ந்தவர். 9ஆம் நூற்றாண்டில் ஆண்ட ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் என்ற பாண்டிய மன்னன் காலத்தில் அவரால் திருப்பணி செய்யப்பட்டதாக அங்குள்ள தமிழ்க் கல்வெட்டு அறிவிக்கின்றது.

இக் குகைக் கோவிலின் முன் மண்டப விதானம், உண்ணாழிகை, தூண்கள் போன்ற பகுதிகளிலுள்ள ஓவியங்கள் கண்ணைக் கவருகின்றன. கல் சுவரின் மீது சுண்ணும்பு சாந்து தீட்டி அதை வழுவழுப்பாய்த் தேய்த்து அது காய்வதற்குள் வண்ண ஓவியங்கள் தீட்டப்பட்டன. இதைப் பிரஸ்கோமுறை (Freseo) என்பர். நடு மண்டபத்தின் மேல்விதானத்தில் ஒரு தாமரைக்குளம் அழகாகத் தீட்டப்பட்டுள்ளது. செந் தாமரையும், வெண்டாமரையும் மலர்ந்து விரியும் காட்சி இயற்கையாயுள்ளது. குளத்தில் அன்னப்பறவைகள் நீந்திச் செல்கின்றன; யானைகள் இறங்கி குளிக்கின்றன; மீன்கள் துள்ளி விளையாடுகின்றன. கையிலே மலருடன் கந்தருவ புருஷர்கள் அழகுற நிற்கின்றனர். இத் தாமரைத் தடாகம் சமணர் சுவர்க் கங்களில் ஒன்றாகிய சமவசரணத்திற்குப் போகும் வழியில் உள்ள தடாகத்தைக் குறிக்கும்.

மண்டபத் தூண்களிலும் பல வண்ணச்சித்திரங்கள் காணப் படுகின்றன. ஒரு தூணில் அரசன் அரசி ஓவியங்கள் அணி செய் கின்றன. இவை பாண்டிய வேந்தனையும் அவனது மனைவியையும்

குறிப்பனவாகத் தோன்றுகின்றன. இவற்றைத் தவிரத் தூண்களில் நாட்டியக் கணிகையர் நடனமாடும் எழில்மிகு தோற்றங்கள் தீட்டப்பட்டுள்ளன. பல அழகிய ஆடை அணிகலன்களுடன் ஆடும் இப்பெண்டிர் தேவலோகக் கன்னிகள் போன்று காட்சியளிக்கின்றனர். அக்கால நடனக்கலைக்கும் இவ் ஓவியங்கள் நல்ல சான்று பகர்கின்றன.

சித்தன்னவாசல் ஓவியங்கள் பண்டைய இந்திய ஓவியக்கலை மரபையொட்டியே மலர்ந்த உன்னத கலைச் செல்வமாகும். அஜந்தா ஓவியங்களிலும் பல்லவர் ஓவியங்களிலும் காணப்படும் அழகையும் அமைதியையும் பண்பட்ட கலைத்திறனையும் சித்தன்ன வாசலில் காணமுடிகிறது. இந்திய ஓவியக்கலை பாரம்பரியத்தில் பாண்டியரது பங்கைச் சித்தன்னவாசல் பறைசாற்றுகிறது. திருமலைப்புரம் குகைக்கோவிலிலும் பாண்டியர் ஓவியங்கள் சிதைந்த நிலையில் காணப்படுகின்றன. இவற்றை 1935ஆம் ஆண்டு முதன் முதலில் கண்டுபிடித்து அறிவித்த பெருமை அறிஞர் ஜுவோ துபராயைச் சாரும். இங்கும் தேவகணங்கள், கந்தர்வ புருஷர்கள், நாட்டியக் கணிகையர் போன்ற எழில்மிக்க உருவங்களும், வண்ணத் தாமரைப் பூக்களும் அழகாகத் தீட்டப் பட்டுள்ளன. தற்போது சிதைந்த நிலையில் இருந்தபோதிலும் அவை பாண்டியரது சிறந்த கலைப்படைப்புகளாகத் திகழ்கின்றன.

## செப்புப் படிமக்கலை

கோவில்களில் உற்சவ வழிபாட்டிற்காக அமைக்கப்பெற்ற செப்பு விக்கிரங்களிலும் நுண்ணிய கலைத்திறனைக் காணலாம். சோழரது படிமக்கலை ஆராயப்பட்டது போல் பாண்டியரது கலை இன்னும் ஆராயப்படவில்லை. ஆனால், இங்குள்ள பழைமையான சைவ—வைணவத் தலங்களில் பல உன்னத படைப்புகள் காணக் கிடக்கின்றன. கட்டுமானக் கோவில்கள் பரவலாகக் கட்டப் பட்ட காலத்தில் இப் படிமக்கலையும் நன்கு வேரூன்றியது. பூசைகள் அபிடேகம், உற்சவம் போன்ற சடங்குகள் வளர வளர மூலபேரம், உற்சவபேரம், ஸ்னபனபேரம் போன்ற விக்கிரகங்கள் வழக்கில் வந்தன. ஆழ்வார்களும் நாயன்மார்களும் தெய்வத்தின் வடிவழகில் ஈடுபட்டு மனம் கரைந்தனர். அப்பாடல்கள் உருவாகக் காரணமாயிருந்த அல்லது அப்பாடல்களுக்கு ஏற்ற உருவங்கள் சிற்பவடிவிலும் செப்புப் படிமவடிவிலும் ஆங்காங்கே செய்விக்கப்பட்டு வழிபாடு செய்யப்பட்டன. சோமாஸ்கந்தர் சந்திரசேகர், நடராசர் போன்ற சிவபெருமானின் பல வடிவங்களும் மற்றும் கணேசர், சுப்பிரமணியர், துர்க்கை, நாயன் மார்கள் போன்றோரின் அழகிய படிமங்களும் செய்யப்பட்டன,

பின்வரும் செப்புப்படிமங்கள் பாண்டியரின் கைத்திறனுக்கு நல்ல எடுத்துக்காட்டுகளாகக் கருதப்படுகின்றன.

(1) கொடுமுடியில் (கோவை மாவட்டம்) பூசையில் வைக்கப் பட்டுள்ள சமபங்கத்தில் நிற்கும் திருமாலின் படிமமும் கொடுமுடிச் சிவன் கோவிலிலுள்ள திரிபுராந்தகரும் தேவியும் பிற்காலப் பாண்டியர் பாணியைச் சார்ந்தவை என்றும் 10ஆம் நூற்றுண்டைச் சேர்ந்தவையென்றும் கருதப்படுகின்றன.[17]

(2) மதுரை மாவட்டம் பொருப்பு மேட்டுப்பட்டியிலிருந்து சென்னை அரும்பொருள் காட்சிச் சாலையில் வைக்கப்பட்டிருக்கும் நடராசப் பெருமானின் செப்புப் படிமம் கம்பீரம் வாய்ந்ததாகக் காட்சியளிக்கிறது. இது 11ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் செய்யப்பட்டது என்று கணிக்கப்பட்டுள்ளது. வழக்கத்திற்கு மாறுக வலக் காலைத் தூக்கிக் கொண்டு நடனம் ஆடுவதாகக் காட்டப்பட்டுள்ளது இதன் தனித்தன்மையாகும்.

(3) திருக்குற்றுலம் கோவிலிலுள்ள நடராசர் படிமம் மிக அழகு வாய்ந்தது.

இதுபோன்று பாண்டிய நாட்டுக் கோவில்களில் எத்தனையோ பழைய விக்கிரகங்கள் உள்ளன. மதுரைக் கடல் அழகர் கோவிலில் நின்ற கோலத்தில் உள்ள அழகரின் வடிவமும், அக் கோவிலில் மற்றொரு சன்னதியில் உள்ள இராமர், சீதை, இளைய பெருமாள், அனுமன் இவர்களது எழில் மிக்க படிமங்கள் வழிபடுவோரது உள்ளங்களைக் கொள்ளை கொள்ளும் வகையில் அமைந்துள்ளன. அது போன்று மதுரை மீனுட்சியம்மன் கோவிலிலுள்ள சோமாஸ்கந்தர், நடராசர், ஆழ்வார் திருநகரியி லுள்ள பெருமாளும் ஆழ்வாராதிகள், ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ள ரங்கமன்னுர், ஆண்டாள், பெரியாழ்வார் போன்ற பல அழகிய விக்கிரகங்களை பாண்டிய நாட்டுக் கோவில்களில் காண்கிறேம். முந்திய காலத்தில் பல்லவரது பாணியையும் பிற்காலத்தில் சோழரது பாணியையும் ஒத்தே இவை அமைந்தன. படிமக்கலை சோழநாட்டில் பெருமையடைந்த அளவிற்குப் பாண்டியநாட்டில் பெருமையடைய வில்லையெனினும் அக் கலை நன்கு போற்றப் பட்டு வந்தது என்பதற்குத் தக்க சான்றுகள் உள்ளன. இத் துறையில் மேலும் விரிவாக ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட வேண்டும்.

[17] Sivaramamurti C. South Indian Bronzes Plates 89, 90a-b. p. 79-80.

# இடைக்காலப் பாண்டியர் மரபு

1. பாண்டியன் கடுங்கோன்
(கி.பி. 575–600)

2. மாறவர்மன் அவனி சூளாமணி
(கி.பி. 600–620)

3. செழியன் சேந்தன்
(கி.பி. 620–642)

4. மாறவர்மன் அரிகேசரி
(கி.பி. 642–700)

5. கோச்சடையன் ரணதீரன்
(கி.பி. 700–730)

6. மாறவர்மன் அரிகேசரி
(இராசசிம்மன் I, கி.பி. 730–768)

7. நெடுஞ்சடையன் பராந்தகன்
(வரகுணன் I, கி.பி. 768–815)

8. ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன்
(கி.பி. 815–862)

9. வரகுணன் II
(கி.பி. 862–885)

10. பராந்தக வீரநாராயணன்
(கி.பி. 860–905)

11. இராசசிம்மன் II
(கி.பி. 900–920)

12. சோழன் தலைகொண்ட
வீரபாண்டியன்




படம் 1. அகழ்வாராய்வின்போது கிடைத்த முதுமக்கள் தாழிகள்
(ஆதிச்சநல்லூர், திருநெல்வேலி மாவட்டம்)




படம் 2. அகழ்வாய்வில் கிடைத்த செப்புப்படிமம்
(ஆதிச்சநல்லூர், திருநெல்வேலி மாவட்டம்)



படம் 3. பிராமிக் கல்வெட்டு
(திருப்பரங்குன்றம், மதுரை மாவட்டம்)



படம் 4. மீன் இலச்சினையுடன் கூடிய பாண்டியர் செப்பேடு

படம் 5. குடைவரைக் கோயில் - முகப்புத் தோற்றம் (திருமலைப்புரம், திருநெல்வேலி மாவட்டம்)





படம் 6. கீழ்க்குடைவரைக் கோயிலின் ஒரு பக்கத் தோற்றம் (திருச்சிராப்பள்ளி - ஊரும் மாவட்டமும்)

படம் 7. விமானத்தின் மேற்புறத் தோற்றம் - வேட்டுவன் கோயில் (கழுகுமலை, திருநெல்வேலி மாவட்டம்)





படம் 8. விமானத்தின் பொதுத்தோற்றம் - சௌமிய நாராயணர் கோயில் (திருக்கோட்டியூர், இராமநாதபுர மாவட்டம்)

படம் 9. விமானத்தின் அண்மைத் தோற்றம் - இராஜகோபாலசுவாமி கோயில் (மன்னார்கோயில், திருநெல்வேலி மாவட்டம்)





படம் 10. விமானத்தின் அண்மைத் தோற்றம் - வாலீஸ்வரர் கோயில்
(திருவாலீஸ்வரம், திருநெல்வேலி மாவட்டம்)

படம் 11. விமானத்தின் பக்கத்தோற்றம் - மங்கைநாதர் கோயில் (உத்தரகோசமங்கை, திருநெல்வேலி மாவட்டம்)





படம் 12. மேலைக்கோபுரம் - மீனாட்சியம்மன் கோயில் (மதுரை)



படம் 13. நடராசர் தாண்டவநிலை - சுப்பிரமணியர் குடைவரைக் கோயில்
(திருப்பரங்குன்றம், மதுரை மாவட்டம்)



நரசிம்மமூர்த்தி அமர்ந்த நிலையில் திருமால் வராகமூர்த்தி

படம் 14. சுப்பிரமணியர் குடைவரைக் கோயில் (திருப்பரங்குன்றம், மதுரை மாவட்டம்)



படம் 15. சிவநர்த்தனம் - குடைவரைக் கோயில்
(திருமலைப்புரம், திருநெல்வேலி மாவட்டம்)



படம் 16. திருமாலும் கருடனும் - மாசிலீஸ்வரம் குடைவரைக் கோயில்
(குன்றக்குடி, இராமநாதபுர மாவட்டம்)



படம் 17. புலத்திய முனிவர்
(திருக்காளக்குடி, இராமநாதபுர மாவட்டம்)



படம் 18. நடராசரும் சிவகாமியும் - குடைவரைக் கோயில்
(மூவரைவென்றான், இராமநாதபுர மாவட்டம்)



படம் 19. சுப்பிரமணியர் சிற்பம் - குடைவரைக் கோயில்
(மூவரைவென்றான், இராமநாதபுர மாவட்டம்)



படம் 20. திலகமிடும் நங்கை - காசி விசுவநாதர் கோயில்
(தென்காசி, திருநெல்வேலி மாவட்டம்)



படம் 22. நடராசர் - கால்மாறிய நடனம்
(தற்போது உள்ள இடம் அருங்காட்சியகம்,
எழுமூர், சென்னை)



படம் **23.** குலசேகர ஆழ்வார் - செப்புப்படிமம்
(மன்னார்கோயில், திருநெல்வேலி மாவட்டம்)



அகத்தியர் ஒரு பாண்டிய மன்னன் கங்காள மூர்த்தி ரிஷபாந்திகர்

படம் 24. செப்புப்படிமங்கள் (தென்காசி, திருநெல்வேலி மாவட்டம்)

படம் 25. கூரை ஓவியம் - சமணர் குடை வரைக் கோயில் (சித்தன்னவாயில், புதுக்கோட்டை மாவட்டம்)



313

# பிற்சேர்க்கை

## 1. நெடுஞ்சடையன் பராந்தகனின் வேள்விக்குடிச் செப்பேடுகள்[1]

### தமிழ்ப் பகுதி

கொல்யானை பலவோட்டிக் கூடாமன்னர் குழாந்தவிர்த்த
பல்யாக முதுகுடுமிப் பெருவழுதியெனும் பாண்டியாதிராசனல்
நாகமா மலர்ச்சோலை நளிர்சினைமிசை வண்டலம்பும்
பாகனூர்க் கூற்றமென்னும் பழனக்கிடக்கை நீர்நாட்டுச்
சொற்கணாளர் சொலப்பட்ட சுருதிமார்க்கம் பிழையாத
கொற்கைகிழா னற்கொற்றன் கொண்டவேள்வி முற்றுவிக்கக்
கேள்வியந்த ணாளர்முன்பு கேட்கவென் றெடுத்துரைத்து
வேள்விச்சாலை முன்புநின்று வேள்விக்குடியென் றப்பதியைச்
சீரோடு திருவளரச் செய்தார்வேந்த னப்பொழுதே
நீரோடட்டிக் கொடுத்தமையா னீடுபுக்தி துய்த்தபின்
அளவரிய ஆதிராசரை யகலநீக்கி யகலிடத்தைக்
களப்பரரெனுங் கலியரைசன் கைக்கொண்டதனை யிறக்கியபின்
படுகடன்முளைத்த பருதிபோற் பாண்டியாதிராசன் வெளிப்பட்டு
விடுகதி ரவிரொளி விலகவீற் றிருந்து
வேலைசூழ்ந்த வியலிடத்துக்
கோவுங் குறும்பும் பாவுடன் முருக்கிச்
செங்கோ லோச்சி வெண்குடை நீழற்
றங்கொளி நிறைந்த தரணி மங்கையைப்
பிறர்பா லுரிமை திறவிதி னீக்கித்
தன்பா லுரிமை நன்கன மமைத்து
மானம் பேர்த்த தானை வேந்தன்
ஒடுங்கா மன்ன ரொளிநக ரழித்த
கடுங்கோ னென்னுங் கதிர்வேற் றென்னன்
மற்றவற்கு மகனாகி மகீதலம் பொதுநீக்கி
மலர்மங்கையொடு மண்ணயர்ந்த
அற்றமிலடர் வேற்றானை யாதிராச னவனிசூளாமணி
சத்திறத்து மிகலழிக்கு மத்தயானை மாறவர்மன் மற்றவற்கு

[1] செந்தமிழ்த் தொகுதி 20; E. I. XVII.

மருவினிய வொருமகனுகி மண்மகளை மறுக்கடிந்து
விக்கிரமத்தின் வெளிப்பட்டு விலங்கல்வெல்பொறி
வேந்தர்வேந்தன்
சிலைத்தடக்கைக் கொலைக்களிற்றுச் செழியன்வானவன்
செங்கோற்சேந்தன்
மற்றவற்குப் பழிப்பின்றி வழித்தோன்றி
உதயகிரி மத்யமத் துறுசுடர் போலத்
தெற்றென்று திசைநடுங்க மற்றவன் வெளிப்பட்டுச்
சூழியானை செலவுந்திப் பாழிவா யமர்கடந்து
வில்வேலிக் கடற்றுனையை நெல்வேலிச் செருவென்றும்
விரவிவந் தடையாத பரவரைப் பாழ்படுத்தும்
அறுகாலினம் புடைதிளைக்குங் குறுநாட்டவர் குலங்கெடுத்தும்
கைந்நலத்த களிறுந்திச் செந்நிலத்துச் செருவென்றும்
பாரளவுந் தனிச்செங்கோற் கேரளனைப் பலமுறையும்
உரிமைச் சுற்றமோ டவர்யானையும்
புரிசை ம(ா) மதிற் புலியூரப்பகல்
நாழிகை யிறவாமை இகலாழியுள் வென்றுகொண்டும்
வேலாழியும் வியன்பறம்பு மேலாமைசென் றெறிந்தழித்தும்
இரணியகர்ப்பமுந் துலாபாரமுந் தரணிமிசைப் பலசெய்தும்
அந்தணர்க்கு மசக்தர்க்கும் வந்தணைகென் றீத்தளித்த
மகரிகையணி மணிநெடுமுடி
அரிகேசரி யசமசமன் சிரீமாறவர்மன்
மற்றவற்கு மகனுகிக் கொற்றவேல் வலனேந்திப்
பொருதூருங் கடற்றுனையை மருதூருண் மாண்பழித்
தாய்வேளை யகப்பட எய்யென்னுமை யெறிந்தழித்துச்
செங்கொடியும் புதான்கோட்டுஞ் செருவென்றவர் சினந்தவிர்த்துக்
கொங்கலரு நறும்பொழில்வாய்க் குயிலோடு மயிலகவும்
மங்கலபுரமெனு மாநகருண் மகாரதரை யெறிந்தழித்
தறைகடல் வளாகம் பொதுமொழி யகற்றிச்
சிலையும் புலியுங் கயலுஞ் சென்று
நிலையமை நெடுவரை யிடவயிற் கிடாஅய்
மண்ணினி தாண்ட தண்ணளிச் செங்கோற்
றென்ன வானவன் செம்பியன் சோழன்
மன்னர் மன்னன் மதுரகரு நாடகன்
கொன்னவின்ற நெடுஞ்சுடர்வேற் கொங்கர்கோமான்
கோச்சடையன்
மற்றவர்க்குப் புத்திரனுய் மண்மகள்து பொருட்டாக
மத்தயானை செலவுந்தி மானவேல் வலனேந்திக்
கடுவிசையா லெதிர்ந்தவரை நெடுவயல்வாய் நிகரழித்துக்
கறுவடைந்த மனத்தவரைக் குறுமடைவாய்ச் சூர்ப்பழித்து

மன்னிகுறிச்சியுந் திருமங்கையு முன்னின்றவர் முரணழித்து
மேவலோர் கடற்றுனையோ டேற்றெதிரே வந்தவரைப்
பூவலூர்ப் புறங்கண்டும்
கொடும்புரிசை நெடுங்கிடங்கிற் கொடும்பா ளூர்க்கூடார்
கடும்பரியுங் கடுங்களிறுங் கதிர்வேலிற் கைக்கொண்டும்
சேவ......கூடாத பல்லவனைக் குழும்பூருட் டேசழிய
எண்ணிறந்த மால்களிறு மிவுளிகளும் பலகவர்ந்தும்
தரியலராய்த் தனித்தவரைப் பெரியலூர்ப் பீடழித்தும்
பூவிரியும் பொழிற்சோலைக் காவிரியைக் கடந்திட்
டழகமைந்த வார்சிலையின் மழகொங்க மடிப்படுத்தும்
ஈண்டொளிய மணியிமைக்கு மெழிலமைந்த நெடும்புரிசைப்
பாண்டிக் கொடுமுடி சென்றெய்திப் பசுபதியது
பதுமபாதம் பணிந்தேத்திக்
கனகராசியுங் கதிர்மணியு மனமகிழக் கொடுத்திட்டுங்
கொங்கர்வன் நறுங்கண்ணிக் கங்கராசனொடு சம்பந்தஞ்செய்தும்
எண்ணிறந்தன கோசகசிரமு மிரணியகர்ப்பமுந் துலாபாரமும்
மண்ணின்மிசைப் பலசெய்து மறைநாவினோர் குறைதீர்த்துங்
கூடல்வஞ்சி கோழியென்னு மாடமா மதில்புதுக்கியும்
அறைகடல் வளாகங் குறையா தாண்ட
மன்னர் மன்னன் றென்னவர் மருகன்
மான வெண்குடை மான்றேர் மாறன்
மற்றவற்கு மகனாகி மாலுருவின் வெளிப்பட்டுக்
கொற்றமூன் றுடனியம்பக் குளிர்வெண்குடை மண்காப்ப
பூமகளும் புலமகளு நாமகளு நலனேத்தக்
கலியரசன் வலிதளரப் பொலிவினொடு வீற்றிருந்து
கருங்கட லுடுத்த பெருங்கண் ஞாலத்து
நாற்பெரும் படையும் பாற்படப் பரப்பிக்
கருதாதுவந் தெதிர்மலைந்த காடவனைக் காடடையப்
பூவிரியும் புனற்கழனிக் காவிரியின் றென்கரைமேற்
றண்ணுக மலர்ச்சோலைப் பெண்ணாகடத் தமர்வென்றும்
தீவா யயிலேந்தித் திளைத்தெதிரே வந்திறுத்த
ஆய்வேளையுங் குறும்பரையு மடலமரு ளழித்தோட்டிக்
காட்டுக்குறும்பு சென்றடைய நாட்டுக்குறும்பிற் செருவென்றும்
அறைகடல் வளாக மொருமொழிக் கொளீஇய
சிலைமலி தடக்கைத் தென்ன வானவன் அவனே,
சிரீவரன் சிரீமனோகரன் சினச்சோழன் புனப்பூழியன்
வீதகன்மஷன் விநயவிச்சுருதன் விக்ரமபாரகன் வீரபுரோகன்
மருத்பலன் மான்யசாசனன் மனூபமன் மர்த்திதவீரன்
கிரிஸ்திரன் கீதகிந்நரன் கிருபாலயன் கிருதாபதானன்
கலிப்பகை கண்டகநிஷ்டுரன் கார்யதக்ஷிணன் கார்முகபார்த்தன்

பராந்தகன் பண்டிதவத்ஸலன் பரிபூரணன் பாபபீரு
குரையுறு கடற்படைத்தானைக் குணக்கிராகியன் கூடநிர்ணயன்
நிறையுறுமலர் மணிநீண்முடி நேரியர்கோ னெடுஞ்சடையன்
மற்றவன்றன் ராஜ்யவற்சரம் மூன்றுவது செலாநிற்ப
ஆங்கொருநாண்,
மாடமா மதிற்கூடற் பாடுநீத்தவ ராக்ரோதிக்கக்
கொற்றவனே மற்றவரைத் தெற்றென நன்குகூவி
என்னேநிங் குறையென்று முன்னுகப் பணித்தருள
மேனுணின் குரவராற் பான்முறையின் வழுவாமை
மாகந்தோய் மலர்ச்சோலைப் பாகனூர்க் கூற்றத்துப்படுவது
ஆள்வதானை யடல்வேந்தே வேள்விக்குடியென்னும்
பெயருடையது
ஒல்காத வேற்றானையொ டோதவேலி யுடன்காத்த
பல்யாக முதுகுடுமிப் பெருவழுதியென்னும் பரமேச்வரனுல்
வேள்விக்குடி யென்னப்பட்டது கேள்வியிற் றரப்பட்டதனைத்
துளக்கமில்லாக் கடற்றானையாய் களப்பிரரா லிறக்கப்பட்டது
என்றுநின்றவன் விக்ஞாப்யஞ்செய்ய நன்றுநன்றென்று
முறுவலித்து
நாட்டானின் பழமையாதல் காட்டிநீ கொள்கவென்ன
நாட்டாற்றன் பழமையாதல் காட்டினனங் கப்பொழுதே
காட்டமேனு ளெங்குரவராற் பான்முறையிற் றரப்பட்டதை
எம்மாலுந் தரப்பட்டதென்று செம்மாந்தவ னெடுத்தருளி
விற்கைத்தடக்கை விறல்வேந்தன் கொற்கைகிழான் காமக்காணி
நற்சிங்கற்குத்
தோரோடும் கடற்றானையா னீரோடட்டிக் கொடுத்தமையின்
மற்றிதற்குப் பெருநான்கெல்லை தெற்றென விரித்துரைப்பிற்
புகரறுபொழின் மருங்குடுத்த நகரூரெல்லைக்கு மேற்கும்
...........................................

## 2. நெடுஞ்சடையன் பராந்தகனின் சீவரமங்கலச் செப்பேடுகள்[1]

### தமிழ்ப் பகுதி

அன்ன னாகிய வலர்கதிர் நெடுவேற்
றென்னன் வானவன் செம்பியன் வடவரை
இருங்கய லாணை யொருங்குட னடாஅய்
ஒலிகெழு முந்நீ ருலகமுழு தளிக்கும்
வலிகெழு திணிதோண் மன்னவர் பெருமான்

[1] Indian Antiquary XXII; பாண்டியர் செப்பேடுகள் பத்து (தமிழ் வரலாற்றுக் கழகம், 1967)

தென்னல ராடி தேம்புனற் குறட்டிப்
பொன்மலர்ப் புறவில் வெள்ளூர் விண்ணூஞ்
செழியக் குடியென் றிவற்றுட் டெவ்வர்
அழியக் கொடுஞ்சிலை யன்றுகால் வளைத்தும்
மாயிரும் பெரும்புனற் காவிரி வடகரை
ஆயிர வேலி அயிரூர் தன்னிலும்
புகழி யூரிலுந் திகழ்வே லதியனை
ஓடுபுறங் கண்டவ ஞெலியுடை மணித்தேர்
ஆடல் வெம்மா வவையுடன் கவர்ந்தும்
பல்லவனுங் கேரளனு மாங்கவற்குப் பாங்காகிப்
பல்படையொடு பார்ஞெளியப் பவ்வமெனப் பரந்தெழுந்து
குடபாலுங் குணபாலு மணுகவந்து விட்டிருப்ப
வெல்படையொடு மேற்சென்றங்
கிருவரையு மிருபாலு மிடரெய்தப் படைவிடுத்துக்
குடகொங்கத் தடன்மன்னனைக் கொல்களிற்றொடுங்
கொண்டுபோந்து
கொடியணிமணி நெடுமாடக் கூடன்மதி லகத்துவைத்துக்
கங்கபூமி யதனளவுங் கடிமுரசுதன் பெயரறையக்
கொங்கபூமி யடிப்படுத்துக் கொடுஞ்சிலைபூட் டிழிவித்துப்
பூஞ்சோலை யணிபுறவிற் காஞ்சிவாய்ப்பே ரூர்புக்குத்
திருமாலுக் கமர்ந்துறையக்
குன்ற மன்னதோர் கோயி லாக்கியும்
ஆழிமுந்நீ ரகழாக வகல்வானத் தகடுரிஞ்சும்
பாழிநீண்மதில் பரந்தோங்கிப் பகலவனு மகலவோடும்
அணியிலங்கையி னரணிதாகி
மணியிலங்கு நெடுமாட மதில்விழிஞ மதுவழியக்
கொற்றவேலை யுறைநீக்கி வெற்றத்தானை வேண்மன்னனை
வென்றழித்தவன் விழுநிதியொடு குன்றமன்ன கொலைக்களிறுங்
கூந்தன்மாவுங் குலதனமு நன்னாடு மவைகொண்டும்
அரவிந்த முகத்திளையவ ரரிநெடுங்க ணம்புகளாற்
பொரமைந்தர் புலம்பெய்தும் பொன்மாட நெடுவீதிக்
கரவந்தபுரம் பொலிவெய்தக் கண்ணகன்றதோர் கல்லகழொடு
விசும்புதோய்ந்து முகிறுஞ்சலி னசும்பறாத வகன்சென்னி
நெடுமதிலை வடிவமைத்தும்
ஏவமாதி விக்கிரமங்க ளெத்துணையோ பலசெய்து
மணிமாடக் கூடல்புக்கு மலர்மகளொடு வீற்றிருந்து
மனுதர்சித மார்க்கத்தினால் குருசரிதங் கொண்டாடிக்
கண்டகசோதனை தான்செய்து கடன்ஞால முழுதளிக்கும்
பாண்டியநாதன் பண்டித வத்சலன்
வீரபுரோகன் விக்கிரம பாரகன்
பராந்தகன் பரம வைஷ்ணவன் றானாகி
நின்றிலங்கு மணிநீண்முடி நிலமன்னவ னெடுஞ்சடையற்கு
ராஜ்யவர்ஷம் பதினேழாவது............

.........................................................................

## 3. சின்னமனூர்ச் (சிறிய) சாசனம்[1]

### தமிழ்ப் பகுதி

அமிர்தகிரணன் அன்வயத்தி லாகண்டலன தழிவகல
சமரமுகத் தசுரகணந் தலைஅழியச் சிலைகுனித்து
வடவரையது வலாரகுளிகை மணிக்கெண்டைப் பொறிசூட்டியுந்
தென்வரைமிசைக் கும்போத்பவனது தீந்தமிழிற் செவிகழுவியும்
ஹரிஹயன தாரம்பூண்டும் அர்த்தாசன மவனொடேறியும்
சுரிவளையவன் றிருமுடிமிசைத் தூணிபலபடத் தோளோச்சியும்
ஓதமீள வேலெறிந்து மோராயிரங் கிரதுச்செய்தும்
பூதகணம் பணியாண்டும் புவனதலம் பொதுநீக்கியும்
யானையாயிர மையமிட்டும் அபரிமித மதிசயங்கள்செய்து
ஊனமில்புகழ்ப் பாண்டியவம்சத் துலோகநாதர் பலர்கழிந்தபின்
ஜகத்கீத யசோராசிர் ஜயந்தவர்மன் மகனாகிப்
பகைப்பூபர் தலைபனிப்பப் பரமேச்வரன் வெளிப்பட்டு
அரிகேசரி அசமசமன் அலங்கியவிக்கிரமன் அகாலகாலனெனத்
தனக்குரியன பலகுணநாம முலகுமுழு துகந்தேத்தப்
பராவனிப குலமிறைஞ்சப் பாரகலம் பொதுநீக்கி
தராசுரர திடரகலத் தனவருஷம் பொழிதற்கு
வலாஹகத்தின் விரதம்பூண்டு துலாபார மினிதேறிச்
சரணியனு யுலகளித் திரணியகர்ப்ப மிருகால்புக்கு
கோசகசிரத் தொடக்கத்துக் குருதானம் பலசெய்து
வாசவன்போல் வீற்றிருந்தனன் வசுதாபதி மாறவர்மன்
மற்றவற்கு மகனாகி மதிபுரையுங் குடைநீழல்
அற்றமின்றி அவனிமண்டல முடனோம்பி அருள்பயந்து
கற்பகத்தின் விரதம்கொண்டு கலிகலுஷ மறநீக்கி
அற்பமல்லாத் திரவியம்கொடுத் தவனிசுர ரிடர்நீக்கிக்
கருதாதது வந்தெதிர்ந்த கழல்வேந்த ருடனவிய
மருதூரொடு குவளைமலையு மத்தவேழஞ் செலவுந்திச்

......க்குக் கிழக்கும் வடவெல்லை கொற்றன்புத்தூர் பகவதி கோவிலுக்குத் தெற்கு மிவ்விசைத்த பெருநான் கெல்லையுட் பட்டது. சர்வ பரிஹாரஞ்செய்து கொடுத்து மிதற்காணத்திப் பட்டா னண்டனாட்டுக் குண்டூர்க் கூற்றத்துக் குண்டூருத்தர மந்திரியாயின தாயன்சிங்கன் இதன் புறங்காவலெண் பத்தைங் கலங் கொடுக்கப்பட்டது. மற்றிதனைக் காத்தார் தம் மலரடி என் முடி மேலன என்று கொற்றவனே பணித்தருளித் தெற்றெனத் தாம்ர சாஸநஞ் செய்வித்தான்...........
பாண்டிப் பெரும்ப ணைகாரன் மகன் அரிகேசரி எழுத்து.

[1] S. I. I. III pt. iv

## 4. சடையவர்மன் பராந்தக பாண்டியனின் தளவாய்புரச் செப்பேடுகள்[1]

### தமிழ்ப் பகுதி

ஓங்குதிரை வியன்பரப்பில் உததிஆ லயமாகத்
தேங்கமழு மலர்நெடுங்கட் டிசைமகளிர் மெய்காப்ப
விண்ணென் பெயரெய்திய மேகஞாலி விதானத்தின்
தண்ணிழற்கீழ் ஸஹஸ்ரபண மணிகிரணம் விளக்கிமைப்ப
புஜங்கம புரஸ்ஸர போகிஎன்னும் பொங்கணை
மீமிசைப் பயந்தரு தும்புரு நாரதர்
பனுவ னரப்பிசை செவிஉறப் பூதல
மகளொடு பூமகள் பாதஸ்பரிசனைசெய்யக்
கண்படுத்த கார்வண்ணன் றிண்படைமால் ஸ்ரீபூபதி
ஆதிபுருஷன் அமரநாயகன் அழகமைநாபி மண்டலத்துச்
சோதிமரகத துளைத்தாட் சுடர்பொற் றாமரைமலர்மிசை
விளைவுறு களம கணிசமென மிளிர்ந்திலங்கு
சடைமுடியொ டளவியன்ற கமண்டலுவோ டக்ஷமாலை
ஒடுதோன்றின்
சதுர்ப்புஜன் சதுர்வக்த்ரன் சதுர்வேதி சதுர்த்வயாகக்ஷன்
மதுகமழ்மலர்க் கமலயோனி மனந்தந்த மாமுனிஅத்ரி
அருமரபிற் பலகாலந் தவஞ்செய்வுழி அவன்கண்ணில்
இருள்பருகும் பெருஞ்சோதி இந்துகிரணன் வெளிப்பட்டனன்
மற்றவற்கு மகனாகிய மணிநீள்முடிப் புதனுக்குக்
கற்றைச்செங் கதிர்க்கடவுள் வழிவந்த கழல்வேந்தன்
ஏந்தெழிற்றோள் இளனொருநா ளீசனது சாபமெய்திப்
பூந்தளவ மணிமுறுவற் பொன்னாகிய பொன்வயிற்றுள்
போர்வேந்தர் தலைபனிப்ப வந்துதோன்றிய புரூரவற்பின்
பார்வேந்த ரெனைப்பலரும் பார்காவல் பூண்டுய்த்தபின்
திசையானையின் கும்பகூடத் துலவியசெழு மகரக்குலம்
விசையொடு விண்மீனொடு போர்மிக்கெழுந்த கடற்றிரைகள்
சென்றுதன்சே வடிப்பணிய அன்றுநின்ற ஒருவன்பின்
விஞ்சத்தின் விஜ்ரும்பணையும் பெறல்நகுஷன் மதவிலாசமும்
வஞ்சத்தொழில் வாதாபி சீராவியு மகோததிகளின்
சுருங்காத பெருந்தன்மையும் சுகேதுசுதை சுந்தரனையு
மொருங்குமுன்னாள் மடிவித்த சிறுமேனி உயர்தவத்தோன்
மடலவிழ்பூ மலயத்து மாமுனி புரோசிதனுக்க்
கடல்கடைந் தமிர்துகொண்டுங் கயலிணைவட வரைப்பொறித்தும்
ஹரிஹயன தாரம்பூண்டு மவன்முடியொடு வளைஉடைத்தும்

[1] பாண்டியர் செப்பேடுகள் பத்து

விரிகடலேவே லின்மீட்டும் தேவாசுரஞ் செருவென்றும்
அகத்தியனெடு தமிழாய்ந்தும் மிகத்திறனுடை வேந்தழித்துந்
தசவதனன் சார்பாகச் சந்துசெய்துந் தார்த்தராஷ்டிரர்
படைமுழுதுங் களத்தவியப் பாரதத்துப் பகடோட்டியும்
மடைமிகுவெல் வானரத்விஜன் வசுசாப மகல்வித்தும்
அரிச்சந்த்ர னகரழித்தவன் பரிச்சந்தம் பலகவர்ந்தும்
நாற்கடலொரு பகலாடி நாற்கோடிபொன் னியதிநல்கி
நூற்கடலேக் கரைகண்டு நோன்பகடா யிரம்வழங்கியும்
உரம்போந்த திண்டோளரைசுகள் சுரம்போகித் துறக்கமெய்தியும்
பொன்னிமயப் பொருப்பதனில் கன்னிமையிற் கயலெழுதியும்
பாயல்மீ மிசைநிமிர்ந்து பலவேண்டி விருப்புற்றுங்
காயல்பாய் கடல்போலக் குளம்பலவின் கரையுயரியும்
மன்னெதிரா வகைவென்று தென்மதுரா புரஞ்செய்தும்
அங்கதனி மிருந்தமிழ்நற் சங்கம்இரீஇத் தமிழ்வளர்த்தும்
ஆலங்கானத் தமர்வென்று ஞாலங்காவல் நன்கெய்தியும்
கடிநாறு கவினலங்கற் களப்பாழர் குலங்களைந்தும்
முடிசூடிய முரண்மன்னர் எனைப்பலரு முன்னிகந்தபின்
இடையாறையும் எழில்வெண்பைக் குடியிலும்வெல் கொடிஎடுத்த
குடைவேந்தன் திருக்குலத்துக் கோமன்னர் பலர்கழிந்தபின்
காடவனைக் கருவூரில் கால்கலங்கக் களிறுகைத்த
கூடலர்கோன் ஸ்ரீபராந்தகன் குரைகழற்கோச் சடையற்குச்
சேயாகி வெளிப்பட்ட செங்கண்மால் ஸ்ரீவல்லபன்
வேய்போலுந் தோளியர்கள் வித்யாதர ஹிரண்யகர்ப்பன்
குண்ணூரி லமர்வென்றுங் குரைகடலீ ழங்கொண்டும்
விண்ணுள வில்லவற்கு விழிஞத்து விடைகொடுத்தும்
காடவனைக் கடலாணூர்ப் பீடழியப் பின்னின்றுங்
குடகுட்டுவர் குணசோழர் தென்கூபகர் வடபுலவர்
அடலழிந்து களஞ்சேர அமர்வல்லான் மகன்படத்தன்
களிறுன்று வண்குடந்தைக் கதிகாட்டி யம்புரசீலன்
ஒளிறிலேவேல் உபாயபஹுலன் உம்பர்வான் உலகணைந்தபின்
மற்றவற்கு மகனாகிய கொற்றவனெங் கோவரகுணன்
பிள்ளைப்பிறை சடைக்கணிந்த பினாகபாணி எம்பெருமானை
உள்ளத்தி னிதிருவி உலகங்காக் கின்றநாளில்
அரவரைசன் பல்லூழி ஆயிரமா யிருந்தலையால்
பெரிதரிதின் பொறுக்கின்ற பெரும்பொறைமண் மகளைத்தன்
தொடித்தோளி லெளிதுதாங்கிய தொண்டியர்கோன் றுள்க்கில்லி
யடிப்படைமா ஞபரணன் திருமருகன் மயிலையர்கோன்
பொத்தப்பிக் குலச்சோழன் புகழ்திரு சிரிகண்டராசன்
மத்தமா மலைவலவன் மதிமகளாக் களநிம்மடி
திருவயிறு கருவுயிர்த்த ஸ்ரீபராந்தக மகாராஜன்

விரைப்பரித்தேர் வீரநாரணன் முன்பிறந்த வேல்வேந்தனைச்
செந்தாமரை மலர்ப்பழனச் செந்நிலத்தைச் செருவென்றுங்
கொந்தார்பூம் பொழிற்குன்றையுங் குடகொங்கிலும்
பொக்கரணியும்
தென்மாயலுஞ் செழுவெண்கையும் பராந்தகனதுஞ்
சிலைச்செதிர்ந்த
மண்மாய மாமிகுத்தவர் வஸ்துவா கனங்கொண்டும்
ஆறுபல தலைகண்டும் அமராலயம் பலசெய்துஞ்
சேறுபடு வியன்கழனித் தென்விழிஞ நகர்கொண்டுங்
கொங்கினின்று தேனூரளவுங் குடகொங்க ருடல்மடிய
வெங்கதிர்வேல் வலங்கொண்டும் வீரதுங்கனைக் குசைகொண்டும்
எண்ணிறந்த பிரமதேயமும் எண்ணிறந்த தேவதானமும்
எண்ணிறந்த தடாகங்களும் இருநிலத்தி லியற்றுவித்தும்
நின்றபெரும் புகழாலும் நிதிவழங்கு கொடையாலும்
வென்றிப்போர்த் திருவாலும் வெல்வேந்தரில் மேம்பட்ட
கதிரார்கடுஞ் சுடரிலைவேல் கலிப்பகைகண் டருள்கண்டன்
மதுராபுர பரமேஸ்வரன் மாநிதிமகர கேதனன்தன்
செங்கோல்யாண்டு நாற்பதின்மேல் மூன்றாமாண்டில்
பொன்சிறுகா மணிமாடப் புரந்தரனது நகர்போன்ற
களக்குடிநா டதனிற்படும் களக்குடிவீற் றிருந்தருள
ஆசிநா டதனிற்படும் பிரமதேயம் கன்னிடக்கைத்
தேசமலி திருமங்கல மிதுபண்டு பெருநல்லூர்ப்
படுவதனைப் பாங்கமைந்த குடிகளது காராண்மை
மோடெழுந்த முதுகொம்பர்க் கோடெழுந்து கிடந்ததனைக்
கற்றறிந்தோர் திறல்பரவக் களப்பாழரைக் களைகட்ட
மற்றிரடோண் மாக்கடுங்கோன் மானப்பேர்த் தருளியகோன்
ஒன்றுமொழிந் திரண்டோம்பி ஒருமுத்தீ யுள்பட்டு
நன்றுநான் மறைபேணி ஐவேள்வி நலம்படுத்து
அறுதொழில்கள் மேம்பட்ட மறையோர்பன் னிருவர்க்குக்
காராண்மை மீயாட்சி உள்ளடங்கக் கண்டமைத்துச்
செப்பேடுசெய்து கொடுத்தருளினன் தேர்வேந்த நின்குலமுதல்வன்
மைப்படுகண் மடமகளிர் மதவேள் மனுசமானன்
வழுவாத செங்கோனடவி மண்மகட்கொரு கோவாகிக்
கழுதூரில் சித்திசெய்த கடிக்கூட னகர்காவலன்
சோமாசி குறிச்சியிது தொலைமேற்படி கிடந்ததனை
ஸோமபான மநோசுத்தராகிய காடகஸ் சோமயாஜியார்க்கு
ஏகபோக மதுவாக எழிற்செப்பேட் டொடுகொடுத்தனன்
ஆகியஇவ் வூரிரண்டின் செப்பேடு மறக்கேட்டில்
இழந்துபோ யினவென்றும் ஏதமில்சோமாசி குறிச்சிச்
செழுந்தகைய நிலத்துப்படும் நிலத்தை கடற்றிருக்கை

கிழவன் மதிதருபெரு நான்கெல்லை இட்டுக்கொண்டு
மற்றதனை மதுரதர நல்லூரென்று பெயரிட்டுக்
குடிநிலனு கக்கொண்ட நிலமதுவும் அவன்குடிநிலனுகை தவிர்ந்து
தொண்டுசோ மாசிகுறிச்சி
மேலைபுரவேறப் பெ(று)வதென்றும் சொல்லிய வூரிரண்டுந் தம்மி
லெல்லைகலந்து கிடக்குமாதலில் ஒன்றுக வுடன்கூட்டிப்
புரவெழுதிப் பிடிசூழ்ந்து நன்றுகிய சாசனஞ்செய்து நன்கருள
வேண்டுமென்றும்
வாசநாள் மலர்கமழ்பொழி லாசிநாட்டுள் அக்ரமாகிய
கருவமைந்த கனகமாளிகைத் திருமங்கல நகர்த்தோன்றல்
சோமாசி குறிச்சிஎன்னுங் காமர்வண் பதிகாவலன்
வடிவமை வானகோத்திரத்து பௌதாயன கல்பத்துக்
குடிவிளங்க வெளிப்பட்ட குணகணங்கட் கிடமாகி
மறைநான்கின் துறைபோகிய மாயாநம்பி பட்டற்குச்
சிறுவனுகிய பெருந்தகையின் திசைமுகன்வெளிப் பட்டனையோன்
தர்ம வத்சலன் அதர்ம கோபி
மாயாநாரா யணபட்டர் மகாபன்னி வயிறுயிர்த்த
சேயான திருத்தகையின் ஸ்ரீநாராயணங் கேசவன்
கல்விக்கடல் கரைகண்டு க்ஷத்திரியானு மதமுணர்ந்து
சொல்வித்தகந் தனதாக்கி சுத்தசீலா சாரனுகி
மீனவன் வீரநாரணற்கு விஸ்வாச கர்மங்கட்
கானதன்மைய னுதலில் லருளறிந்து விண்ணப்பஞ்செய
மதுரதர நல்லூரென்னும் வளம்பதிசோ மாசிகுறிச்சி
அதன்மேலே புரவேற்றி ஆங்கதுவுந் திருமங்கலமும்
உடன்கூடப் பிடிசூழ்வித் துலகறியக் கொடுத்தருளினன்
வடங்கூடு முலைமகளிர் மன்மதவேள் மனுசரிதன்
மற்றிதனுக் காணத்தி வண்டமிழ்க்கோ னதிகாரி
பொற்றடம்பூண் மணிமார்பன் பொழிற்புல்லூ ரெழிற்பூசுரன்
செய்யுந்து புனற்செறுவிற் செங்கழுநீர் மலர்படுகர்
வைகுந்த வளநாடன் வாத்ஸகோத்ர சூடாமணி
ஹரிசரண கமலசேகரன் ஆயிரத் தைந்நூற்றுவன்
திருமகி ழிளையானக்கன் திசைநிறை பெரும்புகழாளன்
புவனதலம் புகழநிதி அவனிசுர குலதிலகன்
தாதலர்பூம் பொழிறழுவிச் சாலிவிளை வயல்வளத்தால்
மேதகுபுகழ் வேண்புநாட்டு பெருந்நூவெள்ளி எனப்பெயரிய
திருந்துபதிக் குடித்தலைவன் தென்னவன்திரு வருள்சூடிய
பெருந்தூவெள்ளி கிழவனுகிய பெருந்தகை சேந்தங்கிழவன்
நலமலிசீர் நடுவுநலை நன்குநா யகனுகவும்
அலர்கமழும் பொன்னளற்று நாட்டுக் கக்கிரமாகிய
முகில்தோய்பொழில் முசுக்குறிச்சி முற்குடிப்பிறேனர் கான்முளை

அகனிலத்தோர் புகழளற்று நாட்டுக்கோன் அருந்தமிழின்
பாத்தொகுபொருள் பயனுணர்வோன் கொடைபயில் கற்பகசீலன்
சாத்தம்படார னெனப்பெயரிய தக்கோன் மிக்கோங்கு
கார்வயல்சூழ் களாத்திருகைப் பேரரண்சூழ் பெருங்காக்கூர்த்
தலையாகிய குலக்குரிசில் தகுதேய மாணிக்கம்
கலைபயில் கிழவங்கோனும் கணக்குநூல்பயில் கணக்கராகவும்
மாசில்வான் குடித்தோன்றி ஆசிநாட்டு நாட்டாரும்
மச்சுறுவளம் அணவிவேந்த னேச்சுரநாட்டு நாட்டாரும்
உடனுகிநின் றெல்லைகாட்டப் பிடிசூழ்ந்த பெருநான்கெல்லை
கீழெல்லை
புனல்புவனி புத்தேள்மா ருதம்கனல் இருசுடர் எஜமானன்
ஆகியதிற லஷ்டமூர்த்தி அமரர்க்கு மறிவரியோன்
வேகவெள் விடையூர்தி விஷமலோசனன் மகிழ்ந்துறையும்
வாழியவான் றிருவிருப்பூர் மூழிநின்றுதென் கிழக்குநோக்கிப்
போயின வெள்ளாற்றுக்கும் ஆயினபெருநல்லூர்ச் சிறைக்கும்
வன்கள்ளி முரம்புக்கும் வண்ணத்தார் வளாகத்தின்
நன்குயர்பரம் பீட்டுக்கும் நலமிருகள் ளிக்குறிச்சி
மேலைக்கள்ளி முரம்புக்கும் மேதகுநடை யாட்டிகுளத்தில்
சாலநீர் கோளுக்கும் இக்குளத்தின் தென்கொம்பின்
மறுவாக்கும் பாங்கமைபடு பாறைக்கும் பயந்தருகுடிநடை
ஏரிலங்கியவன் குளத்தகம்பால் ஒழுகியவன் பெருப்புக்கும்
இப்பெருப்பை ஊடறுத்துச் செப்பிடுசெழுங் கிழக்குநோக்கி
வாரிக்கொள்ளிக் கேபோயின வழியதற்கும் வயல்மலிந்த
குளத்தினீர் கோளுக்கும் அடிகுழிக்கும் மேற்கும்
தென்னெல்லை
திருமருநிலப் பாறைக்கும் செஞ்சாலி விளைகழனி
ஏரியணை வடகடைக்கொம்பிற்கும் ஒழுககள்ளி முரம்புக்கும்
நீருடை அளவைச்சுனைக்கும் ஊருடையான்குழித் தென்கடைக்
கொம்புக்கும்
நெடுமதிற்கற் றாழ்வுக்கும் நீர்மாற்றுத் திடலுக்கும்
குடிகமழ்பூந் தார்க்கணத்தார் குழிக்கும் வடக்கு
மேலெல்லை
கூற்றன்குழி மீகுழியே போயினபடு காலுக்கும்
பாற்றரு மாருத்தமாணிக் குளத்துக்கரைப் பெருப்புக்கும்
நாடறிநங் கையார் குழியின் மீய்குழியே
காடனேரிக்கே போயின வழிக்கு மேதமில்
ஏறிச்சில் வழிக்கும் எழிலணம நேச்சுறநாட்
டோலைக்குளத் தெல்லைக்கும் கிழக்குமன்
வடவெல்லை
வளமிக்க மருதவேலி இளநேச்சுறத் தெல்லைக்கும்

வெள்ளாற்றுக்கும் தெற்கு
இவ்விசைத்த பெருநான்கெல்லை உண்ணிலமொன் ருெழியாமல்
காராண்மை மீயாட்சி உள்ளடங்கக் கண்டமைத்துச்
சீர்சான்ற திசையனைத்தின் எல்லைவாய் கன்னுட்டித்
தருமங்களி ஞென்றுபயில் திருமங்கலத்துச் சபையார்க்கும்
தொல்லைவண் சோமாசிகுறிச்சி மல்லன்மா மறையோர்க்கும்
பிரமதேய ஸ்திதி வழாவகை பிருதிவியின்கண் ணிலைபெறுத்து
தர்மம பராயணனுகிய தராபதி கொடுத்தருளியபின்
ஈண்டிய பெரும்புகழேயுஞ் சாண்டில்ய கோத்திரத்து
எண்ணூர்புகழ் ஏகசந்தி காத்யாயன கோத்திரத்து
வரிவண்டு மதுநுகர்பொழிற் சிரீவல்லப மங்கலத்துச்
செப்பரிய செழுஞ்செல்வத்துப் பம்பிரால் மேதக்க
கலைபயில் கணஸ்வாமி பட்டற்குற்ற பெருமாமதலை
உலவுசீர்த்தி யோகேஸ்வர பட்டற்கு விசிஷ்டனுகிய
திருவடிச் சோமாசியென்னுஞ் சீர்மறையோன் மகள்பயந்த
திருமருசீர்ச் சிரிமாதவன் ஸ்ரீமாதவ சரணசேகரன்
வேதவேதாந்தங்களும் விவிதசாஸ்திரமும் தன்னெடுபிற
ரோதிக்கேட் டுணர்வெய்த உரைக்கு மாசார்யனுகி
பெருந்தகை பிரமதேயமிதற்கு பிரசஸ்தி செய்தோற்கு
திருந்தியநன் பெருவயக்கலும் செழும்புனற் பருத்தி வயக்கலும்
இவ்வயல்களில் கிணறிரண்டும் அக்கிணற்ருல் விளைநிலனும்
மற்றவ்வூர் மாசபையோர் பெற்றபரிசே கொடுத்தபின்
சீரியசெழும் பணிஇதற்குச் செப்பேடு வாசகத்தை
ஆரியம்விராய்த் தமிழ்தொடுத்த மதியோற்கும் அதுஎழுதிய
கற்பமைந்த கரதலத்துச் சிற்பமார்த் தாண்டற்கும்
மண்ணெங்கும் நிறைந்த வான்புகழ் கண்ணங்கீரன் வயக்கல்
திருமிகு நற்சிங்க குளவளால் மருவியசோமாசி
வயக்கலென்னும் வயல்களிற் கிணறுக ளொருமூன்றும்
எக்காலமும் மன்னுகிணற்ருல் விளைவயலனைத்தும்
இறையிலியாகவும்
சொல்லிய இக்கிணறு மூன்றினிடைக் கிடந்ததொன்
னிலமுழுவதும்
இல்லவளா லதுவாகவும் எழின்மிக்க தோட்டமாகவும்
பால்லெருமை பெருவராறுகள் புணற்பதி இதனிற்
கோல்லுரிமையிற் செம்பாகமும் மகாசபை குறிப்பேடு
கொடுத்துப்
பகல்செய்யும் பருதிஞாயிறும் இரவுச்செய்யும் பனிமதியும்
அகல்ஞாலமும் உளவளவும் செப்பேடுசெய்து கொடுத்தருளினன்
மணிநீள்முடி மன்பணிகழல் வசுதாதிப வாசுதேவன்
முனிநீளவுய்த் தஹிதாக்னி அசலாசலன் அனவர்ஜ்யன்

கொந்தலர்தார் கோச்சடையன் கூடற்கோன் குருசரிதன்
செந்தமிழ்க்கோன் ஸ்ரீநிகேதனன் ஸ்ரீபராந்தக மகாராஜன்
தேர்மிகுமாக் கடற்றனைத் தென்னவர்கோன் றிருவருளாற்
சீர்மிகு செப்பேட்டுச் செந்தமிழ்ப்பாத் தொடைசெய்தோன்
அற்புதமெனும் ஊரிக்கண் அவிர்சடைமுடி அரன்வேண்ட
நற்பரசு நிர்மித்தவ னளிர்சடைமே லலங்கல்பெற்ற
மாமுனிவன் வழிவந்தோன் பாமருபண்டிதராசன்
பொன்வரன்றி மணிவரன்றி அகில்வரன்றிக் கரைபொருபுனற்
றென்வைகை வளநாடன் செழுங்குண்டூர் நகர்த்தோன்றல்
பாண்டித்தமிழாபரண னென்னும்பல சிறப்புப் பெயரெய்திய
பாண்டிமாராயப் பெருங்கொல்லனுகிய சிரீவல்லபன்
தென்னவர்தந் திறலாணைச் சிலையொடுபுலி கயலிணைமன்
பொன்னிமையச் சிமையத்து விறற்கருவியிற் போக்குந்
தொழில்செய்துவந் தவர்பின்னோன் செயல்பல பயின்றோர்
முன்னோன்
திருமலிசா சனமிதற்குச் செழுந்தமிழ்பா டினோன்தாதை
நிருபசேகரப் பெருங்கொல்லன் நிறைபுகழ் நக்கனெழுத்திவை.

## 5. இரண்டாம் இராசசிம்ம பாண்டியனின் சின்னமனூர்ச் செப்பேடுகள்[1]

### (பெரிய சாசனம்)

திருவொடுந்தெள் ளமிர்தத்தொடுஞ் செங்கதிரொளிக்
கௌஸ்துபத்தொடும்
அருவிமதக் களிற்றென்றொடுந் தோன்றியர னவிர்சடைமுடி
வீற்றிருந்த வெண்டிங்கள் முதலாக வெளிப்பட்டது
நாற்றிசையோர் புகழ்நீரது நானிலத்தி னிலைபெற்றது
பாரத்துவா ஜாதிகளால் நேராக ஸ்துதிக்கப்பட்டது
விரவலர்க் கரியது மீனத்வய சாசனத்தது
பொருவருஞ்சீ ரகத்தியனைப் புரோகிதனு கப்பெற்றது
ஊழியூழி தொறுமுள்ளது நின்றவொருவனை யுடையது
வாழியர் பாண்டியர் திருக்குலமிதனில் வந்துதோன்றி
வானவெல்லை வரைத்தாண்டும் வளைகடல்கடைந் தமிர்தங்
கொண்டு
நானிலத்தோர் விஸ்மயப்பட நாற்கடலொரு பகலாடியும்
மறுகிலொளிர் மணிமுடியொடு சங்கவெள் வளைதரித்தும்

[1] S. I. I. III pt. IV

நிலவுலகம் வலஞ்செய்தும் நிகரில்வென்றி யமரர்க்குப்
பலமுறையுந் தூதுய்த்தும் பாகசாசன ஞரம்வவ்வியுஞ்
செம்மணிப்பூ ணுெடுதோன்றித் தென்றமிழின் கரைகண்டும்
வெம்முனேவே லொன்றுவிட்டும் விரைவரவிற் கடன்மீட்டும்
பூழியனெனப் பெயரெய்தியும் போர்க்குன் ருயிரம்வீசியும்
பாழியம்பா யலினிமிர்ந்தும் பஞ்சவனெனும் பெயர்நிறீஇயும்
வளமதுரை நகர்கண்டும் மற்றதற்கு மதில்வகுத்தும்
உளமிக்க மதியதனு லொண்டமிழும் வடமொழியும்
பழுதறத்தா ஞராய்ந்து பண்டிதரின் மேந்தோன்றியும்
மாரதர்மலே களத்தவியப் பாரதத்திற் பகடோட்டியும்
விசயனேவசு சாபநீக்கியும் வேந்தழியச் சுரம்போக்கியும்
வசையில்மாக் கயல்புலிசிலே வடவரைநெற் றியில்வரைந்தும்
தடம்பூதம் பணிகொண்டு தடாகங்கள் பலதிருத்தியும்
அடும்பசிநோய் நாடகற்றி அம்பொற்சித் திரமுயர்த்தும்
தலேயாலங் கானத்திற் றன்னெக்கு மிருவேந்தரைக்
கொலேவாளிற் றலேதுமித்துக் குறைத்தலேயின் கூத்தொழித்தும்
மகாபாரதந் தமிழ்ப்படுத்து மதுராபுரிச் சங்கம்வைத்தும்
மகாராசரும் சார்வபௌமரும் மகிமண்டலங் காத்திகந்தபின்
வில்லவனே நெல்வேலியும் விரிபொழிற் சங்கரமங்கைப்
பல்லவனேயும் புறங்கண்ட பராங்குசன் பஞ்சவர்தோன்றலும்
மற்றவர்க்குப் பௌத்ரஞயின மன்னர்பிரா னிராசசிங்கனுங்
கொற்றவர்க டொழுகழற்காற் கோவரகுண மகாராசனும்
ஆங்கவற் காத்மசனுகி யவனிதலம் பொறைதாங்கித்
தேங்கமழ்பொழிற் குண்ணூரிலுஞ் சிங்களத்தும் விழிஞத்தும்
வாடாத வாகைசூடிக் கோடாதசெங் கோனடாவி
கொங்கல ரும்பொழிற் குடமூக்கிற் போர்குறித்து
வந்தெதிர்ந்த கங்கபல்லவ சோளகாலிங்க மாகதாதிகள்
குருதிபெரும் புனற்குளிப்பக் கூர்வெங்கணே தொடைனெகிழ்த்துப்
பருதியாற்ற லொடுவிளங்கின பரசக்கிர கோலாலனுங்
குரைகழற்கா லரைசிறைஞ்சக் குவலயதலந் தனதாக்கின
வரைபுரையு மணிநெடுந்தோள் மன்னர்கோன் வரகுணவர்மனும்
மற்றவனுக் கிளேயனுன மனுசரிதன் வாட்சடையன்
பொற்றடம்பூண் சிரீபராந்தகன் புனேமணிப்பொன் முடிசூடிக்
கைந்நிலந்தோய் கரிகுலமும் வாசிவிருந்தமுங் காலாளும்
செந்நிலத்தி னிலஞ்சேரத் திண்சிலேவாய்க் கணேசிதறியும்
கரகிரியிற் கருதாதவர் வர்கரிகுல் நிரைவாரியும்
நிலம்பேர நகர்கடந்துந் நெடும்பெண்ணு கடமழித்தும்
ஆலும்போர்ப் பரியொன்ரு லகன்கொங்கி லமர்கடந்தும்
தேவதானம் பலசெய்தும் பிரமதேயம் பலதிருத்தியும்
நூவலந்தீ வடிப்படுத்த நரபதியும் வானடைந்தபின்

வானவன்மா தேவியென்னு மலர்மடந்தை முன்பயந்த
மீனவர்கோ னிராசசிங்கன் விகடவா டவனவனேய்
அகிபதியா யிரந்தலையா லரிதாகப் பொறுக்கின்ற
மகிமண்டலப் பெரும்பொறைதன் மகாபுசபலத் தாற்றுங்கி
புஜகநாயக தரணிதாரண ஹரணராஜித புஜபலனாய்
உலப்பிலிமங் கலத்தெதிர்ந்த தெவ்வருட லுகுத்தசெந்நீர்
நிலப்பெண்ணிற் கங்கராக மெனநீவப் பாணிதந்தும்
மடைப்பகர்நீர்த் தஞ்சையர்கோன் தானைவரை நைப்பூரிற்
படைப்பரிசா ரந்தந்து போகத்தன் பணைமுழக்கியுங்
கொடும்பைமா நகர்நிறைந்த குரைகடற் பெருந்தானை
இடும்பையுற் றிரியத்த னிரஞேதய மேற்கொண்டும்
புனற்பொன்னி வடகரையிற் பொழில்புடைசூழ் மதில்வஞ்சிக்
கனற்படவிழித் தெதிர்ந்தவீரர் கவந்தமாடக் கண்சிவந்துஞ்
சேவலுயர் கொடிக்குமர னெனச்சீறித் தென்றஞ்சை
காவலனது கரிதுரக பதாதிகள்செங் களத்தவியப்
பூம்புனலு வற்பதியில் வாம்புரவி வலங்காட்டியும்
விசயத்வஜம் விசும்பணவச் செங்கோறிசை விளிம்பணவக்
குசைமாவுங் கொலைக்குன்றமுங் குருதியார முங்கொணர்ந்தும்
மகுடவர்த்தன ரடிவணங்க மகேந்திரபோக மனுபவித்த
விகடவாடவன் சிரீகாந்தன் மீநாங்கித சைலேந்திரன்
ராஜசிகா மணிதென்னன் ராஜிதகுண கணநங்கோன்
எண்ணிறந்த பிரமதேயமு மெண்ணிறந்த தேவதானமும்
எண்ணிறந்த பள்ளிச்சந்தமு மெத்திசையு மினிதியற்றி
உலப்பிலோத வொலிகடல்போ லொருங்குமுன்னந் தானமைத்த
இராசசிங்கப் பெருங்குளக்கீழ்ச் சூழுநக ரிருந்தருளி
ராஜ்யவர்ஷ மிரண்டாவதி னெதிர்பதினன் காம்யாண்டில்
மாக்கொழுவூர்க் கூற்றத்துத் வருபுனல்மீய் குண்டாற்றுப்
புத்தூரெனப் பெயரெய்திய கொத்தார்பொழிற் கிராமத்திற்
கொமரகௌசிக கோத்ரத்தி லாக்நிவேச் யகல்பத்தி
லொம்பாழ்வரில் மிக்கோனுயர் தருபெரும் புகழ்ச்செட்டி
குலமதலை குவலையசுரந் நலமிகுபாஸ் கரநந்தனம்

.............................................................

## 6. சிவகாசிச் சாசனம்[1]

### தமிழ்ப் பகுதி

சந்திரனது வழித்தோன்றிஇத் தராமண்டல முழுதாண்டு
பண்டிந்திரன்முடி வளையுடைத்தும் இமயத்துக் கயலெழுதியும்
ஆணையாயிர மையமிட்டும் அகத்தியனொடு தமிழ்தெரிந்தும்
வானவர்க்குத் தூதுசென்றும் மால்கடலின் வரவுமாற்றியும்

[1] பாண்டியர் செப்பேடுகள் பத்து

ஈண்டியவக் கடல்கடைந்தும் இன்னனபல திறல்செய்த
பாண்டியபர மேச்வரராள் பரம்பரையில் வந்துதோன்றினன்
மன்னவர்கோன் இராசமல்லன் மடிமுடிமா ணுபரணன்
தென்னவர்கோன் மற்றவற்குச் சேரலன்றன் மடப்பாவை
சீர்திகழு மணிபயிலிச் செழுநிலந்தொழ வெளிப்பட்ட
வீரகேரளன் வீரபாண்டியன் விநயகஞ்சுகன்
தன்னுடைய குலம்விளங்கத் தன்னுடைய தமிழ்க்கூடலில்
மன்னியமணி முடிகவித்து மகாபிஷேக மகிழ்ந்தநாளில்
மேதகு சாசனச் சுலோகம் விதிகிடந்தவா செய்யவல்ல
பூசுரமத் திவன்னதுதன் பூம்பொருநம் புடைவர்க்கும்
சீர்திகழ்தரு முள்ளிநாட்டுத் தென்வீரதர மங்கலத்து
ஏர்திகழும் தன்மை ராதிதர கோத்திரத்தில்
அளப்பரிய பேரொழுக்கத் தாச்வலாயன சூத்திரத்து
விளக்கமுற வந்துதோன்றி விப்ரர்க்கோர் விளக்காயின
ஒருதன்மை யிருபிறப்பில் முச்செந்தீ நால்வேதத்து
அருமரபில் ஐவேள்வி ஆறங்கத் தந்தணாளன்
கோவிந்தஸ்வாமி பட்டர்க்குச் சோமாசிதன் குலவரவில்
வாசுதேவ பீதாம்பர பட்டனென்ற மறைவாழ்நனை
மதித்தருளி நீசெய்கென மற்றவனு மனமகிழ்ந்து
விதித்தமைத்த அநுஷ்டுப்பின் விழுப்பநோக்கி மிகமகிழ்ந்து

தனக்கிரண்டாமாண்டின் எதிராமாண்டில் அண்டநாட்டு மின்னுகொடி நெடுமாட வீதி வீரபாண்டிய புரமான செல்லூரி லிருந்தருளி நலந்திகழ் மேல் வேம்பநாட்டு நலபுரத்துக் கொப் பத்தில் கலந்த வாழை கோடு உட்படக் காமருகோல் புறஞ் சிலால் இருபூ விளைவது நீர் நிலன் மூவேலியும் குடியிருக்க முருகூர் பொழில்புடை சுற்றிய முதுநிலத்தில் பத்துமாவும் மற்றதற்குத் தட்சிணையாக மன்னு சாசனமங்கலமென ஏற்ற பேருடை ஏகபோக பிரமதேயமாய்ப் பிடிசூழ்வித்து ஊராண்மையில் வேறென்றாக்கி நாட்டாண்மையோடுடன் கூட்டிக் காராண் மையும் மீயாட்சியும் உள்ளடங்க கல்பமைய சாசனமும் அறையோலையுந் தனித்தனியே சமைப்பித்து பூசுரர்க்குக் கொடுப் பித்துப் பூதலத்து என் புகழ் நிறுத்தென தெழிலரும் போர்க் கூற்றத்தில் இரணசிங்க மங்கலத்துச் செழுமலர்த் தென்னவன் பிரமஸ்ரீ துங்கராஜனுயின வனத்தன் விண்ணப்பமாகவும் மந்திர வோலை நாயகன் கணையரப்பள்ளி மன்னின தென்னவன் உத்தர மந்திரியாயின இயக்கஞ்செல்வன் ஆணத்தியாகவும், ஏர்திகழும் மதிள்கூடல் இராசசிம்மனென்னும் பேருடைச் சீர்திகழ் தமிழ்ப் பேரரையன் திருந்து அதிகாரமாகவும், அணுக்கபிள்ளை தென் பருத்திக்குடி நாட்டுச் செழும்பொழில்சூழ் செந்நிலக்குடித் தன்

குலத்தில் மேந்தோன்றிய சடையங்காளியும் மாசறுசீர் வெள்ளப்பநாட்டு வடிநெடுவேல் கேசவங் கணவதியோடுடன் கெழுதகு கண்காணி ஆகவும், பூம்பொழில் புறத்தாய நாட்டு நற்றராயக்குடி மேம்படுசீர் அரையன் விரையாச் சிலையும் திருக் கானப்பேர்க் கூற்றத்துச் சிறுசேலூர்க் காடம்படாலகனும், சோழ நாட்டு மாங்குடிச் சோலை கிழவனும் விக்கிரமகாம வளநாட்டு கண்ணனூர் இளவளம் புல்லனும் புரவுவரி ஆகவும் அனுத்தரப் பல்லவ அரைசெனும் பெயரியன்ற மாறஞ்சோலை மால்களிற்றின் நாசகமினிதியற்ற முள்ளிநாட்டுக் குளத்தூர் அரையன் சிராப் பள்ளி ஆணை ஒழுக்கவும் மேல் வேம்பநாட்டு நாட்டாரும் பிரம தேயக் கிழவரும் நலபுரத்து ஊராரும் உடனின்று நிலம் அளந்து பிடிசூழ்ந்து கல்நாட்டி எல்லை தெரித்த பெரு நான்கெல்லைக்கும் கீழெல்லை மாயன்பதக் கென்னுஞ் செய்யின் வடதலைத் துலாச் செய்கிறைக்குந் தேயான பண்ணையினின்றுந் தெற்கு நோக்கிச் செழுங்கழனி வாழை கோட்டிதனுக்கே பாய்ந்த வாய்க்காலூடே போந்து சூழ்புனலணி கண்ணிற்காய் பண்ணை தன்னைத் துன்ன வந்து மற்றிதனின்று கண்ணிற்காய் வடதலைத் துடவைகளுக்கு இறைக்கப் பாய்கின்ற சிறுகாலின் ஊடு போந்து கண்ணிற்காய் வடகீழ்த் தலைத்துடவைகளின் தென்வரவை நண்ணவந்து கிழக்கு நோக்கி நாட்டு பெருங்காலில் நின்று மேதகு பராங்குச மங்கலத்து மேல் எல்லையின் மேலருகே தாதமர் பொழில் வாழை கோட்டுப் பொழியூடே தண்பொருநம் எய்தவந்து தெக்கு நோக்கிப் பாய்ந்ததனுக்கு இயன்ற மேற்கும் செய்தமைத்து தென்எல்லை தண்பொரு நல்வீற்றிரு கழவடக்கும் குடக்கெல்லை வன்னியோடு பொழியினின்றும் குனையாமல் வடக்கு நோக்கிக் களுச்செய் புகக்கல்லின் வாய்க்காலை ஊடறுத்து வடக்கு நோக்கி அங்குற நட்ட நடு கல்லின் மாடு நின்று கிழக்கு நோக்கி வண் கணத்தா மங்கலமுடையான் வயக்கின நெடுங்கண்டுவலின் மத்திமமே கிழக்கு நோக்கி நயக்க வந்து வாழை கோட்டின் நாற்றங்கால் புகப் பாய்ந்த புறக்காலை நணுக வந்து கருங்குடிப் பொழியினின்றும்......வேற்சாத்தன் பதக்கென்னுஞ் செய்புகப் பாய்ந்த காலை எய்தவந்த காலூடே கிழக்கு நோக்கி இனிது போந்து நெய்தலம் பனைநாட்டுப் பெருங்காலில் நின்று நின் வரவைக் கடனெடு வேய் சாத்தன் பதக்கெனுஞ் செய்புகத் தணந்த காலின் செந்நடுவேய் வடக்கு நோக்கி வந்து மற்றி தினின்று திண்டிறல் விளங்குடையான் இட்ட மண்மதிளொரகு போந்தெழினாட்டுப் பெருங்கால்தனை ஒட்ட வந்ததன் கிழக்கும் மற்றதன் உத்தரந் திசை ஓங்கெல்லை நாட்டுப் பெருங்காலி னின்றுங் கிழக்கு நோக்கி நல்வரவெகட் கிட்டம் வடவணைக்கின்ற எழில் விளங்கு பேரணை உட்பட கௌகிளபணையினின்றுங் கிழக்கு

நோக்கின வாழை கோட்டுக்கே வந்து மாயான் பதகைக்கென்னு மஞ்செய் வடதுலாச் செய்களுக்கினிதி (...) நம் எழிற் பண்ணை யின் தெற்கும் மற்றிவை எல்லையாகத் தனி...றை கடன் ஈழக் கழஞ்சு ஈரெழுதான் பகுத்து உண்ணில...ம் ஒழிவின்றி...கேழ் விளங்கச் செய்தனன்னூர் மோயம்பில்,

## 7. சடையவர்மன் சுந்தரபாண்டியன் மெய்க்கீர்த்தி

பூமலர்வளர் திகழ்திருமகள் புகழாகம் புணர்ந்திருப்ப
நாமலர்வளர் கலைவஞ்சி நலமிகுமா மனத்துறையச்
சிமையவரைத் திறன்மடந்தை திருத்தோளின் மிசைவாழ
விமையவர்கோ னன்றிட்ட வெழிலாரங் கழுத்திலங்கப்
பகிரதிபோற் றுய்யபுகழ்ப் படர்வல்லி கொழுந்தோடத்
திகிரிவரைக் கப்புறத்துச் செழுந்திகிரி சென்றுலவத்
தண்டரள மணிக்கவிகை தெண்டிரைசூழ் பார்நிழற்ற
வெங்கோபக் கலிகடிந்து செங்கோலெண் டிசைநடப்பச்
செம்முரசின் முகில்முழங்கச் சிலையகன்று விசும்படையத்
திறற்புலிபோய் வனமடையக்
கயலிரண்டு நெடுஞ்சிகரக் கனவரையின் விளையாட
வொருமைமனத் திருபிறப்பின் முத்தீயின் நால்வேதத்
தருமறையோ ரைவேள்வி யாறங்க முடன்சிறப்ப
வருந்தமிழு மாரியமு மறுசமயத் தறநெறியுந்
திருந்துகின்ற மனுநெறியுந் திறம்பாது தழைத்தோங்கக்
குச்சரரு மாரியரும் கோசலரும் கொங்கணரும்
வச்சிரருங் காசியரு மாகதரும்
அருமணருஞ் சோனகரு மவந்தியரு முதலாய
விருநிலமா முடிவேந்த ரிறைஞ்சிநின்று திறைகாட்ட
வடிநெடு வாளும் வயப்பெரும் புரவியுந்
தொடிநெடுந் தோளுமே துணையெனச் சென்று
சேரனுந் தானையுஞ் செருக்களத் தொழிய
வாரசும் புலரா மலைநாடு நூறப்
பருதிமா மரபிற் பொருதிறல் மிக்க
சென்னியைத் திறைகொண்டு திண்டோள் வலியிற்
பொன்னி நாட்டுப் போசலத் தரைசர்களைப்
புரிசையி லடைத்துப் பொங்கு வீரப்பரவியுஞ்
செருவிற லாண்மைச் சிங்கணன் முதலாய
தண்டத் தலைவருந் தானையு மழிபடத்
துண்டித் தளவில் சோரி வெங்கலுழிப்
பெரும்பிணக் குன்ற மிருங்கள னிறைத்துப்

பருந்துங் காகமும் பாறுந்(த) சையும்
அருந்தி மகிழ்ந்தாங் கமர்க்கள மெடுப்பச்
செம்பொற் குவையுந் திகழ்கதிர் மணியு
மடந்தையர் மார்பு முடன்கவர்ந் தருளி
முதுகிடு கோசளன் றன்னொடு முனையும்
அதுதவ றென்றவன் றன்னைவெற் பேற்றி
நட்பது போலுட் பகையாய் நின்ற
சேமனைக் கொன்று சினந்தணிந் தருளி
நண்ணுதல் பிறரா லெண்ணுதற் கரிய
கண்ணனூர்க் கொப்பத்தைக் கைக்கொண் டருளிப்
பொன்னி சூழ்செல் வப்புன னாட்டைக்
கன்னி நாடெனக் காத்தருள் செய்யப்
பெருவரை யரணிற் பின்னரு காக்கிய
கருநட ராசனைக் களிறுதிறை கொண்டு
துலங்கொளி மணியுஞ் சூழி வேழமு
மிலங்கை காவலனை யிறைகொண் டருளி
வருதிறை மறுத்தங் கவனைப் பிடித்துக்
கருமுகில் நிகளங் காலிற் கோத்து
வேந்தர்கண் டறியா விறற்றிண் புரிசைச்
சேந்த மங்கலச் செழும்பதி முற்றிப்
பல்லவ னடுங்கப் பலபோ ராடி
நெல்வினை நாடு நெடும்பெரும் பொன்னும்
பரும யானையும் பரியு முதலிய
வரசுரிமை கைக்கொண் டரசவற் களித்துத்
தில்லையம் பலத்துத் திருநடம் பயிலுந்
தொல்லை யிறைவர் துணைகழல் வணங்கிக்
குளிர்பொழில் புடைசூழ் கோழி மானகர்
(அளி)செறி வேம்பி னணிமலர் கலந்த
தொங்கல் வாகைத் தொடைகள் சூட்டித்
திங்களுயர் மரபு திகழவந் திருந்த
தன்னசை யானன் னிலைவிசை யம்பின்
எண்ணெண் கலைதே ரின்மொழிப் பாவலர்
மண்ணின்மே லூழி வாழ்கென (வாழ்)த்தக்
கண்டவர் மனமுங் கண்ணுங் களிப்ப
வெண்டிரை மகர வேலையி னெடுவரை
யாயிரம் பணைப்பணத் தனந்தன் மீமிசைப்
பாயல் கொள்ளும் பரம யோகத்
தொருபெருங் கடவு ளுவந்தினி துறையு
மிருபெருங் காவிரி யிடைநிலத் திலங்குந்
திருவரங் கம்பெருஞ் செல்வம் சிறப்பப்

பன்முறை யணிதுலா பார மேறிப்
பொன்மலை யென்னப் பொலிந்து தோன்றவும்
பொன்வேய்ந் தருளிய செம்பொற் கோயிலுள்
வளந்திகழ் மாஅ லுதைய வெற்பெனத்
திருவளர் குலமணிச் சிங்கா சனமிசை
மரகத மலையென மகிழ்ந்தினி தேறித்
தினகரோ தயமெனச் செழுங்கதிர் சொரியும்
கனக மாமுடி கவின்பெறச் சூடிப்
பாராள் வேந்த ருரிமை யரிவைய
ரிருமருங்கு நின்று விரிபெருங் கவரியின்
மந்த வாடையு மலையத் தென்றலு
மந்தளிர்க் கரங்கொண் டசைய வீச
ஒருபொழு தும்விடா துடனிருந்து மகிழும்
திருமக ளென்னத் திருத்தோள் மேவி
யொத்த முடிசூடி யுயர்பே ராணை
திக்கெட்டும் நடப்பச் செழுந்தவஞ் செய்த
இவன்போ லுலகிலே வீரன் (பலத்திர)
மதிமுகத் தவனி மாமக ளிலகு
கோடிக் காதல் மூழ்கிநின் றேத்தும்
உலகுமுழு துடையாளொடும் வீற்றிருந் தருளிய
சிரீகோச்சடைய வன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள்
சிரீ சுந்தரபாண்டிய தேவர்க்கு யாண்டு

..................................................................

## 8. மாறவர்மன் குலசேகர பாண்டியன் மெய்க்கீர்த்தி

தேர்போ லல்குற் றிருமகள் புணரவும்
கார்சேர் கூந்தற் கலைமகள் கலப்பவும்
பார்மகள் மனத்துப் பாங்குட னிருப்பவும்
செங்கோ னடப்பவும் வெண்குடை நிழற்றவும்
கருங்கலி முருங்கவும் பெரும்புகழ் விளங்கவும்
கானிலை செம்பியன் கடும்புலி யாளவும்
மீனம் பொன்வரை மேருவி லோங்கவும்
முத்தமிழு மனுநூலு நான்மறை முழுவதும்
எத்தவச் சமயமு மினிதுடன் விளங்கவும்
சிங்கணம் கலிங்கந் தெலிங்கஞ் சேதிபம்
கொங்கணங் குதிரம் போசளங் குச்சரம்
முறைமையி னுரு முதுநல வேந்தர்
திறைமுறை காட்டிச் சேவடி வணங்க
மன்னர் மாதர் பொன்னணி கவரி
இருபுடை மருங்கு மொருபடி யிரட்டப்

பழுதறு சிறப்பிற் செழுவை காவலன்
வீரசிங் காதனத் தோரங் கிருந்தே
யாரும் வேம்பு மணியிதழ் புடையாத்
தாருஞ் சூழ்ந்த தடமணி மகுடம்
பன்னூ றூழி தொன்னிலம் புரந்து
வாழ்னெ......................மகிழ்ந்துடன் சூடி
அலைமகள் முதலா மரிவையர் பரவ
உலகமுழு துடையாளொடும் வீற்றிருந் தருளின
கோமாற வன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள்
ஸ்ரீகுலசேகர தேவர்க்கு யாண்டு
.........................................................

## 9. அரிகேசரி பராக்கிரம பாண்டியன் மெய்க்கீர்த்தி

பூமிசை வனிதை மார்பினிற் பொலிய
நாமிசைக் கலைமக ணலமுற விளங்கப்
புயவரை மீது சயமகள் புணரக்
கயலிணை யுலகின் கண்ணெனத் திகழச்
சந்திர குலத்து வந்தவ தரித்து
முந்தையோர் தவத்து முளையென வளர்ந்து
தென்கலை வடகலை தெளிவுறத் தெரிந்து
மன்பதை புரக்க மணிமுடி புனைந்து
சங்கர சரண பங்கயஞ் சூடிச்
செங்கோ லோச்சி வெண்குடை நிழற்றி
வான வாரியு மன்னருள் வாரியும்
தான வாரியுந் தப்பா தளித்து
மறக்களை பறித்துநல் லறப்பயிர் விளைத்துச்
சிங்கையி லனுரையி விராசையிற் செண்பையில்
விந்தையி லறந்தையின் முதலையில் வீரையில்
வைப்பாற் (றெல்லையில்) மன்னரை வெந்கண்
டெப்பாற் றிசையு மிசைவிளக் கேற்றிப்
பதினெண் பாடைப் பார்த்திவ ரனைவரும்
திறையுஞ் சின்னமு முறைமுறை கொணர்ந்து
குறைபல விரந்து குரைகழ லிறைஞ்ச
அவரவர் வேண்டிய தவரவர்க் கருளி
அந்தண ரனேகர் செந்தழ லோம்ப
விந்தைமுத லகர மைந்திடத் தியற்றிச்
சிவநெறி யோங்கச் சிவார்ச்சனை புரிந்து
மருதூ ரவர்க்கு மண்டப மமைத்து
முன்னொரு நூறு மூங்கில்புக் கிருந்த

சிற்பரர் தம்மைத் திருவத்த சாமத்துப்
பொற்கலத் தமுது பொலிவித் தருளிச்
சண்பக வனத்துச் சங்கரர் தமக்கு
மண்டப மமைத்து மணிமுடி சூட்டி
விழாவணி நடாத்தி விரைப்புன லாடல்
வழாவகை நடாத்திநின் மன்னரு ளதனுல்
வற்ரு வருவியும் வற்றி வற்கடம்
உற்றவிக் காலத் துறுபுன னல்கென
வேண்டியப் பொழுதே வேறிடத் தின்றிச்
சேண்டரு புனலிற் செழும்புன லாட்டி
மின்கால் வேலி விசுவநா தர்க்குத்
தென்கா சிப்பெருங் கோயில் செய்து
நல்லா கமவழி நைமித் திகமுடன்
எல்லாப் பூசையு மெக்கோ யிலினும்
பொருண்முத லனைத்தும் புரையற நடாத்தித்
திருமலி செம்பொற் சிங்கா சனமிசை
உலக முழுது முடையா ளுடனே
இலகு கருணை யிரண்டுரு வென்ன
அம்மையு மப்பனு மாயனைத் துயிர்க்கும்
இம்மைப் பயனு மறுமைக் குறுதியும்
மேம்பட நல்கி வீற்றிருந் தருளிய
ஸ்ரீஅரிகேசரி பராக்கிரம தேவர்க்கு யாண்டு
..............................................................

# மேற்கோள் நூற்பட்டியல்
(Bibliography)

*Aiyangar, S. K.,* South India and Her Mohammedan Invaders (1921).

——, Manimekalai in its Historical Settings.

*Aiyangar, S. K. and Saraswathi,* Sources of Vijayanagar History.

*Appadorai, A.,* Economic condition of South India (1936).

*Bruce Foote, R.,* Indian Pre-historic and Proto-historic Antiquities, Notes on their age and distribution (Madras, 1916.)

*Codrington, H. W.,* A Short History of Ceylon (1929).

*Desikachari, T.,* South Indian Coins (1933).

*Dubreuil, G. J.,* The Pallavas (1917).

——, Ancient History of the Deccan (1941).

*Derret, J. D. M.,* The Hoysalas (1957).

*Elliot and Dowson,* History of India as told by its own historians.

*Gopalan, R.,* Pallavas of Kanchi (1928).

*Gopinatha Rao, T. A.,* Elements of Hindu Iconography (1914).

——, History of Sri Vaishnavism.

*Hussaini, S. A. R.,* The History of the Madurai Sultanate.

*Kailasapathi.,* Tamil Heroic Poetry.

*Kanakasabhai, V.,* Tamils 1800 years ago (1904).

*Krishnaswamy, A.,* Tamil Country under Vijayanagar (1964).

*Mahadevan, I.,* Corpus of Tamil Brahmi Inscriptions (1968).

*Mahalingam, T. V.*, Administration and Social Life under Vijayanagar (1940).

*Mcrindle*, Ancient India as described in the Classical Literature.

*Minakshi, C.*, Administration and Social life under the Pallavas (1938).

*Nagaswamy, R. (Ed.)*, Seminar on Inscriptions (1968).

*Nilakanta Sastri, K. A.*, The Pandyan Kingdom (P. K.) (1929)

——, A History of South India (1971).

——, The Age of the Nandas and Mauryas (1967).

——, Comprehensive History of India.

——, The Cōlas (1955).

——, Foreign Notices of South India (1939).

*Percy Brown.*, Indian Architecture.

*Pillay, K. K.*, Sucindram Temple (1953).

——, Social History of the Tamils.

*Pramod Chandra (Ed.)*, Studies in Indian Temple.

——, Archetecture for K. V. Soundara Rajan's paper on Early Pandya etc. Architecture (1975).

*Raman, K. V.*, The Early History of the Madras Region (1959).

——, Some Aspects of Pandyan History in the light of recent discoveries (1972).

——, Sri Varadarajaswami Temple, Kanchi (1975).

*Rama Rao, M.*, Studies in the Early History of Andhradesa.

*Rea, A.*, Adichanallur Excavations.

*Robert Sewell*, Historical Inscription of South India.

*Satyanatha Aiyer, R.*, The Nayaks of Madurai (1924).

*Sivaramamutthi, C.* Kalugumalai and early Pandyan rock cut shrines.

——, South Indian Bronzes (1963).

*Soundara Rajan, K. V.,* Indian Temple Styles (1972).

*Srinivasan, K. R.,* Cave Temples of the Pallavas (1964).

——, Temples of South India (1970).

*Srinivasan, P. R. and Ayyappan,* Story of Buddhism.

*Subramanya Aiyar, K. V.,* Historical Sketches of Ancient Deccan (1917).

*Thiruvenkatachari, S. (Ed.),* Madura Vijayam.

*Thurstion, Edgar.,* Castes and Tribes of South India.

*Venkataraman, K. R.,* Hoysalas in Tamil Country. Pudukkottai Manual.

*Wheeler, R. E. N.,* Rome Beyond its Imperial Frontiers.

*Zeuner and Alchin,* The Microlithic Sites of Tinnavelly- Ancient India No. 12.

இராகவ அய்யங்கார், மு., *ஆழ்வார்கள் கால நிலை (1931).*

இராசமாணிக்கனார், மா., *பல்லவர் வரலாறு (1968).*

கணேசன், சா., *கையேடு (1968).*

சதாசிவப் பண்டாரத்தார், டி. வி., *பாண்டியர் வரலாறு (1940; 1969).*

பாண்டியர் செப்பேடுகள் பத்து

மதுரை மீனாட்சியம்மன் கோயில் கும்பாபிஷேக மலர் (1972).

வித்தியானந்தன், சு., தமிழர் சால்பு.

வேங்கடசாமி, மயிலை சீனி, பௌத்தமும் தமிழும்

——, சமணமும் தமிழும்

## *JOURNALS*

*Ancient India (A. I.)*

*Annual Report on Epigraphy (A. R. E.)*

*Epigraphia Carnatica, (E. C.)*

*Epigraphia Indica (E. I.)*

*Indian Archaeology – A Review (I. A.)*

*Journal of Indian History (J. I. H.)*

*Journal of the Numismatic Society of India (J. N. S. I.)*

*Travancore Archaeological Series (Tr. Arch. S.; T. A. S.)*

*Damilica.*